உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்குடந்தைப்புராணம்.

திருக்கைலாசபரம்பரை
நிகமாகமசித்தாந்த சைவசமயாசாரிய பீடமாய் விளங்காநின்ற
**திருவாவடுதுறை**
ஆதீனவித்வான்
திரிசிரபுரம்,
**மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களாற்**
செய்யப்பட்டது.

இஃது,
ஷை ஆதீனத்து
**ஸ்ரீலஸ்ரீ. சுப்பிரமணியதேசிகசுவாமிகள்**
கட்டளையிட்டருளியபடி,
கும்பகோணம் பேட்டைத்தெருவிலும்,
மகாதளம்பேட்டைத்தெருவிலும் வசிக்கும்
சைவர்கள்பொருளுதவியால்
**ஷை கும்பகோணம்காலேஜ்**
தமிழ்ப்பண்டிதர்,
**சாமிநாத ஐயராலும்,**
திரிசிரபுரம்
**சி. தியாகராஜசெட்டியாராலும்**
சென்னை
**மிமோரியல்அச்சுக்கூடத்திற்**
பதிப்பிக்கப்பட்டது.

ஷை கும்பகோணம் இராமலிங்கதேசிகரால்
நிறைவேறினது.

—:o:—

சுபாநு௵ ஆனி௴

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

அருளிச்செய்த

# திருக்குடமூக்குப்பதிகம்.

பண் - பஞ்சமம்.

—:o:—

திருச்சிற்றம்பலம்.

அரவிரிகோடனீடலணிகாவிரியாற்றயலே
மரவிரிபோதுமௌவன்மணமல்லிகைகள்ளவிழுங்
குரவிரிசோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
விரவிரிதிங்கள்சூடியிருந்தானவனெம்மிறையே. (௧)

ஓத்தரவங்களொடுமொலிகாவிரியாற்றயலே
பூத்தரவங்களொடும்புகைகொண்டடிபோற்றிநல்ல
கூத்தரவங்களோவாக்குழகன்குடமூக்கிடமா
வேத்தரவங்கள்செய்யவிருந்தானவனெம்மிறையே. (௨)

மயில்பெடைபுல்கியாலமணன்மேன்மடவன்னமல்கும்
பயில்பெடைவண்டுபண்செய்பழங்காவிரிப்பைம்பொழில்வாய்க்
குயில்பெடையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
வியலொடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே. (௩)

மிக்கனைதாழவேங்கையுரியார்த்துமையாள்வெருவ
வக்கரவாமையேனமருப்போடவைபூண்டழகார்
கொக்கனையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
வெக்கனையாருமேத்தவிருந்தானவனெம்மிறையே. (௪)

வடிவுடைவாட்டடங்கண்ணுமையஞ்சவோர்வாரணத்தைப்
பொடியணிமேனிமூடவுரிகொண்டவன்புன்சடையான்
கொடிநெடுமாடமோங்குங்குழகன்குடமூக்கிடமா
விடிபடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே. (௫)

கழைவளர்கவ்வைமுத்தங்கமழ்காவிரியாற்றயலே
தழைவளர்மாவினல்லபலவின்கனிகடயங்கு
குழைவளர்சோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
விழைவளர்மங்கையோடுமிருந்தானவனெம்மிறையே. (௬)

மலைமலிமங்கைபாகம்மகிழ்ந்தானெழில்வையமுய்யச்
சிலைமலிவெங்கணையாற்சிதைத்தான்புரமூன்றினையுங்
குலைமலிதண்பலவின்பழம்வீழ்குடமூக்கிடமா
விலைமலிசூலமேந்தியிருந்தானவனெம்மிறையே. (௭)

நெடுமுடிபத்துடையநிகழ்வாளரக்கனுடலைப்
படுமிடர்கண்டயரப்பருமால்வரைக்கீழடர்த்தான்
கொடுமடறங்குதெங்குபழம்வீழ்குடமூக்கிடமா
விடுமணலெக்கர்சூழவிருந்தானவனெம்மிறையே. (௮)

ஆரொரியாழியானுமலரானுமளப்பரிய
நீரிரிபுன்சடைமேனிரம்பாமதிசூடிநல்ல
கூரொரியாகிநீண்டகுழகன்குடமூக்கிடமா
வீரிருகோவணத்தோடிருந்தானவனெம்மிறையே (௯)

மூடியசீவரத்தார்முதுமட்டையர்மோட்டமணர்
நாடியதேவரொல்லாநயந்தேத்தியநன்னலத்தான்
கூடியகுன்றமெல்லாமுடையான்குடமூக்கிடமா
வேடலர்கொன்றைசூடியிருந்தானவனெம்மிறையே. (௧௦)

வெண்கொடிமாடமோங்குவிறல்வெங்குருநன்னகரா
னண்பொடுநின்றசீரான்றமிழ்ஞானசம்பந்தனல்ல
தண்குடமூக்கமர்ந்தானடிசேர்தமிழ்பத்தும்வல்லார்
விண்புடைமேலுலகம்வியப்பெய்துவர்வீடெளிதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

# திருநாவுக்கரசுநாயனார்

அருளிச்செய்த

## திருக்குடமூக்கு திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பூவணத்தவன்புண்ணியனண்ணியங், காவணத்துடையானடியார்களைத்
தீவணத்திருநீறுமெய்பூசியோர், கோவணத்துடையான்குடமூக்கிலே. (௧)

பூத்தாடிக்கழியாதேநீர்பூமியீர், தீத்தாடிதிறஞ்சிந்தையுள்வைம்மினோ
வேர்த்தாடுங்காளிதன்விசைதீர்கென்று, கூத்தாடியுறையுங்குடமூக்கிலே. (௨)

நங்கையாளுமையாளுறைநாதனு, ரங்கையாளொடறுபதந்தாழ்சடைக்
கங்கையாளவள்கன்னியெனப்படுங், கொங்கையாளுறையுங்குடமூக்கிலே.(௩)

ஓதாநாவன்றிறத்தையுரைத்திரோ, வேதானுமினிதாகுமியமுனைச்
சேதாவேறுடையானமர்ந்தவிடங், கோதாவிரியுறையுங்குடமூக்கிலே. (௪)

நக்கரையனைநாடொறுநன்னெஞ்சே, வக்கரையுறைவானைவணங்குநீ
யக்கரையோடரவரையார்த்தவன், கொக்கரையுடையான்குடமூக்கிலே. (௫)

துறவிநெஞ்சினராகியதொண்டர்காள், பிறவிநீங்கப்பிதற்றுமின்பித்தராய்
மறவனாய்ப்பார்த்தன்மேற்கணைதொட்டவெங், குறவனாருறையுங்குடமூக்கிலே

தொண்டராகித்தொழுதுபணிமினோ, பண்டைவல்வினைபற்றறவேண்டுவீர்
விண்டவர்புரமூன்றொருமாத்திரைச், கொண்டவனுறையுங்குடமூக்கிலே.(௭)

காமியஞ்செய்துகாலங்கழியாதே, யோமியஞ்செய்தங்குள்ளத்துணர்மினோ
சாமியோடுசரச்சுவதியவள், கோமியும்முறையுங்குடமூக்கிலே. (௮)
சிரமஞ்செய்துசிவனுக்குப்பத்தராய்ப், பரமனைப்பலநாளும்பயிற்றுமின்
பிரமன்மாலொடுமற்றொழிந்தார்க்கெலாங், குரவனுறையுங்குடமூக்கிலே. (௯)
அன்றுதானரக்கன்கயிலாயத்தைச், சென்றுதானெடுக்கவுமையஞ்சலு
நன்றுதானக்குநல்விரலூன்றிப்பின், கொன்றுகீதங்கேட்டான்குடமூக்கிலே. ()
திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்

அருளிச்செய்த

## திருக்குடந்தைக்கீழ்க்கோட்டத்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பம்.

சொன்மலிந்தமறைநான்காறங்கமாகிச்
சொற்பொருளுங்கடந்தசுடர்ச்சோதிபோலுங்
கன்மலிந்தகயிலைமலைவாணர்போலுங்
கடனஞ்சமுண்டிருண்டகண்டர்போலு
மன்மலிந்தமணிவரைத்திண்டோளர்போலு
மலையரையன்மடப்பாவைமணாளர்போலுங்
கொன்மலிந்தமூவிலைவேற்குழகர்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௧)

கானலிளங்கலிமறவனாகிப்பார்த்தன்
கருத்தளவுசெருத்தொகுதிகண்டார்போலு
மானலிளங்கடுவிடையொன்றேறியண்டத்
தப்பாலும்பலிதிரியுமழகர்போலுந்
தேனலிளந்துவலைமலிதென்றன்முன்றிற்
செழும்பொழிற்பூம்பாளைவிரிதேறலூறுங்
கூனலிளம்பிறைதடவுகொடிகொண்மாடக்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௨)

நீறலைத்ததிருவுருவுநெற்றிக்கண்ணு
நிலாவலைத்தபாம்பினொடுநிறைநீர்க்கங்கை
யாறலைத்தசடைமுடியுமம்பொற்றாளு
மடியவர்க்குக்காட்டியருள்புரியார்போலு
மேறலைத்தமிர்கொடியொன்றுடையார்போலு
மேழுலகுந்தொழுகழலெம்மீசர்போலுங்
கூறலைத்தமலைமடந்தைகொழுநர்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௩)

தக்கனதுபெருவேள்விதகர்த்தார்போலுஞ்
சந்திரனைக்கலைகவர்ந்துதரித்தார்போலுஞ்
செக்கரொளிபவளவொளிமின்னின்சோதி
செழுஞ்சுடர்த்தீஞாயிறெனச்செய்யர்போலு

மிக்கதிறன்மறையவரால்விளங்குவேள்வி
மிகுபுகைபோய்விண்பொழியக்கழனியெல்லாங்
கொக்கினியகனிசிதறித்தேறல்பாயுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௪)

காலன்வலிதொலைத்தகழற்காலர்போலுங்
காமனெழிலழல்விழுங்கக்கண்டார்போலு
மாலதனிலறநால்வர்க்களித்தார்போலு
மாணொடுபெண்ணலியல்லரானார்போலு
நீலவுருவயிரநிரைபச்சைசெம்பொ
னொடும்பளிங்கென்றறிவரியநிறத்தார்போலுங்
கோலமணிகொழித்திழியும்பொன்னிநன்னீர்க்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௫)

முடிகொண்டவளர்மதியுமூன்றாய்த்தோன்று
முளைஞாயிறன்னமலர்க்கண்கண்மூன்று
மடிகொண்டசிலம்பொலியுமருளார்சோதி
யணிமுறுவற்செவ்வாயுமழகாய்த்தோன்றத்
துடிகொண்டவிடைமடவாள்பாகங்கொண்டு
சுடர்ச்சோதிக்கடற்செம்பொன்மலைபோலிந்நாட்
குடிகொண்டென்மனத்தகத்தேபுகுந்தார்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௬)

காரிலங்குதிருவுருவத்தவற்குமற்றைக்
கமலத்திற்காரணற்குங்காட்சியொண்ணாச்
சீரிலங்குதழற்பிழம்பிற்சிவந்தார்போலுஞ்
சிலைவளைவித்தவுணர்புரஞ்சிதைத்தார்போலும்
பாரிலங்குபுனல்னல்கால்பரமாகாசம்
பரிதிமதிசுருதியுமாய்ப்பரந்தார்போலுங்
கூரிலங்குவேற்குமரன்றாதைபோலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௭)

பூச்சூழ்ந்தபொழிறழுவுபுகலூருள்ளார்
புறம்பயத்தாரறம்புரிபூந்துருத்திபுக்கு
மாச்சூழ்ந்தபழனத்தார்நெய்த்தானத்தார்
மாதவத்துவளர்சோற்றுத்துறையார்நல்ல
தீச்சூழ்ந்ததிகிரிதிருமாலுக்கீந்து
திருவானைக்காவிலோர்சிலந்திக்கந்நாட்
கோச்சோழர்குலத்தரசுகொடுத்தார்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௮)

பொங்கரவர்புலித்தோலர்புராணர்மார்பிற்
பொறிகிளர்வெண்பூணூற்புனிதர்போலுஞ்
சங்கரவக்கடன்முகடுதட்டவிட்டுச்
சதுரநடமாட்டுகந்தசைவர்போலு

மங்கரவத்திருவடிக்காட்பிழைப்பத்தந்தை
யந்தணனையறவெறிந்தார்க்கருளப்போதே
கொங்கரவச்சடைக்கொன்றைகொடுத்தார்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (கூ)

ஏவியிடர்க்கடலிடைப்பட்டிளைக்கின்றேனை
யிப்பிறவியறுத்தேறவாங்கியாங்கே
கூவியமருலகனைத்துமுருவிப்போகக்
குறியிலறுகுணத்தாண்டுகொண்டார்போலுந்
தாவிமுதற்காவிரிநல்யமுனைகங்கை
சரசுவதிபொற்றாமரைபுட்கரணிதெண்ணீர்க்
கோவியொடுகுமரிவருதீர்த்தஞ்சூழ்ந்த
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (க0)

செறிகொண்டசிந்தைதனுட்டெளிந்துதேறித்
தித்திக்குஞ்சிவபவனத்தமுதம்போலு
நெறிகொண்டகுழலியுமைபாகமாக
நிறைந்தமரர்கணம்வணங்கநின்றார்போலு
மறிகொண்டகரதலத்தெம்மைந்தர்போலு
மதிலிலங்கைக்கோன்மலங்கவரைக்கீழிட்டுக்
குறிகொண்டவின்னிசைகேட்டுகந்தார்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

அருளிச்செய்த

## திருக்குடந்தைக்காரோணப்பதிகம்.

### பண்தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

வாரார்கொங்கைமாதோர்பாகமாகவார்சடை
நீரார்கங்கைதிங்கள்சூடிநெற்றியொற்றைக்கண்
கூரார்மழுவொன்றேந்தியந்தண்குழகன்குடமூக்கிற்
காரார்கண்டத்தெண்டோளெந்தைகாரோணத்தாரே. (க)

முடியார்மன்னர்மடமான்விழியார்மூவுலகுமேத்தும்
படியார்பவளவாயார்பலரும்பரவிப்பணிந்தேத்தக்
கொடியார்விடையார்மாடவீதிக்குடந்தைக்குழகாருங்
கடியார்சோலைக்கலவமயிலார்காரோணத்தாரே. (உ)

மலையார்மங்கைபங்கரங்கையனலர்மடலாருங்
குலையார்தெங்குகுளிர்கொள்வாழையழகார்குடமூக்கின்
முலையாரணிபொன்முளைவெண்ணகையார்மூவாமதியினார்
கலையார்மொழியார்காதல்செய்யுங்காரோணத்தாரே. (ங)

போதார்புனல்சேர்கந்தமுந்திப்பொலியவழகாருந்
தாதார்பொழில்சூழ்ந்தெழிலார்புறவிலந்தண்குடமூக்கின்
மாதார்மங்கைபாகமாகமனைகள்பலிதேர்வார்
காதார்குழையர்காளகண்டர்காரோணத்தாரே. (ச)

பூவார்பொய்கையலர்தாமரைசெங்கழுநீர்புறவெல்லாந்
தேவார்சிந்தையந்தணளர்சீராலடிபோற்றக்
கூவார்குயில்களாலுமயில்களின்சொற்கிளிப்பிள்ளை
காவார்பொழில்சூழ்ந்தழகார்குடந்தைக்காரோணத்தாரே. (ரு)

மூப்பூர்நலியநெதியார்விதியாய்முன்னேயனல்வாளி
கோப்பார்பார்த்தனிலைகண்டருளுங்குழகர்குடமூக்கிற்
றீர்ப்பாருடலிலடுநோயவலம்வினைகணலியாமைக்
காப்பார்காலனடையாவண்ணங்காரோணத்தாரே. (சு)

ஊனார்தலைகையேந்தியுலகம்பலிதேர்ந்துழல்வாழ்க்கை
மானார்தோலார்புலியினுடையார்கரியினுரிபோர்வை
தேனார்மொழியார்திளைத்தங்காடித்திகழுங்குடமூக்கிற்
கானார்நட்டமுடையார்செல்வக்காரோணத்தாரே. (எ)

வரையார்திரடோண்மதவாளரக்கனெடுப்பமலைசேரும்
விரையார்பாதநுதியாலூன்றநெரிந்துசிரம்பத்து
முரையார்கீதம்பாடக்கேட்டங்கொளிவாள்கொடுத்தாருங்
கரையார்பொன்னிசூழ்தண்குடந்தைக்காரோணத்தாரே. (அ)

கரியமாலுஞ்செய்யபூமேலயனுங்கழறிப்போ
யரியவண்டந்தேடிப்புக்குமளக்கவொண்கிலார்
தெரியவரியதேவர்செல்வந்திகழுங்குடமூக்கிற்
கரியகண்டர்காலகாலர்காரோணத்தாரே. (கூ)

நாணாரமணர்நல்லதறியார்நாளுங்குரத்திகள்
பேணார்தூமெய்மாசுகழியார்பேசேலவரோடுஞ்
சேணார்மதிதோய்மாடமல்குசெல்வநெடுவீதிக்
கோணாகரமொன்றுடையார்குடந்தைக்காரோணத்தாரே. (க0)

கருவார்பொழில்சூழ்ந்தழகார்செல்வக்காரோணத்தாரைத்
திருவார்செல்வமல்குசண்பைத்திகழுஞ்சம்பந்த
னுருவார்செஞ்சொன்மாலையிவைபத்துங்காப்பாருலகத்துக்
கருவாரிடும்பைப்பிறப்பதறுத்துக்கவலைகழிவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஸம்பந்ததீர்த்தசரணாயநம:.

———:o:———

# சிறப்புப்பாயிரம்.

இஃது,

## ஸ்ரீவீரா - சோமசுந்தரநாயகரவர்களால்

இயற்றப்பட்டது.

மதிவிளங்குசெஞ்சடையனைமூவர்கள்வழுத்துந்
துதிவிளங்குறுநூற்றுத்தொண்ணூறெனுந்தொல்லைப்
பதிவிளங்கியதிறத்ததுபனிதிரைப்பொன்னி
நதிவிளங்குபொற்புடையதுசோழநன்னாடு. (க)

அருணலம்பெறுமந்தணராய்தருமறையின்
பொருளொடுஞ்சிவாகமத்துறுபொருளுநன்குணர்ந்தார்
தெருளுறுஞ்சிவஞானமுங்கல்வியுஞ்சிறப்பும்
பொருளுமிக்கவர்வாழ்வதுபொன்னிநன்னாடு. (உ)

அனையநாடெனுமாயிழையவிர்திருமுகத்திற்
புனையுநீடெழிற்பொட்டெனப்பொலிவதுபொங்கும்
பனிகொண்மாமகதீர்த்தமேயாதிப்பஃறீர்த்த
மினியநற்றலமூர்த்திமற்றிவைகண்மிக்குளதால். (ங)

கங்கையாதியநதிகளுங்கட்வுண்மாமகநீர்த்
துங்கமேவுநற்றடம்படிந்துறுதுகடொலைத்து
மங்கைபாகனைவழிபடஇவரம்பலபெற்றுத்
தங்கிவாழ்தருந்தகையதுதனிக்கும்பகோணம். (ச)

இத்தலத்தினதுயர்ந்தமான்மியத்தினையெவரும்
பத்தியோடுணர்ந்தருணலம்பருகிவாழ்வெய்த
வித்தகம்பெறுதமிழினாற்செய்கெனவிரும்பிச்
சுத்தமேவியசைவர்களன்பொடுசொல்ல. (ரு)

நன்றுநம்பிரான்றிருவருளிதுவெனநயந்து
துன்றுபல்லணிநலங்களுஞ்சுவையொடுதோன்ற
வென்றசீர்கொண்மீனாட்சிசுந்தரப்பெயர்மேலோன்
குன்றலின்றிச்செய்தளித்தனனறிஞர்கொண்டாட. (௬)

அன்னமாபுராணத்தினதருமைநன்கறிந்து
சொன்னலம்பொருணலமுதற்றூயவெந்நலமுங்
கன்னலும்மமுதமுமுறக்கைத்திடக்கற்றோ
ரொன்னருங்கவர்ந்துவக்கவச்சியற்றுகவென்று. (௭)

துலங்குசெந்நெலுங்கன்னலுங்கதலியுந்துறுமி
வலங்குலாவியபூம்பணைசுலாயெழில்வாய்ப்புற்
றலங்குபொன்னகரத்துவாழமரருமவாவ
நலங்குலாவியவளஞ்செறிகோமுத்திநகரில். (௮)

தூயநீறுங்கண்டிகையும்பூங்காவிதோய்துகிலு
நேயவன்பொடுபுனைமுனிவரர்பலர்நெருங்கிப்
பாயசீர்ச்சிவாகமமுதற்பயின்றுவல்லவரா
யேயவாழ்தரற்கிடமதாயினைதிருமடத்தில். (௯)

குருந்தின்முன்னெழுந்தருளியகோலத்தைப்புதுக்கத்
திருந்துமெய்ச்சிவஞானபோதங்கரஞ்செறிய
மருந்துநேர்தருமருட்டிருவுருவொன்றுவாய்ந்து
பொருந்துசுப்பிரமணியதேசிகன்புகன்றருள. (௧௦)

என்னபுண்ணியநம்மிடையிருந்தவாவென்று
சொன்னதேசிகன்கட்டளைசிரமிசைச்சுமந்து
மின்னுமப்புராணஞ்செய்தவினைமுதலானோன்
றன்னிடைக்கற்றநன்றியுந்தவாதுளத்தெண்ணி. (௧௧)

திருவருங்கலைச்சாமிநாதப்பெயர்சேர்ந்த
பொருவரும்பெருமறையவன்கலையுணர்புலமை
யொருவரும்புகழ்த்தியாகராசப்பெயருரவோ
னிருவரும்பதிப்பித்துநல்கினரிலங்குறவே. (௧௨)

ஸ்ரீ மெய்கண்டநாதன் திருவடிவாழ்க.



சிவமயம்.

# படலஅட்டவணை.

—:o:—

ஆ படலம் (௭௦) இ - திருவிருத்தம் - ௨௩௮௪.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்குடந்தைப்புராணம்.

## பாயிரம்.

### ஆதி விநாயகர்.

பூமேவுதமதருளாலுயருமுயர்விலதுமெனப்புவனங்கூறு
மாமேவுமொழிக்கியையவுயர்திணையினஃறிணைமாவதனங்கொண்டோர்
பாமேவுமுறையிணைந்து மருளமைந்துபயில்வதுபோற்பயிலாதென்றுந்
தாமேவுமருளமைந்தவாதிவிநாயகர்சரணஞ்சார்ந்துவாழ்வாம். (க)

### சபை விநாயகர்.

உருகிருக்குந்தகைப்பவஞ்சவிடயபோகங்களெலாமொழித்தாநந்தம்
பருகிருக்குமுனைப்பதெவன்றந்தையார்பிரியமுளம்படர்ந்துமேன்மேற்
பெருகிருக்குமறைமுடியுமணுகரியகும்பேசர்பிறங்குகோயி
லருகிருக்குஞ்சபைக்களிற்றையகத்திருக்குமுழுதொழியவடுத்துவாழ்வாம்(உ)

### வல்லபை விநாயகர்.

ஆணுருவும்பெண்ணுருவுமாயவுலகந்தோற்றுமறிவனென்றற்
காணுருவும்பெண்ணுருவுமொருமருப்புமுகத்தேயாய்ந்தமையாவண்ண
மாணுருவும்பெண்ணுருவுமுள்ளாரொன்றுணர்தரற்கோரணங்கோர்பாற்கொண்
டாணுருவும்பெண்ணுருவுந்தொழுதெழவீற்றிருப்பாருக்கன்புசெய்வாம். (ங)

### முற்றவெளி விநாயகர்.

உண்மையுருவுணர்ந்தறிஞருணாத்திடுகாரணத்தானேவுற்றார்மாட்டுத்
தண்மையுருவமைந்தமையுந்தகையானேமறையுணராத்தன்னேர்பாகம்
பெண்மையுருவான்றளிவாய்வெளியமர்தலானேவிப்பேர்பெற்றாயென்
றண்மையடியார்துதிக்கமகிழ்முற்றவெளியானையகத்துள்வைப்பாம். (ச)

### கரும்பாயிரங்கொண்ட விநாயகர்.

அருகரும்புத்தரும்வியப்பவவனியொருகோட்டுநுனியமைத்துத்தீயோர்
திருகரும்புக்கிடங்கொடாச்செங்கண்வராகமுமகிழத்தேதேயென்று
வருகரும்புட்குலமுழக்குமலர்க்கேழற்புனற்கோட்டோர்வணிசன்பாங்க
ொருகரும்புக்காயிரங்கொண்டுறுகரும்பாயிரக்களிற்றையுளங்கொள்வாமே.

### ஆதி கும்பேசர்.

பூமேயவாரணனுநாரணனும்வாரணனும்பொற்பூமாலைத்
தேமேயவிண்ணவருநண்ணவரும்பதமுதலாஞ்சிறப்புநல்கி
மாமேயகுடமூக்கினிடமூக்கின்பார்கருணைவடிவின்மேய
பாமேயபுகழாதிகும்பேசர்தாமரைத்தாள்பணிந்துவாழ்வாம். (சு)

இதுவுமது.

இடைமருதர்முதலர்வோரைவர்நாகேசர்நடமியற்றவல்லார்
கடையணுகாச்சோமேசர்காரோண ரபிமுகர்நற்கவுதமேசர்
தடையிலருட்பாணபுரியார்சுதரிசனர்சார்ங்கதரர்வராக
ரடைவரதரிவர்சூழவமர்கும்பலிங்கேசரடிகள்போற்றி. (எ)

மங்களநாயகி.

திருக்கையிடத்தெழுந்தலகஞ்சிறிதுபுரிபெருவெள்ளந்திவலையாகித்
தருக்கையொழிந்திடவளவில்பெரும்புவனத்துயிர்ப்பயிர்கடழையவாழு [ப்ப
மிருக்கைவிழிக்கடையாக்கொண்டெழுகருணைப்பெருவெள்ளமெங்கும்போர்
வருக்கைமிளிர்குடந்தையமர்மங்களநாயகிமலர்த்தாள்வணங்கிவாழ்வாம். (அ)

இதுவுமது.

பரவுமலர்க்கருங்குழலுஞ்செவ்வாயும்வெண்ணகையும்பசியதோளும்
விரவுசுவைமொழியுமெழில்வழியுமருள்பொழியுமிருவிழியுஞானத்
தரவுமலிதனதடமுங்கொடியிடையும்பட்டுடையுமொளிர்பூங்கையுங்
கரவுதவிர்மங்களநாயகியிருதாண்மலருமுளங்கருதிவாழ்வாம். (கூ)

ஆடல்வல்லார்.

மன்னுமலப்பகைப்புணர்தீர்த்தான்மமகவேப்புணரும்வலியான்மிக்குத்
துன்னுநிகமாகமஞ்சொல்வலியாலாட்கொளும்வலியாற்றேலாவன்பா
லின்னுநடநவில்வலியாலாடல்வல்லானெனும்பெயர்பூண்டேமமன்றுட்
பன்னுகருணையின்மருவுமாதேவர்குஞ்சிதத்தாள்பரசிவாழ்வாம். (க0)

சிவகாமியம்மை.

ஊட்டியருளும்பர்பிரானுண்மைமுனிவரர்க்குரையாதுரைத்தாற்போல
வீட்டியிருவினையவற்றுட்கட்டுண்டுதிரியுயிர்கட்கேலாத்துன்பம்
வீட்டியளப்பரியசுகமேவவிடங்கொடுக்குமத்தேவினைக்காட்டாது
காட்டியொளிர்பொன்மன்றுண்மணிவிளக்கினிற்பாளைக்கருதிவாழ்வாம். (கக)

தக்ஷணாமூர்த்தி.

(வேறு.)

விதிவிலக்குயிர்க்கேயன்றிமிளிர்தமக்கில்லையென்று
துதிமறையுரைத்தவாறேதுணிதரத்தாமாகாதாய்
மதியமைதெற்குநோக்கிவடக்குமாணுக்கர்நோக்கப்
பொதியவிழ்கல்லானீழற்பொலிபவர்க்கன்புசெய்வாம். (கஉ)

வயிரவர்.

எழுவகைத்தாதுங்கூடினியங்கிடுமுயிரொன்றேனு
நழுவிடினியங்காவென்றுநவிறலைவெளிசெய்தாங்கு
முழுவலிநெடியோனுதிமொய்த்தவானவர்மெய்நெய்த்தோர்
வழுவறக்கபாலத்தேற்றவடுகனைவணங்கிவாழ்வாம் (கங)

ஆதிவிநாயகர்.

(வேறு.)

படவரவமரைக்கசைத்தபரமனை முன்விடுத்திடம்பின் பற்றுவோரோ
யிடமிகுபல்விடங்களினு மேலாவரொன்றெனிய விந்துவாம
குடமுடியுங்குடவயிறுங் குடமூக்கிற்குடமதிலிற் குடபாலுங்கொண்
டடரொளியினமராதித் தடவிகடமழகளிற்றை யடுத்துவாழ்வாம். (கச)

குமாரக்கடவுள்.

நீர்முதல்யாமுதலென்று நெடியோனுதியனொன்று நிகழ்த்தாவண்ணஞ்
சூர்முதலேதிகள்சிறிதும் வடுச்செய்யாத்தன்கரத்திற் றுணைப்பூந்தாளிற்
பார்முதலாக்குன்றலையு மவன்முதலோர்முடியும்வடுப் படுத்தநோக்கி
நார்முதனெஞ்சிருவர்முலை நிறம்புயத்துஞ்செயமகிழ்வே ணமையாள்வானே.()

திருநந்திதேவர்.

(வேறு.)

புரவனைக் கொருபானல்கு புராணன்பா லனைத்துந்தேர்ந்து
குரவனைச் சிவனேயென்று பாவனை செயச்சொல்கூற்றம்
பரவனைத் துயிர்க்குமாக்கிப் பதிவருக் கத்துமேய
வுரவனைக் கயிலைகாக்கு மொருவனைப் பணிதல்செய்வாம். (கசு)

தமிழாசிரியர்.

தம்பத்தே யுதித்தான்முன்னோர் தடங்கரங் கூப்புமாறே
கம்பத்தே யென்கொளெங்கள் கண்ணுதற் பரமன்போலக்
கும்பத்தே யுதித்துச்செய்ய தமிழ்ப்பெருங் குரவும்பூண்டு
நம்பத்தே முதவுந்தெய்வ முனிவனை நயந்துவாழ்வாம். (கஎ)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

காலமே கருத்தாவென்று கரைபவ ரூமராகக்
கோலமே பொலியுங்கொங்கிற் கொடும்பனிக் காலத்தீமை
சாலமே வியதுணர்ந்து தவிர்த்துமா தேவன்சீர்த்தி
ஞாலமேல் விரித்தகாழி நாடனைப் பாடிவாழ்வாம். (கஅ)

திருநாவுக்கரசுநாயனார்.

ஒருகவி மீட்பாள்காலற் கோலையொன் றெழுதியச்சம்
பெருகவுந் தோற்றியுய்த்த பெருஞ்சிலை யிராமனுணத்
தருகவப் பூதிமைந்தன் றனையெனக் காலகாலற்
கருகலில் பதிகம்பாடி யருளினோற் கன்புசெய்வாம். (கக)

சுந்தரமூர்த்திநாயனார்.

வெய்யமால் களிறுபாய்மா வெறுக்கைமுற் கொடுக்கப்பெற்றும்
வையமேற் றூதுபோக வழுத்தியுஞ் சிவபிரானுக்
கையமேற் பான்பேர்க்காக்கி யடியவர்க்கெளியானென்னுஞ்
செய்யபேர் நிறுத்தநாவற் செல்வனைச் சேர்ந்துவாழ்வாம். (உ0)

மாணிக்கவாசகசுவாமிகள்.

ஒலிகெழு குதிரைச்சென்னி யுவந்தினி தேறிவைகும்
வலிகெழு மெண்டோளண்ணன் மற்றதன் முதுகிலேறிப்
பொலிகெழு மதுரைவீதி புகுந்துநன் கியக்கக்கண்ட
கலிகெழு புகழ்சால்வாத வூரர்தாள் கலந்துவாழ்வாம். (உக)

தண்டீசநாயனார்.

(வேறு.)

ஆதிநிலையுண்டாக்குதலி னம்போருகமே லவன்றண்டாய்
நீதிமருவப்பசுவோம்பு நிகழ்ச்சியான்மா யவன்றண்டாய்
மோதியொருவேதியனுயிரைமுடித்தலாற்கூற்றுவன்றண்டாய்ச்
சோதிவயங்குமொருதண்டஞ்சுமந்தாரடிகடொழுதெழுவாம். (உஉ)

அறுபத்துமூவர்.

(வேறு.)

வெய்யகாமமுதலியமேவினுஞ்
செய்யதாகத்திருத்திவசிப்பரா
லையநாளுமறுபத்துமூவரும்
வையமேத்தருண்மாண்பினெம்முள்ளத்தே. (உ௩)

சைவவேதியர்.

(வேறு.)

கதியுயர்வடைதற்கேதுகருமஞானங்களன்ன
பொதிம்மறையனைத்துமோர்ந்துபுகரறத்தெளிந்தியார்க்கும்
விதிவிலக்குணர்த்திமுத்திவேட்டுயிரனைத்துமோம்பி
மதியரற்காக்குஞ்சைவமறையவர்க்கன்புசெய்வாம். (உ௪)

பஞ்சாக்கரஞானதேசிகர்.

(வேறு.)

ஆலமார்மிடற்றுச்சிவத்தினைச்சூழினனைத்தையுஞ்சூழ்ந்ததாமென்று
மூலமாமொருகோட்டண்ணல்சூழ்ந்தாங்குமோனமார்முனிவரர்நெருங்குங்
கோலமார்துறைசைவளர்நமச்சிவாயகுரவனைத்துதித்திடினளவாச்
சீலமாரருட்சந்தானமாகுரவர்திறனெலாந்துதித்ததாய்விடுமே. (உ௫)

அம்பலவாணதேசிகர்.

கருண்மலிபிறவித்துயரறவெனதுகருந்தலைக்கடிமலர்சூட்டிப் [றைசை
பொருண்மலியெழுத்தோ ...ந்தனுளனைத்தும் புணர்த்துபுதெளித்தொளிர் து
யருண்மலிதலத்துச்சுப்பிரமணியவற்புதனொடுகலந்தமருந்
தெருண்மலிகுரவனம்பலவாணசிவனுளத்தகல்வனேனினைப்பாம். (உ௬)

மற்றைச்சிவநேசர்கள்.

(வேறு.)

உரைசிறந்தகும்பேசராலயத்துப்பணிபலவுமுஞற்றுவோருங்
குரைகெழுவாய்ப்பரசமயக்குறும்பெறிந்தைந்தெழுத்துண்மைகுறித்துமேய
தரைபுகழுஞ்சித்தாந்தசைவர்முதற்பலபேதசைவர்யாரும்
விரைதரவந்திருக்கும்வகையிடங்கொடுக்குமெமதுள்ளம்விரிந்துமாதோ. (உ௭)

(வேறு.)

அத்திருவ்வைப்பவாவுங்குடந்தையார்
பத்தியேயுருவாகியபண்பினர்
தித்தியாநின்றசெஞ்சொற்பெருமையார்
முத்திவேட்குமுதற்பெருஞ்சைவர்கள். (உ௮)

(வேறு.)

சதுமுகன்முதலோர்போற்றுந்தம்பிரான்கும்பகோண
முதுவடமொழிப்புராணமுழுமையுமொழிபெயர்த்துக்
கதுமெனத்தமிழாற்பாடித்தருகெனக்கனிந்துகேட்ப
வதுகடைப்பிடித்தவ்வாறேயறைதரலுற்றேன்மன்னே. (உ௯)

சாற்றருங்கும்பகோணத்தலத்துமான்மியமேலோரே
மாற்றருஞ்சிறப்பிற்பாடவலருளர்கிழோரொன்னிற்
போற்றருங்கும்பலிங்கப்புராணனைவிண்ணோரன்றிப்
பாற்றருமண்ணோர்பூசைபண்ணலும்விலக்காமன்றே. (௩0)

விதிவழியாயுஞ்சில்லோர்விதிவிலக்காகத்தத்த
மதிவழியாயுஞ்சில்லோர்மாதேவன்றனைப்பூசித்தார்
கதிவழிகாணாரில்லைகடையனேன்பாட்டிற்குற்றப்
பொதிவழிதருவதேனும்வெறுத்திலானனையபுத்தேள். (௩௧)

சுத்தத்துவமோரைந்துஞ்சூக்குமைமுதலோர்நான்கும்
வித்தகமருவநாளுமெழுப்பிடுவிதமுணர்ந்தோ
ரித்தகுபுராணந்தன்னிலெவ்வழுவுற்றதேனும்
பித்தனென்றிகழாரொன்றும்பேசிடாரெனைமுன்னிட்டே. (௩௨)

உரையநுவாதமுண்டாலுபவிலக்கணங்களுண்டாற்
கரையிலக்கணையுமுண்டாற்கருதுமேழமைதியுண்டால்
வரையறவுணர்ந்தார்நெஞ்சுண்மாதேவற்கன்புமுண்டாற்
புரைதவிர்ந்தெளியேன்பாடல்பொலிவதற்கையமின்றே. (௩௩)

(வேறு.)

நீதியுருவமைந்தசிவசமயத்தார்பலருமருணிரம்புமேனிப்
பாதியிறைகும்பகோணப்புராணந்தமிழாற்பாடுகென்ன
வோதியுணர்பவர்விரும்பப்பாடினான்சிராமலைவாழ்வுடையானன்ன
மாதியல்பாதியனருள்சான்மீனாட்சிசுந்தரநாவலவரேறே. (௩௪)

(வேறு.)

மேயவானணவுமாடமிகமலிகும்பகோணப்
பாயவான்புராணஞ்செய்யதமிழினாற்பாடல்செய்தான்
சேயவானிறைஞ்சுந்தெய்வத்திரிசிராமலையில்வாழுந்
தூயவான்குணமீனாட்சிசுந்தரநாவலோனே. (௩௫)

பாயிரமுற்றியது.

ஆகூ திருவிருத்தம் - ௩௫.

---

## திருநாட்டுப்படலம்.

ஏன்றகும்பலிங்கேசனாரெண்ணில்வான்கருணை
சான்றமங்களநாயகிவனமுலைதழுவி
யூன்றவாழ்குடமூக்குமுற்பஃறலமுற்றுத்
தோன்றமேவியசோழநாட்டணிசிலசொல்வாம். (௧)

தொன்மைசான்றதுபலபகைவளைப்பினுந்தோலா
வன்மைசான்றதுமாற்றரும்பலவளமலியுந்
தன்மைசான்றதுச்துமறையொழுக்கமேதழுவு
நன்மைசான்றதுநாம்புகழ்சோழநன்னாடு. (௨)

ஈட்டவல்லது பிறபுலக்குடிகளை யீட்டி
யூட்டவல்லது நுகர்பலபோகமு மூட்டி
யாட்டவல்லது புண்ணியப்பெரும்புன லாட்டி
நாட்டவல்லது சிவகதிசோழநன் னாடு. (௩)

வேற்றுமன்னரும் பெட்பதாய்வெம்பிணி யிலதாய்ச்
சாற்றுகேடிலா விளைவதாய்ப்பிறதலப் பரமு
மாற்றுநீரதா யரசுவப்புறுவதா யமையு
நாற்றுவார்வயற் புலமலிசோழநன் னாடு. (ச)

எங்குமாமறை யெங்குமாகமமக மெங்கு
மெங்குமாலய மெங்குமேவறந்தட மெங்கு
மெங்குமாற்றருஞ் சிவார்ச்சனைநந்தன மெங்கு
மெங்கும்யோகிய ரிருக்கைநீர்நாட்டிய லெளிதோ. (ரு)

வானநாட்டிடை வைகியதியாகர்மற் றந்தத்
தானநீத்துவந் தமர்ந்ததுங்கைலையிற் சரித்த
மோனயோகிவந் தளவின்மந்திரமொழிந்ததுவு
ஞானயோகர்சேர் சென்னிநாடோமற்றை நாடோ. (சு)

மடிசுரந்திழி பாலொடும்வருந்திய சேதா
முடிவருந்துயர் கண்டொருமகனுயிர் முடியப்
படியிசைக்கிடத் துபுமிசைவையமூர் பைம்பொன்
முடியுளான்குடை நிழற்றுமுற்றவத்ததிந் நாடு. (எ)

தேவர்யாவரு மடிதொழப்பொலியுமோர் செம்மன்
மூவரோத்துமிந் நாட்டினோர்முழுப்புலை மகனுய்ப்
பூவர்சோலைசூழ் வயற்றிருழில்புரிந்துசெய் தானேல்
யாவர்சொற்றிட வல்லரிச்சோழநாட் டிருஞ்சீர். (அ)

அறம்புரிந்தவ ரடைவதுசுவர்க்கமா திகளச்
சிறந்ததானங்க டொழுந்திருக்கயிலையிற் செழுமை
யுறந்தவோர்மக ளுள்ளத்துக்கருதிய துறுவான்
பிறந்தமண்டல நாடிதேற்பேசவேண் டுவதென். (கூ)

செல்லிடந்தொறுந் தவழுமிற்சிரபுரத் துதித்தார்
பல்லிடங்களிற் பரசிவகணங்களாப் பார்த்தா
ரல்லிடங்களி னரிதெனவயலினுந் தெரித்தார்
நல்லிடங்களு ணல்லிடமிணையநீர் நாடே. (௧0)

பளிக்குப்பாறைமேற் படர்ந்தெனவெண்முகிற் படலம்
வளிக்குத்தோற்றமாம் விண்படர்ந்தார்கலி மரீஇச்செய்
யளிக்குத்தக்கநீ ருண்டுநீலறையெனக் கறுத்தே
யொளிக்குத்தோற்றமில் லாவகைமீட்டும்விண் ணுற்று. (கக)

ஐயமாலெனத்தான்வெளியடுத்ததற்மையச்
செய்யவான்சுடர்தீர்தரமறைத்ததையன்றி
வெய்யவானவைவிளிதரவில்லொன்றுவாங்கி
வையமோர்தரநிறத்துறப்பொலியுமின்வயக்கி. (கஉ)

உருக்குவெய்யவெங்கோடையைமுதலறவொருங்கு
முருக்குவேனெனநெடுமொழிகிளந்தெனமுழங்கித்
தருக்குநீங்கினர்பாற்றவாவருண்மறைமுடிவீற்
றிருக்குநாயகன்பொழிந்தெனப்பொழிந்ததெவ்விடத்தும். (கங)

தம்மையூர்பவன்கொடும்பகைமுதலறச்சவட்டிச்
செம்மைசேரரசளித்தவன்றிருமகட்புணர்ந்து
கொம்மைவேளினிதமரிடமெனத்திகழ்குறிஞ்சி
வெம்மைதீர்தரப்பொழிந்தனமழைவிழைகொண்மூ. (கச)

ஊருநாயகற்கிளவலென்றமர்தருமொருவன்
சாருமாநிலந்தழைதரச்செய்வதுதகவென்
றுருமேத்துகான்முழுவதும்வெப்பறவளியே
கூருந்தன்மையிற்பொழிந்தனகுளிர்மழைகொண்மூ. (கரு)

உரியநாயகன்மருமகனிளவலென்றுரைக்கும்
பிரியமாரிவர்நிலங்களிற்பெய்தகாரணையான்
றெரியமேவிடத்தொழியுமோசெறுப்பொலிமருதம்
புரியவோடைகானிரம்புறக்குளிர்மழைபொழிந்த. (கசா)

ஆளுநாயகனட்புறுதெதிருறவமர்வான்
கேளுமாகிலனுயினுங்கெழுவுசீர்வருண
னீளுமாகடறமக்குணவளித்திடுநிலையாற்
கீளுமாமழைபொழிந்தனகேழ்கிளரொழிலி (கஎ)

இனையநால்வகைநிலத்தினும்பொழிமழையெல்லா
முனையசூற்படையண்ணலோரம்பினுன்முன்னம்
புனையவாங்குடத்திழிந்தவாரமுதெனப்பொங்கி
வனையவாம்புவிகுளிர்தரப்பரந்ததுவழிந்தே. (கஅ)

தழைகருங்களத்தெம்பிரானருள்பொழிதரலுங்
குழையுநெஞ்சினர்பிறவியின்கொடுமைதீர்ந்தென்ன
விழைபயோதரம்பொழிதலுமேதினியகத்துப்
பழையதாயமர்வேனில்வெப்பொழிந்துபாறிற்றே. (ககூ)

காழிவாழ்வெனுங்கவுணியக்கன்றுமுன்றோன்றப்
பாழிமாலருகந்தர்தாம்பாறியதென்ன
வாழிமாமுகில்பொழிந்தநீர்மாறறத்தோன்ற
வாழிசூழ்புவியகத்துவெப்பாறியதன்றே. (உ0)

ஒன்றுமில்லவர் பசுமையினுயர்நளா யுற்று
னன்றுசெல்வமா முழக்கம்வாணல்லளி யமைவா
ரின்றுவான்முகில் கடலடுத்திரும்புன றனிதந்
துன்றுமின்கொடை சுமந்துலகோம்பலா னன்றே. (உக)

இழிந்தநீரருமுயர்ந்துளார்தம்மையெய் தினரோல்
வழிந்தவின்சுவையாளராய்மாபயன் படுவார்
பொழிந்தவெம்புலா லுவரறல்புயலகம் புக்குக்
கழிந்தவின்சுவைத் தாய்விழைகாமருற் றதனால். (உஉ)

தீபமெங்கணுஞ் செறித்தெனச்செறிதரு மகவான்
கோபமேயன்றிக் கோபம்வேறுறுவதொன் றில்லை
தாபம்வையகந் தவிர்தரவிட்டவத் தகையோன்
சாபமேயன்றிச் சாபம்வேறிலைதழை முகிற்கே. (உங)

மேகமால்களி றுததியங்காட்டக மேவி
மோகமார்புனற் குளகுணுவதிரிடி முழங்கிப்
போகவேனிலம் பாகெறீஇப்பொழி மழைத்தானம்
பாகமாச்சொரி தரவுணுமுலகுயிர்ப் பமரம். (உச)

இன்னமாமழைப் பெருவளமியம்பவல் லுநரா
ரன்னமாமழை வளமிடையறுதநீர் நாட்டு
மன்னமேவிய நானிலத்தைந்திணை வளத்துட்
பன்னவாம்புகழ்க் குறிஞ்சியின்வளஞ்சில பகர்வாம். (உரு)

## குறிஞ்சி.

(வேறு.)

ஒள்ளிய நறுவீவேங்கை யுருவமாய் மலரவேட்டு
வள்ளியைப் புணர்ந்துகாந்தள் வயங்குறப் புனைந்துமேலோர்
தெள்ளிய தனைப்போன்மேவுஞ் செய்கைதேர்ந் துயர்வெற்பெல்லா
நள்ளிய வாழ்க்கையுற்றுனங்கும ரேசப்புத்தேள். (உசு)

தானமோதானமெல்லாமெனத்தழைந்தொளிர்வவேங்கை
யானபல்லளியுமேவாதகற்றுபுமலர்வவேங்கை
யீனமில்வீரந்தோற்றியெங்கணும்பாய்வவேங்கை
மானவவ்வரைமின்னுறைவலிந்துபோய்த்தொட்டால்வேங்கை. (உஎ)

அற்புதக்குறிஞ்சிமாதரழகெவனுரைக்கவல்லேங்
கற்பனைகழன்றுவேதச்சென்னியுங்கடந்தவேளு
முற்பவவிசேடமாமவ்வுயர்நிலத்தொருபெண்வேட்டுப்
பொற்பமைகளவுபூண்டுபுக்கனனத்தேமென்னில். (உஅ)

கரவுபொற்பமைந்ததென்றோரடைபுகல்கருத்தென்னென்னில்
விரவுகைகுறைக்குமேனைவெறுத்திடுகரவுபோலா
தொருதலைக்காமமின்றியொத்தவன்பினரோயாகி
யிருதலையாருங்கூடுங்கூட்டந்தேர்ந்திசைப்பரான்றோர். (உகூ)

மிதிபடலேனலன்றிவேதிலைசாரலெங்கும்
பொதிதருகவலையன்றிப்புகுமொருகவலையில்லை
யதிர்தரும்வேங்கைபாயவிறவுளரகன்மார்புற்றுப்
பதிதருவடுவேயன்றிப்படாதொருவடுவுமாங்கண். (௩0)

வெள்ளியவருவியோடுவெங்கயக்கருங்கடாமும்
வள்ளியகோட்டிருவின்வழிசெய்யதேனுங்கூட
னள்ளியகங்கையோடுநக்காளிந்திவாணி
தெள்ளியதகைமிற்கூடுந்திறம்பொருஉமிடங்கடோறும். (௩க)

இறவுளர்கிழங்குகெண்டுமிருங்குழியகத்துத்தோன்றும்
பெறலருங்கமலராகம்பேணலரொடுத்துவீச
மறமலிதழலென்றஞ்சிக்குடாவடிமறுகியோடு
முறமிளிர்குணந்தேரார்பாலுறிற்கனமுண்டாங்கொல்லோ. (௩உ)

பொழிந்ததேனிழுக்குஞ்சாரற் புல்லியகிழங்குகொண்டு
கழிந்ததேசுடையபற்பன் மணிகளுங்கைத்துநீத்தே
யிழிந்ததுமுயர்வாஞ்சார்பா லுயர்ந்ததுமிழிபாமென்று
மொழிந்ததைவெளிசெய்வார்கண் மூரிவெஞ்சிலைக்கைவேடர். (௩௩)

மேலெழுகழையுளொன்று வேள்கொளுங்கவிகையென்னுங்
காலெழுமதியந்தாங்கிக் காம்பெனும்பேரைத்தேற்றுஞ்
சூலெழுமேகங்கீண்டு துணித்தபல்கழைகளெல்லாம்
பாலெழுநேமியென்று பகர்தன்மெய்யென்றுகாட்டும். (௩௪)

மன்னியகார்த்திகேயன் மாமலர்ப்பாதம்போற்றி
முன்னியவரங்கள்கொள்வான் மொய்யுடுக்கணமுற்றுங்குத்
துன்னியமுடங்கல்கண்ணுற் சொரிபலமணியும்போர்க்கும்
பன்னியவவைதுளாகப் படர்தரும்பகட்டியானே. (௩௫)

முத்தநுண்டுகளின்மூழ்கி மொய்த்தவெள்ளொளிவிராவிச்
சித்தநன்குவக்கும்யானை செறிதலிற்செய்யவேற்கை
யத்தனைப்பணிந்துமீளு மரசுதன்களிறுதேடி
சுத்தவண்கோட்டினோர்ந்து துணிந்துமேலிவருமாதோ. (௩௬)

முதிர்குரலேனல்கொய்வார் மூங்கில்வண்பதங்கள்செய்வா
ரதிர்குரல்வேட்டஞ்செய்வா ராவனமவைப்பார்செந்தே
னெதிரறவழிப்பாருன்றேய்த் தினிதெனநுகர்வார்நாளும்
பிதிர்தலில்குறிச்சிமாக்கள் பெருவளம்பேசற்பாற்றே. (௩௭)

காகமேவாதுவீசுங் கனலுடைவரைப்புமிக்க
மோகமார்நற்றாயாய முதலமர்வரைப்புங்காணின்
மூகரானவருமேத்த முயலெறும்பளாயவைப்பு
நாகமார்குறிஞ்சியென்னி னுமினிப்புகல்வதென்னே. (௩௮)

வானவர்புகழீங்கோயும் வயங்குகற்குடியுமேன்மை
யானவாரியனுய்ச்செவ்வே ளமர்தருவரைப்புமப்பர்
மானமார்தலைமேற்பாதம் வைத்தவர்வரைப்புமற்று
மீனமில்குறிஞ்சியென்னி லதன்றவமெளியதாமோ. (௩௯)

உறலருங்குகைகடோறு முறுவரரமையப்பெற்றுச்
செறலருமெறுழின்மிக்கார் செழித்தினிதமருந்தேமாய்ப்
பெறலரும்வளஞ்சான்றோங்கும் பெருவரைச்சிறப்பென்சொற்று
மிறலருங்கானமேன்மை யிற்சிலபுகல்வாமன்றே. (௪0)

முல்லை.

கரியகார்மேனிவந்து காமர்செய்திடப்பிருந்தை
யுரியதாத்தழுவியொண்மா னுறப்புணர்ந்தொருதன்போலத்
தெரியவீற்றிருத்தலாலே செங்கண்மாலெந்தஞான்றும்
பிரியமுற்றமரமேவும் பிறங்குபஃறருச்சூழ்கானம். (௪௧)

பார்புகழாயர்மாதர் பல்லிதழ்மொழிகணேர்வான்
கூர்தளவரும்பிப்பார்க்குங் கோபங்கடோன்றிப்பார்க்கு
மார்சுவையினியதீம்பா லடுந்தொறுங்குறைந்துபார்க்கு
மேர்கெழுமுழைகளெல்லா மின்னுர்தாய்மருண்டுபார்க்கும். (௪௨)

கருங்குழற்றெருவிமார்தீ யடுதொறுங்கற்றுவின்பால்
சுருங்கியின்சுவைமிக்கேயுந் தயிர்மத்திற்றுளக்குந்தோறு
நெருங்குறநவநீதத்தை நிரப்புமஃதருக்குந்தோறு
மொருங்குநல்வாசநல்கு முயர்ந்தவர்குணமேயென்ன. (௪௩)

பரவியகொன்றைதும்பை பாசொளியறுகுவில்வ
முரவியல்செழுமைமேவி யுறுமிடையூறென்றின்றி
விரவியசிறப்பின்மல்க விழைந்திடங்கொடுத்தகாடு
வரவியலருள்சாலெங்கண் மாதேவன்சடைக்காடேயாம். (௪௪)

இடங்கொடுபொலியுநாலெட் டிலக்கயோசனைப்பால்வாரி
யடங்கலுமுரியதாக்கொண் டாவயிற்கிடக்கும்புத்தேள்
மடங்கெழுமாய்ச்சிமார்கை தொட்டபால்வாஞ்சையுற்றக்
குடங்கரவினுங்கொண்டானே லவர்திறங்கூறற்பாற்றே. (௪௫)

செய்யதாமரைக்கண்மாயோன் றெய்வமாய்ப்பொலிவதோர்ந்து
வையமுற்றீன்றதாதை கானகம்வகுக்கும்போதே
யையமற்றவன்றேமென்றற் கறிகுறிபலவமைத்தாங்
கெய்யவைத்தென்னவெங்கு மலர்வனவெண்ணில்காயா. (௪௬)

முயலகம்பொலிதலானு முல்லையால்விளர்த்தலானும்
புயனிறம்விளர்க்குமேனி பொருந்தரிபற்றலானு
மயலமையூர்கோளானு மருங்கலையமைதலானும்
வியல்வனமதியேநேரும் வேற்றுமையுருவமட்டே. (௪௭)

தருப்பலதோன்றலானுந் தழைந்தெழுபசுக்களானுங்
குருப்பயிலமுதத்தானு மண்டர்கள்குழுமலானு
முருப்பமிலிடத்தினானு முறுமதிமகிழ்ச்சியானுந்
திருப்பதிமேவலானுஞ் சிவணும்பாற்கடலுங்காடு. (௪௮)

சிவபிரானமருந்தானத் தொவ்வொருதருச்சிறக்கு
மவமிலத்தருக்களெல்லாந் தன்னிடையமைந்துமேவத்
தவமலிவளஞ்சால்கானந் தலமெலாமொருங்குசேர்ந்து
புவனமுள்வியப்பமேய பொற்பினிற்பொலிவதம்மா. (௪௯)

கருமுகில்விளர்க்குமாறு கறுத்துறமலர்வகாயா
வருகுநன்னீழல்வெப்ப மகன்றிடத்தருமுகாயா
பருமரமற்றையாவும் பயன்படாவண்ணங்காயா
விருள்படத்தவழ்கொண்மூவா லெற்றைக்குமணைத்துங்காயா. (௫0)

கனிதருகளவேயல்லாற் களவுவேறில்லையங்கண்
முனிதருமத்தொன்றிட்டு முழங்குறவுடைக்கப்பட்ட
பனிதருதயிரோயல்லா லுடைபடுவதுவேறில்லை
மனிதருமண்டொன்னின் மற்றுநாமுரைப்பதென்னே. (௫௧)

ஆயகோத்திரவஞ்சாமை யிறுங்குகொள்ளவரைமற்றும்
பாயபல்பயறும்வேண்டும் படிவிளைதருதலானு
நேயமார்பசுக்களெல்லா நிரம்புபால்பொழிதலானுந்
தூயவர்நிலத்துமாந்தர் வறுமையிற்றேயாதொன்றும். (௫௨)

பரம்பரன்மேலைக்காட்டுப் பள்ளியுமிருவிமானத்
தரம்பெறுசிறப்புவாய்ந்த வொருநெடுங்களமுநாளும்
வரந்தருதிருப்பைஞ்ஞீலி வனமுமால்காவல்கொண்ட
நிரம்புறுகானமென்னி லதன்புகழ்நிகழ்த்தற்பாற்றே. (ருங)

காமருதெய்வக்கங்கை கண்டசோழீசம்பெம்மான்
மாமருமரிசுமுற்றும் பயறுசெய்வளஞ்சேர்தானம்
பூமருவிவைமுன்னுகப் பற்பலபொலியக்கொண்ட
நாமருவியசீர்முல்லைப் பெருமையார்நவிலவல்லார். (ருச)

அங்கமென்றுள்ளவெல்லா மமரரேவசிக்கப்பெற்ற
துங்கமாரளவிலாக்க டொக்கமர்பெருமைவாய்ந்து
பங்கமின்றுயமுல்லை வளத்தெவன்பாடல்செய்தாஞ்
சிங்கலின்மருதவைப்பின்வளஞ்சில செப்பலுற்றும். (ருரு)

மருதம்.

தாரணமளவிலாக்கட் டாமரையாகவெள்ளை
வாரணமூர்ந்தரம்பை மரீஇயொருதன்போல்வைகுங்
காரணமுணர்ந்துமேலாங் கற்பகநாடுகாப்போன்
பாரணவமையுந்தெண்ணீர்ப் பழனவைப்பிறைமையுற்றன். (ருசு)

கற்பகநாடுகாப்போன் கலந்துநங்குலத்துத்தோன்றிப்
பொற்பமைந்தமருமென்னிற் புங்கவர்நாமுமின்னுஞ்
சொற்பயில்சுராபானத்தாற் சுரருமாயினமென்றுள்ளத்
தற்புறுகடைஞர்வாழ்வா ராவயிற்பொலிந்துமாதோ. (ருஎ)

வேலையாட்கொள்ளுங்கண்ணர் விழைதரக்குடைநீர்நின்று
வாளைமீதெழுந்துபாய மரகதக்கமுகின்முற்றிக்
கோளையார்பழத்திேனுடு கொழுமடல்கிழித்துத்தோன்றும்
பாளையாரரும்பும்வீழும் பவளமுத்துதிர்வதென்ன. (ருஅ)

சங்கமுங்கமலப்பூவுந் தத்தம்பாற்றேன்றுநிற்குந்
துங்கநித்திலத்திேனுடு தோன்றுவநோக்கிமள்ள
ரெங்கணுயகனைக்காண்பா னிருநிதியனந்தமெய்திப்
பங்கநீத்தமருமென்பார் பங்கமோவாமைதேரார். (ருகூ)

நலந்தருசோழநாடே நாடுநீர்நாடென்றேத
வலந்தருமேதுவாகி மன்னுயிரனைத்துமோம்பிக்
குலந்தருவிண்ணுளாருங் கூடிவந்தாடப்பெற்று
நிலந்தருதிருவிற்பொங்கி நிகழ்வதுபொன்னியாறு. (சுo)

குடவரையாதியந்தங் குணகடற்குணக்கோடாக்கித்
தடவரையிடையேநேரிற் றலைகிழக்காகத்தள்ளி
யிடவரையறைப்படாம லெங்கணுங்கால்கொண்டோடி
வடவரைதகர்த்துச்சிந்து மாண்பிற்பொன்னிறைக்கும்பொன்னி. (சுக)

வரையறவுருட்டித்தள்ளி மதமலையெடுத்தெறிந்து
புரையறப்பலவாறெய்திப் பொலிமணிபலவிறைத்துத்
தரையறக்கிழித்துச்சென்று சலதியைக்கலக்கும்பொன்னி
கரையறப்பெருகுமென்று கட்டுரைத்திடலென்னுமால். (சுஉ)

மலைபடுவயிரநீல மரகதம்பதுமராக
நிலைபடுபுருடராக நிரம்பமற்றனைத்தும்வாரித்
தலைபடுபுனற்காவேரி சமுத்திரந்தூர்த்தலாலே
விலைபடுமணிகட்கெல்லாம் வீளையாகரமாயிற்றே. (சுங)

வரையெலாம்பொலியத்தோற்றும் வைரமுற்பலவும்வாரிக்
கரையெலாஞ்செறியச்சிந்திக் களிற்றுவெண்கோட்டான்மொத்தித்
திரையெலாந்தவழவீசிச் சேறலாற்பொன்னிநீத்த
முரையெலாம்பொலியுங்கோட்டிற் குறுதிசெய்தொழுகல்போலும். (சுச)

வரையிடைப்பிறந்தானந்த மாக்கடலணைதலானும்
புரைதவிர்த்துயிர்க்கூழ்மல்கப் புரவுசெய்திடுதலானும்
விரைசெலற்கங்கையாற்றின் மேம்படுபெருமையானும்
பரையெனப்படுமாநீத்தம் பரப்பியபுகழ்க்காவேரி. (சுரு)

ஒருமுனிகரகநின்று மும்பர்தங்கோமான்வேண்ட
வருபுனற்பெருங்காவேரி மண்ணகத்தரசன்வேண்டப்
பருகியமுனிவன்காதின் வழிவருபண்பிற்றுகிப்
பெருகுமோர்நதியொப்பென்று பேசுதன்மடமைப்பாற்றே. (சுசு)

மன்னியபுகழ்க்காவேரி வந்துவந்தாடுவார்க்குத்
துன்னியபுறமாசென்னத் தோன்றகமாசும்போக்கிப்
பன்னியவுடனேயோடு பவநோயுந்தொலைத்தானந்தத்
தன்னியமில்லாவண்ணஞ் செலுத்துமேலறைவதென்னே. (சுஎ)

தராதலத்துயிர்களோம்புந் தகைப்பெரும்புனற்காவேரி
விராவிருகரையின்பாலும் விரும்புபல்கோயில்கொண்டே
யராவணிசடையானெங்க ளம்மையோடமருமென்னிற்
புராதனமாயவந்த நதிப்புகழ்புகலற்பாற்றே. (சுஅ)

போர்முகத்தெதிர்ந்துசெல்லும் பொருநர்போற்சிலமீன்வெள்ளத்
தேர்முகத்தெதிர்ந்துசெல்லு மெதிர்செலும்வலியிலாரில்
வார்முகத்தொழுகுஞ்சின்மீன் வீரவான்மருவுவாரிற்
கார்முகங்கிழித்துச்சின்மீன் கதித்தெழும்பொன்னியாற்று. (சுகு)

ஒருபெருந்தாகம்பூத மொழிதரவுய்த்ததென்பா
லொருபெருநதியுமம்மை யுஞற்றுமன்புலகந்தேற்ற
வொருபெருமான்முன்புய்க்க வுறுவடபாலியாறு
மொருபெருங்காலொவ்வாவென் றுரைசெயப்பெருரும்பொன்னி. (எ0)

(வேறு.)

சென்னமிருபல்லாய்ச்சியர்கள் சிவனுமிலைசால்குடில்கடொறுங்
கண்ணனொருவனம்மடவார் களிப்பப்புகுந்தவாறேபோல்
விண்ணமளவுகுடிமிவரை மிசைநின்றிழிந்துபுடவிதவழ்
வண்ணமிகுகாவிரிப்புனல்பன் மதகுதொறும்போய்ப்புகுந்ததால். (எக)

மேயமதகுதொறும்புகுந்த வெள்ளம்பெருங்கால்சிறுகாலென்
றுயபலவாயொன்றிடையொன் றுந்தத்துவங்கள்போற்கிளைத்துப்
பாயகழனிதொறுமடியார் பாங்கர்ப்பரையோர்பாகனருட்
டோயம்புகுந்துபரவுதல்போற் றுலங்கப்புகுந்துபரந்ததால். (எஉ)

தாகமிகுந்தார்தாம்வேட்ட தண்ணீரருந்தியகங்குளிரும்
பாகமருவியிதழ்பொருந்திப் பாங்கார்முகமுமலர்வதென
மோகமிகநீருண்டவயன் முற்றுங்குளிர்ந்துகமரொன்றித்
தோகமிலதாய்ப்பூரித்துத் தோன்றப்பொலிந்தமருதமெலாம். (எ௩)

வறியருரியதம்மிடத்தே வைப்புநிதியங்கண்டதெனச்
செறியமயல்கூர்விடர்பொதுவிற் றீராமகளிர்க்கண்டதென
முறியமலமேற்கதிவிழைந்தோன் முதலாசிரியற்கண்டதென
நறியபுனல்செய்தொறும்பாய்தல் கண்டார்நாடுந்தொழிலுழவர். (எ௪)

கலியைமாய்க்கும்படையாய கலப்பையெடுத்துக்கொலேத்தொழிலில்
வலியையெனத்தென்றிசையாள்வோ னூர்திக்கினமேமறியாவென்
றொலிசெய்பகட்டுப்பிடர்நுகத்தி னுற்றநடுவேர்க்கால்கிடத்திப்
பொலிசெய்நெடியவடமிறுகப் பூட்டிப்பலவும்பொருத்தியே. (எ௫)

மேழியிடக்கையுறப்பற்றி வலக்கைவிழைந்துசிறுமுட்கோல்
வாழியெடுத்துப்பகடுரப்பி வயங்கவிளாக்கள்பலகோலி
யூழிமுதன்முனடியாரி னுற்றபடைச்சால்பலநெருங்க
வாழியுலகினவரிடர்போ லடர்புல்லாதியறவுழுவார். (எ௬)

எண்ணும்புலவர்மிறைக்கவியொன் றெழுதிவாசித்திடுவதென
நண்ணுமலங்கீழ்த்திசைச்செலுத்தி யுடனேநடத்திக்குடதிசையு
மண்ணும்வடக்கிற்செலுத்தியுடன் றெற்குநடத்தியயர்வின்றி
விண்ணும்புகழத்தொழில்செய்வார் விருப்பிற்கள்ளுண்டெழுகளமர். (எஎ)

வயல்கள்விருத்தியடைவகையும் வரம்புநிரம்பவுயர்வகையுஞ்
செயல்செய்களமருணர்ந்தனர்கந் கரிந்துசிறப்பக்கோடேற்றி
யியல்கொளுலகத்தவரிறுமாப் பெங்களிறுமாப்பாலென்று
வியல்கொள்புவிக்குத்தெரிப்பார்போன் மிதித்தார்பரம்போர்வடம்பற்றி. (எஅ)

உழுதசேறுகண்ணடியை யொத்துச்சமமாகியதுணர்ந்து
கொழுதமதுவண்டருக்குதவுங் குளிர்கற்பகத்தாரிந்திரனை
யெழுதமுடியாப்பெரும்புகழோ யெங்கள்வயல்கள்விளைகவெனத்
தொழுதகரத்தராய்ப்போற்றிச் சொன்மாமுளைவித்தினரெங்கும். (எ௯)

சிறந்தநாளில்விதைத்தமுளை செழிக்கமறுநாண்மடைசீத்துப்
பிறந்தகுழவிபசியறிந்து பேணிப்பாலூட்டிடுதாய்போ
லுறந்தகளமர்பருவமுணர்ந் துறுநீரூட்டவுண்ணுமுளை
யறந்தவாக்காரணமுகிலிற் பசந்தவெண்மையனைத்தும்போய். (அ0)

பருவமுணர்ந்துசெழுநாறு பறித்துக்குணின்மோதுபுசேர்த்தே
யுருவவணிகர்சரக்குய்த்த லொப்பமுடியின்மிசைச்சுமந்து
மருவவினியநீர்ப்பெருங்கால் வழியேயியங்குமாறுய்த்துந்
திருவமிகுபல்விடந்தோறுஞ் சேர்த்துநடுவாராயினர். (அக)

குறியவாயிலிடைச்சற்றே குனிந்துநிமிர்வார்தமைமானச்
சிறியதேமுற்றதையுணர்ந்து திகைத்துச்சற்றேயுறச்சாய்ந்து
மறியவிடஞ்சுற்றுளதோர்ந்து மகிழ்ந்துநிமிர்ந்துபின்றடித்துச்
செறியவெழுந்தவவைபோலச் செறிந்ததடித்தபல்களையும். (அஉ)

கற்குங்கல்விக்கிடையூறாய்க் கலதிச்செருக்குக்கலப்பதுபோ
னிற்கும்பயிருக்கிடையூறாய் நிறைந்தகளைகடமைநோக்கி
விற்குங்குமமென்முலைமடவார்க் குணர்த்தத்தொழுவர்விரைந்தவரு
மற்குந்தளம்வன்புறச்செருகி யாடையிறுக்கிவயல்புகுந்தார். (அங)

சொல்லோர்குலத்திலொருவனைமேற் சூழ்ந்துவதைக்கும்பலவொன்ன
வல்லோர்புகழப்படும்பயிரை வருத்தம்புரியோர்தாமரையை
நல்லோர்விழித்தாமரைகாட்டக் காற்றாமரைநண்ணலைச்செய்ய
மெல்லோர்கரத்தாமரைவீட்டும் விழைந்துமுகத்தாமரைமகிழும். (அச)

ஆம்பலழித்தார்களைப்பகைவா யாம்பலழித்தாராயினர்
தேம்பன்மருவப்புண்டரிகஞ் செற்றாரிவரைமானென்பார்
கூம்பலடையாத்தாமரைகள் கொல்லீரெம்மைவிடுதிரெனத்
தாம்பலிதழ்வாய்திறந்துதாழ்ந் திருத்தல்காட்டுந்தன்மையவே. (அரு)

செய்யகமலங்களைந்திடுவார் செய்யகமலங்களைந்திடுவா
ரையவாம்பலாம்பலென வாம்பன்மடவாரடர்த்திடுவார்
வையமுவக்கச்சைவலங்கை வலத்தாற்கொய்துபெயர்த்தைம்பா
லெய்யநீலம்புனைந்திடுவா ரினத்தையொறுத்ததயர்தரவே. (அசு)

மெலிந்தகாலத்துறவினரும் வெறுத்துவிடுதல்சரதமே
பொலிந்தசெழுந்தாமரைகளைந்து போற்றுங்குலைமேலேற்றிடவு
மொலிந்தபலநாளுறவாகி யுற்றதுணைப்பதுணராதே
மலிந்தகதிராலென்றூழும் வாட்டம்புரிந்துவருத்துமெனில். (அஎ)

மதிக்குமாற்றுக்காலாட்டி மாரிவ்வாறுகளைகடியப்
பதிக்குநாறுபழித்தலொழி படிமம்போலப்பணைத்தெழுந்து
துதிக்குமாறுகருக்கொண்டு தோலாக்கதிர்களீன்றனவாற்
கதிக்குங்கலியையடவைரக் கணைமண்மகண்மேல்விடுத்தென்ன. (அஅ)

ஈனமருவாதெழுந்தகதி ரிருந்துதூங்கிப்படுப்பாரி
லானசெழும்பால்பிடித்துறநின் றாற்றாமையிற்சற்றேதலைசாய்த்
தூனமொருவமுற்றியபின் னெருங்குநிலத்திற்படுத்தனவான்
மானமிகுபல்களமரரி வாள்கொண்டரியத்தொடங்கினர். (அகூ)

அரிந்தமுதல்பற்பலவுஞ்சேர்த் தமையப்புரியாலிடையிறுக்கிச்
சொரிந்தவயலிற்கழகமைத்தார் சொல்யாப்புற்றாலழகுண்டே
புரிந்துவளர்த்தாரோதடிந்து புரளயாப்பார்கொல்லென்னிற்
றெரிந்துவளர்த்தவசோதையுமுற் றினந்துதிருமாலினையாத்தாள். (கூ0)

கட்டுமுழுதுங்களம்புகுத்திக் கனகவரையிற்போர்புரிந்து
பெட்டுமீட்டுஞ்சரித்திட்டுப் பிறங்கமுன்னந்தொழில்செய்த
கட்டுக்கடங்காப்பகடுபல கருங்கொண்மூவிற்பிணைத்துரப்பி
முட்டுப்படாதுமேன்மிதிப்பச் சுழற்றிவிடுப்பார்முயன்மள்ளர். (கூக)

எங்கள்பாகம்யாங்கோடற் கிடையூறென்றுமிலையென்று
தங்கள்வாயிற்பகட்டினங்க டவாதுபலாலங்கவ்விவர
வெங்கள்வழிவாய்க்களமர்கள்நெல் வேறுவைவேறுறப்புரிந்தா
ரங்களரியசாறுகோ தாலைவேறுபடுத்துதல்போல். (கூஉ)

வளியிற்றூற்றிப்பொலியாக்கி வயங்கக்குவித்திட்டறமனைத்துங்
களியிற்புரிந்தாங்களந்தாறி லொன்றுகாவலோற்குதவி
யொளியிற்சிறந்தவெச்சமெலா முவப்பமனையினுட்செலுத்தி
யளியிற்சிறந்துபல்லாரோ டாருங்குடிகளநந்தமால். (கங)

பேருரொனயாவருமெடுத்துப் பேசுங்குடமூக்காதியா
வாரூர்புகலூரிடைமருதை யாறுபழனமாயூரந்
தேரூர்வீதிப்புள்ளிருக்கும் வேளூர்திருவாவடுதுறையொண்
சீரூர்திருவாஞ்சியமற்றுஞ் செறியிற்பணைமாதவமெளிதோ. (கச)

கரும்புங்கமுகுமிஞ்சியுமஞ் சளுமாந்தருவுங்கதலிகளும்
விரும்பும்பலவுமிகச்செறிந்து மிக்கவளமேநாடோறு
மரும்புமருதத்திறம்புகல்வா ராரேயலர்நீலங்கடோறுஞ்
சுரும்புபடியுங்கழிநெய்தல் வளத்துஞ்சிறிதுசொல்லுவாம். (கரு)

## நெய்தல்.

நறவமொழுக்குநறுநீல நயப்புற்றுங்கேதகைமருவிச்
சுறவமுகைத்துத்தன்போலத் தோற்றும்வளமைமுழுதுணர்ந்து
நிறவம்புயஞ்சால்பணையடுத்த நெய்தல்புரப்பானுயினு
னிறவம்புலவுகமழ்வலைஞ ரேத்தப்பொலியும்வருணனே. (கசு)

இலையான்மலராற்சுறவநெடுங் கோட்டைப்புனைவித்திறைஞ்சுதலு
மலையானுயவொருபுத்தே ளாங்குவெளிப்பட்டருள்சுரக்க
வலையானமையும்வளநிரப்பி வதிவார்பரதர்மீனுணங்கல்
விலையான்மிடியைக்குடியோட்டி மேவாநிற்பர்பரத்தியரும். (கஎ)

கலவர்குவித்தமீனனைத்துங் கவலப்போழ்வாருப்பிடுவார்
நிலவவுணக்கிப்புள்ளோப்பி நெடியவரைகள்போற்குவித்துக்
குலவவிலைசெய்துவந்திடுவார் கொள்ளாப்புலவுக்கழிமடவா
ரிலவமலர்நேர்வாயார்கண் ணெதிருற்றூர்க்கோர்பிழைப்புண்டோ. (கஅ)

பொங்குகழிசாருற்பலமும் புன்னுகமுஞாழலுமருகு
தங்குமடற்கேதகையுமணந் ததையவீசாவிடினுலக
மெங்கும்புலவுநாற்றமெழு மின்னுவருகபவுத்தமத
முங்குமுலகநால்வரும்பா மொழியாவிடினையமுமுளதோ. (ககூ)

கலத்தினிழியுங்கருங்களிறுங் கமலங்குடித்தகருமுகிலு
நிலத்தினுருவேற்றுமையுணர முடியாவண்ணநெருங்குவன
புலத்தினுயர்ந்தமேலோரும் புன்மீன்கவரும்வலைச்சியர்வாய்
நலத்தினறவம்பொலியாம்ப னுறுமெனினும்புகல்வதெவன். (க00)

கழிசானிலத்துமடமாதர் காமர்வனப்பென்னென்றுரைப்பாம்
விழிசானுதலெம்பெருமானு மீனக்கோலைனுருக்கொண்டு
பழிசால்வலையுந்தோளிட்டுப் பரவையொருமீனமும்படுத்துக்
கொழிசானலத்தினொருமகடோள் கூடிக்குலவிவாழுமெனின். (க0க)

மற்றநிலத்தில்வாழ்வார்போன் மழைபெய்பருவம்வேண்டாம
லுற்றகழிநெய்தலின்வாழ்வோ ரொருங்குவெயில்கூர்பருவத்தே
முற்றவுப்புவிளைவிப்பார் மொழிந்தவதுபற்பலவினுக்குஞ்
சொற்றமுதலாய்மருவுமெனிற் சொல்லுந்தரத்ததோவதன்சீர். (க0உ)

சொன்னமொழிக்குப்பகைபரவத் தோற்றுந்திறமுள்ளுணர்ந்தாங்கு
மன்னநிகழும்பரத்தியர்கள் வறுமீனகத்துஞ்சாராமன்
முன்னம்விரைந்தோப்புவொனினு முதியகொடியர்நிலத்தகலா
வன்னமுடியார்புரிபோரின் வயிறுவளர்க்குந்திறந்துணிந்தே. (க0ங)

வையம்புகழுமறைக்காடு வயங்குநாகைக்காரோணம்
வெய்யவணுசாநள்ளாறு விழைமயானந்திருக்கடவூ
ரையமுல்லைவாயின்முத லளவிறலந்தன்னுட்கொண்டு
தையலமைந்தநெய்தனிலத் தவத்திற்களவுமுண்டாங்கொல். (க0ச)

முத்திவலைகைக்கொண்டுலக மூன்றும்படுக்குமொருமுதலைப்
பத்திவலையிற்படுத்தொழியாம் பாசவலைதீர்த்தாநந்த
சித்தியடைந்தவதிபத்தர் திகழ்ந்தநிலச்சீரொன்னுரைத்தாங்
கத்திமறவர்பயில்பாலைவளத் துஞ்சிறிதுகட்டுரைப்பாம். (க0ரு)

பாலை.

வாகையமைந்துகுராவணிந்து மறஞ்சான்றுளிருமொருதன்போ
லோகையமைந்துபாலைநில முறலாலதன்கணுருகுறிய
தோகையமைந்தகலையூருந் தோகையரசுசெய்தமர்வா
ளீகையமைந்தவவள்பாத மேத்திமறவர்பலர்பயில்வார். (க0சு)

சிலநாளிருப்பதானுலுந் திரைவாரிதிவைப்பினர்பாலை
பலநாளிருக்குநிலத்தினுமேற் படுமாபுணர்ந்துவிருப்புறுவார்
நலமார்தினமுநிகழுநதி நதத்துமொருநாணிகழ்மகநீர்ப்
புலமாதரித்துப்பல்லோரும் புக்குமூழ்கிப்பயனுறல்போல். (க0எ)

பதியைத்தொடர்ந்துசெலுமடவார் பசியைப்போக்கும்பேரீந்து
நிதியைப்பொருவவவர்தாக நீக்காநிற்குமாமலக
மதியைக்கவர்மற்றவர்குழற்கு வாசம்புனைவபுாடலமெய்த்
துதியைக்கெழுமற்றவரடிகற் றேயாதின்பஞ்செயுங்கோங்கு. (க0அ)

ஒழுகுசுவையமொழிக்கிளியு முவகைசெயுமஞ்ஞையுமின்ப
முழுகுமிசையிற்கூங்குயிலு மொய்த்தநிலமோவறிதாய
கழுகுபயிலுமிடமென்று கரைந்துவெறுப்பாருளரொன்னிற்
புழுகுமுலையோர்பாலானோர் பொருப்பும்வெறுக்கத்தக்கதே. (க0கூ)

வருக்கையில்லைவிளவில்லை வாழையிலைமாந்தருவில்லை
யிருக்கைவேம்புகடம்பாலை யென்னிற்புகழ்வதெவனென்னின்
முருக்கைநிகர்வாயங்கயற்கண் முதல்வியறங்கூர்திருக்கரஞ்சார்
திருக்கையுடையநம்பெருமான் றிணிதோள்களுஞ்சீரில்லனவே. (கக0)

தலையாங்கற்பின்மகிழ்நரொடு தணவாதேகுமடவார்மு
னிலையாமுருங்கைபொரியிறைத்து நீடுமகிழ்ச்சியுறச்செய்யுந்
தொலையாதவர்கள்விளையாடத் தூயகுரவம்பாவைதரு
முலையாவளத்துப்பெரும்பாலை யுஞற்றுமுதவிபெரிதன்றே. (ககக)

நெல்லும்வரகுஞ்செந்தினையு நீடுமிறுங்கும்பல்பயறும்
புல்லும்பிறவுமேயுணவாய்ப் பொருந்தாநிற்கும்பிறநிலத்துக்
கல்லுமுணவாமிந்நிலத்துப் பெருமையாதுகட்டுரைத்தாஞ்
சொல்லுமினையதிணைமயக்கத்துள்ளுஞ்சிறிதுசொற்றிடுவாம். (ககஉ)

## திணைமயக்கம்.

(வேறு.)

வரைவளருமொருமுடங்கன்மடங்கிவனந்தலைவைத்துமருவனாளும்
புரையினமைக்குழற்சருவிகொள்ளுமெனக்குறித்தெழுந்துபோந்ததேய்க்கும்
விரைசெறிகான்றளவதன்மேற்படர்ந்துநகந்தலைவைத்துமேவன்மேலா
முரைபெறுமந்நிலமாதர்தமையுமுறலுரிமையெனவுற்றதேய்க்கும். (கக௩)

கானமருமான்முலைப்பால்சுழனிபுகுந்தறலொடளாய்க்கரைமேற்பட்டே
யானநிரைக்குதவிபுரிபவரடையும்பயனளவையறியத்தேற்றும்
பானல்வயலுழக்கெருமைப்பால்வரகம்படப்பைபுகூஉப்பரந்துவற்றிக்
கூனன்மருப்புடைமேதிக்குதவுநர்தம்பயனளவைகுறிக்கத்தேற்றும். (ககச)

வயன்மருவுசெந்தளிர்மாந்தருக்கோட்டினுறப்படர்ந்தவயலைதாவி
யயன்மருவுகடற்புன்னைமுடிவளைப்பவதிற்படர்ந்தவடம்புதாவிக்
கயன்மருவுவயலமரம்மாந்தருவின்முடிவளைத்துக்கட்டிப்பேர்தல்
வியன்மருவெம்பெருமானும்விசையனுமற்போராற்றும்விநோதந்தேற்றும். ()

வரையொருதேத்தடைகிண்டுவழிதேனும்வனப்பசுக்கண்மடியினின்றும்
விரையவழிதீம்பாலுமென்பழனக்கரும்புடைத்துவிட்டசாறும்
புரையிலொருதலைக்கூடிப்பொலிதோற்றமுலகமெலாம்பொலிவான்செய்த
சுரையிலொருமூவர்திருவாய்ப்பாட்டுமொன்றுபடக்கலந்ததேய்க்கும். (ககசு)

சுரமேயவொருகுரவைவரையெழுந்தகறிக்கொடியுந்துன்னுகானத்
துரமேயதளவநெடுங்கொடியும்வயலுறுவயலைக்கொடியுமோவா
வரமேயகடற்படருந்துகிற்கொடியுமரீஇவளைத்துமயங்கல்வீரத்
திரமேயவொருவனைநாற்குலத்துமாதருந்தழுவிச்சேர்ந்ததேய்க்கும். (ககஎ)

இன்னபடிபொலிந்தோங்குநானிலத்தைந்திணைவளமுமெடுத்துக்கூறப்
பன்னகநாயகனாலுமுடியாதுமற்றுமெவர்பலவாயுள்ளா
ரன்னவனுஞ்சொலமுடியாத்திருநாட்டுவளம்யானோவறையவல்லே
னென்னபுகன்றனன்சிறிதுமியம்பினேனலன்சிவனேயியம்பல்வேண்டும். ()

தண்ணீருங்காவிரியேதார்வேந்தன்சோழனேதாவாமேன்மை
மண்ணுவதுஞ்சோழமண்டலமேயென்றுரைத்தவார்த்தைவாளாற்
றெண்ணீர்வையகத்துள்ளபிறநாட்டுப்புகழெல்லாஞ்செகுத்துத்தீமை
யொண்ணாதசோணாடுபொலியுமெனிலதன்வளமுற்றுரைப்பார்யாரோ. (கககூ)

மன்னுநால்வகைக்குடியும்பிறகுடியுமிகநெருங்கிவழுவுறாது
துன்னுநெறியுரியதழீஇச்சிவநேசம்பூண்டொழுகுஞ்சோழநாட்டின்
முன்னுவளந்தொகைவகையுட்டொகையுளொருதொகையாகமொழிந்தானாரு
மின்னுமணிமாளிகைசேர்கும்பகோணச்சிறப்பும்விளம்பலுற்றாம். (கஉ0)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கடுடு.

---

## திருநகரப்படலம்.

பூமலிகலைமகட்குப் புண்ணியவேதனுவே
மாமலிதிருமகட்கு மாமணிவண்ணன்மார்பே
பாமலிஞானச்செல்விக் கெம்பிரான்மேனிப்பாலே
நாமலிபுலவரோத்த நலந்தருகும்பகோணம். (க)

வெவ்வரந்தடியாச்சூல வித்தகனமர்தலாலே
பௌவநீருலகமேத்தப் படுசிவலோகம்போலுஞ்
செவ்விகொடிருமாலாதித்தேவர்களமர்தலாலே
யவ்வவருலகம்போலு மவிர்பெருங்கும்பகோணம். (உ)

எண்ணருஞ்செல்வத்தோடு போகமுமெய்திநாளு
நண்ணருமொழுக்கம்வாய்ந்த நன்மையினளகையூரும்
விண்ணருமருந்திற்றேன்று நகரமும்விராயதொக்கும்
பண்ணரும்பொருள்களெல்லாம் பரவியகும்பகோணம். (ங)

உமைமருள்கண்ணிஞேரா டுவந்துதன்னிடத்துவாழ்வார்
பிழைதபுநிதியம்பெற்றுப் பிரபலசெல்வராகி
மழைநிகர்கொடைக்கைவள்ளன் மாந்தராம்வலியான்மற்றை
விழைபெருநகரமெல்லாம் வென்றதுகும்பகோணம். (ச)

அடியவைப்புரக்குமெங்க ளண்ணலையருச்சித்தேத்தாக்
கொடியவாயொழுக்கநீதி குன்றுபுகயவராய
படியவாவஞ்சமாற்றும் படிறறாநுகர்தலற்ற
மிடியவையடையாதென்றும் விளங்கிடுங்கும்பகோணம். (ரு)

மேதகுமலரின்மேய விதிசகபீசமுற்று
மாதரந்தருமோர்கும்பத் தடைத்தனனன்னதெய்திக்
காதரங்கழியமேய காட்சியாற்கும்பகோண
மோதருநகர்கட்கெல்லா மூலமாயோங்குமன்றே. (சு)

மன்னியவுமையோர்பாகன் மலரவன்றனைமுன்றோற்றித்
துன்னியநகரினங்க முணர்ந்தவன்றுணிந்துசெய்ய
வன்னியமில்லாத்தானே யமைத்ததிக்குடமூக்கென்றுன்
மின்னியவிதுபோலொன்று மேலுலகத்துமின்றே. (எ)

தருமவெள்விடையூர்பெம்மான் றழைகுடமூக்கைத்தோற்றி
யருமைநுண்டொழில்செய்காலை யாயிடைக்கழிந்தசேட
மருமலராளிகொண்டு வானகர்படைத்தானென்னிற்
குருமலியனையமூதூர்ப் பெருமையார்கூறற்பாலார். (அ)

குறையிலானிறைவனென்று கூறும்வாசகமெய்யென்றே
குறையிலாதமைத்தகும்ப கோணத்தாற்றெளிந்தோஞ்சென்னிக்
குறையுளான்மலரோனென்று கூறலுமுண்மையொவ்வோர்
குறையுளவனையான்கண்ட நகரிதேகுறிக்கொள்சான்றும். (கூ)

ஒருமலர்தாங்கப்பெற்ற மெலியனுலுஞற்றப்பட்ட
திருமலர்நகரமெல்லா மிடையிடைசிஷையாநிற்குங்
குருமலர்பொருப்புத்தாங்கும் வலியனுற்குயிற்றப்பட்ட
கருமலர்குடந்தைகற்பக் கடையினுஞ்சிதைவதின்றே. (க0)

அழிவிலானிறைவனென்றற் காகமவளவையொன்று
மொழிதரல்வேண்டாகாட்சி யளவையேமொழிதல்சாலு
மிழிவிலாவவனுலாற்றப் படுமெழிற்கும்பகோண
மொழிதராதுறலுமேனை யொழிதலுங்கண்டவாற்றுல். (கக)

மறைமுடிப்பெருமான்மேய மாப்புகழ்க்கும்பகோண
நிறைவளத்தமைதற்றுழ்ந்தார் நெடுஞ்சிவலோகம்யாரு
மறையும்வைகுந்தமற்றை யமரர்தம்பதவியுச்சிப்
பொறைகொளமிதிப்பவுய்க்கு மெனிலினிப்புகல்வதென்னே. (கஉ)

வானவர்முதலோர்யாரும் வந்துதற்கூடமேய
வீனமில்புகழ்க்காவேரி யிலங்கிருபாலுங்கூடி
யானவுட்பொலிவினேடு மளவளாயொழுகுமென்னி
லூனமில்கும்பகோணச் சிறப்பெவருரைக்கவல்லார். (கங)

அடுத்தவர்வருந்தாவண்ண மருள்செயுங்கும்பகோண
முடுத்தமாநதிகளந்த வூர்க்கிருகையும்போலு
மெடுத்தபார்மகளவ்வூருக் கிட்டபூந்தொடையும்போலு
மடுத்தமற்றிரண்டுநாடி வழிவளிவழக்கும்போலும். (கச)

மாயவன்மார்பஞ்சோழ மண்டலமதற்குநாப்பண்
மேயசெம்மணியேபோலு மிகுபுகழ்க்கும்பகோண
மாயவம்மணியைச்சூழ வடர்துழாய்க்காடுபோலும்
பாயமாநகரஞ்சூழ்ந்து பயன்படுபசியசோலை. (கரு)

கோலமார்வளஞ்சால்கும்ப கோணஞ்சூழ்மலர்ப்பூஞ்சோலை
சீலமார்தானமீது சென்றுறநிழற்றலாலே
யேலமார்குழலாரோடு மிமையவரானோர்வேனிற்
காலமார்வேர்வைநீத்த மெய்யராய்க்களித்துவாழ்வார். (கசு)

மேலிடத்தமர்வாரோனுங் கீழிடப்பொருளும்வேட்பார்
காலிடக்கவன்றுன்கொல்லோ கவுதமனில்லுள்வேந்தன்
பாலிடப்பொழிலினுள்ள பசுங்கனிமாந்திவானோர்
சாலிடத்தமையுந்தெய்வத் தருக்கனிவாஞ்சைநீத்தார். (கஎ)

பொழிலிடைக்கிழக்குநோக்கும் பொற்புடைக்கிளைகளெல்லாங்
கழிமதுப்பொழிந்துநாளுங் காவிரியோடளாவு
மொழிவறமேக்குநோக்கி யோங்குபல்கிளைகளெல்லாங்
கொழிமதுப்பொழிந்தாங்குள்ள குளிர்கங்கையோடளாவும். (கஅ)

கொடிமுகிலளாவுமிஞ்சிக் கும்பகோணஞ்சூழ்சோலை
யடிமுழுவதுநனைக்கு மரிசிலும்பொன்னியாறு
முடிமுழுவதுநனைக்கு முராரிவர்முலகமேய
கடிகொள்கங்கையும்வண்டானக் கங்கையுநாளுமாதோ. (ககூ)

வள்ளியகுடந்தைசூழு மாப்பெருஞ்சோலைக்கீழா
லொள்ளியகரியயானை யுற்றருங்குளகுகொள்ளுந்
தெள்ளியவனையபல்பூச் செற்றியசோலைமேலால்
வெள்ளியயானைசார்ந்து விரும்பியகுளகுகொள்ளும். (உ0)

மெய்தழைகும்பகோண வியனகர்சூழுஞ்சோலைக்
கொய்மலர்க்கிளைவான்மேய தருக்கிளையோடுகூட
மொய்மணமலைவக்குண்டாயிற் றென்னைநீமொழிந்ததென்னி
லெய்துபொற்பூவின்வாச மியற்கையினுண்டாங்கொல்லோ. (உக)

கரவுதீர்குடந்தையுள்ளாற் கனகதாமனாயினுப்பண்
டிரவுமோர்மகளைவேட்டு விருப்புறுசார்ங்கபாணி
யுரவுசேர்கிடக்கையுற்ற வுரிமைதேர்ந்துறச்சூழ்ந்தென்னப்
பரவுநீரோடையெல்லாம் பங்கயமலர்ந்துமல்கும். (உஉ)

பருகுநீரோடையெல்லாம் பரவுகோகனகமாம்பன்
முருகுசால்புண்டரீக முறக்குடைந்தவிழ்கல்லார
மருகுதலில்லாநீல மேனவுமவாவிமொய்க்கு
மொருகுடமூக்கைநீத்து மொய்ப்பதெங்குயர்மலர்க்கே. (உங)

நால்வகைமலருமல்கி நந்தனவனங்கடோறு
மோல்வகைஞிமிறுசெய்ய வுறுமணங்கமழாநிற்கு
மால்வகைதவிர்க்குமெங்கண் மங்களவுமையாண்மேய
பால்வகைநகரமன்றி யெவ்விடம்பரிமளிக்கும். (உச)

உயரிலாங்கலியினின்று மொண்பழமுதிர்வவெல்லாம்
பெயர்தராதருகுநின்று பிறங்குமாந்தருக்கடாங்கி
யயர்வறப்பின்புநீக்கு மத்தகுபழங்கடாங்கி
மயர்வறவிடுத்தல்வேற்று மரங்களுக்கியலாதென்றே. (உரு)

மழைமுகில்கிழித்துமேற்போய் வயங்குறுதெங்கின்மீது
தழைதருதானவாழ்க்கைத் தருப்பலமலரும்வீழ்வ
விழைதருநீவிர்தேவாய்மேவுநாள் யாமேநும்மைப்
பிழையறவளைப்போமென்றுதெரிவிக்கும்பெற்றிபோல. (உசு)

ஒருவரும்பசுங்கோடொன்றி லொருகவியிருப்பவாங்கு
வெருவருங்கவிமற்றொன்று விரைந்துதாய்மேவவந்தத்
தருவருங்கோடுநீத்துத் தரைமிசையிரண்டுநின்று
மருவரும்பெரும்போர்செய்வவாலிசுக்கிரீவனொன்ன. (உஎ)

ஒருகவிவருக்கைமேவியொருகனிபறித்துச்சென்னி
மருவவைத்தங்குநின்று மற்றொருதருவிற்சேர்ந்த
பொருவருங்கொடிமேற்செல்லும் பொருநரோர்குடங்கொண்டு
வெருவரக்கயிற்றின்மீது சென்றிடுவிதமேமான. (உஅ)

சீப்புறுதலையினானுஞ் சேயிதழுடைமையானுங்
காப்புறுகையினானுங் கருதமூற்றினிமையானும்
வாய்ப்புறுகதலிநாளு மருவுநர்மயங்கச்செய்யுஞ்
சாய்ப்புறுந்தலையதாய தன்னதுமரம்பைதானே. (உகூ)

சூழ்தருகருப்பங்காடு தொல்குடமூக்கின்மேவி
வாழ்தருமைந்தர்பல்லோர் மயிலியலாரும்பல்லோ
ராழ்தருகாமத்துய்ப்பா னங்கையொன்றமையாதென்று
தாழ்தருசம்பராரி பற்பலசமைத்ததேய்க்கும். (௩0)

முதுமொழிப்புலவர்வாழ்த்து முழக்கருக்கும்பகோண
மதுமலர்த்தடஞ்சூழ்வைப்பின் வளம்பலபுகல்வாமென்று
கதுமெனப்புகுந்துதேர்ந்து கடையுறுமையினூற்சில்ல
பொதுமையிற்புகன்றுஞ்சொல்வாம் புறநகர்வளத்திற்றன்னம். (௩௧)

## புறநகர்.

(வேறு.)

தும்பிகாத்தவன்றன்னொடு முரித்துமுன்றுனைந்தோர்
தும்பிபோர்த்தவனமரிடந் துன்னினோர்கோட்டுத்
தும்பியீன்றமற்றவனருள் சுரக்குமென்றெண்ணித்
தும்பியெண்ணில சூழ்வனபுறநகர்ச்சூழல். (௩௨)

பகையெனச்சொலிற்பதை பலை த்திருவிழிவெதும்பித்
தகைபடுத்தியவெளிறபுத் தழற்சினந்ததும்பி
மிகைமதப்புனல்பொழிவன விறற்பெருந்தும்பி
நகைமகிழ்ச்சியி னண்ணியுண்டிளைப்பனதும்பி. (௩௩)

கறையடித்தலையொன்றொரு மேனிமேற்கலந்து
குறையறத்தனைப்போற்றுவா ரூறெலாங்குமைக்கு
மறைமுழுப்பெருவாரணம் போற்றுவார்க்கடுத்த
பிறைவினைப்பகையூறெலாந் தவிர்ப்பதோர்வியப்போ. (௩௪)

மருப்புவிற்கொடு மதமழைபொழிந்துமாநீலப்
பொருப்புநேர்ந்துற முழங்கலினமைப்பொரூஉங்களிறு
விருப்புவாரிமே னாமுறன்மேதகவெனத்தேர்ந்
தருப்புமாமுகி லாயிடைத்தவழுவநாளும். (௩௫)

நிலத்துமேற்கறை யடிச்சுவடுறநெடுங்கோட்டுப்
புலத்துமேயகிம் புரிமணிவிழப்பொழிதானச்
சலத்துநள்ளுறல் பொன்மணிப்பதக்கங்கார்ச்சரட்டு
வலத்துநேருறக் கோத்துமட்கிட்டதுமானும். (௩௬)

பரிசெகுத்தவ னாயினும்பரியுருக்கொள்வான்
பரியுநெஞ்சின னாயமாலொடுபழமறைநாற்
பரியுடைப்பர னமரிடம்பொருந்தின்முன்பரவோர்
பரியெனப்புரந் திடுமெனச்சூழ்வபல்பரியும். (௩௭)

நீடுவாம்பரியுருக்கொளல் கருதியநெடுமா
லாடுவார்கொடி மதிற்குடமூக்கினுளணைந்து
பாடுமேவுபல் லிடங்கொடுபயிலுதல்பண்பே
கூடுமெந்நகர்ப் பரித்தொழில்கற்பதுகுறித்தே. (௩௮)

ஆடுவாம்பரி வாய்விடுவிலாழிரேதன்கால்
கூடுபல்சுவட் டினுநிரம்புதல்பரிக்குழாத்து
நாடுபல்பணி புரிபவர்நுகர்ந் திடநறுங்கண்
மாடுபல்சிறுகலங்களினிறைத்தெனவயங்கும். (௩௯)

வீரவாம்பரி கலனையிற்பன்மணிவீழச்
சோரவாய்விடு விலாழியிற்காலிடுதோற்ற
மாரவாறுர முறப்பலவாயகல்பரப்பி
நீரம்வாக்குபு முசலங்கொண்டிடிப்பதுநேரும். (௪௦)

அண்ணலிந்திர னச்சுவம்விளர்த்ததுமரிதாப்
பண்ணவந்தபல் பரியெலாநரியெனப்படர்கா
னண்ணமுன்னோநா ணம்பிரான்புரிந்ததுநாடின்
விண்ணலங்குமிந் நகர்ப்பரிவிழைதராதுணர்ந்தே. (௪௧)

அறந்தவாதவிந் நகர்ப்பரியொடுபொரலாற்று
மறந்தவாதவான் பரியெலாமானமூட்டுதலாற்
சிறந்தவத்தகு பரிசெறிமந்திரச்சென்னி
யுறந்ததத்தம்வன் குளம்பினுலிடறல்செய்தோடும். (௪௨)

போனவாறுமீ ளாதுபோஞ்செங்கதிர்ப்புத்தேண்
மானவையமுமானமிக்காய்மறைந் தொழிய
வானமண்ணடி கீளவிண்ணணிமுடிகீளத்
தானமெங்கணு நினைத்தவாசெல்லுவதடந்தேர். (௪௩)

செங்கதிர்ப்பிரான் செலுத்துதேரிந்நகர்த் தேர்க்கு
மங்கலுற்றதென் னென்பிரேன்மற்றதற் கொருகா
லங்கண்மேயபா கற்கிருகால்களு மபாவம்
வெங்கண்மாற்றலர் தகைப்பராவின்னுமென் வேண்டும். (௪௪)

பொன்னிற்செய்தபே ருருளையைமறைப்பன பூழி
யுன்னிற்றுவடி யுடன்றொடரடிகளுக் குற்ற
தென்னிற்றீர்வத லாற்பிறதீர்ப்பதென் னென்று
மின்னிற்செய்தென விளக்கிடுமீர்க்குமா விலாழி. (௪௫)

பின்புதேர்வர முன்புசெல்பெருந்திறல் வாசி
வன்புசேர்மரக் கலந்தொடர்பெருந்திரை மானு
முன்புசேர்தரு காந்தமுமுனிவறத் தொடரு
மன்புமேவிய விரைசெலவிரும்புமொப் பாகும். (௪௬)

வெஃய்யமாற்றலர் முனைகெடக்குமைத்தெழும் விறல்சால்
செய்யதேர்பல செறிதரச்செறித்திடு கூடம்
வையமுற்றவு மடக்கிடுமுள்ளென வகுப்பா
னாயவவ்வுரைக் கையமொன்றுயினு மின்றே. (௪௭)

வட்டம்வாள்கொளீஇ முன்வைத்தபாதம்பின் வையார்
தொட்டவாண்முனை மண்டலநோக்குமா துணியார்
விட்டவாளிநே ரடுப்பினும்விழித்தகண் ணிமையார்
கட்டமாருயிர் மேவினும்வெரிந்புறங் காட்டார். (௪௮)

வளைக்கும்போர்செழு மாற்றலர்மருவு நாளென்று
விளைக்கும்போரின்மெய் வேல்பறித்தெறிவது மென்று
முளைக்கும்வெம்பசி யறப்புண்மொய்த்திடுவதென் றென்றூழ்
துளைக்கும்வன்மைநா மடைவதுமென்றெனச் சூழ்வார். (சக)

கூற்றநேரினு மடுசமராடுதல் குறித்தோர்
மாற்றலார்வசி வடுநிறப்பூணென மகிழ்வோ
ரேற்றமாற்றலர் புறந்தரிற்பொருதமை யிகழ்வோ
ருற்றமேவுகட் செம்மையருலப்பிலர் வீரர். (௫0)

தானமால்கரி வாம்பரித்தாரணி வைய
மானபற்பல வூர்தலும்படைக்கல மனைத்து
மானநூல்வழி பயிறலும்பயிற்றலு மான
மீனமேவுரு தோம்பலுமற்றவ ரியல்பே. (௫க)

இனையவீரர்வா ழிடங்களுமிவர்பணி யெல்லாம்
புனையவல்லவ ரிடங்களும்பொருகரி பரிமா
நினையவுள்ளமற் றவைக்குறுகுறையெலா நிரப்பும்
வினையம்வல்லவ ரிடங்களுஞ்செறிவன மேன்மேல். (௫உ)

எந்தநாளினு மேக்குநோக்குதல்பயி லெம்மை
யெந்தநாளினுங் கிழக்குநோக்குதல்பயின் றியங்கு
மெந்தமாக்களு மிணைதராவென்றிறு மாப்புற்
றெந்தவைப்பினுஞ் சென்றுமீளொட்டகத் திடம்பல். (௫௩)

கிடுகுகூவிர மாருருள்கிம்புரி புரசை
முடுகுவாம்பரிக் கலனைவார்மத்திகை முரசு
நெடுகுமாமுது கிலகடநேர்படு கவய
மடுகுலாம்படை யாக்குநர்சேரியு மனந்தம். (௫௪)

எருமைமாமறம் யானைமாமறமிருந் துருவைப்
பெருமைமாமறஞ் சேவன்மாமறம்பிற வுள்ள
வருமைமாமற மனைத்துமுள்ளுவந்தினி தமையா
வொருமைமாமற மெனக்கொள்வாரோங்குசே ரிகள்பல். (௫௫)

தேர்முழக்கமு மதகரிமுழக்கமுஞ் செருமாத்
தார்முழக்கமுந் தவாப்புறநகர்வளஞ் சொற்றுங்
கார்முழக்கமும் வெள்குவார்முரசொடு கடிசெய்
நார்முழக்கமும் பொலியிடைநகர்வள நவில்வாம். (௫௬)

இடைநகர்.

(வேறு.)

வளைமுனங்குழைத்தானேனும் வளைமகட்புணர்ந்துதெய்வ
வளையகத்திருப்புற்றெந்த வளையுமாண்மகவும்பெற்றுன்
வளைசுமந்தவனோடுற்ற வைப்புறிற்பகைத்தீர்பெண்ணி
வளையெலாமொருங்குற்றென்ன வளைவில்பொன்மாடமோங்கும். (௫௭)

கோதகல்கும்பகோணக் குடியுளார்சுவர்க்கமேவற்
காதரம்பயப்பநாளு மறம்பலவியற்றல்வேண்டா
மேதகுமாடமேலால் விளங்குசோபானமாடம்
போதராலுறுபோதெல்லாம் புக்குலாய்மீள்வரன்றே. (ருக)

திருததிர்கும்பகோணத் திருநகர்வாழ்வார்வானம்
பருகுமாமாடமேலாற் பரவுமாளிகையுற்றுரோ
லருகுதாழ்தருவினின்று முதிர்கனியவாவிக்கொள்வார்
பெருகுமூழுண்டேலெல்லாம் பெறுவரொங்கிருந்தபோதும். (ருகூ)

கும்பகோணத்துயர்ந்த குலவுமாளிகைமேலுள்ள
கும்பகோணத்துவானங் குடிகொளும்பவனத்தொன்றுங்
கும்பம்வந்தமர்ந்தாகாயத் தழல்கொடுந்துயரந்தீருங்
கும்பமென்பதுதானென்றுங் கோணத்தையொழிவதுண்டோ. (சூ0)

நெருங்குவெம்முலையாரோடு நிரம்பெழின்மாந்தர்மேய
விருங்குலமாடமேலா லியைந்தபொற்குடத்தின்பாங்க
ரொருங்குவிண்மீனஞ்சூழு முறைத்ததற்புதமோகும்ப
மருங்குமீன்பொருந்துமல்லான் மற்றென்றுபொருந்தலுண்டோ. (சூக)

அளவருமண்டமெல்லா மந்தரத்துறையுங்கொல்லோ
தளவரும்பனையமூரற் றையலோர்பாகனுணை
யுளவரும்பான்மைத்தென்னி னுரைப்பிரமாணங்காட்சி
கொளவருங்கும்பகோணக் குலவுமாளிகைமீத்தாங்கல். (சூஉ)

ஏற்றமிக்குயர்ந்தபொன்செய் மாடமேலிந்துகாந்தத்
தாற்றியநிலவுமுற்ற மவிர்மதியுதயங்கண்டு
பாற்றருந்தெண்ணீர்கான்று பரவுகற்பகமுகுத்த
மாற்றருங்குப்பையெல்லாம் வாரிமண்புகுத்துமாலோ. (சூரு)

தரைபுகழ்கும்பகோணச் சந்திரகாந்தமாட
நிரைமதிகண்டுவாக்கு நிறைபுனற்றுடினைுபாயத்
திரைகெழுபரவைமேன்மேற் செழுநதியடைவதென்று
வரையறப்பருகுமற்றோர் வடவையை யவாவுமாலோ. (சூச)

ஓங்குபொன்மாடமேலா லுறுபெருமணிக்குடத்தின்
பாங்குவண்டுவசங்கோத்த பசுங்கழைமதியந்தங்கல்
வாங்குநீர்வைப்பூர்க்கெல்லாங் குடமூக்குமகிழ்வேந்தாகத்
தாங்குபொன்மகுடஞ்சூட்டித் தனிக்குடைகவித்தலேய்க்கும். (சூரு)

தண்ணியவானயாறுஞ் சந்திரப்பிறையும்பாம்பு
நண்ணியமுடியவாகி நகுமுனைச்சூலந்தாங்கி
யெண்ணியபொலிபொன்மாட மிடமரகதஞ்செய்மாட
மண்ணியபொலியாநிற்ற லம்மையோர்பாகன்போலும். (சூசூ)

கொடிமரமுரிஞுந்தோறுங் குலவுபொன்னகர்தேய்ப்புண்டு
கடிகொளிந்நகரமாட மிசைக்கதிர்ப்பராகஞ்சிந்த
லொடிவிலிந்நகரஞ்சார்மாற் றுயர்ந்தபொனும்பர்தேரிற்
படியுறல்கருதித்தன்போ லாம்படிபண்ணல்போலும். (சூஎ)

பொறிவரிச்சுரும்பரார்க்கும் பூந்தொடைமார்பினரும்
வெறிகமழ்கதுப்பினரு மீதுபொன்மாடஞ்சேர்த
லறிசுவைக்கலவியாற்று மயர்வறவானயாற்றுச்
செறிவளிகற்பதாருத் தேமளாய்வீசலோர்ந்தே. (சுஅ)

கணவரோடேமாதர் கழற்றிவீசியமுத்தார
மணவியவீதிச்செல்வா ரடிகளைத்தகைப்பதோர்ந்தே
யிணர்படுநறும்பூமாலை யேர்தெழிற்றேளாரொன்றுந்
தணவருமூர்தியன்றிச் சார்கிலார்குடமூக்குள்ளால். (சுகூ)

ஒருமகளுடன்மேவி யுடன்றெறிமுத்தமாலை
யருகியன்மறுகிற்போமோ ராடவன்றேளில்வீழப்
பெருகவுமகிழ்ந்தானில்லிற் பெய்வலைமுனிவளேயென்
றுருகியுட்கவன்றனன்ன தொழித்திலான்கொண்டுஞ்செல்லான். (எ0)

சோட்டுமால்களிறுமைந்தர் குலப்பிடிமகளிர்செம்பொ
னீட்டுவாண்மணிபூண்மூங்கில் கொடிமரமேனல்சாலி
மீட்டுமற்றுளவுமிங்கு வேண்டியதாயவென்றன்
மாட்டுமாளிகைகளெல்லாம் வரையெனற்கையமின்றே. (எக)

மாமலிகுடமூக்குள்ள மைந்தருமாதராரும்
பாமலிமாடமேலாற் பரியங்கத்தமளியாற்று
மேமலிகலவிநோக்கிப் பொருமையாலிமையாராகி
நாமலியமரரின்னு முறக்கமுநண்ணாரானர். (எஉ)

கரவில்வான்மதியந்தங்கண் முகத்தெழில்கவராதன்பர்
பரவுவாண்முகத்துத்தங்கண் முகம்படப்பொருத்திமாதர்
விரவுறத்துயில்வார்கள்ளல் வீபத்துஞ்செயுமோவென்னிற்
குரவனில்விழைந்தானீது குயிற்றுதற்கஞ்சுவானே. (எ௩)

மலைமிசைமயினின்றென்ன மாளிகைமீதுநிற்கும்
விலைவரம்பிகந்தபூணர் மருங்குலைவிண்ணோர்நோக்கித்
தலையமையிவ்வான்கும்ப மொன்றுதாங்கிடுமாலவ்வா
னிலைபெறவிரண்டுதாங்கு நீடிறும்பூதிதென்பார். (எச)

வானவர்மாடமேலா னுலாவொருமாதைநோக்கி
மீனமோரிரண்டுகும்ப மிரண்டுவில்லிரண்டிரண்டே
யானகற்கடகங்கன்னிக் கமைந்தனசிங்கமட்டு
மீனமிலொன்றேயாய திவ்விடத்தரியதென்பார். (எரு)

முருந்தொன்றுமூரற்செவ்வாய் முலைவிலைமாதர்தம்மிற்
பொருந்தொன்றுநிரம்பத்துய்த்துப் பொன்மனைபுகுவான்போந்து
வருந்தொன்றுமனையாளுடன் மாற்றிடுமருந்திதென்று
விருந்தொன்றுநாடிநிற்பார் விடியலென்றோரார்மைந்தர். (எசு)

இடப்புறத்துயிரன்னாளோ டிலங்கெழிற்றவிசோர்மைந்தன்
றிடப்படவிருந்துநேரோர் கண்ணடிசிறப்பினோக்க
மடப்பிடிநடையினளு நோக்கியுண்மறுக்கமுற்று
டொடப்படாதனைவலத்தோர் தோகைகொண்டிருந்தாயென்று. (எஎ)

திருந்துலகியற்கையொன்றாய்ச் செறிந்திலதென்பதோர்ந்தாம்
பொருந்துபல்சனநெருங்கிப் போதரும்வீதியூடு
முருந்துவெண்ணகையார்கொங்கை மொய்த்தவாடவர்தோடாக்க
வருந்துகின்றாருஞ்சில்லோர் மகிழுகின்றாருஞ்சில்லோர். (எஅ)

மெல்லுவவொருபால்வாளா விழுங்குவவொருபானக்கற்
கொல்லுவவொருபான்மொண்டு பருகுவவொருபாலின்னஞ்
சொல்லுவவொருபாலாகத் துன்னியநியமவீதி
பல்லுவமானஞ்சொற்ற போதினும்பயன்படாவே. (எகூ)

மாங்கனிக்குவையும்வாச வருக்கையின்குவையும்வாழைத்
தீங்கனிக்குவையுந்தெண்ணீர் செறித்துமுந்திரிகைநல்க
வாங்கனிக்குவையுமீந்தி னருங்கனிக்குவையுமற்றைப்
பூங்கனிக்குவையும்பற்பன் மலையெனப்பொலிவவெங்கும். (அ0)

கொழிநலங்கனிந்தமாதர் கொங்கையுமைந்தர்மார்பும்
பழியறத்தாக்குந்தோறும் பரிந்துவீழ்தாருஞ்சாந்துங்
கழிசுடர்மணியுமுத்தும் வைரமுங்கனகமுங்கைச்
செழிவளைக்குலமுமற்றுந் தெருத்தொறுஞ்செறிந்தகுப்பை. (அக)

அரிப்பவர்கையினேந்து மவிர்மரகதங்கோமேதந்
தெரிப்பவர்வியக்குநீலஞ் செம்மணிமுத்தமின்ன
விரிப்பவர்விரிக்கும்பொற்கோன் மிகுகழிகாமந்துய்க்கப்
பரிப்பவர்முலைமுகட்டு மில்லையேற்பகர்வதென்னே. (அஉ)

முரிதிரைப்பரவையொக்கு முழக்கருநியமவீதி
விரிபொருள்பலவுங்கொண்டு விராவுபல்குடிஞைநேருந்
தெரிதருசரக்குமூடை கொடுவந்துசேருங்கூட்ட
முரியபணுவாய்நேரு மொழிவறவோடுந்தேர்கள். (அங)

மன்னியகும்பகோணம் வாழ்பெருஞ்செல்வமெல்லா
மின்னியமாடஞ்சோலை விரும்புபல்பண்டமெல்லாந்
துன்னியவாக்கலாலே சுமக்கலாற்றாதுசேடன்
பன்னியதன்போன்மற்றோர் பையராவரசுவேண்டும். (அச)

பகலருமுழக்காய்ப்பாடை பதினெட்டும்விராவலாலே
யுகலருந்தேயமுற்று மொன்றுபட்டிருத்தன்மானு
மகலரும்பொருளவாகி யகிலமெங்கணும்பரப்பி
யிகலருமனத்தினாரை யியல்பிற்கொணியமவீதி. (அரு)

தகரவார்குழலினாரைத் தனிமணந்தொருவிண்வேந்த
னிகரவார்முரசமார்ப்ப நெடுங்கொடிவானந்தூர்ப்பச்
சிகரவார்மாடமோங்குந் தெருவுலாப்புரியுமைந்தர்
மகரவாரிதிநீர்நாப்பண் மரக்கலம்புரப்பாரொத்தார். (அசு)

காவணம்பொலியவிட்டுக் கதலியுங்கரும்புந்தெங்கும்
பூவணத்தொடையுமற்றும் பொருந்துவபொருந்தச்சேர்த்து
மாவணத்தனிரஞ்சாயன் மடநடைமாதராரும்
பாவணத்திறல்செய்வாரும் பயிலிடநகரமெங்கும். (அஎ)

நலம்படிக்கெழுதமுற்ற நயத்தமைகருங்கண்மாதர்
சிலம்படிச்சுவடுதோயாச் சிகையுடையாருமில்லை
வலம்படப்பொருதுந்திண்டோண் மைந்தர்கைநகங்களென்னுங்
குலம்படச்சுவடுகொள்ளாக் கொங்கையுள்ளாருமில்லை. (அஅ)

கரும்புவெஞ்சாபங்கோட்டிக் கருஞ்சுரும்பிரங்கப்பூட்டி
யரும்புபன்மலருநாட்டி யாடல்வேளாடல்செய்ய
வரும்புதுமணத்தின்மாதர் மைந்தரொன்ஞான்றுமாடல்
விரும்பிடைநகரஞ்சொற்ற முண்ணகர்விளம்பலுற்றும். (அகூ)

உண்ணகர்.

குவலயம்புகழுங்கும்ப கோணஞ்சூழ்கிடங்கைநாளுந்
தவலருஞ்சலதியென்றே சாற்றுதற்கையமில்லை
யுவமையிலறிஞரொல்லா முததியேழென்றுரன்று
ரவமில்சொல்லுணருந்தோறு மையமொன்றமையாநிற்கும். (கூ0)

முருகவிழ்துளவத்தாரோன் முன்கொண்டயாமைமீனத்
திருவமெய்ப்படியிருக்கு மென்றுளத்துணர்தல்வேண்டா
குருமலர்செறியுங்கும்ப கோணஞ்சூழ்கிடங்கின்மேய
பொருவலியாமைமீனம் போலவேயிருக்குமாலோ. (கூக)

பொருவுதீர்கும்பகோணப் புரிசையின்சுற்றுமுற்று
மருவுநீர்க்கிடங்குமேன்மேல் வலிந்துகீழ்ப்போயதென்பார்
வெருவுசால்காள்கூட விடத்தினையமுதிற்கண்டத்
திருவுமாதேவன்றுட்கீழ்ப் போகியதில்லைமாதோ. (கூஉ)

சீலமேபொலியோர்யானை சினக்கராப்பற்றப்பட்டு
மூலமேயென்றுகூவ முன்னம்வந்தடர்த்துக்காத்தோன்
ஞாலமேழ்புகழுமிப்பாம் புரிக்கராநடுங்கப்பற்றி
னேலமாயிரமாகற்ப மிடினுநேருறுவான்கொல்லோ. (கூங)

எழுபெருவாரிநீரு மேழுழுந்தளவைசெய்து
முழுமையும்பருகவல்ல முனியுமிக்கிடங்குநீர்கண்
டிழுதையோரசுரனிந்நீர்க் கரப்பினென்செய்வாமென்னிற்
பழுதமைதருமோரேழு பரவையும்பொருவுமென்றல். (கூச)

ஒருவறுங்குடத்துத்தோன்றி யுருவத்துக்குறியனாய
வொருமுனிபருகலாற்றற் குறுபராபவத்தைமாய்ப்பா
னொருசுதைக்குடத்துத்தோன்றி யுருவத்துநெடியனாய
வொருபெருமானைவாரி சூழ்ந்ததொத்திடுங்கிடங்கு. (கூரு)

அறமுளானொருவன்பெற்ற வரும்பெறற்செல்வமேனைப்
புறமுளார்பலருந்துய்க்கும் பொற்பினதாகுமன்றே
நிறமுளார்செறிந்துநாளு நிகழ்குடமூக்கினெச்சி
திறமுளார்தரமீச்சென்று சேணகர்களுங்காத்தோம்பும். (கூகூ)

பகையெனப்படுவார்நேரிற் பலபடையுள்ளவெல்லா
மிகையெனப்பரன்கண்ணுதி யங்கமேவேறல்போலத்
தகைவலிப்படையெண்ணில்ல சாரவும்பகைஞர்நேரிற்
புகைவிடுத்தங்கமாய பொறிகளேவென்றுதீர்க்கும். (கூஎ)

குலவமேலுயர்ந்ததிந்தக் குடமூக்கிஞெச்சியென்று
நிலவயாவருமுரைப்பார் நெடுமறையுணர்புள்ளோன்று
வலனழிந்தயரமுன்ன மாதேவன்சென்னிசென்ற
தலனளவன்றியப்பா லுயர்ந்துபோந்தன்மையின்றே. (கூஅ)

மதிகதிருடுக்களாதி வானுளவனைத்தும்வன்மை
பொதிமதில்வாயிலூடு புகுந்தியங்கிடுமாலென்று
துதிசெயலென்னைமுன்னைத் துணிந்துலகளந்தோனந்தப்
பதிபுகிற்குனிதராது புகுதுமேற்பகர்வதென்னே. (கூகூ)

பகையெனப்படுவார்தம்மைப் பாவையராகப்பாவித்
தகையுறப்பந்திஞேடு பாவையுமலங்கத்தூக்கித்
தகைமிகப்படைத்தவாயி றழுவியமதிற்குமுன்ன
நகைவிளைத்திடநீருய மதில்கொலோநவிலொப்பாகும். (க00)

சாந்தரையகத்துக்கொண்டு வெய்யரைப்புறத்தேதள்ளற்
கேய்ந்தவர்குடமூக்குள்ளா ரென்பதுமெய்யேயிந்து
காந்தமாளிகையுட்கொண்டு கடுங்கதிர்க்காந்தமெல்லாம்
வாய்ந்தமாமதிற்புறத்து வைத்தமைத்திட்டமாண்பால். (க0க)

## பரத்தையர்வீதி.

(வேறு.)

ஒருவருக்கே பயன்படுத லுடையவரிற் பற்பலர்க்கும்
பொருவரிய பயன்படுதல் பூண்டாரோ சிறந்தவரொன்
றிருநிலஞ்சொல் வதுகுறிக்கொண் டெல்லார்க்கும் பயன்படுதல்
பெருமையற மெனத்துணிந்தார் பெய்வளைத்தோள் விலைமாதர். (க0உ)

இன்பசுக முதலூட்டி யெப்பொருளு முறக்கவரும்
வன்பமையுங் குணம்பொதுநீர் மங்கையருக் கிழிபென்னின்
முன்புசுகங் கொடுத்தொருவர் முழுப்பொருளு மறக்கவர்ந்து
பின்புவெளி விடுத்தவொரு பெருந்துறைநா யகற்கிழிபென். (க0௩)

பல்லுயிரும் வெறுப்பரிய பகரரிய வின்பசுகம்
பல்லுயிருங் கொளக்கொடுத்தல் பரத்தையருக் கிழிபென்னிற்
பல்லுயிரும் வெறுப்பரிய பகரரிய வின்பசுகம்
பல்லுயிருங் கொளக்கொடுக்கும் பரம்பரனுக் கிழிபென்னே. (க0௪)

நன்னுண்மங் கலம்புனைந்து நாயகனோர் பிணியடையின்
மின்னுனுண் ணிடைமடவார் மேவுவீர் பெருங்கவலை
யெந்நாளு மொருகவலை யிலராய்மங் கலம்பூண்ட
வந்நாள்யோற் பெரிதுவப்பா ரவர்புரிந்த தவஞ்சிறிதோ. (க0௫)

திருவமிக வுடையாருஞ் செழுவிலைமா தரைச்சாரி
லுருவவொளிர் முத்தமுத வுவரவரு மதுகொடுப்பர்
மருவுதன மிவர்கொடுப்பர் மற்றவரு மதுகொடுப்பர்
பொருவவொனி லிவர்க்கொழியு மவர்க்கொழிதல் புணராதே. (க0சு)

வரத்தையுறு நல்லொழுக்கம் வாய்ந்தார்க ளேக்கிடினுஞ்
சிரத்தையில ராயுணவு தீர்ந்திருக்கு மேலோரும்
பரத்தையர்தம் வாயூறல் பலர்நுகர்ந்த தெண்ணாதா
தரத்தைநிறீஇ நுகருவரோ லவர்தவஞ்சாற் றிடற்கெளிதோ. (கoஎ)

கவியுமொரு குடைவரையாக் கைக்கொண்டா னெச்சிலெனும்
புவியுமுனி யெச்சிலெனும் புணரியுந்தீ யெச்சிலெனும்
மவியுமளி யெச்சிலெனு மருந்தேனும் பொதுமாதர்
குவியுமித ழெச்சிலெனு மமுதமுங்கொள் ளாரெவரோ. (கoஅ)

பற்குறியு நகக்குறியும் பாணிகொடு தட்டுதலு
மொற்கமற வணைத்திடலு முறுகளியிற் சுவைத்திடலு
மற்குகர ணம்பிறவு மறியாரு மெளிதாகக்
கற்கும்வகை சித்திரித்தார் காமருமா ளிகைதோறும். (கoகூ)

அம்மையொரு சுவர்க்கமுற வறம்புரியு மவரைமறுத்
திம்மையிரு சுவர்க்கமினி தெளிதியும் பொதுமாத
ரும்மையுறு தவமுணர்ந்தே யுறப்பலரைப் புணர்ந்திடவுஞ்
செம்மையுறு சிறப்பளிப்பர் திறம்பலுணர்ந் தொறுப்பவரும். (ககo)

ஆடலாற் பாடலா லபிநயத்தா லூடுதல்போ
லூடலா லூடலுணர்ந் தோங்கமளி யிடைத்தழுவிக்
கூடலான் மைந்தர்பொருள் கொள்ளைபுரி வார்கிரக
நீடலாற் குடமூக்கு நெடுவானை வென்றதால். (ககக)

## வேளாளர்வீதி.

(வேறு.)

முழுதுலகீன்றதாதை முகமுதலுறுப்போர்மூன்றும்
வழுவறத்தாங்குஞ்செய்ய மலர்ப்பதத்துதித்தநீரா
லுழுதொழில்புரிந்துமூன்று குடியையுமொருங்குதாங்குஞ்
செழுவியவேளாண்மாந்தர் திருமனைவீதிமல்கும். (ககஉ)

மறிதிரைகொழிக்குங்கங்கை மரபெனற்கியையநாளுங்
குறிபெறுபுனிதந்தண்மை குவலயத்தமைகூழோம்ப
லறிதருசைவமீகை யமையுநல்லொழுக்கமின்ன
செறிதரக்கொண்டுவாழ்வார் திருந்தியவேளாண்மாக்கள். (ககஙு)

வருவிருந்தெதிர்கொண்டுள்ள மகிழ்ந்துபன்முகமன்கூறித்
திருமலராதிநல்கிச் சிவார்ச்சனைசெய்வித்தன்பா
லருகுவைத்தினிதினட்ட வறுசுவையமுதமூட்டிப்
பொருவறுமடைகாய்நல்கிப் போந்ததோர்குறிப்புந்தேர்வார். (ககச)

திருந்துவெண்ணீறுபூசித் திகழுருத்திராக்கம்பூண்டு
பொருந்தவைந்தெழுத்துமெண்ணிப் புனன்மலராதிகொண்டு
கருந்தடங்கண்ணிபாகக் கடவுளையருச்சித்தேத்திப்
பெருந்தமிழ்நலம்பாராட்டும் பெற்றியாரெங்குமாதோ. (ககரு)

மழைமுகில்விளர்ப்பநாளுங் கொடுத்திடல்வல்லாராய
பிழைதபுவேளாண்மாக்கள் பெறலருமனைவிமைந்தர்
தழைதருசுற்றமற்றுஞ் சார்ந்தவர்யாருஞ்சூழ்ந்து
விழைதரவளவளாவிப் பாத்துண்டுமேன்மேல்வாழ்வார். (௧௧௬)

## வைசியர்வீதி.

ஒள்ளியமலரின்மேலா னுருவிற்றேற்றுநீரால்
வள்ளியமறைப்பவாவி யெழினியுள்வசிப்பாராகி
யெள்ளியவனைத்துநீக்கி யிரும்பொருளறத்தோடீட்டித்
தெள்ளியவளங்கூர்நாய்கர் செழித்துவாழ்மறுகும்பல்ல. (௧௧௭)

ஐயவியளவையேனு மாயிரங்கூறுசெய்து
செய்யவெண்வழுவாராகிச் செழும்பொருளீட்டவல்லார்
மையவிர்கண்டத்தெண்டோள் வள்ளலைப்பூசையாற்றிப்
பொய்யறக்களைந்துமேலாம் பொருளுங்கைக்கொண்டுவாழ்வார். (௧௧௮)

விடற்கரும்வைரநீல மேதகுமுத்தமற்றுஞ்
சுடர்ச்செழும்பொற்பூண்காம்பு துகின்முதலுள்ளமற்றுங்
கடற்புவியிடத்தயாவுங் கரிசறச்சேர்த்துத்தம்பா
லடக்கிவைத்துதவுநீரான் மாயையேயனையரானார். (௧௧௯)

வடதிசைபுரக்குங்கோமா னத்திசைவாஞ்சைநீத்துத்
திடமிகுபெருமான்மேய தென்றிசைக்குடமூக்குற்றே
மடவியர்முதலோர்சூழப் பல்லுருவயங்கக்கொண்டு
தொடர்புறவமைந்தாலொக்குந் தோமிலாநாய்கர்வாழ்க்கை. (௧௨௦)

செம்மணியடுதியிட்டுச் செந்துகிர்க்காட்டமாட்டிக்
கொம்மெனவரிசிமுத்தங் கொழித்துலைப்பெய்யாநிற்ப
ரம்மவந்நாய்கரில்லத் தவிர்சிறுமகளிரொன்று
லெம்மனோரிசைக்கற்பாற்றோ வவர்பெருஞ்செல்வத்தீட்டம். (௧௨௧)

## அரசர்வீதி.

வேட்டொருதண்டந்தாங்கும் விதிபுயத்துதித்தநீராற்
பாட்டளிமுரரூர்மன்னர் படைக்கலம்பயிறன்மேவித்
தீட்டரும்புகழான்மிக்குத் திசழ்மநுநீதிகொண்டு
வாட்டமற்றுயிர்களெல்லா மலிதரவோம்பிவாழ்வார். (௧௨௨)

பகைகெழுமன்னரானோர் பயிலரண்வாயின்முற்றி
மிகைகெழுபடைகளுன்கின் வெஞ்சமராடிவென்று
தகைகெழுமவர்மண்ணுதி தாங்கொண்டுபொலிவிண்ணுதி
வகைகெழுவுறச்செலுத்தி மன்னியமகிழ்வின்வாழ்வார். (௧௨௩)

ஆடலம்பரியினார்ப்பு மடமதகரியினார்ப்பும்
பாடலந்தேரினார்ப்பும் படைக்கலவீரரார்ப்புங்
கூடலர்முனைகள்சாய்த்த குலப்புகழ்பாராட்டார்ப்பு
மேடலர்வலித்தோண்மன்னர் வீதியினறுதாலென்றும். (௧௨௪)

கலையுளவனைத்துந்தேர்ந்து காசினியுயிர்களெல்லா
மலைவிறம்முயிர்போலெண்ணி வருணமாச்சிரமமுற்று
நிலைபெறநிறுவிநீலகண்டனை நிரம்பப்பூசித்
தலைவறவொழுக்கமெல்லா மோம்பிவாழ்ந்திருப்பர்மன்னோ. (௧௨௫)

உல்குவண்பொருளுமண்ணு ளுற்றவண்பொருளுங்காத்தன்
மெல்குவண்பொருளுமாற்றார் மிகத்தருபொருளுமன்பின்
மல்குபல்குடிகளெல்லாம் வழங்குவன்பொருளுங்கொண்டு
பல்குசெங்கோலார்மேய தெருவளம்பகறற்பாற்றோ. (௧௨௬)

மறையவர்வீதி.

மலரவன்முகத்துத்தோன்றுமாண்பினான்மறைகணான்கு
மலர்தருமங்கமாறுமற்றுளவனைத்துமோதி
யுலர்தரவையமாதியுணர்ந்துமுக்குற்றநீங்கிப்
பலர்புகழ்தரவாழையர்பன்மனைவீதியெங்கும். (௧௨௭)

பசுவுடம்பழித்தல்செய்தும்பழிசிறிதேனுமில்லார்
வசுமலரங்கையேற்றும்வண்புனலிறைத்தலோவா
ருசுவடையாததூணமும்பர்வானுரிஞநாட்டி
முசுவுகள்சோலைதோறுமொய்த்துமுத்தழல்வேட்பிப்பார். (௧௨௮)

மறையவரவியேற்பான்வான்வாழ்நாயமையாமுன்ன
நிறைதரமுந்திவந்துநெருங்குவர்யாகசாலை
முறைகொலோவென்னில்வானமுத்தழற்புகைசென்றன்னோர்க்
கறைபெயர்திறம்பநாட்டமிமைப்பித்தாலாற்றுவாரோ. (௧௨௯)

விழைதரவாற்றுமிட்டிவிதிப்படிமுற்றுவித்து
மழையினுமுரசமார்ப்பமன்னவர்கவிகைதாங்கக்
குழைதருகவரிவேதக்கொடிபலநெருங்கப்பொன்னி
யுழையடைந்தாடல்செய்வாரோதைவானுலகம்போர்க்கும். (௧௩௦)

ஆக்கமுமழிவுந்தங்கள்வாக்கினாலாக்கவல்லா
ருக்கமுமுயர்வுமுள்ளாருமாபதிபூசையாற்றி
நீக்கமும்புணர்வுமில்லாநிலையினைத்தலைப்பட்டுள்ளார்
தூக்கமும்பவஞ்சத்தன்றிச்சோதிபாலில்லாவொன்றும். (௧௩௧)

துயிலுணர்ந்தாப்பிநீராற்சுத்தியெவ்விடமுஞ்செய்து
பயில்புனற்பொன்னியாடிப்பதமுதற்பலவுமட்டே
குயிலுறலடைந்தயார்க்குங்கொடுந்தழற்பசியைமாற்று
மயிலியன்மடந்தைமாராற்பொலிவனமறையோரில்லம். (௧௩௨)

ஆர்ப்புறுகுண்டச்செந்தீவளர்ப்பவரந்தணாளர்
சேர்ப்பவின்னமுதமூட்டிச்செறிபவருதரகுண்டத்
தோர்ப்புறுபசித்தீயென்றுமொழிப்பவராணரன்றிப்
பார்ப்பனமகளிர்மாறுபடுதலெஞ்ஞான்றுமின்றே. (௧௩௩)

அரையிடைமுஞ்சிகட்டியமையமான்றோன்முடிந்த
புரையின்முப்புரிநூல்பூண்டுபுரசதண்டமுங்கைத்தாங்கி
யுரைமுழந்தாளின்மேலாலுறவொருகலையுடுத்தி
வரைவினான்மறையுங்சற்போர்கிடைகளேவயங்குமெங்கும். (௧௩௪)

அறுதொழிலாளர்தாமன்பறுதொழிலென்றுஞ்செய்யா
ருறுவர்தீத்தொழிலர்தாமோர்தீத்தொழிலுஞற்றமாட்டார்
மறுவறுபார்ப்பார்தாந்தன்மதியனையென்றும்பாரார்
செறுவதுபிரமமன்றிச்சிவமெனும்பிரமமன்றே. (கரு௫)

மூவரும்பசிநோய்நீங்கமூவருமாசியேற்கத்
தேவருமவிகளுண்டுதிருத்தியாய்வாழ்த்தெடுப்பப்
பூவருமயனேபோன்றுபூசுரப்பெயர்விளக்கித்
தாவருமறையோர்வாழுந்தெருவளஞ்சாற்றற்பாற்றே. (கருசு)

(வேறு.)

வெள்ளியங்கயிலைவிமலனூர்மொழிந்த வேதமாகமமுழுதணர்ந்து
தெள்ளியசமையமுதலொருமூன்று தீக்கையும்பெற்றபிடேக
நள்ளியதிறத்தான்மார்த்தமொண்பரார்த்த நயந்துபூசித்திருவினையுந்
தள்ளியபொலிவிற்களித்துவாழாதி சைவர்தமிருக்கையும்பலவால். (கருஎ)

உறிபொதிகரகக்கையினர்கற்றே யுடையினரவித்தைவெம்பகையைத்
தறிசெயும்பரசிற்கோவணம்யாத்த தண்டினர்சிற்றுயிர்க்கூறு
நெறியிடையஞ்சுநடையினர்விடய நீத்தவர்திகழும்வேதாந்தக்
குறிகடந்தொளிருங்குறியையேயுணர்வார் குலவிவாழ்மடங்களும்பலவால். ()

சிறந்தவாகமஞ்சொல்வழியொருமூன்று தீக்கையும்பெற்றுமெய்ஞ்ஞான
முறந்தநூல்பயின்றுகுரவனாருளி னொழுக்கமன்பருண்முதற்றழுவி [ணங்க
மறந்தவாவொருமும்மலத் தொடர்பொழிந்து வயங்கியொன்றிரண்டெனப்பி
லிறந்தபேரின்பசுகோதயத்தழுந்தி யிருக்குமாதவர்மடம்பலவால். (கருக)

அண்ணலாருளைத்தவாகமம்பலவு மாய்ந்தனுபூதியராகி
நண்ணலார்பொருவப்பொருமலந்துமித்து நல்லருள்பெறுவதுகருதி
யெண்ணலாரடியிற்றழுவியவடிய ரினியபுத்திரர்முதலெவர்க்கும்
பண்ணலாருபாயம்பண்ணிவீடுய்க்கும் பரமவாரியர்மடம்பலவால். (கசo)

எழுவகைமதமுமழகொருபத்து மிருபதினறுத்திவகையுந்
தழுவியோர்பத்துக்குற்றமுமொழித்துத் தகுமுதனூன்முதன்மூன்றின்
பழுதகல்வழியேயெழுத்துமுனைந்தும் பயிற்றிமற்றவைக்குதாரணமாக்
கொழுவியசான்றோரிலக்கியந்தெரிக்குங் குரவர்வாழிடங்களும்பலவால். ()

தளவரும்பனையமூரலும்பல்குய்ச் சார்புறுவறையலும்பாகும்
பிளவரும்பருப்புப்பொங்கலும்பருப்பும் பெருஞ்சுவைப்பண்ணியவகையுங்
கொளவரும்பயசுநறுநெயுந்தயிருங் குலவியபற்பலகனியு
முளவரும்விரும்பவிராப்பகலெவர்க்கு மூட்டுசத்திரங்களும்பலவால். (கசஉ)

புதுமணல்பரப்பிப்புதுக்கலம்பதித்துப் பொங்குதீஞ்சுவைப்புனலிரப்பி
மதுமலர்நறுவேர்துடிமுதற்பலவும் வகைவகைதகுதியினிட்டு
முதுசுவைமோருமிலிகுசச்சாறு முனிவருங்குளமுநன்களாவி
விதுவெனக்குளிரும்படிகடிதெவர்க்கும் வீசுநீர்ச்சாலையும்பலவால். (கசரு)

தரியலர்நடுங்கவாயிரங்கதிரிற் றழைந்தெழுசக்கரதேவர்
பரிபுரப்பதமாமகணிறச்சார்ங்க பாணியர்பரவைமண்முழுதுந்
தெரியொருமருப்பினுனியமைத்தவர்சீர் திகழ்தருவரதர்மற்றிவரும்
புரியிவர்கூற்றுப்புலவருஞ்சிறப்பிற் பொலியுமாலயங்களும்பலவால். (கசச)

வெருவருங்களிற்று முகப்பகைதடிந்த வேழமாமுகப்பெரு மானும்
பொருவரும்வலிசால் சூர்முதறொலைத்துப் புலவரைப்புரந்தசெவ் வேளு
மொருவரும்விறல்கூர் வடுகனுமிருவர்க் குதித்தசாத்தனுமிருங் கலையூர்
செருவருமகளும் யாளியூர்பவளுஞ் சிறந்துவாழ்கோயிலும் பலவால். (௧௪௫)

மதியடைந்திறைஞ்ச வயங்குசோமேசர் மன்னுநாகேசரொவ் வுலகுந்
துதிசெயநடனஞ் செயவலார்மகநீர்ச் சுற்றமர்விச்சுவ நாதர்
விதிதொழுதிறைஞ்சி விரும்பவிழுகேசர் மேதகுகௌதம நாதர்
பதியருட்பாண புரியர்மற்றிவர்முற் பலர்மலர்கோயிலும் பலவால். (௧௪௬)

(வேறு.)

தங்குபெருங்குடமூக்குத் தலமெனுமோர்பொற்றகட்டிற்
பொங்குசுடர்ச்சுற்றுமணி போன்றனசொற்றனபலவு
மெங்குமொளிர்நடுமணியா யெஞ்ஞான்றுமுறப்பொலியுங்
கொங்குமலர்க்குழலொடுநங் கும்பேசருறைகோயில். (௧௪௭)

ஏற்றமிகுகும்பேச ரெட்டுருவத்தோருருவாய்ச்
சாற்றவொளிர்முடிக்கணியாய்த் தவாதவொருதலக்குறியாய்ப்
போற்றவொளிர்நாமவர்நேர் பொருந்துதலேயழகென்று
மாற்றமுடியாதென்றும் வயங்கிடும்பொற்றாமரைநீர். (௧௪௮)

முன்னமுனிதரப்பெற்ற முச்சோவுளொன்றாய
சொன்னமதில்பன்மதிலாய்ச் சோதியருள்பெறல்கருதி
மன்னநிலைத்திருந்துதவம் வயக்குதலிற்பொலிந்தோங்கு
மன்னபெருமான்றளிசூழ் தழகுபுரிபொன்மதில்கள். (௧௪௯)

பகையாயதுறவாகிப் படர்ந்ததுணர்ந்திறையுலகுக்
கதையாயதியற்றும லடக்குதியென்றிடவிடபந்
தகையாயபல்லுருவிற் றங்கியிருந்தடக்கல்பொரூஉ
மிகையாயபொற்புரிசை மேற்பலவேறுகளமர்தல். (௧௫௦)

மூன்றனுளொன்றுறவாகி முற்றியதுமாறுபடி
னேன்றவொருநமைநாடா தெதிர்நிற்றலழகென்று
தோன்றவடவரைபலவா யெதிர்நின்றதுணிபென்ன
வான்றவெதிர்பற்பலபொற் கோபுரநின்றழகுதரும். (௧௫௧)

வடவரையுமூன்றனுளோர் மதிலுமெதிர்சுற்றுறநேர்ந்
திடவுருளாகியகதிரு மினத்தொடுமங்குற்றதெனப்
படவரவமரைக்கசைத்த பரம்பரன்மங்களவல்லி
கடவுளர்மற்றையரமர்பொன் விமானங்கள்கதிர்த்தோங்கும். (௧௫௨)

உருளாயதங்களுளொன் றுற்றதுணர்ந்தாலோனு
மருளாயதுறத்தானு மமர்ந்தழகுசெய்வதுபோற்
றெருளாயபளிங்கரிந்து செய்தபலமண்டபமு
மிருளாயதணுகாமே யெஞ்ஞான்றுங்கடிந்தொளிரும். (௧௫௩)

தலைமதிலும்வடவரையுஞ் சந்திரனுஞ்சூரியனு
நிலையினடுத்தமையுணர்ந்து கணையாவானெடியோனுந்
தொலைவினறும்பசுந்துழாய் துயலவெதிர்நிற்பதுபோ
னிலையுறப்பைந்தார்த்துவச நெடுந்தம்பமெதிர்பொலியும். (௧௫௪)

திரிபுரம்வென்றருள்காலைச் சேர்ந்தனஞ்சேரிடநீங்கிற்
பரிவுறுமென்றுளத்தஞ்சிப் பரியாயவொருநான்குந்
தெரிதரநேர்நின்றுபெரு முழக்கெடுக்குஞ்சிறப்பென்ன
வரியமறையொருநான்கு முழங்குமுழக்கங்கலா. (௧௫௫)

பாகாகியமர்ந்திடலும் பாராயபெருந்தேர்க்குச்
சேகாயபல்லுறுப்பாய்ச் செறிதலுமோர்ந்தடுத்தனர்போல்
வாகாயநறுஞ்செந்தா மரைமலர்மேற்பண்ணவனு
மாகாயவாசிகளா மமரருஞ்சூழ்ந்தேத்தெடுப்பார். (௧௫௬)

அம்புநனிமுன்னொருதா னமைந்தாற்போலினுமமைய
வெம்புதழற்கடவுளுமத் தளிமேவிவிளக்கமிக
நம்புபலகோபுரத்து நன்மணிமண்டபங்களினும்
பம்புபலவாயில்களும் பலசுடராகிப்பொலியும். (௧௫௭)

காற்றுமொருகணக்கிறகா யின்னுமுறுவதுகருதி
மாற்றும்வகையில்லாத மாதேவனருள்பெறுவான்
போற்றுதரிசனஞ்செய்து நெருக்குண்டுபோதுறுவார்க்
கூற்றுவெயரறமாற்றி முற்றமுலாயுதவிசெயும். (௧௫௮)

அன்றுவெரிநிடைத்தாங்கி யாற்றியவோர்வெள்ளேறு
மின்றுபழம்படிதாங்கற் கெண்ணியெதிர்பொருந்துதல்போற்
றுன்றுதிருமுனம்பொலியுந் துவசத்தினகம்பொலியு
நன்றுவெளியேற்றினொடு நட்புற்றுநாடோறும். (௧௫௯)

நந்துமரகரவொலியு நால்வர்வாய்ப்பாட்டொலியுந்
துந்துமிகண்முழங்கொலியுந் தும்புருநாரதரொலியு
முந்துபெருமறையொலியு முழங்குவனவெஞ்ஞான்றும்
வந்துபலர்வணங்குமிரு முதகுரவர்வளர்திருமுன். (௧௬0)

இன்னவளமிகப்பொலிய விளைந்தபெருங்கோயிலிடை
மன்னவொளிர்பெருங்கருணை மங்களநாயகியோடும்
முன்னவனெத்தேவருக்கு முதலவன்வண்கும்பேசன்
றன்னமர்பேரருளினமர்ந் துயிரெலாந்தகவளிக்கும். (௧௬௧)

கோலமேபொலிகும்ப கோணமாநகர்ச்சிறப்புச்
சாலவோதிடப்புகுந்து தன்னமோதினமினிமுக்
காலமோர்தவமுனிவர் கற்பத்துங்களித்திருக்கு
ஞாலமேயெனும்புகழ்சா ணேமிசச்சீர்சிறிதுரைப்பாம். (௧௬௨)

திருநகரப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩௧௭.

---

## நைமிசப்படலம்.

முளைத்தெழுவிடயபோக முனிதராப்போகிமேவக்
கிளைத்தெழுகற்பதாருக் கிளர்வனநாணுக்கொள்ளத்
தளைத்தெழுபவஞ்சவாழ்க்கை தடிந்தமெய்ஞ்ஞானயோகர்
திளைத்தெழுசகத்தின்மேவக் கொண்டுநைமிசஞ்சிறக்கும். (௧)

ஒருசிறுமருங்குலேவ லுளங்கொடுவானநீத்துக்
கருகிருங்கடல்வைப்புற்ற கற்பகக்கானங்கொல்லோ
வெருவருமூவரோடு விண்ணவர்பலருந்தன்னை
மருவவோரிடத்தும்பேரா நைமிசவனத்தைமானும். (௨)

வந்துதற்சார்ந்தோரெல்லா மாண்டபுண்ணியத்தராகி
நந்துமேனோக்கச்செய்யு நைமிசவனத்திற்கொப்பு
வந்துதற்சார்ந்தோரெல்லா மாண்டபுண்ணியத்தராகி
நந்துகீழ்நோக்கச்செய்யுங் கற்பத்தைநவிலலாமோ. (௩)

துன்னியதளிர்கான்றுள்ள சூதத்தின்சூழலுள்ளான்
மன்னியமுனிவர்சில்லோர் வைகுவர்சூழச்செந்தீ
மின்னியவளர்த்துச்சில்லோர் மேவுவரினையர்பேதம்
பன்னியமுற்றுதென்றுஞ் சேயொளிபரந்தவாற்றால். (௪)

தண்ணியமுனிவர்யாக சாலைநின்றெழுந்ததூம
மண்ணியவானுளோரா யளாய்த்தருவயிற்சூழ்மாண்பாற்
புண்ணியமாயுணீடி யமரராய்ப்பொலிவரன்னோர்
கண்ணியவனையதாருக் கருஞ்சரும்புருமைமேவும். (௫)

உறுவரர்பலர்கற்பாந்த மேவினுமொழியாராகி
மறுவறப்புரியும்யாகப் புகையளாம்வனஞ்சார்மாண்பா
லறுதியிலாதசாகா மிருகமுமாயுணீடிப்
பெறுபெயர்ப்பொருளினோடு பெயரெச்சப்பொருளுமேவும். (௬)

மருவுறமலர்ந்தவேங்கை மராடியின்மஞ்ஞையொன்று
வெருவுறலொழிந்துநிற்ப மீமிசைமஞ்ஞையொன்றத்
தருவுறநிற்றல்பூந்தார்ச் சண்முகனுருவமென்று
திருவுறலூர்தியுஞ்சா றுவசமுஞ்சேர்ந்தவொக்கும். (௭)

காடுசாலிடங்கட்கெல்லாங் காகுத்தன்றெய்வமென்று
பாடுசாலறிஞரோதும் படிபடியிலாததென்று
நீடுசாலினையமேன்மை நெடுவனவனத்திற்றேர்ந்தாந்
தோடுசான்மலரோனுய்த்த சக்கரந்தோன்றுமாற்றால். (௮)

கூடியபுளிமாதேமா கூவிளங்கருவிளஞ்சேர்
நீடியகாய்ச்சீர்நன்கு நிரம்பியகனிச்சீர்மற்றும்
பாடியதொடர்பினுய்ந்து வானரம்பியிலாநிற்கு
மாடியபுகழ்சால்கானத் தன்னதுங்கவியேயன்றே. (௯)

பயில்பகைகெழுமோர்மாவி னினமெனுந்தமைப்பகைத்த
குயிலினமிதித்துலாவுங் கொள்கைதேர்ந்துதயகாலை
வெயில்விரிந்தன்னசூதந் துணர்த்தலைமிகவுஞ்சாய்த்து
மயிலகவிடுங்காலந்தச் சாய்த்தலைமாற்றுமம்மா. (௧௦)

சடைபலபரப்பலானுந் தவாதுநீர்சுமத்தலானு
முடையமுக்கண்களானு முருவிளர்ப்பமைதலானும்
மடைதருமுயர்ச்சியானு மண்ணலங்கயிலைவாண
னிடையருவுருவத்தார்நே ரெனவிலாங்கவிகண்மேவும். (௧௧)

பிடிநனிதுனிமேற்கொண்டு பிப்பிலத்தருச்சூழ்ந்தோட
வடிதொடர்களிறுஞ்சூழு மந்நலார்மைந்தர்நேரு
நொடிசவியருகுதென்னை நுனிப்பழமுகுத்தல்சூழ்தன்
முடிவளவுணரத்தெங்கங் காயிடுமுதியோர்மானும். (௧௨)

இலையறவுதிர்த்துப்பூத்த விருந்துணர்ப்பலாசச்சூழ
னிலைநெடுவொருபூங்கொம்பர் நிகரறத்தழைந்துநிற்றல்
கலைமதிமரபின்வந்த காவலன்வளர்த்ததீயுட்
டலைமையினுதித்துநின்ற தடாதகைமடந்தைபோலும். (௧௩)

உளபொருள்வெளியில்வைப்பா ரொருகடத்துட்சேமிப்பார்
வளமுறக்கடஞ்சேமித்து மண்ணினுட்புதைப்பார்மான
வளவின்முந்திரிகைக்காடு மடர்பெருவிளவின்காடும்
பிளவகறென்னங்காடும் பிறங்குந்தம்பயன்கள்கொண்டே. (௧௪)

மந்தியினூடதீர்ப்பான் வருக்கையஞ்சுளைதோய்த்தூட்ட
வுந்தியோர்தருவின்மீப்போ யுற்றதேத்தடையீதென்று
புந்திகொள்கடுவன்விண்ணிற் பொலிமுழுமதியைப்பற்ற
வந்திலம்மதியமஞ்சிக் கடகத்தையடுக்குமாலோ. (௧௫)

கோட்டுவானரமேற்செல்லுங் குளிர்கண்டுபயமுட்கொண்டு
மாட்டுவான்றருவிற்பாய மற்றதுபொழியுஞ்செந்தே
னோட்டுவான்வெள்ளமூழ்கி யுறுகுளிர்க்குள்ளமஞ்சு
மீட்டுவான்குணமிலாரொங் கெய்தினுமிடர்நீங்காரே. (௧௬)

மாறுகொள்புலிமாலியானை மானரவிவைகளென்று
மூறுளஞ்சிறிதுமுன்னு தலவுவயோகின்மேய
வேறுமாதவர்சாரூப மெய்துநாளுடுக்கைபோர்வை
கூறுகைக்கொளல்பூணுதல் குறித்தவணியங்கலென்ன. (௧௭)

மூவருளொருவனுனேன் முனிவருமருகனுக
மேவருமலர்மாதீன்று விளங்குபாற்புணரிநாண
மூவருளிருவரானேர் முனிவருமருகராக
மேவருமலர்மாதீன்று விளங்குநீர்த்தடங்கள்பல்ல. (௧௮)

பாரிடமனைத்துநீற்றிப் பாரிடங்குனிக்கவாடுங்
காரிடங்கொண்டகண்டக் கண்ணுதற்சாமிநாளு
மேரிடங்கொண்டுமேய விருஞ்சுவாயம்புவோடு
மாரிடவிலிங்கமாங்காங் களவிலமல்குமாதோ. (௧௯)

கரைபொருதலைத்துப்பொங்கிக் கடலகங்கிழியப்பாயுந்
திரையெழுநறுநீர்வெள்ளத் தெய்வதக்கங்கையோடு
வரைபொருபாவமெல்லா மதித்தவர்தமக்கும்போக்கு
முறைபெறுதீர்த்தமாங்காங் குள்ளனவளக்கொணுதால். (௨௦)

நாடுமிவ்வளத்தான்மிக்க நைமிசவனத்துவாழ்வா
ரீடுசெய்வேதசார மெனப்படுநீறுபூசிக்
கூடுகண்மணிகள்பூண்டு குலவுமைந்தெழுத்துமெண்ணி
நீடுமாதவத்தோனாளு நேயம்வைத்துள்ளநீரார். (௨௧)

வாரியோரேழும்பொங்கி வானுமுட்கரப்பவோங்க
மூரிமால்வரைகளெல்லா மொய்த்தெழுகொடுங்கால்பேர்த்துப்
பாரியாமென்மேல்வீசப் பட்டபேரூழிநாளு
நாரியோர்பாகத்தம்மா னற்பதமறவாநீரார். (௨௨)

வானவர்பலரும்போற்றி வணங்கவீற்றிருப்பும்வேண்டார்
கானமர்மலர்மேல்வாழ்க்கை கடைப்பிடித்துறலும்வேண்டா
ரீனமிலரவப்பாய லெய்துமோர்வாழ்வும்வேண்டா
ரானமெய்ச்சிவாநந்தப்பே ராழியுண்மூழ்கிவாழ்வார். (௨௩)

இருவினைப்பயனாயுள்ள வின்பதுன்பங்கள்வந்து
மருவின்முன்புடற்கமைந்த வளமெனவிருப்புஞ்செய்யார்
பருவரும்வெறுப்புங்கொள்ளார் பவஞ்சத்தேயுறக்கம்வைத்தா
ரொருவருமுயர்செம்பொன்னு மோடெனக்காணுநீரார். (௨௪)

ஒருமலவலியுமற்றை யிருவினையுறைப்புமூன்றாய்
வருமலச்செயலுமின்னு மதித்திடுமுடன்முன்னான்கும்
பருவருமவ்த்தையைந்தும் பகையெனப்படுமோராறுங்
கருவுறப்படுமோரேழுங் களைந்துமேற்போயமேலோர். (௨௫)

கருவளர்பிறப்போரேழுங் கடப்பதற்குபாயம்பெண்பா
லுருவளர்தேவதேவ னொளிர்திருப்பாதக்காட்சி
மருவளரனையகாட்சி வாய்ப்பதற்குபாயமன்னோன்
றிருவளர்தலப்புராண சிரவணமென்றுட்கொண்டோர். (௨௬)

(வேறு.)

கண்ணுவன்கருக்க னத்திரிததீசி காத்தியாயனன்சதா நந்த
னெண்ணுமார்க்கண்டன் சந்திரசூட னிலகிதன்சுனப்புச்சன் பிருகு
நண்ணுமாதேவ னகத்தியன்சம்பு நாரதன்சுதீக்கணன் பிருங்கி
விண்ணுமேத்தெடுக்கு மாணிமாண்டவியன் விச்சுவாமித்திரன் வசிட்டன். (௨௭)

சுகன்பரத்துவாசன் கௌதமன்சனகன் றாயசாண்டில்லியன் புகழ்க்குச்
சகனரபத்தன் பார்க்கவனாபத் தம்பன்போதாயனன் கிருத
னகமருடணன்கா சிபன்சனற்குமார னருட்சமதக்கினி குசுரு
மிகமகிழ்துருவா சன்பிரசண்டன் மேவுசாபாலிமா தேசன். (௨௮)

பராசரன்கூசு மாண்டன்வான்மீகன் பகருபமன்னியன் கர்க்கி
தராதலம்புகழ்தா லப்பியன்சனாதன் சாயங்கன்புலத்தியன் பகவன்
விராவருட்டிருதன் மிளிர்கலைச்சிருங்கன் விந்துபாணினிதவச் சிலாதன்
றிராவிடபாடை யிலக்கணஞ்செய்த திரணதூமாக்கினி சங்கன். (௨௯)

தேவலன்வாம தேவன்பப்புருசத் திதவுமியன்றத்தாத் திரேயன்
பாவலர்புகழுஞ் சௌனகன்வசன பருப்பதனரிதக னசிதன்
றூவலசவனன் சருச்சரன்சுனகன் சுனன்சுனச்சேபனங் கிரசு
நாவலனெனுஞ்சா தாதபன்கண்டு நலமலியிளைப்பியன் காணன். (௩0)

அட்டவக்கிரன்கா லவன்விபண்டகனல் லாசுவிலாயனன் சநந்தன்
றட்டவைம்பொறிசெற் றவனெனுஞ்சுமந்து தூம்பனுரோமசன் வசுதோம்
விட்டவுக்கிரவீ ரியன்சவுபரிசேர் மிளிர்கவுண்டின்னியன் புலகன்
கட்டமிறிரண விந்துமுற்கலனே கபிலன்கௌசிகன்பயி லவனே. (௩௧)

இனையவர்முதற்பன் முனிவரர்குழுமி யிமயமாமயிலொடு மிலகி
நனையவிழ்கடுக்கைத் தொடையுயரடந்தோ ளுயனுர்திருவுள முவப்பத்
தனையருமுபக ரணம்பலதழுவிச் சத்திரமாமக மொன்று
புனையவந்தவமராட் டொடங்கினரனைய புகழ்மகந்தொடங்கிய பொழுது. ()

வெள்ளியநீறுஞ்செய்யமேனியின்மேன் மிளிர்தருங்கண்மணித்தொடையும்
வள்ளியவேதசாரமென்றுரைக்கும் வன்னமோரைந்துமாங்காங்கு
நள்ளியமுன்னும்பின்னுமாணவர்க ணண்ணவேபுராணமுமகத்துத்
துள்ளியமுனிவர்புரிமகங்காண்பான் சூதமாமுனிவரன்வந்தான். (௫௩)

வந்தமாமுனிவன்வரவுகண்டிருந்த மாமுனிவரரொலாமெழுந்து
முந்தநேர்சென்றுபணிந்துகைகுவித்து முகமனன்குரைத்தினிதழைத்துச்
சந்தவாதரத்திற்கொண்டுவந்திருக்கை தனைமீஇவிட்டரத்திருத்தி
யிந்தவாமுடியோன்றிருவருளெய்திற் றென்னமாதவமெனவியந்து. (௫௪)

அருக்கியமுதலாகியகடன்பலவு மாற்றுபுமகிழ்ந்துநேர்நிற்ப
விருக்கியவென்றனஃதுணர்ந்திருபா லிருகரங்குவித்தினிதிருந்து
முருக்கியமலத்தாரெய்தருளெமக்கு முகந்தளித்தெம்பவப்பகையுங்
கருக்கியவடைந்தகருணையங்கடலே சவுனகனேயெனப்பலதுதித்து. (௫௫)

பிறவிவேரறுத்தற்குபாயநம்பெருமான் பெய்மலர்த்திருவடிகாண்ட
லறவியலஃதுபெறுவதற்குபாய மனையவன்றலப்புகழ்கேட்ட
லுறவியலஃதுதடையறப்பெறுத லொளிருநின்முகத்தெனினினக்கு
மறவியினேனுமுவமைவேறுரைப்பார் மடவரோயன்றிமற்றெவரோ. (௫௬)

மன்னியவாதராயணமுனிவன் வகுத்தமாபுராணங்கண்முழுதும்
பன்னியவதிகாரம்படைத்தாய்க்குப் பார்செய்கைம்மாறுமொன்றுளதோ
மின்னியசடிலத்தண்ணலாருவக்கும் வேள்வியொன்றியற்றிடுங்காலை
யன்னியமில்லரதடைந்தனையதுவே யளியரோம்பாக்கியமன்றே. (௫௭)

மேதகுமிம்மைமறுமைவீடெய்த விரும்பினோர்செய்மையேயிருந்து
காதலினினைத்தபோதினுமளிக்கக் கடவதாயதன்பெயர்கேட்பி
னோதருஞானமுதிப்பதாயென்று முலப்பிலதாய்த்தலந்தீர்த்த
மாதரமூர்த்திவிசேடமோர்மூன்று மமைந்துளதாயிணையிலதாய். (௫௮)

இருக்குமோர்சைவதலத்துமான்மியமின் றிசைத்திடின்யாங்களுய்ந்திடுவோம்
பெருக்குமாதவமேயாகுமெந்தவமும் பெருமகமாகுமிம்மகமுந்
தருக்குமேவாதஞானமுமுதிக்குந் தம்பிரானருளுநன்கடைவோங்
கருக்குமாலகற்றிச்சிறந்துளாயின்னே கருணைசெயென்றுகைகுவித்தார். ()

முனிவரர்வார்த்தைசெவிநிரம்புதலு முகமிகமலர்ந்துளத்துவகை
கனிதரவுரைப்பானீயிரோபெரிதுங் கற்றுளீர்பெருந்தவமுடையீர்
புனிதமிக்குள்ளீர்திருவருட்கிலக்காய்ப் பொலிந்துளீர்குறையொன்றுமில்லீ
ரினியபேரின்பவாழ்க்கையீரொனைப்பார்த்திவ்வுரைகிளந்ததையெண்ணில். (௬0)

ஒன்றுமிலிவனும்பரசிவதருமத் துறவுளானுகவென்றிரங்கி
நன்றுளங்குறித்தீர்திருவருட்செல்வ நற்பெரியவர்கடனிதுவே
யென்றுமிக்கேள்வியுலகுபகார மெனப்புகன்றிடுதலுமாகுங்
கன்றுமைம்பொறிதீர்த்துயர்ந்துளீருங்கள்கட்டுரைசென்னிமேற்கொண்டேன்.

உற்றநீர்வினாயபடியொருமூன்று முத்தமமாகியதலமோர்ந்
தற்றமேவாமலுரைப்பலென்றுள்ளத் தண்ணலார்திருவடிபதித்துக்
கற்றமேதகையோன்கண்மலர்மூடிக் கைம்மலர்சென்னிமேற்குவித்துக்
கொற்றமார்யோகத்திருந்தொரு முகுர்த்தங்கும்பகோணத்தலங்கண்டான். ()

காண்டலுமுரோமஞ்சிலிர்த்திட வருவிகண்பொழிதரவிழித்தரவம்
பூண்டபேராதிக்களிற்றையுங்கருணை பொங்குகும்பேசனார்தமையு
மாண்டவன்படியாருளத்தகலாத மங்களநாயகிதனையு
மூண்டவுட்கனிவிற்றுதித்தனனிறைஞ்சி மொழிதரலுற்றனன்மாதோ. (௪௩)

தண்ணியகுணத்துச்சவுனகராதி சாந்தமாமுனிவிர்காள்கேண்மின்
கண்ணியபடியிப்புவியிடத்தொன்று கண்டனனதுகும்பகோணம்
பண்ணியதவத்தோரேயலான்மற்றோர் பார்க்கவுங்கேட்கவும்படாத
தண்ணியகும்பலிங்கநாயகராங் கமர்வர்மங்களவுமையோடும். (௪௪)

அத்தலப்பெருமையெம்மனோருரைத்தற் கரியதேயாயினும்விருப்பான்
முத்தலம்புகழும்வாதராயணமா முனிவன்முன்னுரைத்தவாறுரைப்ப
னெத்தலங்களுஞ்சூழத்தலப்புகழ்மு னிண்டைமாமலருறைபவன்பாற்
கைத்தலநெல்லிக்கனியெனத்தெளிந்தான் கரிசினம்மகதியாழ்முனிவன். (௪௫)

மறைமுடிவிளங்குமன்னமாதலத்தின் மான்மியமந்தணமாகு
நறைகமழ்துளவத்தார்துயறடந் தோணாதனேயெனப்புகல்வியாதன்
பிறைமுடியிறையோனருள்பெறீஇ யுரைத்தபெரும்புராணம்பதினெட்டி
னுறைபலவளஞ்சால்பவுடிகபுராணத் துத்தரபாகமென்பதனுள். (௪௬)

கரிசில்கேத்திரவைபவகண்டநடுப்பா கத்தினிதமருமீதன்றிப்
பரிசுசால்பிரமாண்டத்தினும்பகரப் பட்டதுகாந்தமென்றுரைக்கும்
பெரியமாபுராணத்தினுஞ்சொலப்பட்டுப் பிறங்கிடுமிவையெலாந்தொகுத்து
தெரியயானுரைப்பேனீவிரெல்லீருஞ் சிந்தைவைத்தொருமையிற்கேண்மின். ()

வளிதடவரினுமினிதுபாட்டெடுக்கு மகதியாழ்முனிவரன்முன்னு
ளொளிகெழுமலர்மேலும்பனைவணங்கி யுவப்புறக்கேட்டலுமனையா
னளிவளர்கும்பகோணமான்மியம்யா னறைதரமுற்றிடுங்சொல்லோ
தெளிதரவிறைவனருளினாலுரைப்பேன் றெரிந்தமட்டென்றுரைசெய்தான். ()

மறைமுழுதுணர்ந்தவிதியுமிவ்வாறு வகுப்பனேலன்னமான்மியத்தைக்
குறையறவுணர்த்தவல்லர்யாரனைய குறிக்கொளுமான்மியமொன்றே
நிறைபெருஞ்செல்வங்கல்விநீடாயு ணிலவுபல்போகமெய்ஞ்ஞான
மறைதருமறுமைப்போகம்வீடென்னுமனைத்திற்குங்காரணமாமால். (௪௯)

வானமாதரிக்குங்கும்பலிங்கேசர் மங்களநாயகியொடுஞ்சார்
தானமாங்கும்பகோணமான்மியத்தைச் சாற்றருஞ்சிரத்தையிற்கேளா
ரூனமாம்பாசப்பிணிப்பறாரனைய ருடம்புமாவுடம்புகாணென்று
மோனமாமுனிவர்க்குரைத்துமேலுரைக்க முயன்றனன்சூதமாமுனிவன்.(௫0)

நைமிசப்படலம் முற்றிற்று.

ஆ௨ திருவிருத்தம் - ௩௯௭.

# பதிகம்.

———:o:———

தண்ணியகும்பகோணத் தலவிசேடமும்பேரன்ப
ரெண்ணியவருள்சான்றோங்கு மிடைமருதூர்ச்சிறப்பு
நண்ணியசண்பகஞ்சூழ் நாகேசப்பொலிவுநல்லா
ரண்ணியபுகழ்மிகுந்தா ரேச்சுரத்தலங்குசீரும். (௧)

வானகம்வழுத்துஞ்சாமி மலைப்பெருஞ்சிறப்புமொண்பூந்
தேனகவொழுக்குநற்பா டலவனச்சிறப்புந்தெய்வந்
தானகமாயாகும்போற் பத்தியாந்தகவுந்தாவாக்
கானகவேடன்கும்பே சப்பெயர்கலந்தவாறும். (௨)

அளவருங்கருணைமங்க ளாம்பிகைவரவும்வேதன்
களவருங்கும்பகோணத் திருநகர்கண்டவாறும்
பிளவருமன்பினன்னான் பெருங்கும்பநாதர்தம்மைத்
தளவரும்பாதிகொண்டு பூசனைசமைத்தவாறும். (௩)

மற்றவன்றுதித்தவாறும் வரம்பலபெற்றவாறுங்
கொற்றவன்கும்பநாதன் விழாவணிகுயிற்றுமாறு
முற்றவன்பினர்தமுள்ளத் தொளிர்தருகயிலைநின்றும்
பொற்றவன்முலையாளோடு விசுவேசன்போந்தவாறும். (௪)

அத்திரதேவர்தம்மை மகப்புனலாட்டுமாறும்
பத்திரமலரோன்றன்னூர் விடைபெற்றுப்படருமாறுஞ்
சித்திரவொன்பான்கன்னி மார்திருத்தெய்வச்சீரு
மித்திரமளாவுமாக தீர்த்தத்தின்மிகுசிறப்பும். (௫)

அருணவகன்னிமார்த மருச்சனைவிதியுமாகத்
தெருள்புனனானதான மாதிசெய்விதியுஞ்சண்டி
கருள்படுவினையினீந்தி முத்தியிற்கலந்தவாறு
மருளகல்கிருதவீரி யன்மகப்பெற்றவாறும். (௬)

மறையுணர்சுதன்மனென்பான் மகப்பெற்றுமகிழ்ந்தவாறுங்
குறையறுவீரவன்மன் குணமிகுமகவுபெற்று
நிறைகதியடைந்தவாறு நிகழ்தருஞானவானுண்
மிறைபுரிபாவநீங்கிக் கதியின்பமேயவாறும். (௭)

வல்லவனேமவாகு மனைவிவேதாளநீங்கி
நல்லவின்புற்றவாறு முலகெலாநயந்துபெற்ற
சொல்லரும்புகழ்சான்மங்க ளாம்பிகைசிறப்புந்தூய
னல்லவில்சுவணரோமன் முத்தியின்படைந்தவாறும். (௮)

பரவருட்கும்பநாதன் பணிவிடைசெய்வோர்பேறுந்
திரவிணக்கருசமன்மன் முத்தியிற்சேர்ந்தவாறும்
புரவலனெருமாந்தாதா பூசித்துப்பெற்றபேறும்
வரமிகுதெய்வப்பொற்ரு மரைத்தடப்பெருஞ்சிறப்பும். (௯)

மருத்துவன்பூசையாற்றி மகப்பெற்றுமகிழ்ந்தவாறுங்
கருத்துநன்றமைசிக்கேசர் கருதுசோமேசரென்னப்
பொருத்துநன்னுமம்பூணப் போந்ததோர்கதையுமுள்ளத்
திருத்துநல்லருள்சான்மாள வேசர்வந்தியைந்தசீரும். (௧௦)

தூயவர்புகழ்ந்துபோற்றுஞ் சோமேசர்வரவும்வில்லத்
தாயவர்திருநாகேச ருண்மகத்துவமுமுள்ள
மேயவருமாபாகப்பேர் வித்தகர்மிளிர்கீழ்க்கோட்டந்
தாயவர்மகிழவெய்தி நடம்புரிதவாதசீரும். (௧௧)

எழுபரித்தேரோன்பூசை யியற்றுபுமிளிர்ந்தவாறு
முழுமறைப்பகவனென்பான் முத்திநன்கடைந்தவாறுந்
தொழுதகுபகவதீர்த்தத் தோல்வியில்பெருஞ்சிறப்பும்
வழுவறக்கவுதமப்பேர் மாமுனிபணிந்தவாறும். (௧௨)

சுவாகுகனன்பிற்போற்றித் தூக்கதியுற்றவாறு
மவாவறுகாசிபப்பே ரண்ணல்வந்திறைஞ்சுமாறுந்
தவாவளம்பொலியும்பூவா சமங்களகூபச்சீரு
முவாவுரித்தவற்றூழ்மூர்க்க ருற்றின்பமுற்றவாறும். (௧௩)

பழியறக்காமதேனுப் படர்ந்தருச்சித்தவாறுங்
கொழியருளபிமுகேசக் குழகனூர்பெருஞ்சிறப்பும்
வழிமலர்மிசையோன்போற்றித் தன்றொழின்மருவுமாறு
மொழிதமிழ்முனிவனேத்தி முதிரருள்பெற்றவாறும். (௧௪)

திண்ணியவலிசால்சோழன் திருப்பணிசெய்தவாறுங்
கண்ணியவிசுவநாதர் காரோணநாதரென்ன
நண்ணியவொருபேர்பெற்று நலமுறப்பொலியுமாண்பும்
புண்ணியமுழங்கும்பாண புரேசர்தம்பெருஞ்சிறப்பும். (௧௫)

மாலதிவனத்துவாழு மாதேவன்பெருஞ்சிறப்புங்
கோலமிக்கவிராகின்ற குடவாயிற்பெருஞ்சிறப்புங்
காலறுத்தவித்தைமாய்க்கு கலயநல்லூர்ச்சிறப்பு
மாலமர்கிடக்கையாரா வமுதன்வந்திடுசிறப்பும். (௧௬)

இடர்முழுதொழித்துநேமி யிரும்படையிலங்குசீரும்
படர்புகழ்நேமிதீர்த்தப் பெருமையும்பார்கிழித்தாங்
கடர்வலிவராகர்வந்த சிறப்புமாங்கைங்கைப்புத்தேண்
மடர்களுந்தொழக்கரும்பா யிரப்பெயர்மரீஇயசீரும். (௧௭)

வரமிகுகச்சிநின்றும் வரதர்வந்திறுத்தவாறுந்
திரகயிலாயநாதர் திண்ணியசிறப்புங்கேள்வி
யுரமிகுமுனிவர்பல்லோ ரொருங்குவந்திறைஞ்சுசீரும்
புரவுறவிதியிற்சொல்வே னெனப்புகன்றருளுஞ்சூதன். (௧௮)

பதிகம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩௮௫.

# தலவிசேடப்படலம்.

---:o:---

பூரணபரம சிவனடியுளத்துப் பொன்னிடைமணிபதித் தாங்குத்
தாரணம்புரிந்து கருமலஞ்சவட்டுஞ் சாந்தர்காளிராயிரங் கோட்டு
வாரணமுகைக்குங் கும்பலிங்கேசர் மங்களநாயகி யொடுஞ்சா
ராரணமுழங்குங் கும்பகோணத்தி னருஞ்சிறப்புணர்த்துதுங் கேண்மின். (க)

வெள்ளியங்கயிலை விளங்குசீசைல மேதகுபெரும்புகழ்க் காசி
வள்ளியமறைசூழ் சிதம்பரமதுரை வான்றவழரதநா சலம்வா
னுள்ளியதிருக்கா ளத்திகோகன்ன மோங்குகோடீச்சுர மோத்து
ரள்ளியசிறப்பிற் பொலிதிருவாரூ ராடகேச்சுரமறைக் காடு. (உ)

முந்தைநாளிருவ ரடிமுடிதேட முகிழ்த்தவண்ணுமலை வளஞ்சால்
சந்தனாரணியந் தவலரும்விருத்தா சலந்திருவாவடு துறைவான்
முந்தவேத்தெடுக்குங் காழிமாவீழி முதுபுகழ்க்குறுக்கைவீ ரட்டம்
பந்தமீர்தருமா துளவனமெவரும் பகர்கலியாணமா புரமே. (ங)

பரசுநிர்த்தனமா நகர்பெருவேளூர் பரவியமார்க்கச காய
புரமொளிர்தருமா யூரமாப்பாடி புண்ணியச்சேய்ஞலூ ரெவரும்
விரவிடைமருது சண்பகாரணிய மேதகுதாடகை யீசங்
கரவில்காளீச புரமழூந்தூர்வண் கண்டியூர்கருதுபஞ் சநதம். (ச)

அருட்கரவீர புரம்பெரும்பேரூ ரரதனசபாபதி நகரந்
தெருட்சிசெயீங்கோய் மலைகழுக்குன்றந் திரிசிராமலைதிருப் பாசூர்
வெருட்சியில்காஞ்சி யொற்றியூர்கடவூர் வீரட்டம்விரும்புவெண் காடு
மருட்பகைதவிர்செங் காடுநள்ளாறு மன்னியபாச்சிலாச் சிரமம். (ரு)

கந்தமாதனநீ லோற்பலவனம்வான் கைதொழும்வைத்திய நாதஞ்
சந்தமார்பல்ல வேச்சுரமுனிவர் சார்திருவானைக்கா நல்லூர்
நந்தவாமோடை வலஞ்சுழிகழியா நலம்பொலிதிருவிரா மேச
முந்தமாமறைசூழ் பாதிரிப்புலியூர் மொய்புகழ்ப்பந்தணை நல்லூர். (சு)

பிரணவப்புலியூர் வாளொளிபுற்றூர் பெருந்துறையாப்பனூர் வழூவூர்
வரமிகக்கொடுத்து வயங்குநெல்வேலி வளம்பொலிதிருவெண்ணெய் நல்லூர்
பரவிடப்பொலியு மிந்திரநீலப் பருப்பதந்திருக்கழிப் பாலை
தரணியிற்சிறந்த பெருமணநல்லூர் தவலருமயேந்திரப் பள்ளி. (எ)

பெருவிரூபாக்கம் புகழ்வடாரணியம் பெட்புறுமந்திர நகரம்
வருசிவலோக புரமொளிர்கருவூர் வளமலிநாகைக்காரோணஞ்
சுருதியாயிரமுந் துதிசெய்குற்றாலஞ் சோமநாதந்திரு வதிகை
திருமலியிவைமுற் பலதலத்துள்ளுஞ் சிறந்தமாதலங்கும்ப கோணம். (அ)

எவ்வகைத்தலமு முறவிடங்கொடுக்கு மேற்றமாகியசக பீச
மெவ்வமில்கும்ப கோணமாதலத்தே யிறுத்தலான்மலரவ னாதி
யெவ்வெவருந்தா ழணையமாதலத்தி னிரும்புகழ்ச்சிரவண மொன்று
லெவ்வெலாத்தலத்தும் வசித்தபேறுதி யெய்துவர்யாவரு மன்றே. (கூ)

முழுவலியொருகோட் டண்ணல்பேரண்ட முழுமையுஞ்சூழ்ந்ததா மென்று
கெழுமுறவுளங்கொண் டமலனைச்சூழ்ந்து கிளர்பலம்பெற்றது போல
வுழுவலன்பமைந்துதலமெலாந்தரிசித் தோங்குபுண்ணியங்கொள நினைந்தோர்
தழுவுசீர்க்கும்ப கோணமாதலத்தைத் தரிசித்தாலதுசொளல் சரதம். (௪0)

யாதொருதலத்து மான்மியங்கேட்டா லிகபரமுத்திமுற் றெய்து
மோதொருகும்ப கோணமத்தலமென் றுணருமினுலகமூன் றீன்ற
மாதொருபாகன் வயங்குமத்தலத்து மான்மியமுணர்தரா மாக்கள்
காதொருதொழில்செய் மாக்களேபுவியிற் கழிதராப்பாரமே யன்றே. (௪௧)

பரிந்துதாமெடுத்த வுடம்பினாலடையும் பயனடையாருமா யுயர்ந்தோர்
தெரிந்துநீரசன காதகரொன்னச் செத்தவராவரா லிருந்தும்
புரிந்துகேட்பவர்கண் மறையெலாங்கேட்ட புண்ணியப்பெரும்பய னடைவார்
விரிந்துபாரமருந் தீர்த்தங்களனைத்தும் விதிப்படிதோய்ந்தவ ராவார். (௪௨)

அரியமாமகங்க ளனைத்தையும்புரிந்த வரும்பெறற்செல்வரு மாவார்
தெரியவெத்தலத்துஞ் சிவபிராற்போற்றிச் செய்தமாதவத்தரு மாவா
ருரியதாமரையோன் கரியமாலாதி யும்பர்தம்பதங்களு முறுவார்
விரியநாடோறுஞ் சிவாநந்தபோக வெள்ளத்துட் டிளைத்துவாழ் தருவார் (௪௩)

வாரணவாசி கயைமுதலாக வகுத்தபல்கேத்திரங் களினும்
பாரணவனைய கேத்திரநூறு பங்குமேலெனமறை பகரு
மேரணவனைய தலத்தினிதமரு மெங்கள்கும்பேசனைச் சூழப்
பூரணமருதர் முதற்பதினறுவர் பொலிந்தினிதமர்வரொன் றூன்றும். (௪௪)

போற்றுமீரொண்ம ரமர்தருதலங்கள் புனிதத்திற்புனிதமா மென்றுஞ்
சாற்றுமங்களத்தின் மங்களமாகுந் தவாதவைசேவைசெய் பவர்க
ளாற்றுபல்பொருளு முடையராய்நாளு மவாயிகபோகங்க டுய்த்தே
யீற்றுவண்பரபோ கத்தினுந்திளையா வெய்துவர்பெறலருங் கதியும். (௪௫)

காசியின்வயங்குங் கங்கையிற்சிறந்த காவிரியத்தலத் துளது
பேசியமறையோர் கொலைபசுக்கொலைநம் பிரானிந்தையடியவர் நிந்தை
யேசியகளவு மதுக்குடியாதி யெவ்வகைப்பாவமுமொழிக்கு
மூசியவறமு மிகத்தருமடைந்து முழுகினோர்பருகினோர்க் கெல்லாம். (௪௬)

சையமால்வரைமுற் சமுத்திரமீறுத் தவாதுகாவிரியியங் குறினுஞ்
செய்யமாகும்ப கோணமாயூரந் திருந்துசங்கமமிம்மூன் றிடத்தும்
வெய்யதீரனைய காவிரிநாளு மிகுபிரசன்னமாய் வைகி
யெய்யமூழ்கிடுவார் தமக்கெப்பாதகமு மிரித்துளத்தெண்ணுவ தளிக்கும். (௪௭)

சொற்றமூன்றிடத்தொன் றூயசங்கமத்துந் துகளின்மாயூரமே விசேடங்
குற்றமின்மாயூ ரத்தினுங்கும்ப கோணமாவிசேடமுள் ளதுகாண்
மற்றதின்வயங்கு காசிபதீர்த்தம் வளமலிசக்கர தீர்த்தங்
கற்றவர்புகழீ சானமாதீர்த்தங் களைதருவிசேடமா மென்றும். (௪௮)

இந்தமூன்றிடத்துங் காவிரிவிசேடித் திருங்கலியுகத்துவீற் றிருந்து
வந்தவாய்முழுகு மவர்க்கெலாமுளத்து வாஞ்சித்தவனைத்தையுங் கொடுப்பள்
பந்தமேவாத முனிவருஞ்சுரரும் பண்புசால்புகழ்ச்சுட மூக்கே
யந்தமில்பரம சிவப்பிரியமதா யமர்தருமென்பரா லின்னும். (௪௯)

மறையெலாம்பொலியப் படிமிடமென்று மாயவன்முதலியோர் கூடி
நிறையவீற்றிருக்குந் தானமேயென்று நிகழ்பலபுண்ணிய தீர்த்த
முறையுமாதான மென்றுமைங்குரோச முள்ளதாலென்றும்பாற் கரப்பே
ரறைதருமாகேத் திரமென்றும்புகல்வ ராமணுத்துணையற மேரு. (உ0)

இன்னுமோரீரா ருண்டினுக்கொருகா லிமையவர்குரவனுண் டளப்பான்
மன்னுமாமடங்க லிராசியினுறுங்கான் மாமகதீர்த்தத்தோ டமர்ந்து
மின்னுவான்புகழ்சால் கன்னியர்தீர்த்த மேவியகும்பமா மதியிற்
பன்னுபூரணையின் மாமகநாளிற் பகர்விதிப்படிமுழு கிடுவோர். (உக)

கெடலருநூறென் றுரைசெயுந்தத்த கிருச்சிரப்பலனெருங் கடைவா
ரடலருமனைய புனற்றரிசனத்தா லநேகபாதகமெலா மொழியும்
விடலருமனைய தீர்த்தத்தைத்தீண்டின் வேதியக்கொலைபல விளியும்
படலருமனைய தீர்த்தபானத்தாற் பாமரர்களுஞ்சுர ராவார். (உஉ)

இன்னுமத்தீர்த்தக் கரையமர்ந்தறஞ்சற் றியற்றினுமேருவாய்த் தடிக்கும்
பன்னுமோர்பதினு யிரமகப்பலனும் படியெலாங்கிலமறப் புதுக்கி
மன்னுமப்புனலுட் சேறறப்போக்கி வயங்கிடப்புதுக்குவோ ரொன்று
மின்னுபல்சடிலத் தெம்பிரானுருவ மேவிவாழ்வார்சிவ லோகம். (உங)

ஆன்றசீரனைய கன்னியர்தீர்த்தத் தரும்பெருமான்மியங் கேட்போ
ரேன்றபற்பலவாஞ் சாத்திரமனைத்து மினிதுதேர்பலனெருங் கடைவார்
பூன்றவத்தீர்த்த வடகரையொன்பான் பொருவில்கன்னியரொடுங் கருணை
சான்றவிச்சுவநா யகனடிதொழுவார் தாநினைத்தவையெலா மடைவார். (உச)

தங்குபற்பலவிண் ணவரையும்விருப்பிற் றரிசித்தபெரும்பல னடைந்து
பொங்குமாதரவிற் சுவர்க்கமென் றுரைக்கும் புண்ணியவுலகில்வீற் றிருப்பா
ரெங்குமாங்கீர்த்திக் கன்னியர்தீர்த்தத் தெழின்மலிகீழ்கரைத் தளியி
லங்குமேற்றிசையே யபிமுகமாக வபிமுகநாதர்வீற் றிருப்பார். (உரு)

அன்னநாயகரை வணங்குவோரனைய ராலயத்திருப்பணி யாதி
யென்னவும்புரிவோ ரிகபரபோக மெய்தியீற்றவனடி யடைவார்
நன்னர்மேல்கரையின் முன்றிசைமுகமா நண்ணுவர்கௌதம நாதர் [லிவார்.
பொன்னவிர்சடைமற் றவரடிதொழுவோர் புகழ்ப்பெருஞ்செல்வராய்ப் பொ

மதியணிசடிலக் கும்பலிங்கேசர் மலரடித்துணைமனங் கொண்டு
கதிதருமனைய கன்னியர்தீர்த்தக் கரைப்பிரதக்கணம் புரிவோர்
துதிபுரியடியொன் றனுக்கிரும்பூமி சூழ்பிரதக்கண மதனாற்
பதிதருபலனுள் ளனவெலாமடைந்து பரகதிச்செல்வரா குவரால். (உஎ)

அத்தகுபுனற்கு வளிவளர்திசையி னுன்றவில்வாரணி யத்தி
லொத்தபாதாள லிங்கர்மேவுவரவ் வுவமையிலாதநா கேசர்
மெய்த்ததாமரைத்தாள் பரவுவாரிம்மை வேண்டியபோகங்க டுய்த்து
மொய்த்தவான்புகுந்துதுளைந்திருண்மலவேர் முழுதறத்துமித்தின்பமடைவார்.

வில்லவாரணியத் தலமெனுமனைய விளங்குநாகேசரா லயத்துள்
வல்லவானவர்சூழ்ந் தேத்திடவாடல் வல்லவர்திருநடநவில்வர்
நல்லவாதரத்தி னவர்பதம்பணிவார் நாடெலாம்புரக்குமன்னவராய்ச்
சொல்லவாம்போகத் தழுந்திமேலின்பத் தொடுகடன்முழுகிவாழ்ந் திருப்பார்.

அன்னநாகேச ரமருமாலயத்திற் கனிலனுர்க்குரியமா திரத்தி
லென்னவானவருந் தொழுதெழுஞ்சோம விலிங்கநாயகரினி தமர்வார்
பொன்னவாமவர்தா மரைப்பதம்பணிவார் புண்ணியச்செல்வரா யென்றும்
பன்னவாம்போகம் பற்பலதுய்த்துப் பரகதியடைவது சரதம். (௩0)

அந்தமாதேவர் வாமபாகத்தி லருந்தவத்தேமமா முனிவன்
சந்தமார்மகளை மணந்தொருசார்ங்க தரராரவணைவிழி வளர்வார்
முந்தவாதரத்தி னவர்பதம்பணிவார் முழுப்பெருஞ்செல்வரோ யாகி
யெந்தநாளினுமூ ழுழிந்துவாழ்ந்தீற்றி லிலங்குவைகுந்தம்வீற்றிருப்பார்.(௩க)

மன்னியசார்ங்க பாணியாலயத்தின் வடதிசையினிரமர் தருவார்
பன்னியசுதரி சனரவர்பாதம் பரவுவார்பாவமுற் றொழிந்து
துன்னியபூதப் பிரேதபைசாசத் தொடர்பறச்சந்ததி பெருக
முன்னியவுலகிற் களித்துவாழ்ந்திருந்து முத்தியுமடைவர்பின் மாதோ. (௩உ)

காவிரிவடபான் மதங்கனுக்கருள்வான் காஞ்சிமாநகரினும் வரதர்
மேவிவீற்றிருப்ப ரந்நதித்தென்பால் வீற்றிருந்தருளுருவர் வராகர்
தாவிலிவ்விருவர் தாமரைச்சரணஞ் சார்ந்துபோற்றெடுப்பவர் நாளு
மாவிநேர்மனைவி மக்களுஞ்சூழ வரும்பெறற்றிருவொடும் வாழ்வார். (௩௩)

வரமலிசார்ங்க பாணிகோயிலுக்கு மன்னுமீசானவான் றிசையி
லுரமலிவாத ராயணற்கருள்வா னுள்ளொளிக்கயிலையி னின்றுந்
திரமலிபாண புரேசர்தாம்வந்து திருத்தகவமர்வர்மற் றவரைப்
பரமலியன்பிற் போற்றுவோர்ஞான பாற்கரராகிவீ டடைவார். (௩௪)

ஒள்ளியபஞ்சக் குரோசமாத்தலமென் றுரைசெயப்படுவன வைந்து
தெள்ளியவனைய தலத்தமர்தேவ தேவரைப்பரவுவோர் நாளும்
வள்ளியபுடவி முழுவதும்புரந்து வானவர்பதமெலாந் துளைந்து
வெள்ளியங்கைலை காணிகொண்டமர்ந்து மேவுவர்சிவாநந்த போகம். (௩௫)

இன்னபஃறேவர் சூழ்தரநாளு மெவ்வகையுயிர்கட்கு மின்ப
மன்னமுத்தேவர் மகிழ்ந்துபோற்றெடுக்க மங்களநாயகி யொடுநம்
முன்னவர்கும்ப லிங்கநாயகனுர் முனிவறவினிதுவீற் றிருப்ப
ரன்னவர்மலர்த்தாள் பணிபவர்பெறும்பே றறைதரவல்லவ ரெவரோ. (௩௬)

கும்பலிங்கேசர் திருமுனமனையார் குலவருள்போலவோர் தீர்த்தம்
வம்பவிழ்மலர்சான் றமர்தருமதன்பேர் வயங்குபொற்றாமரை யென்பர்
நம்புமத்தீர்த்தம் படிந்துநீறணிந்து நலஞ்செய்கண்மணித்தொடை பூண்டு
கம்பமிலெழுத்தைந் தெண்ணுவோரடைவார் கடவுளர்தொழுஞ்சிவ லோகம்.

உரைபதினறுவர் சூழவீற்றிருக்கு முவமையில்கும்பலிங் கேசர்
வரைமதிற்றளிக்கு நிருதிமாதிரத்தின் மணங்கமழ்மாலதி வனத்திற்
புரையறுதூம கேதுமாமுனிவன் போற்றிடக்காசியி னின்று
மரையரவாதி விச்சுவநாத ரடைந்தினிதமருவ ரொன்றும். (௩அ)

அவரடிபணியி னரவராப்பூணு மடுபுலியடுபுலி யுரிக்கு
மிவர்வலியானை யானைத்தோல்போர்க்கு மிருகணுனேக்கின்முக் கண்ணும்
பவர்படுசடைத் தவர்முடிமீது பரிந்துநீராட்டுவோர் முடிமேற்
றவர்தொழநறுநீர் சுமப்பவராவர் சாற்றமுற்றுதவர் பெருமை. (௩௯)

அறம்பயிலினைய பெருங்குடமூக்கென் றறைதருகேத்திரத் தளவை
நிறம்பயில்கிரேதத் தியோசனைமூன்று நிகழ்தருதிரேதத்தி லிரண்டு
மறம்பயிலரசர் பொருதுவாபரத்தில் வகுத்திடும்யோசனை யொன்று
புறம்பயில்கலியி லரையெனப்புகல்வர் புலனெறிவழக்குணர்ந் தவரே. (௪0)

ஒருகணமெனினு மரைக்கணமெனினு முறைசெய்வாணிகப்பொருட் டெனினும்
வருவிலைமாதர் வாஞ்சையினெனினும் வழிநடைத்தங்கலி னெனினுந்
திருகுதீரனைய தலம்வசித்தவரே சிறந்தபுண்ணியத்தராய்ப் பொல்லாக்
சருநமன்வாதை தவிருவரொன்னிற் கழன்றிடாரறஞ்சொலற் பாற்றே. (௪௧)

தாவருங்கும்ப கோணத்துவசிக்குந் தாவரமாகிய விருக்க
மேவருங்கொடிபுன் மிருகம்பல்பறவை மென்புழுவாதிய பலவும்
பாவருஞ்சுவர்க்கத் திடமறநெருங்கும் பண்புதேர்ந்தமரரா தியரு
மோவருமனைய கேத்திரத்தவைபோ லுறவசித்தின்பவீ டுறுவார். (௪௨)

தீயசட்பேழ்வாய்க் கூற்றுவன்றனது செஃறெழிற்றூதரை நோக்கி
யாயமெய்க்கும்ப கோணத்தினெல்லை யடையன்மினுயிடை வதிவார்
மேயநம்பெருமான் சிவபுரத்தெல்லை விரவுநரோயிங்கு விரவார்
பாயவத்தலத்து நம்மதிகாரம் படர்தராதெனப்பல்காற் பகர்வான். (௪௩)

திசழ்தருகும்ப கோணயாத்திரையான் செய்வலென்றெழுந்து சங்கற்பம்
புகழ்தருசிறப்பிற் செய்துளோன்றனது பொலிகுலமுழுதுமுய் வித்தோ
னிகழ்தருகுணந்தீர்ந் தன்பினுலனைய யாத்திரைசெய்பவன் பெறும்பே
றகழ்தருபந்த முனிவிர்காள்பரம னன்றியாரறிந்துரைத் திடுவார். (௪௪)

புண்ணியமலியத் தலம்வலஞ்செய்வோர் பூப்பிரதக்கணஞ் செயலா
னண்ணியபலனை யடைகுவதுண்மை நவிலுமக்கேத்திரத் தமைந்த
வெண்ணியதலங்கள் பலவுமோர்தினத்தே யெய்தியேத்தெடுத்தினிதிறைஞ்சிக்
கண்ணியகும்ப லிங்கநாயகரைக் கைதொழினவர் பிறப்பொழிவார். (௪௫)

வேதசாத்திரங்கள் விளங்குறவுணர்ந்து மிகுசிவநேசமுட் கொண்டும்
போதவாசிரிய னடிப்பணிசெய்தும் பொருவரும்பிறவறஞ் செய்து
மேதமோவனைய தலத்திடையமர்வோ ரொழின்மனைமைந்தரா தியரு
மோதநேருவப்பிற் சூழவாழ்ந்தீற்றி னுமாபதியடிக்கலப் புறுவார். (௪௬)

ஆதிநாளமல னன்னகேத்திரத்தி னளவெலாமமுதினு னனைத்தான்
போதினனவாவக் கேத்திரத்தலங்கள் புகுந்துசூழ்ந்தேத்திடு திறத்தாற்
கோதினன்மலிந்த மூடனுமமரர் குரவற்குங்குரவனே யாவா
னேதிநாண்மலர்வந் தியுஞ்சிலைமதவே ளூட்குமைந்தனைப்பெறு வாளால். (௪௭)

கடல்வளையுலகிற் புரிந்தபாதகங்கள் கருதொருசிவத்தலத் தொழியும்
விடலருமனைய சிவத்தலத்தியன்ற வெய்யபாதகமெலா நாளும்
படலருங்காசிப் பதிவயிற்றீரும் பகர்ந்தகாசியிற்செய்பா தகங்க
ளடல்கெழுகும்ப கோணத்திற்றீரு மங்கியற்றினுமதே தீர்க்கும். (௪௮)

ஆயவத்தலத்து மான்மியமுழுது மறையயாம்வல்லமோ வளவாப்
பாயதண்புனல்சேர் செஞ்சடாமுடிநம் பரம்பரநாயக னன்றி
மேயவத்தலமிவ் விடத்துளதென்று விளங்கிடவிதந்துரைத் திடுவாந்
தூயமெய்த்தவத்தீர்கீழ்கடன்மேல்பாற்சொலப்படுமியோசனையந்தில். (௪௯)

கனிபலவுதிர்க்கும் வெள்ளைநாவலின்கீழ்க் கறையடிக்களிறுபோற் றெடுப்ப
முனிவறவருளி முக்கணெம்பெருமான் மூவுலகமுந்தொழ நாளுந்
தனியமராணைக் காவிற்குக்கீழ்பாற் சாற்றிடும்யோசனை நான்கில்
புனிதமிக்கமையும் பெருந்துறைவடபாற் போதரும்யோசனை யேழில். (ருo)

திருமணிமுத்த நதியடிவருடத் திகழ்விருத்தாசலத் தென்பான்
மருவும்யோசனையோ ரைந்தின்மண்மகடன் மார்பணிமதாணியில் வயங்கு
மொருவருந்திருவா வடுதுறையமர ருவந்துபோற்றெடுக்குங்கோ ழம்பஞ்
சுருதியேத்தெடுக்குந் தென்குரங்காடு துறைதிருநீலமா குடியே. (ருக)

திருவிரும்பூளை முனிவரர்சூழத் திகழரதைப்பெரும் பாழி
யொருகுடவாயி லொளிர்திருநறையூ ரோங்கரிசிற்கரைப் புத்தூர்
வருசிவபுரம்வண் கலயநல்லூர்வான் வழுத்துநல்லூர்பட்டீச் சுரமே
முருகவிழாறை வடதளிசத்தி முற்றமேற்றளிவலஞ் சுழியே. (ருஉ)

தூயவண்பாலைத் துறையொருபறவை தொழவருள் சக்கரப்பள்ளி
பாயசீர்படைத்த வடகுரங்காடு துறைபலமுனிவர்சூழ் வைகா
நேயமார்விசய மங்கையெஞ்ஞான்று நிகழ்புறம்பயந்திருப் பனந்தாள்
வாயவாப்பாடி சேய்ஞலூர்வியலூர் மாந்துறைமங்கலக் குடியே. (ருங)

கஞ்சனூர்கோம காமுதற்பலவாக் கதித்தெழுபுண்ணியத் தலங்க
ளெஞ்சலிலனைய கும்பகோணஞ்சூ ழெல்லைநாற்புறத்தும்யோ சனையுள்
வஞ்சமிர்சிறப்பின் வயங்குவவனைய மாத்தலம்பொருவதொன் றில்லை
யஞ்சமாருளத்தீ ரறிந்தமட்டுரைத்தா மன்பின்மேலுரைக்குதுங் கேண்மின். ()

தலவிசேடப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சுகூ.

---

## திருவிடைமருதூர்ப்படலம்.

:o:

நலமலிகும்பகோண நன்னகரைங்குரோசத்
தலமெனப்படுவவைந்தே சாற்றியவைந்தனுள்ளும்
வலமலிமுதற்குரோச மாத்தலமென்னப்பட்டு
நிலவிடைமருதூர்மேன்மை களிற்சிலநிகழ்த்தலுற்றும். (க)

தகையொளிர்கும்பகோணத் தலத்துக்குநேர்கிழக்குத்
திகையிருகுரோசத்தெல்லை திருவிடைமருதூர்மேவும்
பகைதவிரதன்பேர்கூறிற் பாவங்களனைத்துந்தீரு
மிகையெனநினைத்தவெல்லாம் விரைந்துகைகூடுமாலோ. (உ)

மேயவத்தலத்துமுன்னாள் விபண்டகமுனிவனென்பான்
மாயவனுணர்தற்கொண்ணா மாதொருபாகங்கொண்ட
நாயனைக்காண்பானெண்ணி நன்கிருபத்துநான்கென்
றுயநாலுகநீங்காம லருந்தவமாற்றினனே. (ங)

நெடியநாள்வருந்திநோற்கு நிறைதவமுனிக்கிரங்கிக்
கொடியனுளொருபால்வைகக் குழகன்மால்விடைமேற்கொண்டு
படியவாமலர்கவிப் பண்ணவர்பலரும்போற்றக்
கடியுவான்கணங்கள்சூழக் கடலினுமுரசமார்ப்ப. (ச)

மேதகுமகரமாதம் விளங்குபூரணையின்மிக்க
காதல்செய்பூசநாளிற் கருத்தமர்காட்சிநல்க
வாதரமுனிவனோக்கி யரகரவென்றெழுந்து
போதவஞ்சலித்துவீழ்ந்து போற்றிசெய்தெழுந்துசூழ்ந்து. (ரு)

திருமுனர்க்குடந்தம்பட்டுச் செயசெயவென்றுநின்று
மருமலர்க்குழலோர்பாகம் வயங்குநின்னுருவங்காண்பான்
பொருவிலித்தலத்துநாயேன் புரிந்தனனறவநீநல்கு
பெருகொளிக்காட்சியாலே பெறலரும்பிறவும்பெற்றேன். (சு)

என்றுளமகிழ்ந்துபோற்று மிருந்தவமுனியைநோக்கி
யொன்றுபேரருளினுற்ற வுமையொருபாகன்கூறு
நன்றுநீவேட்டவாறே நலமலிகாட்சிதந்தாம்
பொன்றலில்குணத்தோயின்னும் வேண்டுவபுகறியென்றான். (எ)

பிணையடியேற்குவேண்டும் பேறிதன்மேலுமுண்டோ
கணைநெடுமாலாக்கொண்டாய் கரிசிலித்தலத்தெந்நாளு
மிணையிலாமகாலிங்கத்தோ டிலகவிவ்வுருவின்வைகி
யணைபவர்தமக்குக்காட்சி யளித்தின்பமுறுக்கவென்றான். (அ)

அடியவர்கருத்துமுற்ற வருள்செயுமமலமூர்த்தி
கொடியணிமாடகூட கோபுரவணையதானத்
தொடிவருகருணையாலே யுமையொருபாகங்கொண்ட
வடிவொடும்வைகாநின்றான் மாநிலம்போற்றியுய்ய. (கூ)

புண்ணியமகரமாதப் பூரணைப்பூசநாளிற்
கண்ணியபுகழ்க்காவேரிக் கலியாணதீர்த்தந்தோய்ந்து
பண்ணியதானந்தன்ன மாயினும்பாவநீங்கி
யெண்ணியவனைத்துமெய்தி யின்பவான்கதியிற்சார்வார். (௧0)

செருத்தலாக்கொலையால்வந்த தீங்கும்வேதியரைக்கொன்று
வருத்தலான்வந்ததீங்கு மாறிடுங்கோடிகோடி
பொருத்தல்சால்கிளையாயுள்ளார் பொங்கொளிக்கயிலைமேவி
யிருத்தல்சான்றமையவுய்க்கு மெற்றைக்குமனையதீர்த்தம். (கக)

இன்னுமத்தலத்திற்காரு ணியாமிர்தமென்றோர்தீர்த்த
மன்னுமத்தீர்த்தஞ்சார்ந்து சங்கற்பம்வகுத்துமூழ்கிற்
பன்னுதன்கிளையுளோரும் பாதகமனைத்துந்தீர்வர்
மின்னுபொன்மணிகளாதிச் சம்பத்துமேவிவாழ்வார். (கஉ)

சிறைகெழுநாகதீர்த்த மென்றொருதீர்த்தமேவுங்
குறையறவிடபமாதங் கூடியத்தீர்த்தந்தோய்வார்
நிறைபல்பாதகமுநீங்கி நின்மலமுத்தராவா
ரறையுமிம்மூன்றுமம்மான் முக்கணென்றறைவர்மாதோ. (கங)

இன்னுமத்தலத்திலெண்ணி றீர்த்தமெண்டிசையுமுண்டான்
மன்னுமத்தீர்த்தமேன்மை வகுத்துரைத்திடவல்லார்யார்
பன்னுமத்தலத்துமுந்நாட் பதினொருகோடியோரு
முன்னுமன்புறப்பூசித்தா ரொன்னில்யாமொழிவதென்னே. (கச)

ஒருமருப்பொருத்தல்வெள்வே லுத்தமக்குமரன்வேதன்
மருமலர்த்துளபத்தாரோன் வரகுணதேவன்முன்னோர்
திருமலரிறைத்துப்போற்றிச் சேவிக்கவருள்சுரந்த
பொருவிலிதன்னைத்தானே பூசித்துமமர்வானென்றும். (கரு)

காசிபமுனிவனென்பான் கண்ணனூர்மழவுக்கோல
நேசமுட்பொலியக்காண்பா னெடுந்தவம்புரிதனோக்கிப்
பேசுமக்கோலமன்னுன் பெறும்படிகாட்டுவித்த
வீசனெம்மிறைவனங்க ணிருந்தருள்சுரக்கும்யார்க்கும். (கசு)

ஒருதலமுற்றபோதே யொருவன்செய்பாவமெல்லாம்
வெருவிவித்தாரமாக விரைந்துகூயோடுமந்தக்
குருமலிதலமேபஞ்சக் குரோசமாத்தலங்காணென்று
பொருவறவெல்லாமோர்ந்த புந்தியர்புகலாநிற்பர். (கஎ)

உரைத்ததையன்றியின்னு மொருதலக்காட்சியாலே
யரைத்தபல்பாவமஞ்சி யோசனையளவபோய்நிற்கும்
வரைத்தவத்தலத்தைப்பஞ்சக் குரோசமாத்தலங்காணென்று
புரைத்தவாலறிவின்மேலோ ராயவர்புகலாநிற்பர். (கஅ)

சொற்றதையன்றியின்னுஞ் சொல்லுவதுண்டுகேண்மின்
பற்றொருதலத்தைச்சாரிற் பஞ்சபாதகமுமஞ்சி
முற்றவுங்கதறியோடு முனிவறவுணர்ந்தமேலோர்
கொற்றமாரதுவேபஞ்சக் குரோசமாத்தலமென்பாரால். (கக)

நவிறருகுரோசமுக்கா லுழிகைவழியேயென்பர்
கவிதருமிரண்டேயென்று மிரண்டரைக்கடிகையென்றும்
புவியுளோருரைப்பரீங்குப் புகன்றதுமுதலவன்றோ
லவிருமாதவத்திர்மூன்றுங் கூற்றெனவறிந்துகொண்மின். (உo)

பொருவிடையூருமெங்கள் புண்ணியப்பெருமானன்றித்
திருவிடைமருதூர்மேன்மை செப்பவல்லவர்யார்யார்க்குங்
கருவிடையனையதான மெல்லையிற்கலக்கப்பெற்ற
குருவிடையருதகும்ப கோணத்தின்பெருஞ்சீரொற்றே. (உக)

திருவிடைமருதூர்ப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சசுo.

---

## திருநாகேச்சுரப்படலம்.

கும்பலிங்கரமர் கின்றகுடமூக்குநகருக்
கும்பர்நோக்குமழ லோற்குரியதாயதிசையி
னிம்பரோத்தவொர்கு ரோசமெனுமெல்லையமருஞ்
சம்பகாரணிய மென்றுபலர்சாற்றுதலமே. (க)

அத்தலத்தொர்கணமாவது வசிக்குமறவோ
ருத்தமச்சிவனடிக்கலவலுற்றுமகிழ்வா
ரொத்தவான்சுரபியிற்பலரொருங்குபுகினு
மெய்த்தயாவையும்விரைந்தருளவல்லதனுவே. (உ)

அன்னம்ாதலமடைந்தபொழுதேயடைவராற்
பன்னலாயபதினுயிரமகம்புரிபல
நன்னராவயினமர்ந்தசிவனுமனவில்வார்
முன்னமேவுவர்முழங்குசிவலோகநகரே. (ங.)

ஆதிசேடன்முனமாவயின்விளங்குபரமன்
சோதிமேருநிகர்தோளிலணியாதலுடனே
யோதிமேவருமெய்ஞ்ஞானமதொருங்குபெறுவான்
றீதிலாதபலசண்பகமரந்திகழவே. (ச)

உண்டுபெண்ணியொருநூறுவருடந்தவறுரு
தண்டுபூசனைசெய்தெண்ணியவனைத்துமடையா
மண்டுகாதலினம்மாதலமடுத்தவர்களும்
பண்டுமாமலமகற்றியுயர்பண்புகுறியா. (ரு)

சம்புபாலொருவரங்கொடுதவாதநசையா
னம்புதீர்த்தமிறையோனெதிரினென்றுநவிலா
வெம்புபாசமறவாண்டுபதினுயிரம்விழைந்
தம்புமேவியவதன்குலையமர்ந்தனனரோ. (சா)

நாகவாவியபெரும்புனலினுமமுலகோர்
நாகதீர்த்தமெனவோதியவணன்கமருவார்
நாகநாதரொனுநாமமும்விராவநவிலா
நாகராசன்மகிழ்பூத்திதுவநன்குபுரிவான். (எ)

ஆயகார்த்திகைமதித்திருவிழாவுமயராப்
பாயதன்னுலகுசென்றனன்விண்ணுடர்பரவ
மேயகார்த்திகையினப்புனலினுடல்விழைவார்
தூயராயளவிலாச்சுகம்விராவியமர்வார். (அ)

ஆண்டுதோறும்வருகார்த்திகையினுங்குமருவி
வேண்டுவாருளம்விழைந்ததருள்வேதமுதல்வ
னீண்டுசேவடிபணிந்துமகிழ்வெய்தியடைவான்
கூண்டுமாமணிவிளக்கொளிகுலாந்தனகரம். (கூ)

அன்னதாயபுனலாதவனோர்காலமுழுகாப்
பன்னகேசன்டிபோற்றியருள்பற்றுதிறனுன்
மன்னுகார்த்திகைவயங்குபரிதிக்குரியதா
முன்னர்வாரமிகவும்பலமுகிழ்க்குமவணே. (க௦)

வேறு.

கார்த்திகையாதிவாரங்கருதியத்தீர்த்தந்தோய்வார்
சீர்த்திமிக்கவராய்நீங்காச்செல்வராய்ச்சிறந்துவாழ்வா
ரார்த்தியினுகதீர்த்தமாதவன்படியமுக்கண்
மூர்த்தியாருளுமாண்பான்முகிழ்த்ததப்புனற்கப்பொன்பேர். (கக)

சொற்றகார்த்திகையிலைந்துஞாயிறுவாரந்தோன்றிற்
கற்றவரதிவிசேடபுண்ணியகாலமென்பா
ருற்றவக்காலத்தந்நீரொருங்குதோய்ந்தாங்குமேய
கொற்றநாகேசற்போற்றிற்குலைதரும்பாவமெல்லாம். (கஉ)

தருமமென்றுரைக்குந்தெய்வந்தகவின்வந்தந்நீராடித்
தருமவெள்விடையாற்போற்றித்தக்கபல்வரங்கொண்மாண்பாற்
றருமநற்றீர்த்தமென்றோர்தவலரும்பெயர்பூண்டன்று
தருமமிக்கார்க்குநாகேச்சுரத்தமர்தவாவத்தீர்த்தம். (கங)

மன்னுகார்த்திகையிற்சோமவாரம்வாசுகியத்தீர்த்தந்
துன்னுபேரன்பின்மூழ்கித்துகளறமுதல்யாமத்துப்
பன்னுநாகேசர்மற்றைப்பகர்யாமஞ்சமிவனேச
ரின்னுமூன்றாம்யாமத்துப்புன்னாகவனேசற்போற்றி. (கச)

மற்றநாலாம்யாமத்துவயங்குபாதலத்துப்புக்குக்
கொற்றநாகேசராதிமூவரையுங்குறித்தாங்
குற்றமாமுத்தியுற்றானுரைத்தவிவ்வேதுவாலும்
பொற்றநாகேசரென்றுகூறுவர்புலமையாளர். (கரு)

புலமலிமார்க்கண்டேயன்புண்ணியத்திருநாகேசர்
நலமுறுபதமுட்கொண்டோர்நன்மகட்பெறுவானெண்ணி
யலவணவுணவுதுய்த்தேயாயிரவருடநோற்க
நிலமகண்மகளாம்வண்ணநெடுந்தகைபுணர்த்தினானே. (கசு)

தினகரவுதயமென்னச்செறிவனவனத்துட்டோன்று
மனகநன்மகளைநோக்கியண்ணலாரருளுட்கொண்டே
முனகிலாமார்க்கண்டேயன்முதிர்ந்தபேருவகைபொங்கக்
கனகவல்லியிற்கைக்கொண்டுகளிப்புறவளர்த்தானன்றே. (கஎ)

மண்மகளாயநங்கைமங்கையம்பருவநண்ணக்
கண்மலர்விடுத்துநோக்கிக்களித்திடுமுனிவர்கோமா
ணெண்மலிவரனுயுள்ளானெய்துவதெந்தநாளென்
றுண்மலிதிருநாகேசரொளிர்பதங்குறித்திருந்தான். (கஅ)

அடியவர்குறித்தவெல்லாம்வரவர்குறித்தவாறே
முடிவுசெய்தருளவல்லமுக்கணெம்பெருமானன்றே
நெடியமாயோனைநோக்கிநீவிரைந்தடுத்தம்மாதைக்
கடிமணம்புணர்ந்திவ்வூரிற்காணிகொண்டமர்தியென்றான். (கக)

ஆண்டவனுரைத்தவார்த்தையஞ்செவிநிரம்பப்போற்றி
நீண்டவன்விருத்தனாகிநிகழுருவொன்றுதாங்கி
மூண்டவன்புடையானயமுனிவன்முன்சென்றானகத்
தாண்டவனடியாரென்றுதவமுனிமகிழ் (உ0)

வெள்ளியநீறுபூத்தமேனியீர்மெலிந்துவந்தீர்
வள்ளியநீவிர்யாரோவரவெவனுரைத்திரென்னப்
புள்ளியதோலுடுக்கைப்புண்ணியனடியீர்நம்பா
னள்ளியயானோர்சைவநற்றவனுவன்கண்டீர். (உக)

வந்ததுபசித்தீமாற்றவென்றனன்மாயக்கள்வ
னந்தநன்மொழிகேட்டையவலவணவுணவுண்டிங்கே
நந்தவுண்டிடுவாய்கொல்லோவென்றனனற்றவத்தோ
னெந்தமண்ணேனுமுண்பேனென்றனன்விருத்தமாயன். (உஉ)

ஆயினிங்குளதுண்பாயென்றருண்முனிபுகலவுள்ள
மேயினதளிப்பாயாகில்விழைந்துண்பேனென்றுன்வஞ்சன்
பாயதொன்மறையோனென்பாலுள்ளதுபரிந்துநல்கற்
காயதோர்தடையின்றென்றுனகத்தொருவஞ்சமில்லான். (உரு)

என்றலுநின்குமாரிதனையெனக்கீதியென்றுன்
கன்றலின்முனிவன்மாழ்கிக்கரைந்தசொன்மறுத்தற்கஞ்சி
யன்றலின்மகளையீந்தானரவணைக்கிழவனேற்றே
யொன்றலிலுப்பிலாதவுணவுறத்துய்த்தானன்றே. (உச)

துய்த்தலுங்காளையாகித்துழாய்முதற்குறிகளோடு
மெய்த்ததன்வடிவந்தோற்றிநின்றனனுணர்ந்தமேலோன்
கைத்தலங்குவித்தாட்கொள்ளுங்கருணைநாகேசர்பாதம்
வைத்தசிந்தையனாய்மாறுமகிழ்ச்சியிற்றிளைத்தானன்றே. (உரு)

கடிமணம்புரிந்தவந்தக்காமருதலத்தோர்கோயில்
வடிமணங்கமழும்விண்ணின்வகுத்துவிண்ணகர்ப்பேரிட்டாங்
கொடிமணந்தருதுழாயோனுப்பிலிமாயனாகிப்
படிமணமகளோடென்றும்வைகுவான்பார்கொண்டாட. (உசு)

உப்பிலிநெடுமாலோடுமுவந்துநாகேசன்மேய
தப்பிலாகேசமேன்மைசாற்றிடவல்லார்யாரோ
வெப்பிலங்கருமெல்லைவிடுத்திடாக்கும்பகோணத்
திப்பியவளமையெம்மாற்செப்பிடற்கரிதேயென்றும். (உஎ)

திருநாகேச்சுரப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சஅஎ.

---

## தாரோச்சுரப்படலம்.

—:0:—

சுருதியாயிரமுந்துதிகும்பகோணத்து
நிருதிமூலையினிகழரைக்குரோசத்தினுளது
பருதியாயிரமலர்ந்தெனப்பரனமர்தானங்
கருதியாவரும்புகுமுருத்திராக்கமாக்கானம். (க)

அந்தமாதலத்தடைபவர்பசுக்கொலையாதி
யெந்தவெய்யபாதகங்களுமிரித்துவீடடைவார்
சந்தமாருமத்தலத்தையுட்குறிப்பவர்தமையுங்
கொந்தவேல்கொடுகுறுகுவெங்கூற்றனுங்குறுகான். (உ)

எண்ணில்வானவர்தானவர்சித்தர்வாளியக்கர்
கண்ணிலாவிராக்கதர்வித்தியாதரர்கருடர்
மண்ணிலுள்ளவர்மற்றையோர்களுமங்குவாஞ்சை
நண்ணிலப்பொழுதேபிறப்பொழிவுநண்ணுவரால். (ங)

வானநாடர்களனைவருந்தளிரிலைம்லர்கா
யானபல்கனிவளார்கிளையாதியாயலங்கி
யீனமோப்புருத்திராக்கவான்றருவடியென்று
ஞானநாயகனாகநாடேத்தவீற்றிருக்கும். (௪)

இயமன்முன்னைநாண்முனிவரரிட்டசாபத்தாற்
பயம்விராவிராப்பகல்டைதாபத்தைப்பாற்ற
நயமளாயவத்தலத்தகநண்ணிநாயகனைப்
புயலவாமலராதிகள்கொண்டுபூசித்து. (௫)

திருந்துமுன்னைநாணம்பிரான்சூலத்தாற்செய்யப்
பொருந்துதீர்த்தத்தின்கிலமறமுழுமையும்புதுக்கி
வருந்துதீர்க்குமப்புனற்கொருதன்பெயர்வைத்து
மருந்துதுய்ப்பவரெவரையுமவண்வருவித்து. (௬)

நாடுமாவணித்திங்களச்சுவதிநன்னாளிற்
கூடுமுற்சவந்தொடங்கிமாமுனிவரர்குழும
நீடுமாமகநாளமாவாசியைநிகழ்போ
தாடுதீர்த்தவுற்சவமுமத்தீர்த்தத்தேயாற்றி. (௭)

முனிவர்சாபமுந்தாபமுமொருங்கறமுருக்கி
யினியவாருயிர்ப்பொருட்டுநல்வரமெலாமேற்றுத்
தனியவாவியதம்பிரான்றிருவடிதாழ்ந்து
கனியவாம்பொழிற்றன்னுலகடைந்தனன்காலன். (௮)

சூரசேனனென்பவனொருமறையவற்றொலைத்துப்
பாரமாலெனத்தாங்கியவிடாதவெம்பழியை
வாரமேயவம்மாப்பெருந்தலத்தகமருவி
யாரவன்னதானம்புரிந்தக்கணத்தகன்றான். (௯)

மாண்டவெக்கியனெனுமொருசாதுமாமறையோன்
மூண்டமுன்வினைவலியினாலடைமுயலகனோ
யாண்டவன்பொலியத்தலமடுத்தன்னதான
மீண்டவாற்றினனக்கணமேதவிர்ந்திருந்தான். (௧௦)

மகாசுபுண்ணியனெனும்பெயர்வாய்த்தவோர்மறையோ
னகாமுற்றோன்றியகுருமனைநன்னலந்திளைப்ப
வகாதமேவுறத்தொடர்பழியனைத்துமத்தலத்தே
யுகாதவன்னதானத்தினாலொழித்தினிதுவந்தான். (௧௧)

ஆண்டளப்பவன்விதியொழித்தாயகள்ளருந்த
மூண்டவெம்பழிமுதலமரத்தலமுன்னிக்
கூண்டவேதியராதியோர்க்கோதனங்கொடுத்து
மாண்டதேயெனத்தொலைத்துவானகமரீஇமகிழ்ந்தான். (௧௨)

மன்னுமாலயிராவதந்தவத்துருவாசன்
பன்னுசாபத்தாலுற்றநீணிறத்தையப்பதிவாய்
முன்னுகூற்றுவன்றீர்த்தத்துமூழ்கிமாமுதல்வன்
மின்னுதாள்பணிந்தொழித்துமுன்னிறம்விராவியதே. (௧௩)

அதுவசித்தலினாலுருத்திராக்கவாரணியம்
பதுமநீரயிராவதநகரெனப்பட்ட
திதுவலாலயிராவதேச்சுரனெனும்பெயரு
மதுவிராஞ்சடைக்கொன்றையான்பெற்றனன்மாதோ. (௧௪)

தாரனென்னுமோரசுரன்வானவரெலாஞ்சவட்டி
வீரமேவவுமிறப்பொழிந்திருக்கவும்வேண்டி
யாரவந்நகரடுத்தயிராவதேச்சுரனை
வாரமேவுறப்பூசித்துப்பெற்றனன்மாதோ. (௧௫)

அனையனில்லறக்கிழத்தியர்நூற்றுவராங்கு
நினையமேவுபுநின்மலன்பூசனைநிகழ்த்திப்
புனையவல்லவனல்கியகாட்சியாற்பொலிந்து
துனையமேவினர்துன்னருஞ்சுடர்ச்சிவலோகம். (௧௬)

வலிவிராயவத்தாரன்பூசித்திடுமாண்பா
லொலிவிராயதாரேச்சுரமெனும்பெயரோங்கும்
பொலிவிராவவன்புத்திரன்வலிகெழுபுயத்தான்
கலிவிராங்கழன்மேகதாரப்பெயர்கலந்தோன். (௧௭)

ஆங்குமேவிவைசாகவுற்சவமினிதாற்றிப்
பாங்குமேவயிராவதேச்சுரனடிபணிந்து
தீங்குதீருமத்தலத்தமர்ந்தருந்தவஞ்செய்து
நீங்குவானலனிருக்கின்றானினுநிறைதவத்தீர். (௧௮)

வரத்துமேம்படுவானருந்தொழுதெழுந்தாரேச்
சுரத்துமான்மியமளவிலவின்னமுந்துதியா
தரத்துமேவியத்தலத்தமர்பிரானடிதாழ்வோர்
கரத்துமான்மழுவேந்துவர்கயிலையேகலப்பார். (௧௯)

இன்னதாயதாரேச்சுரமெல்லையினெய்த
நன்னர்மேவியகும்பகோணப்பெருநலத்தை
யன்னவாகனாதியோர்களுஞ்சொலலாற்றார்
மன்னமற்றெவர்சொற்றிடவல்லவர்மாதோ. (௨௦)

தாரேச்சுரப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௫௦௭.

---

## சுவாமிமலைப்படலம்.

:o:

குறுமுனிதொழுதெழுங்கும்பகோணத்திற்
குறுவளியமர்திசையொருகுரோசத்தின்
மறுவறுகுருகிரியென்றோர்வைப்புள
தறுதியில்பெரும்பயனளிப்பதன்னதே. (௧)

அலருறைபவனரவணைக்கிடக்கையோன்
பலர்புகழ்வானநாட்டமரும்பண்ணவ
ருலர்தலில்யாவருமொருங்குமேவியம்
மலர்புகழ்க்குருகிரிவசிக்கவெண்ணுவார். (௨)

மூடவர்கண்ணில்லவர்மூகர்கூனர்சங்
கடமிகுபித்தர்பல்வெதிரர்காட்சியின்
மடர்முதலெவருமத்தலம்வழுத்தினு
லிடர்மிகுபிணியறுத்தினிதுவாழ்வரால். (௩)

வழிநடப்பவர்களம்மார்க்கஞ்செல்லினுந்
தழியொருநிமித்தமத்தலத்துத்தங்கினுங்
கழிபெருஞ்சேய்மையினமர்ந்துகண்ணினு
மிழிவறுபெரும்பயனெய்திவாழ்வரால். (௪)

ஒருவருமம்மலையுவந்துசூழுவோர்
பருவருங்குட்டநோயாதிபாற்றுவார்
வெருவரும்பேய்முதலெவையும்வீட்டுவார்
பொருவருமின்பமேபுணர்ந்துவாழ்வரால். (௫)

ஒருவருந்தனக்குமேலிலாதவுத்தமப்
பொருவருஞ்சாமியும்போற்றியேனையோர்
மருவருமுண்மைதேர்மாட்சிமேவிய
குருவருமலையெனிற்கூறல்வேண்டுமோ. (௬)

அம்மலைதெய்வதவுருவமன்னதே
விம்மொளிமண்டபவிமானமாதியுஞ்
செம்மலரோடைகள்செறிந்தகூபங்க
ளம்மவான்கங்கையேயத்தலத்தினுள். (௭)

வருபிரபவமுதல்வருடதேவர்க
டிருவளரம்மலைச்செறிந்தபல்படி
யிருமைகொள்வசந்தமுனிருதுதேவர்கண்
மருவிநாற்புறத்தினும்விடாதுவாழ்வரால். (௮)

அன்னமாமலையிவரறிஞர்யாவரு
முன்னமக்கிரியமர்முதலையெண்ணியே
மன்னுசோபானமாம்வருடதேவரைப்
பன்னுமாதரத்தொடுபரிந்துபோற்றுபு. (௯)

திருவளரடிப்படிதெங்கங்காய்தகர்த்
துருவளர்மலையிவர்ந்தொளிர்விமானத்துட்
குருவளர்மணிமுடிக்குருபரன்கழன்
மருவளர்மலர்கொடுவணங்கிப்போற்றியே. (௧0)

பின்னர்வந்திலிங்கநம்பிரானைப்போற்றுவோ
ரென்னராயினுமவரிம்மைச்செல்வமும்
பன்னருமறுமையிற்பரந்தசெல்வமு
நன்னர்மிக்கனேந்துபின்னண்ணுவார்கதி. (௧௧)

புண்ணியக்கார்த்திகைத்திங்கட்பூரணை
தண்ணியவருட்பெருஞ்சாமிநாதனைக்
கண்ணியவன்புறக்கலந்துபோற்றுவா
ரெண்ணியவவனுலகெய்திவாழ்வரே. (௧௨)

வரமலிகார்த்திகைமதியிலாரணுட்
டிரமலிகுகற்கபிடேகஞ்செய்பவர்
தரமலிசெல்வராய்த்தழைந்துவாழ்ந்துபி
னுரமலியின்பவீடுவந்துமேவுவார். (௧௩)

சதுமுகன்போற்றிடுஞ்சாமிநாதன்முன்
கதுமெனவொருசுடர்கவினவேற்றுவோர்
மதுமலர்க்கற்பகவானநாட்டிடை
முதுகுலத்தவரொலாமொய்ப்பவேற்றுவார். (௧௪)

விண்ணவர்தொழுதெழுமேடமாமதிக்
கண்ணபக்கஞ்சதுர்த்தசியிற்காமுறுத்
திண்ணவங்கப்பிரதக்கணஞ்செய்வா
ரெண்ணியவெண்ணியாங்கெய்திவாழ்வரால். (௧௫)

வளமனைவேண்டினுமைந்தர்வேண்டினு
முளமலிபோகங்களொருங்குவேண்டினுங்
களமறுகல்விமுற்காட்சிவேண்டினு
மளமரலின்றியங்கணைந்துசூழ்வரால். (௧௬)

விதிவழியின்றியுள்விளையுமன்பின்றி
மதிவழியணையமாமலையிலேறுவோர்
துதியிலாமகிடமாய்த்தோன்றுவார்பினுங்
கதியிலாவாதரோகத்தழுந்துவார். (௧௭)

சிறந்தவைகாசிதைத்திங்கட்பூரணை
யறந்தவாவத்தலமடைந்துபோற்றுவா
ருறந்தபாதகமெலாமொழிந்துமுத்தராய்ப்
பிறந்தவான்பயனினிபெற்றுவாழ்வரே. (௧௮)

பொங்குதைத்திங்களிற்பூசமேவுநாட்
கொங்குதங்கியமலர்க்குடிகொணுன்முகன்
மங்குதலிலாதவானுடர்யாவரு
மங்குவந்தையணையருச்சித்தேத்துவார். (௧௯)

குருகிரியாத்திரைசெயுங்குணத்தவர்
மருவியபுவியடிவைத்தலொன்றற்கு
வெருவருமச்சுவமேதயாகத்தால்
வருபலனடைவரோன்மற்றுரைப்பதென். (௨௦)

குருகிரியமர்தருகுமாரநாயகன்
மருமலர்ப்பதமுளமதித்துவாஞ்சையின்
முருகலர்க்குமாரதீர்த்தத்துமூழ்குவோர்
பெருகொளிநன்மகப்பெற்றுவாழ்வரால். (௨௧)

நலமலிகேகயநாட்டுமன்னவன்
கலர்புரிசிவத்துரோகஞ்செய்பாவத்தா
லுலர்தவில்வாதநோயுற்றுக்கூனடைந்
தலர்பெருங்கவலையோடமருங்காலையில். (௨௨)

பண்ணியதவத்துச்சாபாலிவார்த்தையாற்
கண்ணியவுவப்பினன்பரித்தகாவொடும்
புண்ணியக்குருகிரிபுகுந்துசூழ்ந்துபி
ணண்ணியகுமாரதீர்த்தத்திலாடினுன். (உங)

மேயதைப்பூசநாள்வெற்பிவர்ந்துநன்
காயபாலாதிநம்மண்ணற்காட்டுபு
தூயபூசனைசெய்துதோத்திரஞ்செய்தான்
பாயநோயொழிந்ததுபாதகத்தொடும். (உச)

அளவருமுவகையினமூழ்ந்துமன்னன்வா
னளவுபொற்கோபுரமலங்குமண்டப
மளவில்பன்மணிவிமானங்களாதிய
வளவறுதிருப்பணியாற்றிப்பின்னரும். (உரு)

தகைகெழுபேரருட்சாமிநாதற்கு
வகைகெழுமகுடகுண்டலமதாணிவாண்
மிகைகெழுகடகமுற்பணிகள்வீசினுன்
பகைகெழுமன்னவர்பணியுந்தாளினுன். (உசு)

அன்னபுண்ணியத்தினலனையமன்னவன்
கன்னவிறேள்வலிக்கார்த்தவீரிய
னென்னுமோர்மைந்தனையினிதுபெற்றனன்
முன்னுமாதரங்கிளர்முத்தனுயினுன். (உஎ)

தங்குபேரருஞ்டைச்சாமிநாதனுக்
கங்குமேவன்பொடுமாட்டுபாலிடைப்
பொங்குவானவர்பலர்பொலிந்துமேவுவா
ரெங்குமாசாரம்பூண்டெய்தல்வேண்டுமால். (உஅ)

உற்றவப்பாற்குடத்தொருவர்கால்படி
னற்றமின்றுகவேயடையும்வாதநோய்
கற்றவர்புகழுமக்கிரியைக்கண்டவர்
கொற்றவெஞ்சமனகர்க்கொடுமைகண்டிலார். (உக)

இன்னமாதலத்தையுமெல்லையிற்கொடு
நன்னர்வாழ்கும்பகோணத்துமான்மிய
மன்னவாகனன்முதலாதிசேடன்மற்
றென்னராலுஞ்சொலற்கெளியதாகுமோ. (ஙo)

சுவாமிமலைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ருஙஎ.

---

## பாடலவனப்படலம்.

ஏடலர்புனற்கும்பகோணத்தினீசான
வாடலந்திசையேயோர்குரோசத்தினளவுள்ளான்
மாடலம்படுவானவாழ்க்கையர்பலர்சூழும்
பாடலவனமென்றேர்பழம்பதியுளதம்மா. (க)

பொன்பெறநினைத்தாலும்புவியொடுகுணஞ்சான்ற
மின்பெறநினைத்தாலுமெய்யறிவடைமாண்மைந்
தன்பெறநினைத்தாலுஞ்சதுமுகன்பதமாதி
யென்பெறநினைத்தாலுமெய்துவரத்தலத்தே. (உ)

வானவர்பெருஞ்சித்தர்மாண்டகந்தருவர்நெடுந்
தானவருவணரருட்டாபதரலங்கியக்க
ரானவர்கிம்புருடரளவிலர்மற்றேரு
மானவரொனமேவிவசிப்பரத்தலத்தென்றும். (ந)

உமைமகிழ்தரமாமையுருவத்திற்பொலிவோர்ந்தே
யிமையவர்பலர்சுந்தரேசரொன்றெடுத்தேத்த
வமைதிருவருட்பெம்மானங்கமருவனவனைக்
கமையொடுகண்டார்வெங்காலனைக்காணுரே. (ச)

கடன்முழுவதுங்குடித்தகாமருகுறுமுனிவ
னடல்கெழுமத்தலத்தையடைந்தொருபாடலம்வா
ழுடன்முனைநெடுஞ்சூலத்தொருவனைப்பூசித்துப்
படலருந்தலைமையெலாம்பண்ணும்வன்மையும்பெற்றான். (ரு)

கிளர்தவமலிவாலகில்லியரங்கடைந்து
வளமிகுசித்திரைமாமதிவருபூரணையி
லுளநெகவருண்மேனியொருவனைப்பூசித்துப்
பளகறவவனேடொன்றுமொருபரிசுற்றார். (சு)

சுரதனென்றொருமன்னன்றுணர்படுபாடலம்வாழ்
வரதனைமலர்கொண்டுமாண்புறப்பூசித்துச்
சரதநல்வரம்பெற்றுச்சகமுழுவதுமாண்டு
விரதமிக்கவர்சூழும்விண்ணடைந்தினுமமர்வான். (எ)

பொலிவடதிசையளகாபுரிபுரப்பவன்போந்து
நலிவறுபேரன்பினுடொறும்பூசித்துக்
கலிதபுபொற்கோனுய்க்களித்திருப்பதுமன்றி
மெலிவகனட்பினனுமாயினன்விமலனுக்கே. (அ)

வரமருள்குறுமுனியால்வங்கநன்னுடாளுக்
கிரவிறன்மிகுசோமகேதுவென்பவனடைந்து
பரமனையருச்சித்துப்பண்ணவர்ப்பதிட்டைசெய்தே
யுரவமைபுயச்சொன்னவுரோமமைந்தனைப்பெற்றான். (கூ)

பற்பலரிவ்வாறுபாடலவனத்தெய்தி
யற்புதனடிபோற்றியாரருள்பெற்றுய்ந்தார்
சொற்பயிலத்தானஞ்சுரதருவெனநாளு
முற்படுபயனெல்லாமுகிழ்த்திடுமடுப்பார்க்கே. (க0)

திரைதவழ்தருபிரமதீர்த்தமென்றொன்றுளது
புரைதவழ்தருமங்கட்புக்கினிதாடிடுவா
ருரைதவழ்பவுண்டரிகமொருபதினுயிரஞ்செய்
வரைதவழ்பயனடைந்துவண்கதியும்பெறுவார். (கக)

புண்ணியதலமிதெனப்புந்திசெய்தத்தலத்துத்
தண்ணியபிரமதடத்தக்கணதிசையின்க
ணண்ணியபுன்னகவனத்தமர்நலமுற்றான்
மண்ணியமணிபோலும்வடிவுடைமாயவனே. (கஉ)

இத்தரமலிதலந்தனெல்லையினுறப்பெற்ற
குத்தரமனைக்கும்பகோணத்தின்மான்மியத்தை
யுத்தரவரைவில்லானுரைசெயினல்லாம
லெத்திரவதிவினருமியம்புதற்கெளிதாமோ. (கரு)

மறைகளுக்கங்கமெனமன்னியசிலநூல்போற்
குறையறவொளிர்கும்பகோணத்திற்கங்கமென
நிறைதருதலமென்றுநிகழ்த்தியவிவ்வைந்து
முறைவழிபடுவாருக்குறுபயன்மொழிபவர்யார். (கச)

வேறு.

கற்றவர்புகழுங்கும்பகோணத்தைக்கலந்துபோற்றும்
பெற்றியனைங்குரோசயாத்திரைபேணல்வேண்டு
முற்றவத்தலமோரைந்துளொவ்வொன்றுளொருநாண்மேவிற்
பொற்றபுண்ணியம்பயக்குமென்மனூர்புலமைசான்றோர். (கரு)

பாடலவனப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ருருஉ

---

## கும்போற்பத்திப்படலம்.

மருவருங்கும்பகோணமாப்பெருந்தலத்தைச்சூழ்ந்த
தருவளரைங்குரோசத்தலப்புகழ்சிறிதுசொற்று
முருவளர்கும்பகோணமெனும்பெயருண்டாமாறு
திருவளர்கும்போற்பத்தியாகியதிறமுரைப்பாம். (க)

பாயபல்லுலகங்காக்கும்பண்ணவனுந்தியாய
சேயபங்கயத்துமேலான்றினகற்பம்வருவதோர்ந்து
தீயவையணுகாதென்றுந்தீர்த்தருள்கயிலாயத்து
மேயவெம்பெருமான்முன்னர்விண்ணப்பஞ்செய்வான்போனான். (உ)

நந்தியையடியிற்றாழ்ந்துவந்ததுநவிலவன்னான்
முந்தியுய்த்திடவுட்புக்குமுகிழ்த்தெழவுரோமமுற்றுஞ்
சிந்தியுட்கவலையெல்லாஞ்சிதைதரக்கண்டான்வண்டா
ருந்தியம்பகவனுதியும்பர்கள்காணுத்தேவை. (ங)

விழிகுளிர்படைப்பக்கண்டுமேவுமட்டாங்கமாதி
பழிதபுவணக்கஞ்செய்துபங்கயச்செங்கைகூப்பி
யழிவிலானந்தத்தேனேயற்புதக்கூத்தாவென்று
மொழிதடுமாறவன்புமுதிர்ச்சியிற்றுதித்தல்செய்தான். (ச)

துதிபுரிந்தெதிரோரிற்குந்தூயநான்முகனைநோக்கி
மதியணிசடிலமோலிவள்ளலார்கருணைபூத்துப்
பதிதரமனத்துக்கொண்டவெண்ணமென்பகர்தியென்னக்
கதியிலியுய்ந்தேனென்றுகைதொழுதுரைப்பான்வேதன். (ரு)

மகத்துவமுதலேனாயென்றினகற்பம்வருதலாலே
சகத்தெலாமழியும்வேதசாத்திரமொழியுநீமு
னகத்தருசிருட்டிபீசநசிக்குமேலினியெவ்வாறு
மிகத்தழைசிருட்டிசெய்வேன்விண்ணப்பமிதுவேயென்றான். (௬)

விதியுரைத்திட்டவார்த்தைவெறுமையேன்மொழிபுன்பாட்டும்
பதிதிருச்செவியினேற்றுப்பரம்பரனுரைத்தல்செய்வா
னிதியெனநினக்குமுன்னாநிரம்புறக்கொடுத்தபீசந்
திதிசெய்மாலொடுநீமாய்ந்துதீரினுந்தீராதன்றே. (௭)

அழிவிலாப்பீசமேனுமங்கைநின்றகலாவண்ணங்
கெழியகாப்பாற்றல்வேண்டுங்கிளக்குதுமதுவுங்கேட்டி
மொழியவாமமுதந்தோயமுயங்குமண்பிசைந்துகொண்டு
வழியவாநமதுமாயாமயமெனுங்குடமொன்றாக்கி. (௮)

அன்னமாகுடத்தினுள்ளாலமுதம்பூரித்துநாப்பண்
முன்னநாங்கொடுத்தசிட்டிபீசத்தைமுயங்கவைத்து
மன்னநாற்புறத்தும்வேதமாகமமறவாவங்கம்
பன்னரும்புராணமற்றையிதிகாசம்பரவவைத்து. (௯)

வாயிலாங்கலியின்காய்தேமாவிலைமேலால்வைத்தாங்
காயிலாவமுதள்ளாயவவிர்கலைபூணூல்சாத்திப்
பாயிலாநீகொண்மேருப்பருப்பதக்கோயிலோர்சார்
சாயிலாவுறியில்வைத்துத்தருப்பையுமுடிந்துசேர்த்து. (௧0)

புரையறவமிர்தங்கொண்டுபுரோக்கணஞ்செய்துவில்வ
விரைநறுந்தளிர்கவேமேதகவிருசின்னாளில்
வரையறவெள்ளமூடுமற்றதுமூடும்போது
தரைசெழித்திடுமோரோதுத்தாங்கியக்கடமிதக்கும். (௧௧)

அன்னதுமிதந்துதென்பாலமைதரச்சென்றுசென்று
மின்னதுமிளிர்கார்கோட்கீழ்வேலைக்குமேல்பாலாகத்
தன்னதுசெலவிற்சென்றோர்தலத்திடைவீழ்ந்துமாவிற்
சொன்னதுவன்னியாகுந்தோற்றஞ்சால்குசையும்வீழும். (௧௨)

நமதுசங்கற்பந்தாங்குநங்கையொருவர்காப்ப
வமர்தரும்பொழுதுகூர்ச்சமாயநங்குறியாய்த்தோன்றும்
விமலவத்தலத்திற்குக்கால்விழைதிசையொருகுரோசச்
சமநிலையாயதேத்துத்தங்கிடுமனையகும்பம். (௧௩)

மறைமுடிவுணராயாமேவயங்கொருகிராதனாகி
யறையுமத்தலத்திற்சென்றோரம்பினாலதைச்சேதிக்க
நிறைசுவையமிர்தம்பாய்ந்துநிகழநாற்புறத்துநல்லோ
ருறையுமைங்குரோசவெல்லைநனைத்திடுமொருங்குபின்னர். (௧௪)

அன்னகும்பத்தின்கீழ்பாற்றீர்த்தமொன்றமையச்செய்வோ
நன்னரத்தீர்த்தக்கீழ்பாலுடுபுசிக்கஞ்சென்று
மின்னவிரிலிங்கமாகும்விழைந்திடுவில்வமாதி
யென்னவும்வேறுவேறாமின்னனநிசமுமுன்னே. (௧௫)

புண்ணியகும்பத்துள்ளால்வாலுகம்பொலியச்சேர்த்துக்
கண்ணியவிலிங்கமாக்கிக்கரிசறப்பூசைசெய்து
தண்ணியவதனுட்புக்குத்தயங்குவோமெந்தஞான்றும்
பண்ணியபூசைப்பேற்றுற்படர்ந்ததுபெறுவார்யாரும். (கசு)

பற்பலர்விழைந்துபோற்றிப்படர்ந்ததுபெறுவாராயி
னற்பலர்நீயோவாளாவிருப்பவனறைந்தயாவுங்
கற்பலருளத்துக்கொண்டுகாமர்நின்பதிசேரொன்றான்
வெற்பலர்சிலையாக்கொண்டுவிண்டுவேவிடுத்தல்வல்லான். (கஎ)

உடையவனருளிச்செய்தவுரையகஞ்செவியினேற்று
மடைதிறந்தொழுகும்மன்பினுன்முகன்வணங்கிமீட்டுஞ்
சடையவமதியஞ்சூடுஞ்சங்கரவையமுண்ட
விடையவவெத்தேவர்க்குமேலவவென்றுபோற்றி. (கஅ)

விடைகொடுமேருச்சென்றுவிருப்பினீரமுதளாவி
யடையமண்பிசைந்துகும்பமாக்கிநூல்புனைந்துள்ளாக
மிடைதரவமிர்தஞ்சிட்டிவிளைத்திடுபீசமாதிக்
கடையிலைந்தையுஞ்சேர்த்தோர்முக்கட்கனியிலைவாய்ப்பெய்து. (கசு)

குவைபடுதளிர்த்தருப்பைமுடிந்ததுகொள்ளவேற்றிச்
சுவைகொணூலறுவைசாத்தித்தூயகூவிளங்கைக்கொண்டு
நவையறவருச்சித்தேத்திநன்கமைசிக்கஞ்சேர்த்துச்
சிவையொருபாகத்தெம்மான்றிருவருள்குறித்திருந்தான். (உ0)

இறையவனருளிச்செய்ததென்னவற்புதங்கொலென்று
மறைமுதலனைத்துங்காக்கும்வலியுளானவனேயென்று
நிறையவுள்ளுணர்ந்தும்பல்காற்கும்பநேர்பார்த்துமிவ்வா
றுறைதரலுற்றான்செய்யதாமரையும்பரானே. (உக)

கும்போற்பத்திப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ருஎங.

# கும்பேசுரப்படலம்.

——:o:——

பதியருணிகமாசமங்கண்முற்றுணர்ந்துபடர்மலக்குறும்பறமுருக்கித்
துதியருண்முழுகித்துளையுமாதவத்தீர்தன்னினர்யாவரோயெனினு
மதியருள்வழங்கிவான்கதிபுகுத்திவயங்குறக்கும்பகோணத்தோ
டதியருள்பொழிகும்பேசரொன்பெயருக்கமைந்தகாரணமெடுத்துரைப்பாம். (க)

அலரணைக்கிழவன்கயிலையெம்பெருமானருளியவண்ணமேயாற்றிப்
பலர்புகழ்மேருப்பருப்பதத்தமரும்பண்புகூர்நாள்களிலொருநா
ளுலர்தலில்கடலோரேழுமொன்றாகியொருபுறக்கடலொடுமேளாவி
மலர்தலையுலகமுழுவதுமறையவந்ததுபிரளயமாதோ. (உ)

பரவுநம்பெருமானுணையாலெழுந்தபடர்பெருவெள்ளமூடுதலு
முரவுவெங்காலுமுடனெழுந்தடங்காதுடற்றியதத்தகுநாளில்
விரவுசந்திரசூரியரிலையெங்கும்விராவிருதிணைகளுமில்லை
கரவருந்திக்குவிதிக்கிலைசகத்திற்கண்டதுநீர்மயமொன்றே. (ங)

ஆயதோர்பொழுதின்மேருவுமுழுகிற்றம்பிகைபாகனாரருளான்
மேயதென்றிசையேமிகுபுகழ்படைக்கவிளங்கியதென்றிசையுள்ளும்
பாயதண்டமிழ்நாடுவகையிற்றிளைப்பப்பகர்தமிழ்வழங்குநாட்டுள்ளு
மேயநீர்நாடுமிக்கிறுமாப்புமேவவக்கடமசைந்தன்றே. (௪)

உரைதருமாயாமயகடந்தருப்பையுறியொடுவெள்ளத்தின்மிதந்து
விரைதருகாற்றிற்றென்றிசைநோக்கிமென்மெலச்சென்றுகீழ்பாலிற்
றிரைதருகடன்மேற்றிசைநெடுந்தூரஞ்சென்றலைந்துழிதருகாலைப்
புரைதருதருப்பைமாவிலையாங்குப்பொருக்கெனவீழ்ந்தனவன்றே. (௫)

ஒன்றினைச்செய்கைசெய்திடாதொழிகையொழிவறவேறொன்றுசெய்கை
யென்றிவையுடையசிவபிரானருளினெறுமையானென்னெடுத்துரைக்கேன்
முன்றிகழ்சூதபத்திரமாங்குமுளைத்ததுவன்னியந்தருவாய்
நன்றிசைதருப்பையத்தகுநிழல்வாய்நலமலியிலிங்கமாகியதே. (௬)

மேயவண்டருப்பையிலிங்கமென்றொருபேர்விரவியததனையேழ்மடவா
ராயவர்சலிலரூபியராகியவாவுபுவளைந்துகாத்திருந்தார்
நேயமாரனையகுசையிலிங்கத்தைநெடியமாலாதிவானவர்கள்
பாயபன்முனிவர்மற்றையோர்போற்றிப்படர்ந்தனயாவையும்பெறுவார். (௭)

அன்னமாதலத்திற்கநிலவான்றிசையினறைதரப்படுமொருகுரோச
மென்னவோதெல்லையமுதகும்பஞ்சென்றிறுத்ததுசிவபிரானருளா
னன்னரித்தலமேசிறந்ததாலென்றுநவிலசரீரிவாக்கெழுந்த
துன்னருநறியமலர்மழையெங்குமொழிவறப்பொழிந்ததையன்றே. (௮)

வெள்ளியநீறுகண்மணிபுனைந்துவிரும்புமைந்தெழுத்துளங்குறிப்பார்
நள்ளியபிறப்பின்வறந்ததுவெள்ளநக்ககாந்தந்தொடரிரும்பிற்
றெள்ளியவமுதகுடந்தொடர்பிரமன்றிகழ்ந்ததுதங்குதேத்தடைந்து
வள்ளியவுவப்பிற்கண்கணீர்பொழியமனத்திறும்பூதுறநடித்தான். (௯)

மலர்மகனடித்துநின்றிடுகாலைவசுந்தரையிருந்தவக்கும்பத்
தலருறிகீழ்பாலொருசிவகோசமாயதுதெங்கினொண்பழம்போய்ப்
பலர்புகழெழுநாத்திசையிடைப்பதிந்துபரவுபல்செவ்விளநீர்நல்
குலர்தலிறெங்காகியததனடியேயுற்றவக்காய்ச்சிகைவடிவின். (௧௦)

ஒருசிவலிங்கமுளைத்ததாலதனையொள்ளியர்நாரிகேளப்பேர்த்
திருவளரிலிங்கமென்றுரைசெய்வார்சிறந்தபல்வில்வமுங்கீழ்பால்
வெருவரும்வில்வமரங்களாய்ப்பொலியவிழைந்துபாதாளலிங்கேசர்
மருவுறவாங்குமுளைத்தினிதெழுந்தார்வையமும்வானமுமுவப்ப. (௧௧)

குடத்துபவீதமிலாங்கலிமேல்பாற்குறித்தடைந்தொருகுறியாகி
யிடத்துமையவள்சேர்சூத்திரநாதனெனப்பொலிந்ததுகுடமன்றி
மடத்துநின்றகன்றதருப்பைமுற்பலவும்வயங்குவெவ்வேறுருக்கொண்டு
நடத்துநின்றொழியாப்பரசிவன்மகிழ்ந்துநயப்பனவாயினவம்மா. (௧௨)

மருவுமித்தகையவாயபற்பலவும்வயக்கியகும்பமாதலினாற்
குருமலியதனைக்கேத்திரபீசகும்பமென்றுரைப்பர்கற்றுணர்ந்தோர்
வெருவருமனையகடத்தினைக்காண்பான்வெள்ளியங்கயிலைவீற்றிருக்கும்
பொருவருமுமையோர்பாலுடைப்புராணபூரணனினிதெழுந்தருள்வான். (௧௩)

கருமுகில்விளர்க்குமேனியுமரையிற்காலுரிகாவிதோயுடையு
மருவுறவிசித்தகரியபட்டிகையுமயிலிறகமைதலைச்சாத்துந்
திருகியமுகரோமமுமொளிர்விபூதிசெறிதிருநெற்றியும்பகைவர்
பருவருஞ்சிலையுமாவமுந்தாங்கிப்பயிலொருகிராதனாய்ப்பொலிந்து. (௧௪)

பற்பலவாயகணங்களுங்கிராதப்படிவமாய்நீழலிற்றொடர
வற்புதமறையாகியதொடுதோல்பூண்டம்பிகைதிருமுகநோக்கிப்
பொற்பமைகருமமொன்றதுமுடிப்பான்போய்வெளிவருவலென்றுரைத்துத்
தற்பரசொரூபத்தனிமுதலெழுந்துதடவரைக்கயிலைநின்றிழிந்தான். (௧௫)

இந்திரநீலபருப்பதஞ்சைலமிலங்குகேதாரமொண்காசி
நந்திரவியமென்றுரைக்குமற்றுள்ளநகுதலமனைத்தையுநோக்கி
மந்திரவிதியின்மகம்புரிமறையோர்வளம்பொலிசோழநாடணைந்து
தந்திரமுழங்குந்திருவிடைமருதூர்த்தடங்குணக்கெல்லைவந்துற்றான். (௧௬)

திருவிடைமருதூர்க்குணதிசையடைந்தசிவபிரானாகியகிராதன்
பொருவருமனையகும்பமேற்றிசையிற்பொலிந்தமர்தருதிறநோக்கி
மருவருமினையகடத்தமுதெங்கும்வழிதரச்செய்துமென்றுரைத்தா
னொருவறவுடன்வந்தவர்களுளறக்காப்புஞற்றிடுசாத்தனதுணர்ந்து. (௧௭)

நினைத்தவாமுடித்தலழகிதேயுலகினிகழுபகாரமேயென்று
நனைத்தபூங்கடுக்கைக்கிராதனைவணங்கிநண்ணியதுணியிற்கிடந்த
முனைத்தவாவசியோர்பாணத்தையெடுத்தம்முதலவன்றிருக்கரத்துதவ
வனைத்துமாய்நிறைந்தவாண்டகையதனையங்கையின்வாங்கியீதுரைப்பான். ()

ஐயநீகொடுத்தகணையினாற்சிதையாதமுதமாயாமயகும்பஞ்
செய்யவேறொன்றுநம்புறத்தாவஞ்செறிவதுட்கொண்டிடல்வேண்டு
மெய்யநாந்தெரிதியென்றுவில்வணக்கியெறுழ்வலிநாண்குதைபூட்டித்
தையலோர்பாகத்தம்பிரானனையதனிக்கணைதொடுத்துவிட்டனனால். (௧௯)

விட்டவெங்கணைதற்கருதியோகமர்வார்மேற்செலுமாதர்கட்கணையில்
கட்டமொன்றியற்றாதொழிந்ததாலதனைக்கண்டசாத்தன்சமழ்ப்படைந்தான்
பட்டதோர்ந்தனையாலின்றுதொட்டேகபாணசாத்தாவெனும்பெயர்பூண்
டிட்டமுற்றிவணீயிருத்தியித்தலமுமெய்துகபாணவண்டுறைப்பேர். (௨௦)

என்றினிதருளியாவயினின்றுமெழுந்துமேற்றிசைச்சிறுதூரஞ்
சென்றுதன்மாயாமயகடமருந்தேத்தினுக்கடுத்தவீசானத்
தொன்றுறநின்றாங்கொருகணைதொடுத்தானுடனுமக்கணைவிரைந்தேகிக்
குன்றநேர்குடத்தின்மூக்கினைச்சிதைத்துக்குலைதரக்கவிழ்த்ததையன்றே. (௨௧)

குடத்தினின்றெழுந்தகோணமீப்போகிக்கோடைசாய்த்திடவழலவன்றிக்
கிடத்தியோசனையொன்றெய்திவீழ்ந்தாங்கோரிலிங்கமாய்முளைத்ததத்தான
மடத்தினின்றகன்றோர்வானமும்வழுத்தும்வண்குடவாயிலென்றுரைப்பா
ரிடத்துமெல்லியல்சேர்பரன்றிருப்பெயர்கோணேசனென்றுரைத்துலகுய்யும்.

நிறைகுடமூக்கின்வழிவழியமுதநிகழநாற்புறத்தினும்பரந்து
கறையறப்பெருகிநனைத்ததைங்குரோசங்கடுங்கணைதொடுத்தவவ்விடமு
மறைதருபாணபுரிப்பெயர்பூண்டதாவயினின்றெழுந்தளவின்
மறைமுடிபுணராவேட்டுவனமுதம்வழிபெருங்குடத்தெதிர்சென்றான். (௨௩)

செல்லுமப்பொழுதுகுடத்துநேர்கிழக்குந்தென்கிழக்குத்திசையகத்தும்
புல்லுநல்லமுதந்தேங்குமாறென்றும்புவியிடங்கொடுக்கெனநினைந்தான்
வெல்லும்வெங்கிராதனினைத்தலும்புடவிவிரிந்திடங்கொடுத்ததப்பொழுதே
யொல்லுநல்லமுதந்தேங்கியதவற்றிற்குரைப்பராலமுதவாவிப்பேர். (௨௪)

வாவியோரிரண்டுமமுதளாய்நிரம்பிவழிதரலுணர்ந்துளமகிழ்ந்து
தேவியோர்பாகமறைத்தொருகூனற்சிலையுடைக்கிராதனுயடைந்தோன்
பாவியானவனுமிவற்றிடைமூழ்கிற்பவித்திரமுறுவனென்றெண்ணி
யாவியாயுலகிற்கமைந்தவக்கிராதனடுத்தனனமுதகும்பத்தை. (௨௫)

சுதையளாய்நனைந்தவாலுகமனைத்துந்தூயகும்பத்தினுட்சேர்த்துத்
ததைதரப்பிடித்துக்கைவினைதெரிக்குந்தன்மையினிலிங்கமொன்றாக்கிப்
புதைதரவதனைப்பூசைசெய்ததனுட்புகுந்துவேடுருவத்தைமறைத்துச்
சிதைதராதுறமிக்கோங்கொளியாகித்திகழ்ந்தனன்மறைமுடிபுணரான். (௨௬)

தரைமுதலாகச்சாற்றுமெட்டுருவுந்தகைசெயைந்தொழிற்கும்வித்தாக
வுரைசெயுமலர்மேற்கிழவன்முன்னாகவுள்ளவொன்பான்றிருவுருவும்
புரைதவிர்மனுமுன்னாகவாறுருவும்பொருந்தியுமுருவிலாவொன்று
குரைகடலுலகேத்துருவொன்றுகொண்டோர்கும்பத்துத்தோன்றியதன்றே. ()

பறிநிகர்தளிர்க்கற்பகநறுமலர்ப்பூம்படலைவாண்முடிக்கடவுளருஞ்
செறிசுடர்க்குலிசத்தண்ணலுமலர்மேற்செம்மலுந்திருநெடுமாலு
மறிவதற்கரிதாயனைத்துமாயலதாயருமறையாகமமறையுங்
குறிகடந்தொளிருங்குறியிலாவொன்றோர்கும்பத்துத்தோன்றியதன்றே. (௨அ)

பூதமுங்கடந்துபொறிகளுங்கடந்துபுலன்களுங்கடந்துமேற்கரண
பேதமுங்கடந்துகலைமுதலாகப்பிறங்குமோரேழொடுவிந்து
நாதமுங்கடந்துவிளங்குமோங்கொளியிந்நானிலமுய்ந்திடமதமுங்
கோதமுங்கடந்தோருளங்கொளவிழைந்தோர்கும்பத்துத்தோன்றியதன்றே.()

ஓதருந்தனதுவயத்ததுதூயவுடம்பினதியல்புணர்வுளது
போதருமுற்றுமுணருவதியல்பேபுரைகெழுபாசநீங்கியது
தீதருமிகுபேரருளுளதளவாத்திறலுளதளவிலின்புளது
கோதறுமதுவென்றுரைசெயும்பொருளோர்கும்பத்துத்தோன்றியதன்றே. ()

மேடமூர்மதலைகடகமென்மலர்க்கைவிளங்கருஞ்சிங்கமென்மருங்கு
லாடகமகரக்குழைச்செவிமீனமடுவிழிபடைத்துலாங்கன்னி
மாடமர்தரவவிருச்சிகமிதுனமரூஉந்தனுவதுவெனவடியார்க்
கூடவோரிடபந்தோன்றிடும்பொருளோர்கும்பத்துத்தோன்றியதன்றே. (௩௧)

சாலநூல்புனைந்துநறும்புனனிரப்பித்தழைந்தெழுமாவிலைசெருகிச்
சீலமார்தெங்கம்பழந்தலையமைத்துச்செறிதருப்பையுமுடிந்திட்டுக்
காலமார்மலர்சாந்தறுவைமுற்பிறவுங்கைபுனைந்துலகர்வேண்டாது
கோலமார்பொருடன்பெருங்கருணையினோர்கும்பத்துத்தோன்றியதன்றே. ()

வழிசுவையமுதமொருகுடமூக்கின்வழிவழிந்தோரைந்துநூரோச
மழிவறநனைத்தகாரணமதனுலங்குரோசத்தலமாகிக்
கொழிசெய்கேத்திரத்தையாவருங்கும்பகோணமாத்தலமெனப்புகல்வர்
பழிதபுமுலகிற்காதிகாரணமாய்ப்பராபரன்குடத்துதித்தமையால். (௩௩)

ஆதிகும்பேசன்மலரவன்சிருட்டியாதியிற்குடத்துதித்தமையா
லாதிகும்பேசன்குடமுதிப்பதன்முன்னுகியருடத்துதித்தமையா
லாதிகும்பேசனமுதகும்பேசனமுதகும்பத்துவந்தமையா
லாதிகும்பேசன்பெயரினும்பலவென்றறைவர்கற்றுணர்ந்தமேதகையோர். ()

நிறைசுவையமுதத்துதித்தகாரணத்தானிகழமுதேசரொன்றுரைப்ப
ரறைதருநாமமின்னமும்பலவாமறைந்தநாமங்களுளொன்றைக்
கறைதபுபுனிதமுடையவராகிக்காலையிலுரைப்பவர்பெறும்பே
றிறைவனேயுணர்த்தவல்லவனன்றியெவரறிந்துணர்த்தவல்லவரோ. (௩௫)

மன்னியவேதாகமபுராணங்கண்மறுவறுசாத்திரமனைத்தும்
பன்னியகுடத்துநின்றுபல்லோரும்பயன்கொளவெளிவருதிறத்தான்
மின்னியவனையகேத்திரமுழுதும்வேசமாதிகண்மிகப்பெருத்துத்
துன்னியகும்பலிங்கநாதனையேதோத்திரஞ்செய்துவாழ்தருமால். (௩௬)

கும்பேசுரப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬0௧.

## மங்களநாயகிப்படலம்.

துருமங்களகம்பொலிமாமலர்தூவயாக
கருமங்களமின்றியெழுந்துகதிர்ப்பநாளுந்
தருமங்களவாவுதகைப்பெருங்கும்பகோணந்
திருமங்களநாயகிவந்ததிறந்தொகுப்பாம். (௧)

மேவார்புரமட்டபிரானொருவேடனாகிக்
காவார்கயிலைப்பெருவிண்டுகழிந்தபின்றை
மாவார்குழலம்பிகையன்னான்வரவுநோக்கி
யேவார்தொழுமக்கயிலாயமிருக்குநாளில். (௨)

மலர்மேலவனுதியவானவர்மாதவத்தர்
பலர்கூடிவிரைந்துபுகுந்துபணிந்துபோற்றி
வலர்சூழொருவேட்டுவனாகியவள்ளல்சென்று
பலர்கூறெருகும்பம்விராவியபண்புகூற. (௩)

ஓவாமகிழ்பூத்துவிலங்கலுயிர்த்தபாவை
தேவாதிதேவனமரும்மிடஞ்சேர்துமென்று
நாவாரவோதியெழுந்தாடொழினங்கைமார்க
ளாவாருமங்கணெழுந்தார்மறையார்ப்பெழுந்த. (௪)

குடையுங்கொடியுங்கவரித்தொகையுங்குலாவ
மிடையும்பலவாயகணங்கள்விராவிமொய்ப்ப
வடையும்பலதூரியவூழியளக்கரார்ப்ப
வுடையும்பிறவும்புனைந்தொள்ளியசூதர்பாட. (௫)

அரமாதர்கள்பூவுறைமாதர்களங்கைகூப்ப
வரமார்பொன்விமானமிவர்ந்துவளங்குலாவி
யுரமார்கயிலைக்கிரிநின்றுமுவந்துவந்தா
டிரமார்கருணைப்பெருவாழ்வுடைச்செல்வியம்மா. (௬)

தடியார்முகிழ்பொழில்சூழ்தருதானமுற்றுங்
கடியார்மலரோதிதெரிந்துகளிப்புமேவி
யடியார்களடைந்தெதிர்போற்றுதோறுக்கல்கி
மிடியாளையில்லாப்புனனாட்டுவிழைந்துவந்தாள். (எ)

தண்டாமரையோடைதழீஇப்பொலிசென்னிநாட்டைக்
கண்டாண்மிகவுள்ளமகிழ்ந்துசுருஞ்சுரும்ப
ருண்டார்பொழில்சூழிடைமாமருதூரையுற்றுக்
கொண்டாள்வலமின்னமுதூறைங்குரோசவெல்லை. (அ)

வலங்கொண்டுவிமானமிழிந்துபல்லோரும்வாழ்த்த
நலங்கொண்டுவிளங்குகும்பேசர்முனண்ணுவாவிச்
சலங்கொண்டுமேனிநனைத்தேயமுறங்குதிக்கிற்
குலங்கொண்டுமன்னுமொருவாவிகுடைந்துபோந்து. (கூ)

திருமாமறைநாடியளப்பருந்தேவைமிக்க
பெருமாதவருள்ளொளியாம்பெருவாழ்வைநாளு
முருமாறிநாயேனுழலாதருளொன்றைநேமி
யொருமாலுணராக்குடத்தேனையுவந்துகண்டாள். (க0)

நேரோபணிந்தஞ்சலிசெய்துநிலாவுமன்பின்
வாரோயுமுலைக்கொடிநிற்றலும்வள்ளனோக்கிக்
காரோபொருவுங்குழலாய்கயிலாயநின்றிவ்
வூரோய்தரவென்றுவந்தாயென்றுசாவலோடும். (கக)

இன்றேயடியேனிவணெய்தினனென்றுகூறிக்
குன்றேய்முலையாடொழுதாளருள்கொண்டுநோக்கி
நன்றேநமக்குவடபாலிடங்கொண்டுநாளு
நின்றேதொழுவார்க்கருளென்றுநிகழ்த்தினனே. (கஉ)

இறைவன்மொழிபுட்கொடிடப்புறமெய்தியங்க
ணிறைபேரொளிச்சாரவிமானநிலாவவுள்ளான்
மறையாதிகளோர்வருமந்திரபீடமேலாற்
குறைதீர்தரமேவினள்வாழ்த்தொலிக்கொண்டலார்ப்ப. (கஙு)

திருமங்களமேதொழுவார்க்கருள்செய்யுமாண்பா
லொருமங்களநாயகியென்றொருநாமம்பூண்டு
கருமங்களமின்றியற்றுநர்கண்ணுவோர்வாய்ப்
பெருமங்களமாத்துதிப்போர்க்கருட்பேறளிக்கும். (கச)

கயிலாயமுதற்பலதானக்கலைகளெல்லா
மெயிலார்குடமூக்குளடங்கியிருத்தல்போல
வெயிலார்பலபீடம்விராயகலைகளெல்லா
மயிலாரியன்மங்களபீடமலிந்துவைகும். (கரு)

அக்காரணத்தாலதுமந்திரபீடமாய
தெக்காரணமுங்கடந்தாளங்கிலங்குநீரா
னக்காரணமந்திரபீடநலத்தளென்பார்
மைக்காரணவப்பொலிமைமிசவாழ்க்கையீரோ. (கசு)

பலநோயும்வணங்கிடுவார்க்கறப்பாற்றுநீராற்
பலநோயறுக்கும்பணையென்றுபகர்வர்மேலோர்
நலமார்தரவெண்ணியயாவுநயந்தளித்து
நலமார்முழுதுந்தருவாளெனுநாமம்பூண்டாள். (௧௭)

ஒருகும்பமுதித்தவர்மங்கலையோடுகூடிப்
பெருகும்பலமார்குடமூக்கிற்பிறங்குநீரா
லுருகும்பலவானவர்மாதவருள்ளிட்டோரு
மிருகும்பமுலைக்கொடியாரொடுமேத்திவாழ்வார். (௧௮)

திருமல்குகும்பத்துதித்தானொருதேவதேவன்
குருமல்குபீடத்தமர்ந்தாளொருகுன்றுயிர்த்தாள்
கருமல்குபெரும்புவனங்குறைகாண்பதில்லென்
றுருமல்குவேதாமுதலோர்களுமுள்ளுவந்தார். (௧௯)

மதிசூடியநாதனுமங்கலைமாதுமந்தப்
பதிமேவியமர்ந்துவளந்தருபண்புதேர்ந்தே
நதிமாமதமாமுகன்முன்பவணண்ணிவைகி
யதிகாதல்செயாதிவிநாயகனாயினனே. (௨௦)

அம்மாதலத்துக்குணவாவியையன்றியின்னு
நம்மாசறுக்குமழலோன்றிசைநண்ணும்வாவி
மும்மாதலத்துமிணையில்லதுமுற்றுமோதற்
கெம்மாலறுமோதிருமங்கலையீசனல்லால். (௨௧)

மங்களநாயகிப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௩௦.

## நகர்காண்படலம்.

தெண்ணீர்வளங்கூர்குடமூக்கிற்செய்யசடிலக்கும்பேசர்
பண்ணீர்மொழிமங்கலையொடுவிண்பரிந்துபோற்றவமர்தருநா
ளுண்ணீர்விதிமற்றவரருளாலொழிந்தவனைத்துஞ்சிருட்டித்தாங்
கெண்ணீர்நகர்கண்டாலயமுமெழிலிற்புனைந்ததிறம்புகல்வாம். (௧)

ஒழிந்தபலவுங்கும்பேசருதவுபீசங்கைக்கொண்டு
சழிந்தசிறப்பிற்பண்டுபோற்கண்டமலர்மேலவன்மீட்டும்
பொழிந்தவனப்பிற்றிருநகரும்புகழ்சாறளியுமினிதியற்ற
மொழிந்தபலவானவர்களொடுமுனியாதுசாவியிதுசெய்வான். (௨)

சொற்றவனைத்துஞ்சொற்றதன்மேற்றலங்கவினிதினுண்டாக்கக்
கற்றவலிமேம்படுவிசுவகன்மன்வருமாறுளங்குறித்தான்
மற்றதுணர்ந்தப்பொழுதுகடிவந்துபணிந்துவானமயன்
பொற்றமலரோயென்வரவுன்புந்திகுறித்ததுனாயென்றான். (௩)

வாராய்மயனேவிண்ணகரும்வளத்திற்சிறியோமெனச்சமழ்ப்ப
வாராய்பவருமிக்கிறும்பூதடையவைந்துகுரோசத்திற்
பாராய்தருமாநகர்கண்டுபரவுமமுதகடேசனொடும்
பேராயிரமுள்ளவற்குமற்றைப்பிறர்க்குந்தளிசெய்திடுகென்றான். (௪)

என்றபொழுதேவிசுவகன்மனிண்டைமலரோன்பதம்பணிந்து
மன்றவுவந்துநன்றென்றுவையம்புகழ்தும்பேசரொதி
ரொன்றவயங்குவாவியினுமொளிர்தீத்திசைநல்வாவியினுங்
குன்றநிகருங்கொடுமறமுங்குன்றவினிதுபடிந்தெழுந்து. (௫)

நீறுபுனைந்துகண்மணியுநிலவவணிந்தைந்தெழுத்தெண்ணி
நாறுமதமாமுகத்தாதிக்களிற்றைநயந்துபணிந்தேத்தி
யேறுகொடியேற்றியகும்பவிலிங்கரிருதாள்பணிந்தவர்மெய்க்
கூறுகவர்மங்களைபதமுங்கும்பிட்டேத்தித்தொழில்செல்வான். (௬)

ஆழிவரையினமர்மதிலேயண்டமளக்குங்கோபுரமே
வாழியடுக்குமண்டபமேவசந்தவிழாக்கொண்மண்டபமே
யூழிபலகண்டிறுமாப்புற்றெளிராயிரக்கான்மண்டபமே
சூழிமதமாவிணைந்தபடிசுடர்நூற்றுக்கான்மண்டபமே. (௭)

ஆதிமதமால்களிற்றுமுகத்தண்ணலமருஞ்சினகரமே
சோதிவயங்குஞ்சுடரிலைவேல்சுமக்குங்கடவுளமர்தளியே
யோதியுணர்ந்தநால்வரொடுமுறையாசிரியன்கோயிலே
காதியமரருடனெய்த்தோர்கவர்ந்தபெருமானமரிடமே. (௮)

கதிக்குங்கருணைச்சந்திரசேகரர்தாம்விரும்புநிகேதனமே
துதிக்குமவருக்கினிதருளுஞ்சோமாக்கந்தர்மந்திரமே
மதிக்குமுலகம்போற்றெடுக்கமகிழ்ந்துநடிப்பார்பொற்பொதுவே
வதிக்கும்வலிசான்மற்றையாவரணவானோரமர்தளியே. (௯)

பொருவுதவிர்நங்கும்பேசர்பொருப்பில்வருமங்களவல்லி
மருவுகருப்பகிரகமேவயங்குமத்தமண்டபமே
வெருவுதவிர்மாமண்டபமேவிளங்குநிருத்தமண்டபமே
யொருவுருதபல்விழாவுஞற்றும்பற்பன்மண்டபமே. (௧௦)

யாகசாலைமடைப்பள்ளியெழில்செயூர்திவைக்குமிட
மாகவுலகமெடுத்தேத்தும்வலிசானந்தியமருமிடம்
பாகமருவுபலிபீடம்பலவாம்பொருள்கள்செறிக்குமறை
மோகமிகும்பேரிருவாவிமுற்றிவிளங்குசோபானம். (௧௧)

வேறுவேறுசருவூலமிக்கசுவையன்னீரோ
யூறுகூபமுதலாகவுளசெய்பலவுமினிதமைத்து
நாறுகடுக்கைச்சடைமோலிநாகேசுரராதியர்பலர்க்கு
மேறுசிறப்பினிவ்வாறேயிலங்குமெழிலாலயமமைத்து. (௧௨)

நகரமினிதுசிருட்டிசெயநாடியமுதகடத்துதித்த
வகரமுதல்வன்பதமீட்டுமகத்திற்கருதியருள்வாங்கிச்
சிகரமணிமாளிகைமாடஞ்செம்பொன்மணிசெய்குன்றங்கள்
பகரவரியநிலாமுற்றம்பரவுமெழில்செய்குட்டிமங்கள். (௧௩)

ஆழிவரைநேர்பேரரணமாழியனையபெருங்கிடங்கு
சூழிமதவாரணவாரிதுரங்கஞ்செறியுமந்திரங்கள்
பாழிநெடியதேருறையுள்படைகள்பலவுஞ்செறிசாலை
வாழிமறையோர்முதனான்குவருணத்தவர்கள்பயின்மறுகு. (௧௪)

ஓவமலிபீடிகைவீதியோங்குசுவர்க்கம்புரைதெற்றி
தேவதேவனெழுந்தருளச்சிறந்தவிழாக்கொடெருவீதி
பாவராகதாளமொடுபாவையனையாராடரங்கு
கூவம்வாவிபூவோடைகுளமாமன்றந்திகழ்பொதியில். (௧௫)

கவலைசதுக்கம்பலவாயகாமர்மலிசாளரமாட
முவலைபடுபல்சமயநெறியொழித்தசிவயோகியரிருக்கை
சவலையிலராயாருமுணத்தக்கமடங்கணறும்பனிநீர்த்
திவலைசிதறும்புனற்பந்தர்சிறந்தகழகமுதற்பலவும். (௧௬)

வையமுழுதுமிகவியப்பச்சிற்பவிதிவாய்த்திடவியற்றிச்
செய்யமலர்மேலவற்குரைத்தான்றேவரொடுமற்றவனெழுந்து
தையலொருபாதியன்மேயதளிமுற்பலவுமுறநோக்கி
யையமகிழ்ந்துதெய்வமயற்களவிலுவகைசெய்தனனே. (௧௭)

தண்டாமரைமேல்வீற்றிருக்குஞ்சதுமாமுகன்பூசனையாதி
கண்டாதரவிற்றெழுச்சோமாக்கந்தர்நடனஞ்செயவல்லார்
வண்டார்கடுக்கைபுனைசடிலமதமாமுகத்தார்வடிவேல்கொண்
டண்டாருயிரைச்சவட்டியருளாறுமுகத்துக்குமரனார். (௧௮)

கதிக்குமருள்கூர்சந்திரசேகரனார்முதற்பல்வானவருந்
துதிக்கும்படியேயுருக்கொண்டுதோன்றப்புரிந்தானிஃதுணர்ந்து
மதிக்குமயன்பல்வாகனமுமன்னுபலபொற்பாத்திரமுந்
திதிக்கும்பரிவட்டமும்விருதுந்திருப்பொற்கலமும்பலசெய்தான். (௧௯)

எல்லாமமைந்ததிறமுணர்ந்தேயிருடீர்நிகமாகமமுணர்ந்த
வல்லாராதிசைவமுனிவரரைப்போற்றிமலர்மேலா
னல்லார்வியக்குநன்னளினன்மங்கலங்களெழுந்தார்ப்ப
வில்லார்கும்பப்புனலாட்டுவித்தான்கும்பலிங்கருக்கே. (௨௦)

அளவாவருள்கூர்மங்களநாயகிக்குமவ்வாறுட்டுவித்து
வளவாதரவினகம்படித்தொண்டுரியார்மலியும்படிவயக்கிப்
பிளவாவிதியின்மூன்றுறுப்பும்பிறங்கப்பெருஞ்செல்வமுநாளு
முளவாகக்கண்டுண்மகிழ்ந்தானுலகமுழுதும்படைத்தபிரான். (௨௧)

நகர்காண்படலம் முற்றிற்று.

ஆகு திருவிருத்தம்-௬௫௧.

---

## பிரமன்பூசைபுரிபடலம்.

பொங்குபெருங்குடமூக்குநகர்புரிந்துகும்பேசர்பொலிந்துநாளுந்
தங்குதளிமுதற்பலவுஞ்சமைத்தபிடேகமும்புரிந்துதழையுநாளிற்
கொங்குமலிநறுங்கமலப்பொகுட்டணைவீற்றிருந்துலகங்குறித்துண்டாக்கு
மங்குதலினன்முகத்தோனருவன்பிற்பூசைபுரிவண்ணஞ்சொல்வாம். (௧)

கோலமார்மணிமாடமாளிகையாவணவீதிக்கும்பகோணச்
சூலமார்திருக்கரத்துக்கும்பேசர்பூசைசெயத்தொடங்காநிற்குங்
காலமார்பெரும்பயன்செய்மதிரும்பமதியென்றுகருத்துட்கொண்டு
சீலமாரம்மதிப்பூருவபக்கத்துறுபரிமாச்சென்னிநாளில். (௨)

மாயவனுந்தியினுதித்தநான்முகத்தோன்வானவரால்வளமார்வான
மேயசுதையாவின்பால்கற்பகப்பூநறுங்கங்கைவிளக்கஞ்சான்ற
பாயசுடர்மணிப்பணிபீதாம்பரமுன்வரவழைத்துப்பலவாந்தேயத்
தாயகனிநறுந்தீர்த்தமுதற்பிறவுமுனிவரரா லழைத்துக்கொண்டு. (ங)

மன்னியகும்பேசரொதிர்வயங்கமுதவாவிவிதிவழிநீராடி
முன்னியதீத்திசையமுதவாவியினும்படிந்தெழுந்துமுழுவேதத்து
மின்னியவெண்ணீற்றுத்தூளனந்திரிபுண்டரந்தரித்துவெய்யதாகப்
பன்னியயாவையுந்தவிர்க்குங்கண்மணிபூண்டைந்தெழுத்தும்பரிவினெண்ணி.

மங்கலதூரியமுழங்கவானவர்மாமுனிவரர்கண்மருங்குசூழ
வங்கலர்சாமரைதுவசமொலியல்குடையாலவட்டமனைத்துமொய்ப்பக்
கொங்கலர்தாமரைமலர்க்கைசென்னியின்மேற்குவித்தெழுந்துகும்பநாதர்
பொங்கலர்மாமணிக்கோயில்புகுந்துவலங்கொடுதிருமுன்பொலியச்சார்ந்து. ()

மறையவிதித்துந்தனக்குரியகாலமெனுங்கதிருச்சிவயங்குங்காலங்
குறைவில்பெருவிருப்பினொருகும்பேசரிடத்தநுஞைகுலவப்பெற்று
நிறைபுண்ணியாகவாசனஞ்செய்துகௌவியங்கணிகழப்பூசித்
துறைதருமைந்தமிர்தமும்பூசித்துநவகும்பநிறீஇயொருங்குபோற்றி. (சு)

மன்னுதழற்காரியமுஞ்செய்தெழுந்துதுவாரதேவரைப்பூசித்துப்
புன்னுகருக்கிரகநுழைந்தாங்குமந்தாகினிபூசைபண்ணிப்பின்னர்
முன்னுபுகழ்ப்பூதசுத்திதானசுத்திமனுச்சுத்திமுயங்கிநாளு
மின்னுதிரவியசுத்தியிலிங்கசுத்திநூலுரைத்தவிதியினாற்றி. (எ)

பத்திமிகப்பாத்தியாசமனவருக்கியநிறீஇப்பகராதார
சத்திமுதற்சத்தியின்மண்டலமளவுமருச்சித்துத்தபுதலில்லாச்
சுத்தியினுவாகனமுந்தாபனமுமுறப்புரிந்துதூயதாய
புத்தியினையாறதன்மேலெட்டங்கநியாசமெனும்பூசையாற்றி. (அ)

ஆயசந்நிதானமொடுசந்நிரோதனமவகுண்டனமுமாற்றி
மேயசெழுந்தேனுமுதற்பலவாயமுத்திரையும்விருப்பினல்கிப்
பாயபுகழ்ப்பாத்தியாசமனவருக்கியங்கொடுத்துப்படைத்தல்வல்லான்
றீயவைமாய்தரமுகிலிற்பணைமுழங்கவபிடேகஞ்செயலுற்றானே. (கூ)

அருவிரைதோய்தயிலமாநெல்லிமஞ்சள்கௌவியமைந்தமிர்தநெய்பா
றருதயிர்தேனயிர்வாழைக்கனிவருக்கைக்கனிசூதந்தந்தசாறு
வருகழைமற்றிலிகுசநன்னரந்தமாதுளைதமரம்வடித்தசாறு
பெருகிளநீர்பதஞ்சந்துதபனமந்தாகினிமுறையிற்பிறங்கவாட்டி. (க0)

நாடுகூவிளக்குழம்புநக்கசகத்திரதாரைநயச்சிருங்கம்
பாடுவலம்புரிச்சங்கமிவைமுறையினெடுத்தாட்டிப்பரிந்தாட்டுந்தோ
றூடுதலில்சுத்தநீராட்டினிவேதனமாதியுவப்பச்செய்து
நீடுதிருவொற்றாடையிட்டுயர்பொற்பரிவட்டநிரம்பச்சாத்தி. (கக)

தூயவுபவீதமெடுத்தணிந்துமணிமுடிகுழைபொற்சுடர்க்கேயூர
மாயமணிக்கடகமதாணிகளாழியரைநாண்முன்னலங்கச்சாத்தி
மேயதிருநீறுகந்தமணிந்துநறுமலர்மாலைவிதங்களெல்லாம்
பாயசிறப்புறப்புனைந்துநறுந்தூபமொளிர்தீபம்பண்ணிப்பின்னர். (கஉ)

தளவரும்பிற்பொலிசுத்தோதனம்பருப்புப்பொங்கல்சூளஞ்சார்ந்தசொன்றி
வளமருவுபாலடிசில்புளியன்னந்திலமூரன்மரிசுப்பொம்மல்
கொளவிரும்புந்ததிமடைநெய்யொழுகயிர்நன்மிதவைநறுங்குய்விராய
களமில்பலகருனைசெழும்பாகரிலட்டுகந்தோசைகமழும்பிட்டு. (கூ)

மாடவடைமோதகமபூபமிளநீர்குளநீர்மதுரமேன்மேற்
கூடவமைதருகனிநீரிலிகுசச்சாறளாய்த்தெளிந்தகுளிர்மோர்மற்றும்
பாடமைசுத்தோதகமுற்பற்பலவுமோவ்வொன்றாய்ப்பரிந்துநல்கி
நீடவருக்கியங்கொடுத்துத்தாம்பூலமுகவாசநிரம்பநல்கி. (கச)

ஓதுநறுந்தூபமளித்தொளிரடுக்குத்தீபமுதலுனையாநின்ற
கோதுதவிர்பற்பலவாந்தீபவாராதனைகள்குலவச்செய்து
போதுமலிதரத்தூய்நீராஞ்சனஞ்செய்தொளிமிகுகற்பூரஞ்செய்து
காதுவினைதெறும்பருத்திவித்துவேப்பிலைசுழற்றிக்கவினப்போக்கி. (கரு)

வெள்ளியநீறணிந்துதருப்பணங்கவிகைகவரிமிளிராலவட்டம்
வள்ளியவிசிறிபிறங்கவயக்கிநறுவிரைமலரக்கதையுஞ்சாத்தி
யொள்ளியநல்லருக்கியமுங்கொடுத்துமலரொடுத்தெழுத்தைந்துள்ளிச்சாத்தித்
தெள்ளியவன்புறவெளிவந்தட்டாங்கமுறப்பணிந்துதியானித்தானே. (கசு)

பிரமன்பூசைபுரிபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சுசுஎ.

---

## பிரமன்றுதிபுரிபடலம்.

:o:

கொற்றமார்கும்பகோணத்துக்கும்பஞ்சார்
பொற்றவீசனைப்பூசனையாற்றுபு
கற்றவேதன்கனிவிற்பெருந்துதி
சொற்றவாறுதொகுத்துரையாடுவாம். (க)

வேறு.

எவனருள்வலியாலின்டைமெல்லணையானெவ்வுலகங்களும்படைப்பே
னெவனருள்வலியாலிணர்த்துழாய்முடியானெவ்வுலகங்களும்புரப்பா
னெவனருள்வலியாலுருத்திரப்பெருமானெவ்வுலகங்களுமழிப்பா
னவனொருகுடமூக்கமர்ந்தகும்பேசனவன்மலரடித்துணைதொழுவேன். (உ)

யாவனாணையினன்மதிகதிரியங்கும்யாவையுமிருந்தழறகிக்கும்
யாவனாணையினற்கனாகடவாமலிருந்திரைப்பெருங்கடலடங்கும்
யாவனாணையினலந்தரத்தகிலமெண்ணிலநிலைபெறுமந்தத்
தேவனைகுடமூக்கமர்ந்தவனந்தச்சிவபிரான்றிருவடிதொழுவேன். (ங)

எவனருண்மலகேவலத்துயிர்த்தரமோர்ந்தியம்புடலாதியகொடுக்கு
மெவனருளபுத்திபுத்தியாலுயிர்கட்கெவ்வகையறங்களும்புணர்க்கு
மெவனருண்மலமாதியவொழித்துயிர்கட்கின்பவீடெனுஞ்சுகமளிக்கு
மவனருள்குடமூக்கமர்ந்தகும்பேசனவன்மலரடித்துணைதொழுவேன். (ச)

எவனடிப்பணியாலிந்திரபதமுனெய்தரும்பதமெலாமெய்து
மெவனருணமமொன்றுரைசெய்யினெண்ணில்பாதகங்களுமிரியு
மெவனுருவுளத்துக்கருதின்மும்மலமுமிரிதரவின்பவீடெய்து
மவனொருகுடமூக்கமர்பரசிவன்மற்றவனடித்துணைமலர்தொழுவேன். (ரு)

எவன்மறைமுழுதுமேத்திடப்படுவானெவன்மறைமுடியில்வீற்றிருப்பா
னெவன்மறைமுடிவுமுணர்தரப்படாதானெவனுயிர்க்குயிரெனப்படுவா
னெவன்வெளிமுதலைம்பூதமுமாகியியம்பியவல்லவுமாவா
னவனொருகுடமூக்கமர்பரசிவன்மற்றவனடித்துணைமலர்தொழுவேன். (சு)

மறையெலாமெவற்குவந்தியராகுமாமணிப்பீடிகையாகு
மறைதருதிருவாய்வார்த்தைகளாகுமலங்குளைப்புரவிகளாகுங்
குறையறப்புனையுங்கோவணமாகுங்குலவுபொற்பாதுகையாகு
நிறையுடையவனுக்கடிமையானவனேநிலவுமிக்கும்பலிங்கேசன். (எ)

எங்கணுமணிமாமுடிபுனைமுடிகளெங்கணுமறைத்திருவாய்க
ளெங்கணும்விளங்குகுழையுடைச்செவிகளெங்கணுமருள்பொழிவிழிக
ளெங்கணுமுகங்களெங்கணுங்கரங்களெங்கணுங்கால்களாயொளிரு
மங்கணனடிமையானவன்குடமூக்கமர்தருகும்பலிங்ககேசன். (அ)

எவரெவர்பிறவிப்பிணிப்பறல்கருதியெவ்வெவ்வானவரடிதொழுவா
ரவரவர்குறிப்பினவ்வவ்வானவராயணுகுபுதகவருள்புரிந்தங்
கவரவர்கருத்திற்களக்கொணுஞ்கிக்கரிசறவெங்கணுநிறைந்தோன்
றவர்புகழ்தருகும்பேசனச்சாமிதாண்மலர்த்துணைபழிச்சிடுவேன். (௯)

இருள்படுமலகேவலத்தமருயிர்கட்கிணர்படுபாதவத்தழலாய்ப்
பொருள்படுசகலத்தமர்தருமுயிர்க்குப்பொலிதருசிலையகத்தழலா
யருள்படுசுத்தத்தமர்தருமுயிர்கட்கயத்தழலாயமர்தருவோன்
றெருள்படுகும்பலிங்கநாயகனச்சிவபிரானடிக்கன்புசெய்வேன். (௧0)

இருக்குநல்லெசுருசாமமென்றவற்றுளியனடுவேதமேழ்காண்டம்
பெருக்குமற்றவற்றுணடுவெனப்பேசப்பிறங்குநாலாவதுகாண்டந்
தருக்குமற்றஃதேழ்பாகமேயவற்றுட்டயங்குநான்கெனுநடுப்பாக
முருக்குமற்றதனுணடுப்பொலிமனுவிற்குரியகும்பேசனைத்தொழுவேன். (௧௧)

பரவியகாலாக்கினியுருத்திரஞ்சாபாலமுற்பலவுபநிடதம்
விரவியபொடிசேர்மேனியன்விசுவன்விசுவசேவியனரிகேச
னுரவியல்புட்டிவருத்தனன்சம்புவுருத்திரனீசன்மாதேவன்
வரவியலின்னும்பலதிருநாமமரீஇயகும்பேசனைத்தொழுவேன். (௧௨)

வலிகெழுபுவியிற்பிறப்பறல்கருதிவழுத்திடும்பெருந்துணிபுடையீர்
கலிகெழுமிவனைவழுத்துமின்வழுத்திற்கருதியதடைவதுதேற்ற
மொலிகெழுமெதனுலெனிற்பிறப்பிலியென்றுரைபெயரோகரியென்று
பொலிகெழுமறைசொல்கும்பலிங்கேசபூரணன்றிருவடிதொழுவேன். (௧௩)

கூற்றுவனியற்றுங்கொடுந்துயர்கடக்கக்குறித்துளீரிவனடிப்பணியே
யாற்றுமினாற்றினதுகடந்திடலாமறைதருமேதுவென்னென்னின்
மாற்றருங்காலகாலனென்றொருபேர்வழங்குவதேகரியென்று
போற்றருமறைசொல்கும்பலிங்கேசபூரணன்றிருவடிதொழுவேன். (௧௪)

கருவிழிச்செவ்வாய்மடந்தையர்மயக்கங்கடந்திடவழிபடுந்தகையீர்
பொருவருமிவனைவழுத்துமின்வழுத்திற்போக்கறவடைவதுதேற்றம்
வெருவில்காமாரியெனும்பெயர்கரியாய்விரித்துரைத்திடுமெனவெல்லாச்
சுருதியும்புகலுங்கும்பலிங்கேசசுந்தரன்றிருவடிதொழுவேன். (௧௫)

கூடியகுற்றமனைத்தையுங்குணமாக்கொண்டினிதாண்டிடவல்லோ
னுடியவெவனென்றுணர்தருந்தகையீர்நண்ணுமிவ்வொருவனேகொடுமை
நீடியவிடத்தையமுதமாக்கொளலினீலகண்டாயவென்றெல்லாம்
பாடியகும்பலிங்கநாயகன்பொற்பாததாமரைபழிச்சிடுவேன். (கசு)

மிகமெலிந்தடைவார்தமைப்புரந்தருளும்வித்தகன்யாரெனத்தேர்வீர்
தகவுடையிவனேயுண்மைகொலென்னிற்சந்திரசேகரனெனும்பேர்
நகவுரைத்திடுமற்றிதனின்மேலொன்றுநவிறலென்னென்றுபன்மறையு
மகனமர்ந்துரைக்குங்கும்பலிங்கேசனடிமலர்முடியுறப்புனைவேன். (கஎ)

பாயபேருலகின்விடயவாதனையிற்பரவியமனத்தினைச்சுருக்கி
நேயமோடாள்வானெவனெனவுணர்வீர்நிகழுமிவ்வொருவனேவிளக்க
மாயவோர்கங்காதரனெனுநாமமான்றசான்றென்றுநூலுரைக்க
மேயகும்பேசவித்தகன்கமலமெல்லடித்துணைபழிச்சிடுவேன். (கஅ)

ஒழிவறவாணும்பெண்ணுமாய்வழங்குமுலககாரணனெவனென்று
பழிதபவுணரும்பண்பினீரிவனேபகர்ந்ததெவ்வேதுவாலென்னி
லிழிவறுகருணையத்தநாரீசனெனும்பெயர்கரியெனமறைகண்
மொழிதருகும்பலிங்கநாயகன்மென்முண்டகப்பதம்பழிச்சிடுவேன். (க௯)

உயிர்வியசனந்தீர்த்தருளவல்லவனுமுறுசுகநல்கவல்லவனுஞ்
செயிரறநாடிலெவனெனத்தெளிவீர்செப்புமிவ்வொருவனேயென்றும்
வயவுருத்திரன்சங்கரனெனுநாமமன்றில்வந்திடுங்கரிக்கென்று
நயமறைபுகலுங்கும்பலிங்கேசநாயகன்றிருவடிதொழுவேன். (உ0)

எண்ணில்வானவருட்பெரியவானவன்மற்றெவனெனத்தெரிதருங்கருத்தீர்
நண்ணிலாதரிக்குமினையனேயெதனுனட்டியதென்றுநம்முளத்துக்
கண்ணின்மாதேவனெனும்பெயரொன்றேகரதலாமலகமாமென்று
பண்ணிலாமறைசொல்கும்பலிங்கேசப்பண்ணவன்றிருவடிதொழுவேன். (உக)

ஒருபிரணவத்திற்குரிப்பொருளாயவும்பன்மற்றெவனெனவுணர்வீர்
பெருமையிற்பொலியுமினையனேயன்றிப்பிறரலர்பிரணவப்பூவா
மருமலிகடுக்கைக்குரியவனென்றுவழங்குவதேபெருஞ்சான்றென்
றருமறையுரைக்குங்கும்பலிங்கேசனடித்துணைமலர்முடிக்கணிவேன். (உஉ)

எஞ்சியமுதல்வன்யாவனென்றுணர்வீரெண்ணிலாவண்டங்களனைத்துந்
துஞ்சியநீற்றியொருவனுய்நின்றதோன்றலேயெங்ஙனமென்னில்
விஞ்சியவருள்கூர்சருவசங்காரவித்தகனெனமறைமுரணே
ரஞ்சியவுரைக்குங்கும்பலிங்கேசனடிமலருளங்குறித்திடுவேன். (உ௩)

ஒருமைசெய்காயத்திரிப்பொருள்யாரொன்றுன்னுவீருரைசெயுமிவனே
யிருமைசெய்தேசிற்பொலிதருபற்கனெனும்பெயர்கோசமோதுவதாற்
கருமைசெய்மலந்தீர்மறையவர்வணங்குங்கடவுளுமனையவனேயென்
றருமைசெய்மறைசொல்கும்பலிங்கேசனடிமலர்முடிமிசைப்புனைவேன். (உச)

மன்னியபுருடசூத்தமென்றுரைக்குமந்திரத்தாதியந்தத்து
மின்னியவீசானப்பெயருறலால்விரும்பமற்றிடையுளவனைத்து
முன்னியவுன்னுமங்களேயென்றுமுற்றியவலியின்மீமாஞ்சை
பன்னியவொளிருங்கும்பலிங்கேசன்பாததாமரைபழிச்சிடுவேன். (உரு)

நண்ணியகூற்றங்குமைத்ததாளடியார்நலமுறச்சென்னிமேல்வைத்து
மெண்ணியபுரமூன்றடுநகையுமைபாளெழிற்புரங்குளிர்தரச்செய்து
மண்ணியவெனதுதலைதடிகரம்வந்தடுத்தவருறுபயந்தவிர்த்தும்
புண்ணியமருவப்பொலிந்தகும்பேசன்பொனனடித்தாமரைபோற்றி. (உகூ)

மீதலமுடியாவெளியெலாமுருவாவிளங்குமுச்சுடர்களுங்கண்ணுப்
பாதலமடியாத்திசையெலாம்புயமாப்பகர்தருசொல்லெலாமறையாப்
பூதலமரையாநெடுவெளியுயிர்ப்பாப்பொருந்தியபிறவுமற்றையவாக்
காதலங்கருணைகதித்தகும்பேசக்கடவுளையென்றுநான்மறவேன். (உஎ)

மறைச்சிலம்படியுந்தரக்கதளுடுத்துவரியரவசைத்திடுமரையு
நறைத்தடங்கடுக்கைமார்புமாமேருநண்ணியவரிசிலைத்தோளு
முறைத்தவண்கருணைமுகமுமாமறைமுற்றுரைத்தசெவ்வாயுமெக்கரிசுங்
குறைத்தவிர்வளமைகுலாங்குடமூக்குங்கொண்டவன்றிருவடிபோற்றி. (உஅ)

பிரமன்றுதிபுரிபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சுகூ௫.

## பிரமன்வரம்பெறுபடலம்.

போற்றுமறைமுழுதுணர்ந்தபுத்தேள்செய்பூசனைக்குஞ்
சாற்றுமறைமுடிவென்னுந்தத்துவமாகியதுதிக்கு
மேற்றுவருதம்பேசரிசைப்பரியமகிழ்பூத்தே
யாற்றுவரங்கேட்டபடியனைத்துமுதவியதுரைப்பாம். (௧)

உள்ளமழுவிடுமெழுகினுருகவிழிப்புனல்வார்ந்து
வெள்ளமெனப்பெருக்கெடுப்பமெய்யுரோமமும்பொடிப்பப்
பள்ளமடைப்பெரும்புனலினன்புபாய்தரப்பிரமன்
கள்ளமறக்குறித்திருக்குங்காலைவெளிப்படுமுதல்வன். (உ)

குறியரியமுதல்கும்பக்குறிநின்றும்வெளிவந்து
வறியரிருநிதியனையமங்களநாயகியிடப்பாற்
செறியவிடைமிசைக்கொண்டுதிருக்கயிலைநின்றுலக
மறியமுனமடைந்தகணமத்தனையும்புடைசூழ. (௩)

மழையினுமாமுழவொலிப்பவானவர்தங்கரங்கூப்ப
விழைதருமாகதர்சூதர்விரும்புவிருதுகள்பாட
வுழைமழுவோரிருபாலுமொளிரமுடிப்பிறைவிளங்கப்
பிழையிலருந்தவர்காணும்பெருங்காட்சிதந்தனனே. (௪)

கண்டபொழுதெழுந்துமலர்க்கரங்குவித்துவலஞ்சூழ்ந்து
தண்டமெனவெதிர்பணிந்துதாமரையாதனனிற்ப
வண்டமருநறுங்கடுக்கைமாலையானுளமகிழ்ந்து
கொண்டபெருங்காதன்மிகக்குறித்தவரங்கேளென்றான். (௫)

புண்ணியநின்றிருவடிக்குப்பொறியிலாச்சிறுநாயேன்
பண்ணியபூசையுந்துதியும்பாங்காகிப்பொலிந்தவெனிற்
கண்ணியபல்வரமனைத்துங்கண்ணியவாறேயளித்த
லெண்ணியவுத்தமமாமென்றறைதரலுற்றான்பிரமன். (௬)

ஒருகானின்றரிசனஞ்செய்தொழிந்தாருமெண்ணியவை
யருகாதுபெறல்வேண்டுமொன்றபிரதோடத்துப்
பெருகார்வத்தொடும்பணிந்துபேணுவாரொஞ்ஞான்றுந்
திருநாதபுத்திமுத்திச்சிறப்பனைத்தும்பெறல்வேண்டும். (எ)

மன்னுவிருச்சிகமாதம்வருசோமவாரத்தி
லுன்னுபசுநெய்விளக்கிட்டொருவில்வமணிந்தாரு
மின்னுமறைமுடிக்கரிதாய்விளங்குறுநின்றிருவடிக்கட்
டுன்னுகலப்புற்றளவாச்சுகத்தழுழ்ந்துறல்வேண்டும். (அ)

நீயமராலயப்பணிகணிரம்புவிருப்புடன்புரிவா
ரேயவுளத்தெண்ணியவையெண்ணியவர்பெறல்வேண்டுந்
தூயகுடமதிமகநாட்பூரணையிற்றொழுவார்கட்
காயபிரமக்கொலைமுற்பாதகங்களறல்வேண்டும். (கூ)

சிறியனேன்மாசிமகத்திருவிழாச்செயுமாறு
நறியகூவிளம்புனைந்தநாதவருடரல்வேண்டும்
வறியராயினும்யான்செய்மகவிழாச்சேவிப்போர்
பொறியராவணையானிற்பொலிந்துதிருவுறல்வேண்டும். (கoo)

இவ்விழாமுதல்விழவிற்கியலுபகாரஞ்செய்வோர்
செவ்விசேர்நின்கலப்பிற்செறிந்துசுகமுறல்வேண்டு
மௌவியமின்மாகமதியணைதருபூரணைமகநாட்
டிவ்வியதீத்திசைத்தடத்துத்தீர்த்தமெலாமுறல்வேண்டும். (கக)

அன்றுதிகழத்தீர்த்தத்தார்வந்தமுழுகிடினுந்
தொன்றுமலமறநீத்துத்தூயகதியுறல்வேண்டுங்
கன்றுதலிலத்தீர்த்தங்கலந்தாடல்கருத்தெண்ணி
யென்றுவிரிகதிர்வெதுப்பவியவையியங்கினரொனினும். (கஉ)

ஆசைமிகச்சேய்மையிருந்தடியொன்றுபெயர்த்திடினு
மாசையொழிகுடமூக்குவந்துபுனன்முழுகாம
லோசைகெழுகடுங்கூற்றூருற்றுறுஉமவரயுதந்
தேசையுறுபரிமேதஞ்செய்தபலனுறல்வேண்டும். (கரு)

ஐயகொடியேற்றமுதலவபிருதமீறுகச்
செய்யமனமுடையவராய்ப்பிரியாதுதெரிசிப்பார்
வெய்யவரோயானுலுமற்றவரைமேம்படுத்திப்
பையரவப்பூணுடைநீயவர்வசப்பட்டிடல்வேண்டும். (கச)

பன்னிரண்டுவருடத்துக்கொருதரம்பாயுமடங்கலிடை
மன்னியவாண்டளப்பான்வந்திடும்போதுவானவரோ
டன்னியமிலொருநாயேனடைந்திந்தமகோற்சவத்தை
முன்னியவாறினிதியற்றிமுடிக்கவரந்தரல்வேண்டும். (கரு)

ஆண்டுதொறுமதிதொறுநினழகுவிழாச்சிறப்பிப்போர்
வேண்டுபலபோகமெலாமேன்மேலும்பெறல்வேண்டி
மீண்டுநினையெவ்விடத்திலிருந்துளத்துநினைத்தாலு
மூண்டுதெறுவினையனைத்துமுடித்தின்பமுறல்வேண்டும். (கசு)

இன்னபலவரங்களெலாமெம்பெருமானருள்வாயென்
றன்னமுயர்த்தவன்பணியவனைத்துமினிதருள்புரிந்து
தன்னமர்காதலின்மறைந்துதன்குறியினுட்புகுந்தான்
முன்னமுணர்ந்தடியார்க்குமுன்னிற்குமுதலவனே. (கஎ)

பிரமன் வரம்பெறுபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - எகஉ.

---

# திருவிழாப்படலம்.

---

கருந்தடங்கட்கலைமகணுவின, னருந்தவத்தரவாவுகும்பேசற்குத்
திருந்தமாசிமகத்துத்திருவிழாப், பொருந்தவாற்றியமேன்மைபுகலுவாம். (க)

சென்னியாறுடைத்தேவன்கும்பேசுரன், மன்னிமங்களமாதொடுறுவிழாக்
கன்னியாரொழிற்காணவருகென, முன்னியார்க்குமுடங்கலுய்த்தானரோ. (உ)

முடங்கலேற்றுமுகிழ்த்தநகையொடு, மடங்கலாசனம்வைகும்வலாரியு
மடங்கலாரையடர்க்குமுராரியு, முடங்குவானவர்யாரும்வந்துற்றனர். (ங)

சித்தர்கின்னரர்செவ்வியகந்தரு, வத்தர்சாரணர்மாமணிநாகலோ
கத்தர்விஞ்சையர்காருடர்சோமன, தித்தர்வந்துசெறிந்தனரெங்குமே. (ச)

பாயகேள்விமுனிவர்பரவினர், தேயமன்னவர்யாருஞ்செறிந்தன
ராயமாந்தரனைவருமொய்த்தனர், மேயநாதன்விழாக்கண்டுவக்கவே. (ரு)

கரிநெருங்கினகாற்றெனச்செல்லும்வாம், பரிநெருங்கினபைம்பொன்செய்கூவி
கிரிநெருங்கினகேடில்வயவரா, மரிநெருங்கினவங்கணகரெலாம். [ரக்

விண்ணினுயவர்பாதலமேயவர், மண்ணில்வாழுநர்யாருமலிதலா
லுண்ணிலாவுமுவகையளவற, நண்ணியாருநகரம்புனைவரால். (எ)

காவணங்கள்கனந்தவழச்செயா, மீவணங்கொள்விதானம்வயக்கியே
பூவணம்பயின்மாலைபொருத்தினர், மாவணம்பயின்மாமறுகெங்குமே. (அ)

விரும்புதெங்கிளநீரும்விரிதலைக், கரும்பும்வாழையுங்காழுறும்யாத்தன
ரரும்பும்வாசமலாம்புனறூவினர், சுரும்புசார்மலரெங்கணுந்தூவினர். (கூ)

மாடமாளிகைமாமணிச்சித்திர, கூடம்யாவுங்குலவப்புதுக்கினு
ராடரங்கமழகுகொளுத்தினர், பாடமைந்தநகரிற்பல்லோருமே. (கO)

ஆடுவார்சிலரன்பினிசையெழீஇப், பாடுவார்சிலர்பண்ணவர்பாற்சென்று
கூடுவார்சிலர்கொள்ளும்புதியரை, நாடுவார்சிலர்நன்னகரெங்குமே. (கக)

இன்னவாறுநகரெழில்செய்திட, வன்னமூருமயன்குடமாமதி
நன்னர்மேவியசட்டிநலம்பெற, முன்னமண்கவர்ந்தான்முளைவித்தினன். (கஉ)

மேயசாந்திவிதிமுறையாற்றியே, பாயவேறுவரையப்படுங்கொடி
யாயதூரியமாழிமுழங்குறத், தூயவேதத்துவைப்பெழவேற்றினன். (கங)

எண்ணுமத்தினமிந்திரமானமே, னண்ணுகும்பலிங்கேசனயந்துற
மண்ணுமங்களவல்லிமுன்னுல்வருங், கண்ணுதத்தநல்லூர்திகலந்துற. (கச)

ஓதியாவுமுணர்ந்தமறையவ, ராதியோர்களளாவிநெருங்குறச்
சோதியார்பலதீபஞ்சுடர்ந்தெழ, வீதிசூழுவித்தான்மறைவித்தகன். (கரு)

அன்றுபோலவறையெண்டினத்தினுங், கன்றுருதெழுகாலையுமாலையு
மொன்றுகற்பகம்பூதமுவாவிடை, குன்றுபூரதஞ்சொய்யுளேவாம்பரி. (கசு)

என்னவோதுமிவைகளொடும்பிற, நன்னரூர்ந்துநயப்பவுவந்ததன்
பின்னரொன்பதெனப்பிறங்குந்தின, மன்னவூர்தியவாயிதுசெய்தனன். (கஎ)

மேருமால்வரையென்றுவியந்துகொண், டாருமேத்தவலங்குமிரதமைந்
தேருலாவுகும்பேசர்முனிவரு, மூருமாபுரிந்தாஞருவேதனே. (கஅ)

வையமுற்றுமவாவிவணங்கிர, வையனைத்துமடிப்பதற்கேதுவாம்
வையமூர்கும்பலிங்கவரூதனே, வையவாள்விழிமங்கையர்நோக்கினர். (கக)

கண்டுமாமலர்க்கைகள்குவித்தனர், மண்டுகாதல்வெவ்வாரியின்மூழ்கினு
ருண்டுபோலுமுயிரொனற்காயினர், தொண்டுபூண்டுதொழுமடமாதரோ. (உ0)

முன்புவேளையெரித்தமுதலவன், வன்புசேர்பழிமாற்றுதற்கெண்ணியே
யென்புதீர்தருமிவ்வுருத்தாங்கினு, னன்புதானென்றறைந்தனர்சிற்சிலர். (உக)

அமுதகும்பமொன்றுசையுற்றீரிரண், டமுதகும்பமவாவத்தடையெவ
னமுதநாயகரோயென்றறைந்தன, ரமுதமென்சொலரிவையர்சிற்சிலர். (உஉ)

மயனமைத்தவித்தேரிவர்மாண்பினீ, ரயனமைத்தபொற்றேரையவாவுறிற்
பயன்மிகத்தருமன்னதெம்பாலுண்டா, னயனளித்துமென்றார்சிலநங்கைமார்.

பாதிமங்களங்கொண்டுபயிலுவீர், நீதிமுற்றுநிரம்பக்கொளன்முகி
லோதியெங்களையுற்றணைப்பீரொன்ருர், காதிவெல்கருங்கட்சிலமங்கையர். (உச)

விதிமகன்றருதோகையைமேயநீர், விதிசுயந்தருமெம்மைவிழைந்திலீர்
விதியன்றுலென்றுரைக்கில்விலக்கொடு, விதியிலீரொன்றுவிண்டனர்சிற்சிலர். ()

ஐயமானென்றறைதருமெங்களை, வெய்யமோகத்துக்கோறல்விழைந்துளீர்
வையமும்மைவனசரனென்பது, செய்யதேற்றமென்றார்சிலமாதர்கள். (உசு)

எண்ணிலாருமிரக்கமனமுளார், மண்ணின்மற்றிவரொன்றுவழங்குவார் [மார்.
கண்ணில்வேறுபொருளதற்குக்கண்டோர்,தண்ணிலாமையென்றார்சிலதையன்

அறிஞர்தாமுமையாசைப்பட்டாரொன்று, குறியிஞேதுகுணங்கண்டுமோகித்
செறியமேவுதிகம்பரரொன்பதை, யறிதரோமென்றறைந்தனர்சிற்சிலர். [தோஞ்

தவறிலாருமைச்சங்கரரொன்றிடி, லிவறுநீர்மையினெங்களிற்கண்டிலோங்
கவலிலாதெவர்பாற்கண்டிடுவதோ, நுவலுமென்றுநுவன்றனர்சிற்சிலர். (உகூ)

கழைவில்லாளியைக்காய்ந்ததுணர்ந்தும்யாம், விழைதரீதிவர்தம்மைவெறுப்பதெ, னுழைவிராயநம்மேலன்றியுண்டுகொல், பிழைவிராவென்றுபேசினர்சிற்சிலர். (ஙூ0)

இன்னவாறுமகளிரிரங்குறக், கன்னன்மென்மொழிக்காரிகைபாகத்தான்
சின்னமேயபொற்றேரைநடாத்திஞு,னென்னரும்புகழ்ந்தேத்தியிறைஞ்சினர்.()

தேரினின்றுமிழிந்துசிவபிரான், வாரின்மென்முலைமங்களவல்லியுங்
காரின்மாமதங்கான்முகத்தண்ணலுஞ், சூரின்வேரறத்தோன்றியதோன்றலும்.

முன்பிதாவைமுனிந்தருமரனு, மன்பின்மேவத்தன்னுலயம்புக்களன்
றுன்பினீங்கித்துதித்தனர்மண்ணுளோ, ரின்பினீங்கிலரிந்திராதியோர். (௩௩)

ஒன்பதாந்திருநாளிலூறுவிழா, முன்பராவவிவ்வாறுமுடிதலு
நன்பராபரநாதன்கும்பேசற்குப், பின்பராவுவிழாவும்பிறக்குவான். (௩௪)

பத்தெனப்படுநாளிற்பராபர, வித்தகற்குவிளங்கழற்றிக்கம
ருத்தமப்புனலாட்டிடவுன்னிஞ, னத்தனுந்திமலர்வருநான்முகன். (௩௫)

அன்னதீர்த்தப்புறமுற்றணமையணி, யின்னதென்றெவரும்புகலாவகை
நன்னராமலங்காரநவிற்றியே, சொன்னவேதன்றெழுதமர்காலையில். (௩௬)

திருவிழாப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - எசஅ.

## விசுவநாதர்வரவுப்படலம்.

:o:

உருவமாயருவமாய்மற்றுபயமாயுன்னுவார்தந்
திருவமாய்ப்புவியாய்நீராய்த்தேயுவாய்வாயுவாய்மேற்
பருவமார்வெளியாயொன்றிற்படாததாய்ப்பரந்துநிற்கும்
பொருவரும்விசுவநாதன்வரவினைப்புகலலுற்றாம். (க)

திரையெறிதெய்வக்கங்கைதீம்புனல்யமுனைமேலோ
ருரைநருமதையெஞ்ஞான்றுமொளிர்சரச்சுவதிவான்றாழ்
வரைபெயர்த்தெறியுங்கோதாவரிவளமருதபொன்னி
தரையகழ்ந்தொழுகாநிற்கும்பயோட்டிணிசரயுமற்றும். (உ)

கன்னியாகுமரியென்னக்கரைபெருநதியொன்பானுந்
துன்னியாருயிர்கடம்பாற்றேய்ந்தொழித்திடுபாவங்கண்
மன்னியார்ப்பெடுத்துப்பற்றமற்றவைசுமக்கலாற்றா
துன்னியாங்கயிலைமேவியுரைசெய்வாம்பெருமாற்கென்று. (௩)

ஓரிடத்தொருங்குகூடியொன்பதுமடவாராகிப்
பாரிடத்தொகையோடாடும்பரம்பரன்கயிலைமேவி
நாரிடத்தமருந்தெய்வநகுமலர்ப்பாதம்போற்றி
யாரிடத்துரைப்போமையவடியரோமடையுந்துன்பம். (௪)

யாதுறுந்துன்பமென்னிலெப்புவனத்துள்ளாரு
மோதுவெம்பாவமெம்பான்முழுகியேதொலைப்பாரானூர்
காதுமப்பாவமெல்லாங்கலந்தெமைவருத்தாநிற்கு
மோதுமற்றிதற்குத்தீர்வொன்றும்பர்தம்பிரானேயென்றார். (௫)

கன்னியர்மொழிந்தவார்த்தைகண்ணுநற்பெருமான்கேட்டு
மின்னியமுறுவல்பூத்துமேதகுநதிகாளொன்று
முன்னியவேண்டாயாருமொழிபுகழ்க்கும்பகோண
மன்னியவழலோன்றிக்கில்வயங்குமோர்தீர்த்தமுண்டால். (௬)

ஆயவத்தீர்த்தந்தன்னிலாண்டளப்பவன்சிங்கத்து
மேயமாமகநாண்மூழ்கில்விடுபடும்பாவமெல்லாந்
தூயவத்தலமிவ்வெள்ளிமலையினுந்தூயதாகும்
பாயநம்பிரியமெல்லாமாவயிற்பதியுமன்றே. (௭)

அத்தலத்தர்தநாளுமாண்பெண்ணிரண்டுக்கோர்கா
னுத்தமமாகமேவுமற்றதுமணித்தாயுற்ற
தெத்தலங்களினுமேலாமத்தலத்தின்னேசென்று
புத்தமுதனையீர்மூழ்கும்போமென்றான்கருணைமூர்த்தி. (அ)

சிவபிரானுரைத்தவார்த்தைசெஞ்செவிநிரம்பவேற்றே
யவமிலாவொன்பான் கன்னிமார்களுமடியிற்றாழ்ந்து
தவமளாமனையதானமெவ்விடந்தவாதநீர்த்த
மூவமையிலாதாயெங்கோவறிகிலமுரைத்தியென்றார். (கூ)

என்றலுங்கருணைமூர்த்தி சிறுபொழுதுள்ளத்தெண்ணி
மன்றலங்குழலீர்நீவிர்வளமலிகாசியெய்தி
யொன்றவங்கமர்மின்யாமும்பின்றொடர்ந்துறுவோமுற்றுக்
கன்றலில்லாதுநும்மைக்கரிசறவழைத்துக்கொண்டு. (௧௦)

விச்சுவநாதப்பேரின்மேவிநாமங்குச்செல்வோ
மெச்சுவமானமின்றிநீவிருமங்குமேவி
யெச்சுவர்க்கமுமுள்வாருக்குதவிவீற்றிருப்பீரென்று
னச்சுவமறையாக்கொண்டோனவருளமுவந்தாரன்றே. (௧௧)

இனியொருகவலையில்லோமெம்பிரானுரைத்தவாறே
முனிவறச்செல்வோமென்றுமுழுவளக்காசிசேர்ந்தார்
வனிதையர்விடைமேற்கொண்டுமாப்பெருங்கணங்கள்சூழக்
கனிவொடுந்தொடர்ந்துசென்றான்கண்ணுதற்பரமயோகி. (௧௨)

வந்தனன்சாமியென்றுவனிதையரெழுந்துதாழ
நந்தலில்சிறப்புநல்கிநன்குமற்றவர்களோடும்
வெந்திறற்கணங்கள்சூழவிண்ணவர்தொழுதுவாழ்த்திக்
கொந்தவிழ்மலர்கரேர்ப்பக்கும்பகோணத்தையுற்றான். (௧௩)

கும்பகோணத்தையுற்றுக்கும்பத்துமுன்னைநாளும்
வம்பவிழ்குழலீர்தோன்றவயங்குறுதானமீது
கம்பமிலிதனைப்போற்றுங்காதலினென்றுகூறி
யும்பர்களொடுந்தாழ்வித்தானுரைத்தவத்தானநீங்கி. (௧௪)

அன்னதானத்தின்கீழ்பாலமுதவாவியிற்றோய்வித்துப்
பன்னருமனையதீர்த்தக்குணகரைப்பரிவின்வைகுந்
தன்னமரிலிங்கங்காட்டித்தவாதொருசிக்கஞ்சார
முன்னநாமுளைத்தோமென்றுமொழிந்துதாழ்ந்தேத்தச்செய்து. (௧௫)

குடத்தினைச்சிதைப்பானம்புகோத்துநாழ்விட்டதாமிவ்
விடத்துமுன்முளைத்தோமென்றுமற்றதையிறைஞ்சச்செய்து
தடத்தகூவிளஞ்சாலிந்தத்தானத்துமுளைத்தோமென்று
படத்தபாம்பேத்துமந்தக்குறியையும்பணியச்செய்து. (௧௬)

தூரியமுகிலினார்ப்பத்தொடுகழற்கணங்கள்சூழ
வாரியமறையோர்வாழ்த்தவளவில்வானவர்கண்மொய்ப்பச்
சூரியகாந்திவட்குஞ்சுடர்ப்பணிமடவாரோடும்
வேரியங்கமலம்பூத்தவியன்றடமருங்குபுக்கான். (௧௭)

அத்தடமருங்குபோதவாங்கெழுமுழக்கங்கேளா
வுத்தமநாரிகேளத்தருவடியுதித்தபெம்மான்
வித்தகக்கிழக்குநோக்கியிருந்தமைவிட்டுமேல்பாற்
சித்தம்வைத்தருளிநோக்கியிருந்தனன்றேவரரர்ப்ப. (கஅ)

கன்னியரதனைநோக்கிக்கருதருமிறும்பூதெய்தி
மன்னியவிசுவநாதன்மலரடித்துணைகடாழ்ந்து
முன்னியவிவர்தாமேற்குமுகங்கொண்டதுரைத்தியென்னப்
பொன்னியன்மடவீர்கேண்மினென்றிதுபுகல்வதானான். (கசு)

முன்னர்யாநாரிகேளத்தருவடிமுளைத்தாமின்று
நன்னர்நீர்விழைந்துதோயநண்ணியதிறத்தாலிந்தப்
பன்னருந்தீர்த்தநோக்கிப்பச்சிமமுகமாயுற்று
மென்னலுமென்றுமிவ்வாறிருந்திடல்வேண்டுமின்னும். (உ0)

ஆதரம்பயக்குந்தீர்த்தத்தபிமுகமானவாற்றான்
மேதகுமபிமுகேசனெனும்பெயர்விளங்கல்வேண்டு
நாதவென்றடியிற்றாழ்ந்தார்நயந்தவ்வாறுகவென்று
பூதநாயகனத்தீர்த்தவலங்கொடுபோதலுற்றான். (உக)

படவரவணிந்தபெம்மான்பாவையர்முதலோரோடு
தடநெடுங்கோட்டைச்சூழ்ந்துதண்ணிதிற்சாரும்போது
குடதிசைக்கரையினூங்குணதிசைமுகமாய்மேவுங்
கடவுடன்குறியைக்காட்டிக்கன்னியர்க்குரைக்கலுற்றான். (உஉ)

இத்தகுதானங்கும்பத்திட்டதூற்சார்புபற்றி
யுத்தமவிலிங்கமாகியொளிருவோநாமென்றோதி
யத்தகுகுறியைமாதரன்பொடுபணியச்செய்து
சித்தமிக்குவந்தத்தீர்த்தத்துத்தரதிசைக்கண்வந்தான். (உங)

உச்சியினங்கைகூப்பியும்பர்களரவென்றார்ப்ப
மெச்சுபன்மலருந்தூவிமாதவர்விழைந்துபோற்ற
யச்சமற்றுயிர்களெல்லாமாநந்தவெள்ளத்தாழப்
பச்சிமமுகங்கொண்டுற்றான்பராபரவிசுவநாதன். (உச)

தெள்ளியவிசுவநாதனங்ஙன்வீற்றிருத்தறோர்ந்தே
யொள்ளியசிலம்வாய்ந்தவொன்பதுகன்னிமாரும்
வள்ளியதெற்குநோக்கிவசித்தனர்வசித்தலோடும்
புள்ளியனறும்பூத்தூவியார்த்தனர்புலவுரம்மா. (உரு)

உரைசெறிதீர்த்தந்தோய்வானுற்றவொன்பான்மினாரும்
புரையறவணங்கிக்கேட்பப்புண்ணியவிசுவநாதன்
விரைவரங்கொடுத்தவாறேயின்னமுமேற்குநோக்கித்
தரையெலாம்புகழவைகுஞ்சாற்றருமபிமுகேசன். (உசு)

விசுவநாதர் வரவுப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-எஎச.

# அவபிருதநாநப்படலம்.

:o:

காராருமலர்ச்சோலைகனியுதிர்க்குங்குடமூக்கின்
வாராருந்திசைபுகழுமாசிமகத்திருநாளிற்
பாராருமரிமைந்தன்பத்தாநாளினிதாற்றுஞ்
சீராருமவபிருதநாநவிழாச்சிறப்புரைப்பாம். (க)

நறுமலர்மாலையுஞ்சார்துநானமுமாம்பழங்குப்பை
யுறுபெருவீதியிற்போக்கிப்புதிதுபடவுண்டாக்கிச்
சிறுதிவலைவிரைப்பனிநீர்தெளித்துவளமிகப்பெருக்கி
யறுதியறமுன்னையினுந்திருநகரமணிசெய்து. (உ)

மன்னுமறைப்பெருமுழக்கும்வானவர்துந்துமிமுழக்கு
மின்னுமரகரமுழக்கும்வேலையினுமிக்கொலிப்பப்
பன்னுபலபெருந்தீபம்பலகதிரினுதயமெழ
வுன்னுபலவிருதுகளுமொருங்குமலிந்துநெருங்க. (ங)

வெள்ளியமால்விடைமீதுமிக்கபுகழ்க்கும்பேசர்
வள்ளியதெய்வதக்கருணைமங்களநாயகிமேவி
யுள்ளியநன்கெழுந்தருளியுலகமெலாங்குதுகலித்துத்
துள்ளியபன்மலரிறைத்துத்தொழுதுபெருங்களிதூங்க. (ச)

பிறைபுரையுமொருகோட்டுப்பிள்ளையும்வெஞ்சூர்தடிந்த
கறைகெழுவைவேற்றடக்கைக்காளையும்பாதகஞ்செய்து
நிறைபெரும்புண்ணியமாக்கிநிகழொருமாணியுந்தத்தங்
குறைவில்புகலூர்தியின்மேற்கொண்டுவழிதொடர்ந்துவர. (ரு)

பெருமறையின்முடிபுணராப்பெருங்கருணைச்சோமேசர்
மருவுநருக்கின்புதவிவயங்குதிருநாகேசர்
பொருகணையேவிடத்துதித்துப்பொலிபாணபுரியீசர்
கருமலவேரறுத்தருளிக்காக்குமபிமுகநாதர். (சு)

பொன்னார்செஞ்சடைமோலிப்பொய்யிலுபவீதேசர்
மின்னாரொன்பதின்மரொடும்வீற்றிருக்கும்விசுவேசர்
தென்னார்தங்கூறெனுமித்திருவாளர்தொடர்ந்துவரக்
கொன்னார்தண்புனல்வாவிக்குலையடையும்படிசெய்து. (எ)

ஆயபுகழ்ப்பெருந்தீர்த்தமாரருளின்வலஞ்சூழ்ந்து
மேயபலதேவர்களும்விளங்குமவரவர்க்குரிய
தூயமணிமண்டபத்துத்தன்னவிருண்முகம்பிளக்கும்
பாயவொளிமண்டபத்தெம்பரமரமர்விதம்புரிந்து. (அ)

பரவுபலபணைமுழங்கப்பாயபலமுகமனொடு
முரவுமிகுபூசைபுரிந்துத்தமமாரத்தீர்த்தங்
கரவுதவிரத்திரதேவரையாட்டிக்கைகுவித்துப்
புரவுவிதிப்படிமலரோன்புக்குமுழ்கினன்மாதோ. (கூ)

வையமெலாம்படைத்தபிரான்மாமகநீர்தோய்ந்தெழலும்
வெய்யகுலிசாயுதன்முன்விண்ணவருந்தோய்ந்தெழுந்தார்
செய்யசடைமுனிவருமத்திருத்தீர்த்தந்தோய்ந்தெழுந்தா
ரொய்யெனவண்பாதலம்வாழுரகர்களுந்தோய்ந்தெழுந்தார். (கo)

அருண்மலிவிச்சுவநாதவண்ணலாரருள்பெற்றுக்
கருண்மலியைம்பாலொன்பான்கன்னியருந்தோய்ந்தெழுந்தார்
வெருண்மலிபாதகமனைத்தும்வீட்டினார்மேலாய
பொருண்மலியின்புற்றாரிற்பொங்குபெருங்களிப்புற்றார். (கக)

மன்னுகளியுறத்தேயமன்னவருந்தோய்ந்தெழுந்தார்
துன்னுசிறப்புறவளவின்மாந்தரொலரந்தோய்ந்தெழுந்தார்
மின்னுநிகர்நுண்மருங்குல்வெற்புநிகர்பெருங்கொங்கைப்
பொன்னுநிகராவனப்பிற்பூவையருந்தோய்ந்தெழுந்தார். (கஉ)

கண்ணிலார்காதிலார்காலிலார்வாய்மொழித
னண்ணிலார்கையிலார்நகையிலார்மூக்கில்லார்
புண்ணிலார்தருசீயார்போகாதகொடும்பிணியா
ரெண்ணிலார்சார்புறவந்தெல்லாருந்தோய்ந்தெழுந்தார். (கங)

பங்குநடந்தனகுருடுபார்த்தனபற்பலநாளாத்
தங்குவெதிர்கேட்டனபல்சாத்திரஞ்சொற்றனமூகை
மங்குபெரும்பிணியுடம்புவச்சிரமெய்யாயினநீர்
முங்குபயனிவைகொல்லோமுத்திவரவெதிர்நோக்கில். (கச)

வறியர்வடதிசைக்கோனைவணக்கினார்தாயிகழுங்
குறியர்பசுங்கழைகுழைக்குங்கோமகனிற்பொலிவுற்றார்
சிறியர்பெரியவரானார்தீராமாபாதகஞ்செய்
வெறியர்பெரும்புண்ணியத்துமேம்பட்டார்விளம்புவதென். (கரு)

பொங்குபுகழித்தீர்த்தம்போகாதுபுவியிருப்ப
முங்குவினைபுரிந்துளத்துமுன்னியவையடையாதார்
தங்குபெரும்புடவியிடைச்சரிக்குமிருகங்கள்கொலோ
மங்குகடுமரங்கள்கொலோமற்றெவைகொல்லோவறியேம். (கசு)

பூமேயபண்ணவனும்புரந்தரன்முனெண்மர்களுந்
தேமேயவானவருஞ்சித்தர்களுமுனிவர்களு
நாமேயதத்தமதுநாமம்விளங்கிடவமைத்த
பாமேயபெருந்தீர்த்தம்பற்பலவுண்டாயிடையே. (கஎ)

கங்கையேமுதலாயகன்னியரொன்பதின்மர்களுஞ்
சங்கைதீரொருகூறுதாம்பயிலுமிடத்தமைத்துக்
கொங்கையார்மலர்செறியக்குளிர்வாவியகத்தமர்ந்தா
ரங்கையாமலகமெனவாருமுணர்தரவிளங்கி. (கஅ)

கண்டாருந்தோய்ந்தாரும்வெம்பாவங்காற்றிடலால்
வண்டாருமலரந்நீர்மாமாகநீரொன்பார்
தொண்டாரும்புரியொன்பான்கன்னியருந்தொகமகநாட்
கொண்டாருந்திறத்தாலுங்கூறுவரப்பெயரதற்கே. (ககூ)

வரநதிமுனோரொன்பான்கன்னியருங்காவசித்துத்
திரமுறலாலவரொவ்வோர்தீர்த்தமுண்டாக்கியதிறத்தாற்
கரவகலத்தீர்த்தத்தைக்கன்னியர்தீர்த்தமெனப்
பரவுமறிவினருரைப்பார்பார்முழுதுங்கொண்டாட. (உ0)

மறையவர்தங்கொலையாதிவன்சமுவாய்வேண்டாதோ
ருறைபடிற்றீர்தலிற்பாபநாசநீரொன்றுரைப்பார்
நிறையமுதகடமூக்கின்வழிவழிந்துநிகழமுதங்
குறையறத்தங்கலினமுததீர்த்தமெனக்கூறுவரால். (உக)

(வேறு.)

இந்திரன்றிசையிலிந்திரதீர்த்தமெரியழற்றிசையழற்றீர்த்த
மந்தகன்றிசையிலந்தகதீர்த்தமடுத்தவன்றிசையவன்றீர்த்தஞ்
சுந்தரவருணன்றிசையவன்றீர்த்தஞ்சுழல்வளித்திசையவன்றீர்த்த
மந்தமில்குபேரன்றிசையவன்றீர்த்தமற்றையோன்றிசையவன்றீர்த்தம். (உஉ)

அணியபிமுகேசர்சந்நிதியிருப்பதறைந்தவிந்திரப்பெருந்தீர்த்தந்
திணிகெழுவருணதீர்த்தமேதேவதீர்த்தமுமாகியதுநீசிக்
கணிதமில்பயன்செய்வளிப்புனற்கீழ்பாற்கனகமன்னவன்புனன்மேல்பான்
மணிமலர்ப்பொகுட்டுமேயநான்முகத்தோன்வகுத்தநற்றீர்த்தமன்னியதே. ()

வளியயனடுவட்கங்கைமாமலரோன்வடதிசையோனடுயமுனை
களியமைதனதன்காமரீசானன்கமழ்புனனடுமுதுகங்கை
யளியதன்றெற்குநருமதைமகவானழலவனடுப்புகழ்வாணி
தெளியழலியமனடுவிடம்பொன்னிசினச்சமனிருதிநட்குமரி. (உச)

நிருதிநல்வருணனடுப்பயோட்டிணியநிலன்வருணன்னடுச்சரயு
மருமலரிணையகன்னியர்தீர்த்தமத்தியில்வசிக்குமெஞ்ஞான்று
மருமையின்றெவர்க்கும்பலன்றருமறுபத்தாறுகோடிப்பெருந்தீர்த்த
மிருள்படுகொடியபாதகமனைத்துமிரிப்பதற்கமைந்ததிப்புனலே. (உரு)

சுரபதிதீர்த்தஞ்சுரருலகளிக்குஞ்சுடுதழற்புனன்மறந்தகிக்குந்
தரநமன்புனன்மற்றவன்புரிதண்டந்தவிர்த்திடுநிருதிநீரொன்றுந்
திரமுறுபூதப்பிரேதபைசாசஞ்சிதைத்திடும்வருணநற்றீர்த்தம்
பரவுறுபுத்திமுத்தியுங்கொடுக்கும்படர்வளிப்புனறுயரகற்றும். (உசா)

மலரவன்புனனூற்றெருதலைமுறையுண்மலிதுயர்தபக்கரையேற்று
மலர்மகாமகமேற்றலைமுறையொருமூன்றுயகோடியர்க்கரையேற்று
முலர்தலிறத்தகிருச்சிரபலன்மூன்றுறுந்தினமுழுகுவோர்தமக்குக்
கலருறற்கரியபுத்திமுத்தியுமாங்கருதியவனைத்துமெய்திடுமே. (உஎ)

வடதிசைத்தலைவன்புனல்பெருந்திருவம்வழங்குமீசானநற்றீர்த்தம்
படர்பெரும்பாவமனைத்தையுந்தொலைத்துப்படர்ந்தனயாவையுநல்கு
மிடர்தபுகங்கைகயிலையேயளிக்குமேற்றமார்மாமகமென்னிற்
றொடர்புடையயுதம்வரநதிமுழுக்காற்றேன்றிடுபலனொருங்குதவும். (உஅ)

மேதகுசாயுச்சியமுநன்குதவும்விளங்கியயமுனைபொன்னளிக்குங்
காதல்செய்விருத்தகங்கைதானென்றுங்கருதியவனைத்தையுநல்கு
மோதரும்பாவமலைக்குவச்சிரமாமொள்ளியநருமதாதீர்த்தஞ்
சாதமெய்ஞ்ஞானமொடுவைராக்கியமுந்தருஞ்சரச்சுவதிமாதீர்த்தம். (உகூ)

காவிரியகப்பாவங்களையொழித்துக்கருதியவனைத்தையுநல்கும்
பூவிரிகுமரியயுதமாமேதம்புரிபலன்பொருக்கெனநல்கு
மாவிரிகாடிதேனுவாமூலகமன்னுவிக்கும்பயோட்டிணிநீர்
பாவிரிசரயுநதிகொடுங்கலியாற்படுதுயரனைத்தையும்பாற்றும். (௩0)

நடுவமரறுபத்தாறுடைக்கோடிநகுபுனல்சருவதீர்த்தத்தும்
படுபயனளிக்குமின்னதுநிற்கபங்கயன்கும்பநாயகர்முன்
விடுசுடர்மோலிக்கடவுளர்பலரும்விழைந்துதம்மாலயம்புகச்செய்
தடுவினையொழிக்குந்தசதினத்திருநாளணிவிழாமுடிவுசெய்திருந்தான். (ஙச)

அவபிருதநாகப்படலம் முற்றிற்று.

ஆகு திருவிருத்தம் - அ0ரு.

## பிரமன்விடைபெறுபடலம்.

பொற்றபூவினன்
கொற்றநாதர்பா
லற்றந்தீர்விடை
பெற்றதோதுவாம். (க)

முடிகணன்குளான்
படியுளார்தொழ
நெடியமால்விடைக்
கொடியிறக்கினன். (உ)

போற்றுமற்றைநா
ளேற்றுவார்கொடிப்
பேற்றினன்விடா
யாற்றினனரோ. (ங)

தகாதெனவகை
மகாபிடேகமு
முகாதபேரன்பி
னகாவியற்றினன். (ச)

வந்திருந்தவர்
தந்தமூர்செல
முந்தவேவின
னந்தன்மாமகன். (ரு)

மேயவுற்சவத்
தூயதாற்றமு
வாயிரத்தொகை
பாயவூர்களும். (சு)

இதமிகுந்தின
மதவிழாச்செயப்
பதம்விராவிய
சதகிராமமும். (எ)

பரவுமாட்டையின்
திரவிழாச்செய
வரநிலாஞ்சகத்
திரகிராமமும். (அ)

கும்பநாயகர்
நம்புமங்கலை
யம்பைபூணுமா
பம்புபூண்களும். (கூ)

துலக்குமோர்முதல்
விலக்குருச்சுடர்
நலக்குமீரொன்பா
னிலக்கநிட்கமும். (க0)

அட்டவான்றிசை
பெட்டபல்பரி
வட்டவர்க்கமுஞ்
சட்டநல்கினன். (கக)

இந்திராதியர்
முந்திமோகிக்கு
நந்தனங்களு
மந்திலாக்கினன். (கஉ)

இனையசெய்தபி
னனையபூவின
னனையொர்பாகத்தான்
றனையடுத்தனன். (கங)

ஆழ்ந்துபோற்றினன்
சூழ்ந்துவாழ்த்தினன்
வீழ்ந்துகொள்விடை
தாழ்ந்துபெற்றனன். (கச)

அலகிலாதவன்
பிலகியூற்றெழ
நலம்விராவுதன்
னுலகநண்ணினன். (கரு)

கலேமடந்தைவெம்
முலேமுகந்தன
துலேவின்மார்புற
நிலேயின்வாழ்ந்தனன். (கசு)

இகவிறெய்வமா
மகம்வருந்தொறுந்
தகவிவ்வாறுவந்
தகவினுற்றுவான். (கஎ)

போற்றுநான்முக
னுற்றமிவ்விழாப்
பேற்றையாவரோ
சாற்றவல்லவர். (கஅ)

மூசிவாணர்சூழ்
மாசிமாமகத்
தேசின்சீர்சொல்வா
ரீசனன்பியார். (ககூ)

பரமனூர்மகிழ்
பிரமவுற்சவ
வரமுரைப்பவர்
பரவவாழ்வரே. (உ0)

பிரமன்விடைபெறுபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அஉரு.

---

## நவகன்னியர்மகிமைப்படலம்.

:o:

உரவுவையமுவப்புறப்
பரவுகீர்த்திபலதமூஉங்
கரவுதீர்நவகன்னியர்
விரவுமேன்மைவிளம்புவாம். (க)

மேதகும்புகழ்விச்சுவ
நாதர்தம்மொடுநண்ணிய
காதல்கூர்நவகன்னிய
ராதரத்தவராலயம். (உ)

மன்னினூரந்தமாதர்பேர்
பன்னினூர்பரவித்தொழத்
துன்னினூர்தொழுதாருளத்
துன்னினூர்நலத்தோங்குவார். (ங)

பிருகுவாரத்துப்பெட்டுள
முருகுபூசையுஞற்றுவா
ருருகுதீவினையாளராய்த்
திருகுதீர்நலஞ்சேர்வரே. (ச)

செய்யமாமகதீர்த்தநீ
ரையமூழ்குநர்யாவருங்
கையவாநவகன்னியர்
மெய்கொடாடொழல்வேண்டுமால்.

வந்தியானவண்மாகநீர்
முந்திமூழ்கிமுனிவற
நந்திவாழ்நவநங்கையர்
புந்திசார்தளிபுக்கரோ. (ரு)

ஏற்றசெல்வத்துக்கேற்புறச்
சாற்றவாயதயிலமு
மாற்றருஞ்செழுமஞ்சளுங்
காற்றவாம்விளைக்கந்தமும். (எ)

மண்டுருங்துமமும்மண
மண்டுசெய்யவலர்களுங்
கொண்டுபூசைகுயிற்றியுள்
விண்டுதீரன்புவீட்டியே. (அ)

உற்றபாலனமூட்டுபு
பற்றமெல்லிலேயாகுதோ
மற்றவன்பினளித்துப்பின்
பொற்றதக்கணைபொற்புற. (கூ)

நல்குபொன்மனைநண்ணியுள்
ளல்குமாறவளைக்குறித்
தொல்குநுண்ணிடையொன்பது
மல்குமங்கலமாதரை. (க0)

மேலுரைத்தவிதிப்படி
சாலும்பூசைசமைத்தபி
னேலும்பாய்த்துயிலின்றியே
மாலுருவுபவாசமாய். (கக)

பிருகுவாரமோர்நான்கிவ்வா
றருகுறுத்தவமாற்றிடின்
முருகுவேணிகர்மைந்தனே
யுருகுமாபெறலுண்மையே. (கஉ)

பருவமேவரும்பாவையர்
பருவநாட்டொழிற்பார்புகழ்
பருவமங்கையராகிநற்
பருவநாயகற்சார்வரால். (கங)

பதிவிரோதங்கொள்பாவையர்
மதியின்வந்துவணங்கிடி
னதிகநண்பினவனுறத்
திதியின்வாழ்வர்செழித்தரோ. (கச)

மிருதவந்தியராதியார்
கருதிவந்திருகைதொழில்
வெருவுமத்தகுதோடம்விட்
டொருவுருநலத்தோங்குவார். (கரு)

பிணிவிராவியபேதைமார்
பணியின்மற்றதுபாறிட
வணிவிராநலமார்வராற்
றுணிவினெண்ணியதெய்தியே. (கசு)

செய்யசாவித்திரியெனுந்
தையலார்வந்தகப்பணிந்
தையமாமலரானைப்பா
ரெய்யவெய்தியிருந்தனள். (கஎ)

அருந்துதிப்பெயரந்நலாள்
பொருந்துமாமுனம்போற்றியே
மருந்துநேரும்வசிட்டனுட்
டிருந்துகோபத்தைத்தீர்த்தனள். (கஅ)

துங்கமாரநசூயைதான்
பொங்குமாமுனம்பூசித்துப்
பங்கமோவுபதியொடு
தங்கினூடணப்பின்றியே. (ககூ)

சாயையென்னுமோர்தையலாண்
மாயைநீங்கவழுத்திமு
னேயையாகிநிலவினுள்
பாயைமேயபருதிபால். (உ0)

சதியெனப்படுந்தையலாள்
விதியிற்பூசைவிளைத்தலுங்
கதியிலுற்றுன்கவுசிக
னிதியமாமெனநேடியே. (உக)

தையல்வாய்ந்ததமயந்தி
யையமுன்னமருச்சியா
வெய்யவெங்கலிதீர்நளன்
செய்யமார்பந்திளைத்தனள். (உஉ)

இரதியென்னுமிலங்கிழை
விரதமேவியருச்சித்துச்
சுரதமாரனைத்தோய்ந்தன
ளரதநீங்கவவாவியே. (உங)

வளருருக்குமணியெனுங்
கிளர்மடந்தைமுன்போற்றியே
தளர்வுதீர்தரச்சார்ந்தன
ளுளரளித்தொடைக்கண்ணனை. (உச)

விதவைபோற்றிடினம்மையிற்
சுதமில்செல்வந்துளைதரு
மதனிலாம்புவிமன்னனை
யிதமுறப்பெற்றிருப்பளே. (உரு)

பலவுரைப்பதென்பாரிடை
நிலவுகற்பகமாயினர்
வலமிகுத்தவம்மாகநீர்க்
கலவுமொன்பதுகன்னிமார். (உசு)

நவகன்னியர்மகிமைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - அருக.

---

# மாமகதீர்த்தமகிமைப்படலம்.

———:o:———

முன்னுமாதரத்தின்மூழ்கமூவுலகத்துள்ளாருந்
துன்னுமாறுள்ளதாகித்தூயதிற்றூயதாகி
மின்னுமாமறைநூன்முற்றும்விளம்பிடப்படுவதாகி
மன்னுமாமகதீர்த்தத்தின்மகிமையையெடுத்துச்சொல்வாம். (௧)

உமையொருபாகங்கொண்டவுத்தமன்சொரூபமேயா
யமைதரநெடுந்தூரத்தேயமர்ந்துளத்தெண்ணினுறு
மிமைநொடியளவிற்பாவமெனைத்தையுமிரிப்பதாயொண்
கமைதருமகதீர்த்தம்போற்புவனத்துக்காண்பதின்றே. (௨)

மருவுமத்தீர்த்தந்தன்னையொருதரம்வலஞ்செய்வாரேற்
றருவமர்புவியைநூறுதரம்வலஞ்செய்தபேறும்
வெருவிலத்தீர்த்தந்தன்னைவிழைந்தொருதரங்கும்பிட்டாற்
பொருவிறேவரையென்றுங்கும்பிடுபலன்பொருந்துமாலோ. (௩)

அச்சிவதீர்த்தம்வாளாவொருதரமடைந்துமூழ்கின்
மெய்ச்சிவனுவன்யாரும்விழைந்ததுகொடுப்போனுவ
னச்சமற்றொருகாலந்நீராசமனஞ்செய்வானேற்
கச்சமின்மேருவொத்தபாவமுங்கரையமாய்க்கும். (௪)

இன்னமுந்தசையுரோமமென்புதோலிவற்றாலாய
பன்னரும்பாவமுற்றும்பறிபடுங்கோடிசன்மந்
தன்னதுகுலத்துள்ளாரைத்தடங்கரையேற்றுவான்மற்
றுன்னரும்வேதமோதலொளிர்மகமியற்றலாதி. (௫)

புண்ணியகருமமெல்லாம்போக்கியபாவியேனுங்
கண்ணியமகநீர்மூழ்கிற்கரிசறுமுத்தனுவ
னுண்ணியபுகுந்தானேனுங்குபேரனிலுயர்வானன்கு
பண்ணியமகாமகத்தேற்பலனொருகோடிமேவும். (௬)

சகலக்ஷேத்திரஞ்சார்தீர்த்தயாத்திரைப்பலனுஞ்சாரு
முகலருமகாமகத்திலொருதரமூழ்கினானேன்
மிகவொளிர்பவுண்டரீகமேதகுபுரவிமேத
நகவளவில்லாதாற்றும்பலனெலாநண்ணுமன்றே. (௭)

ஒருதரம்பதிகன்மூழ்கிற்புவனங்களொருங்குகாக்கு
மருவுறவறிந்துமூழ்கில்வானவாங்கங்கையாற்றிற்
பொருவறநூறுண்டெல்லாவிதிப்படிமுழுகப்போந்த
திருவமர்பலனுஞ்சேர்வன்சேய்முதலனைத்துஞ்சேரும். (௮)

சந்ததிவிழைந்தோனைந்துதரமகநாளின்மூழ்கி
னந்தலிலப்பேறெய்திநீடெலாம்புகழவாழ்வான்
முந்தமாமகத்துமூழ்கின்முழுச்சுடர்வடிவேற்செங்கைக்
கந்தவேளனையமைந்தற்பெற்றுளங்களித்துவாழ்வான். (௯)

மாமகநீரின்மூழ்கிமாமுற்றுனநல்கிச்
சோமசேகரனைப்போற்றித்தொழுபவனவனேயாவன்
காமருவிழவுதன்னிற்கன்னியர்தீர்த்தத்துள்ள
தூமலிபிரமதீர்த்தந்தோய்பவனவன்வைப்பெய்தும். (௧௦)

தீர்த்தவுற்சவத்துநானஞ்செயிற்சிவக்கலப்புமேவு
மார்த்தபூரணைமாகத்திலப்பெருந்தீர்த்தமூழ்கி
யேர்த்தவெண்டிக்குநோக்கியிளமையவர்தம்மைப்போற்றிற்
கூர்த்ததன்குலத்துக்கோடிகுலங்களையேற்றுவானே. (கக)

தன்குலந்தனதுபெண்ணைக்கொண்டவன்குலந்தாயின்றோன்
றன்குலஞ்சிறியவன்னைதன்குலமுடன்பிறந்தா
டன்குலந்தந்தையோடுபிறந்தவள்குலந்தன்மாமன்
றன்குலமாயவேழும்புனிதமேசாராநிற்கும். (கஉ)

அறையெழுகுலத்துளொவ்வொன்றற்கொருபதினுன்காக
மிறையகற்றெண்ணூற்றெட்டுமித்திரன்சுவாமியாசான்
முறையினிம்மூன்றுங்கூடமுனிவருமொருநூற்றொன்றுங்
குறையறமுத்தியெய்துங்குறித்தந்நீர்விதியின்மூழ்கின். (கங)

பரவியவயற்றேசத்தான்பயில்பெருந்தீபத்துள்ளோன்
கிரமநற்பிரமசாரிகிரகத்தன்வனத்தன்மற்றை
யுரவியல்சந்நியாசிநித்தியகருமமோம்பி
விரவியபுண்ணியாகவாசனம்விடுபடானாய். (கச)

உயர்புரோக்கணநானஞ்செய்துற்றவந்நீரோயுண்டு
மயர்வில்கவ்வியமருந்திமறையவர்க்கன்னமூட்டி
நயமிகுமாடையாதிநல்கியாரியனைப்போற்றிப்
பெயர்வருமநுஞைபெற்றுப்பெற்றவாச்சிரமக்கேற்ப. (கரு)

மனைமகவுடங்குநண்ணவாகனந்தவிர்ந்தியங்கி
நினைபெருங்கும்பகோணமான்மியநிரம்புமாறு
புனைசிரவணஞ்செய்தின்பாமறுசுவையுணவும்போக்கி
முனையதாம்பூலம்போக்கிவபனஞ்சங்கமமுனிந்து. (கசு)

நகமுனைமழித்தல்போக்கித்துட்டனைநண்ணநீர்வுற்
றிகவறவிருணீர்த்தூங்குமடிசிலையிகந்துநீக்கி
யகனமர்மதுரமாயபக்கணமனைத்துந்தள்ளித்
தகவில்சூத்திரன்மடந்தைசுனகன்வாய்ச்சேடந்தள்ளி. (கஎ)

ஒருபொழுதவிசுகொண்டேயுதயநீராட்டிற்றீரா
தருவழிநடக்கும்போதுமைந்தெழுத்துச்சரித்தே
குருமறையவர்தம்பூசைகுயிற்றிவெங்கதிரோனுச்சி
வருபொழுதினுநீர்மூழ்கிவண்சிவபூசையாற்றி. (கஅ)

வானவர்பிதிரர்பூதமானுடர்பிரமமென்ன
வானவைந்தெச்சமாயவைவசுவதேவமீற்றி
யீனமிலிரவிற்பூமியுடம்புறச்சயனமெய்தி
யூனமதறமூழ்குங்காலுறுபுனல்சூழ்ந்துபோற்றி. (கசு)

குறிகொளிந்நியமத்தோடுகும்பகோணத்தையெய்தி
மறிநிகர்கருங்கட்செவ்வாய்மங்களவல்லியோடு
மறிவுருவாயவெங்களாதிகும்பேசற்போற்றிப்
பொறிவரியரவஞ்சூடும்புரிசடைச்சோமநாதர். (உ0)

வயமிகுதிருநாகேசர்வாளியேவிடத்தாமீசர்
நயமிகுகவுதமேசர்நாடருமபிமுகேசர்
பயமிகுவிசுவநாதர்பரவுகன்னியர்கண்மற்றும்
வியமிகுசிவக்கூற்றுள்ளார்யாரையும்விழைந்துபோற்றி. (௨௧)

ஓங்குபிப்பிலத்தைச்சூழ்ந்துதீர்த்தவானவர்தாளுன்னித்
தாங்குபேரனுஞைபெற்றுச்சங்கற்பஞ்செய்துகொண்டு
பாங்குசார்பலம்பூச்செய்யகுங்குமம்பகர்தாம்பூல
நீங்குறுவளைகைக்கொண்டுநிசழிலிகுசந்தாடங்கம். (௨௨)

மற்றையாபரணமாடைவாரிவைநிறைசூர்ப்பத்தைப்
பற்றையார்மற்றோர்சூர்ப்பங்கொடுபயன்படமறைத்துக்
கற்றைவார்கூந்தற்செவ்வாய்ச்சுமங்கலிகையினல்கி
யுற்றையார்கங்காபூசையொழிவறச்செய்தபின்னர். (௨௩)

வரநதியிடத்துஞ்சொன்னவான்பொருள்பலவுமிட்டுப்
பரவுமாமகதீர்த்தத்துப்பரிவொடுநானஞ்செய்து
தரமலிபிதிரர்க்காயதருப்பணம்விதியிற்செய்து
புரவமைபுனிதமாயவத்திரம்புனைந்துகொண்டு. (௨௪)

நீறுமெய்நிரம்பப்பூசிப்புண்டரநிலவத்தீட்டி
மாறுதீரொழுத்தைந்தெண்ணிவடகரையரசுசூழ்ந்து
தேறுமத்தருவின்மூலந்திருந்துறவிருந்துகொண்டு
நாறுபூங்கூந்தற்செவ்வாய்நவமடந்தையர்முன்னாக. (௨௫)

மங்கலம்புனைந்தவொன்பான்மகளிரைப்பூசையாற்றிச்
சிங்கலின்முன்னஞ்சொற்றபொருளெலாஞ்சிறப்பநல்கி
யங்கமாமறையோர்க்கெல்லாமெண்ணியவனைத்துமீந்து
தங்கவின்சுவையோராறுஞ்சமைதரவடிசிலாக்கி. (௨௬)

விருப்பமாமறையோர்க்கெல்லாம்விலாப்புடைவீங்கலூட்டிக்
குருப்பயினறுந்தாம்பூலந்தக்கணையொடுகொடுத்துப்
பொருப்பமர்சிலைக்கும்பேசர்பொன்னடிதொழுதுபோற்றி
யுருப்பவெம்பசிநோய்தீரக்கிளையொடுமொருதானுண்டு. (௨௭)

வழிவருநாளிற்கண்டமட்டுறவபனஞ்செய்து
மொழிதருபொற்சிராத்தம்பிதிரர்தம்பொருட்டுமுற்றிக்
கழியுமவ்விரவிலுண்டிசழித்துபவாசமாகிப்
பொழிநலமறுநாளன்னசிராத்தத்தைப்பொலியச்செய்து. (௨௮)

பிதிர்முதற்குருவீறுகப்பிண்டதானமுநன்காற்றி
யதிர்வருபுனற்சிராத்தவிதியினாற்சிராத்தமாற்றி
முதிர்வளத்தனதுமாடமுகிழ்த்தெழுமுவப்பிற்புக்குக்
கதிர்மதிமறையோர்க்குண்டிவெறுத்திடக்கனிவினூட்டி. (௨௯)

அன்னவராசிபெற்றேயாத்திரைநியமநீங்கித்
தன்னுடைநியமம்பூண்டுதழைபவரடையும்பேற்றை
யின்னதென்றேவர்சொல்லவலருலகெங்குமாய
முன்னவன்புகழ்க்கும்பேசனொருவனேமொழிவனன்றே. (௩0)

மாமகதீர்த்தமகிமைப்படலம் முற்றிற்று.

ஆ௨ திருவிருத்தம்-௮௮௪.

## நவகன்னியரருச்சனை விதிப்படலம்.

---

திருப்பொலிமாமகதீர்த்தநீர்க்கரை
யிருக்குமொன்பதின்மரொன்றியம்புங்கன்னியர்
மருத்தபொற்றுமரைமலரினுற்றிடு
மருச்சனைப்பெயர்முறையறைகுவாமரோ. (க)

(வேறு.)

திரிபதகைதேவியே சீமதிசானவியே சிறந்தவீட்டுமமாதா வுலோகமாதாவே, யரியசுவர்த்துனிமேரு சம்பவைகற்றவரோ யறைதிரிலோசனசடோற்பூதைசத்ததாரா, வுரியசுபாவகையிவையோர் பதினொன்றுங்கங்கைக் குறுநாமஞ்சூரியசம் பூதைகாளிந்தி, தரியலர்தாழ்யமசுவசா சுத்தைகாமதையே சாந்தையேயனந்தைசுபாங் கினிவசுப்பிரதையே. (உ)

மேயவசுமதிவசுப்பி ரீதையிப்பன்னொன்றும் விளக்கமிகும்யமுனாதிக் குறுநாமமென்ப, தூயசோமோற்பவையேய ருட்சோமமுகியே சோமசேகரப்பிரியை நன்மருமரூபி, பாயசுமர்மார்த்தனித ரிசனிசுப்பிரபையே பகர்சுலபை புண்ணியையா வருந்துதிக்குமிரோவை, யாயபுகழ்மேகலகன் னிகைசருவக்ஞையையிவ் வாறொடைந்துநருமதைநன் னதிக்குரியநாமம். (ங)

சாந்தநவைசமரூபி சமப்பிரதையறிஞர் தாம்புசமுஞானவயி ராக்கியதைமறங்கொ, ணுந்தகமாகியஞான ரூபியளப்பருமஞ் ஞாநவிபேதினிமேரு கோடரசம்பூதை, யாந்தகவின்மேகநாதாநுவர்த்தினியே யலங்குபிரதீசிசண்டவேகாட்டியையே, போந்தபெருமாயாவிச் சேதகாரிணியே புகன்றவிவைபதினொன்றுஞ்சரச்சுவதிநாமம். (ச)

கோதைகவுதமவநா சிநிசத்தஸ்ரோதை கூறுசத்தியவதிசத்தியரூபிநாளு, மோதைகெழுசுவாசினியே சுலபையறிவுடையோ ருறைக்குஞ்சூக்குமதேகாட்டியையேகாவர்த்தை, மேதையர்சொன்மலாபகைபத் தவிட்டதையிங்கெடுத்து விளம்பியபன்னொன்றுங்கோ தாவரிநன்னுமம், காதைகெழும்புகழ்விதிசம் பூதைகலியாணி கடவுளர்வந்தினிதேத்துங் காமதாயினியே. (ரு)

பரவுகலியாணதீர்த் தரூபிசையாசலவுற் பவையுலோபாமுத்தி ராசுவசாஸ்யாமா,விரவுகும்பசம்பவவல்லபைவிண்டுமாயை மெய்ச்சோளமாதாதக் கணுபதசானவியே, யுரவுறுமிப்பதினொன்றுங் காவிரிநன்னும மோங்குகன்னியாநதியே தேவிகனகாபை, கரவுதவிர்சரூச்சைகலா வதியேகாமதையே கனகாமப்பிரியவரப் பிரதைநவில்காளீ. (சு)

வருகாமப்பிரதையொடு காலதாயினியே வாழ்கமடாகலேகன்னி கைப்பெயர்பன்னொன்ரும், பொருபாபகாரிணியா லகைபரிமோதினியே பூரணபூர்ணவதிமோ கைமோகாவதியே, திருவளருஞ்சுபையந்தர் வேகவதிவேகை திகழ்சர்வேச்சிதபலப்பி ரதையிவைபன்னொன்றும், பெருகுபயோட்டிணிநாமஞ் சண்டவேகாட்டியையிட் சுவாகுகுலவல்லபைரா மப்பிரியைமாதோ. (எ)

மன்னுசுபாராமதடத் துவயவிராசிதையே வயங்குசரப்பிரவிருத்தை மகிழ்ந்திடுமெய்யாங்கை, முன்னுதிருவளித்தருளைக் கியபலதாயினியே முத்தர்பலர்புகழ்சருசி ரங்கவல்லபையே, பன்னுமோகதாயினியே பூரணகாமதையே

பாடுபுகழ்ப்பத்தவிட்ட தானசவுண்டீனா, மின்னுமிவைபதினொன்றும் வெண்ட ரளமெடுத்து வீசுதிரைப்புனற்சரயு நாமமெனமொழிவர். (அ)

ஏற்றபுகழொன்பதின்மர்க்குரைத்தபதினொன்றே டியற்பெயருஞ்சேர்ந்து தனித்தனியீராறு, மாற்றரியபன்னிரண்டையொன்பதினோடுறழ வந்தனநூற் றெட்டென்றவயங்குதிருநாமம், மாற்றவிவைபடிப்போருங் கேட்போருமனை ய ராருக்கிலக்காவர்மகவிலரும்பெறுவர், போற்றுதனவாஞ்சையர்மற்றஃ தடைவரிந்தப் புனிதமாமந்திரமந்தணமாகுமென்றும். (கூ)

(வேறு.)

இன்னமந்திரத்தையோதி யெழில்பெறவருச்சித்தேத்திப்
பன்னருநும்பால்வந்துபாதகமனைத்துந்தீர்ப்பான்
முன்னருங்கொடியேனின்றுமுழுகுவேனென்றிரந்த
பின்னர்நல்லபிழகேசர்சந்நிதிபேணிச்சென்று (கo)

அவர்மலரடிகள்போற்றியாரருளனுஞைபெற்றுத்
தவர்புகழ்தீர்த்தஞ்சூழ்ந்து சதுமுகன்றீர்த்தஞ்சார்ந்து
கவர்மனமணுகாவங்கட்கனகமண்டபத்துமேய
துவர்படிசடிலக்கும்பநாதனைத்தொழுதுபோற்றி. (கக)

மற்றவரனுஞைபெற்றுச்சங்கற்பம்வழாதுசெய்து
சுற்றவர்புகழாநின்றபவித்திரக்கையராகி
நற்றவரெடுத்துச்சொற்றநறுங்கனியங்கைக்கொண்டே
யுற்றவருவப்பநீராள்வருணனுள்ளுவப்பவேண்டி. (கஉ)

எடுத்தவிப்பவத்திற்செய்தபாதகமிரிப்பதன்றிக்
கடுத்தமுற்பவத்துஞ்செய்தபாவமுங்கழிப்பானெண்ணி
யடுத்தனனடியேனின்னேயருளுதியண்ணலென்று
தொடுத்தபன்முகமன்கூறிச்சுற்றமுமுய்வானெண்ணி. (கங)

பலத்தினைநீருளிட்டுப்பகர்விதிப்படியேமூழ்கி
நலத்தினைப்பிதிர்தேவெய்தத் தருப்பணநயந்துசெய்து
வலத்தினைமருவுந்தீர்த்தபாலர்வைவேற்குமாரர்
புலத்தினையருளோர்கோட்டுப்புண்ணியர்சண்டிகேசர். (கச)

வலிகெழுசூலக்காலவயிரவராதியோரை
யொலிகெழுமன்பிற்போற்றிக்கும்பநாயகரையுன்னிக்
கலிகெழுபிரமன்வைத்தகரையமரரைச்சூழ்ந்து
பொலிகெழுதழுவல்செய்துமற்றதைப்பொருந்தத்தாழ்ந்தே. (கரு)

அத்தருவடியின்வைகித்தானங்களனைத்துஞ்செய்தே
யுத்தமவிசுவநாதரொளிவளர்கவுதமேசர்
சுத்தநற்றிருநாகேசர்சோமேசர்நெடும்பாணேச
ரித்தகையோரைப்போற்றியிருந்திடல்வேண்டுமன்றே. (கசு)

நவகன்னியரருச்சனைவிதிப்படலம் முற்றிற்று.

ஆஉ திருவிருத்தம் - அகஎ.

---

## நானதானுதிவிதிப்படலம்.

வானவர்முனிவர்வித்தியாதரர்வசுக்கள்சித்த
ரானவர்நிருதர்மற்றைச்சாரணர்கருடர்நாகர்
மானவர்பலருஞ்சூழுமாமகப்பெருந்தீர்த்தத்து
நானதானுதிசெய்யும்விதியினைநவிலலுற்ரும். (க)

பரசிவபெருமான்பாதபத்தியிற்சிறந்தோராய
வரமிகுமறையோர்தம்மைவரவழைத்தாதளத்தா
தரமுறவிருத்திநன்குசாரருக்கியங்கொடுத்து
விரவுசந்தனமென்பூவால்விளங்குறப்புனைந்துபின்னர். (உ)

குடநிகர்செருத்தனல்லான்குலவெழிற்கன்னிசெம்பொன்
றடநிழற்கவிகையாடைசாத்துபவீதம்பாய்மா
தொடர்புடைத்தாசியேறுதூயபால்சுவைசாலன்னங்
கடவுளர்களும்வாயூறும்பாயசங்கற்பதாரு. (ௐ)

தானியம்விபூதிகந்தந்தானமுன்மணியோடொன்பான்
றேனினியல்வளம்பல்செழும்பலநறுந்தாம்பூலம்
வானியலிவைகளோடுமந்தணதானமற்று
மானியிலன்பிற்போற்றியமைதரநல்கிப்பின்னும். (ச)

தூயகோதூமமேலாற்பழங்களைச்சுமத்திவைத்துப்
பாயவத்திரத்தான்மூடிப்பரிவொடுகொடுத்தல்வேண்டுந்
தாயவாம்பரிமால்யானைதவாவலியெருமைப்போத்து
மேயவன்பிடர்சாய்கோட்டுமெய்ம்மயிர்ப்பள்ளையேறு. (ரு)

இருமுகச்சுரபிகாலபுருடனெள்ளிவையுநன்கு
மருவுறக்கொடுத்தல்வேண்டும்வகுத்தமற்றிவற்றுட்கற்ப
தருவமர்தானமிக்கவிசேடமித்தவாதயாவும்
பொருவறநானஞ்செய்யும்பலனுண்டாம்பொருட்டேநல்கல். (சு)

மருவியாண்டளப்பான்சிங்கராசியில்வருமப்போது
கருதுபல்புவனத்துள்ளகங்கைமுற்றீர்த்தமெல்லாம்
பொருவின்மாமகநீராடும்பொருட்டொளிர்கும்பகோணத்
திருநகர்மருவிவைகுந்திகழுமவ்வாட்டைதன்னில். (எ)

ஏற்றமார்காசியாதியெவ்விடத்தேனுஞ்சென்று
போற்றுநீர்முழுகினூலும்புணர்பயனென்றுமில்லை
சாற்றருமெல்லாத்தீர்த்தப்பயனெலாஞ்சாருமாறு
மாற்றரும்புனிதமாமாமகதீர்த்தமுழுகல்வேண்டும். (அ)

கோடிபுண்ணியமுள்ளாருங்குளிர்பொழிற்கும்பகோண
நாடிமாமகதீர்த்தத்துநன்குறமுழுகாரொன்னி
வீடிமற்றவர்பன்னாளுநிறைத்தபுண்ணியங்களெல்லா
மூடியேயொழியும்யானையுண்டதிங்கனியும்போலும் (கூ)

மாமகவருடந்தன்னின்மலரவனாதிவானோர்
காமருதீர்த்தமாடல்கருதியொண்கும்பகோணப்
பூமலிநகரமேவிவசிக்கின்றார்பொலியுந்தத்த
மேமநன்னகரவாழ்க்கையெண்ணிலராகியற்றால். (௧௦)

அந்தநல்வருடந்தன்னிலகலிடத்துள்ளார்யாரு
மெந்தநற்கருமமேனுமியற்றிடிற்பயன்படாது
சந்தநற்கருமமந்தத்தலத்தினையவாவிச்சென்று
பந்தமுற்றொழியவந்நீர்படிந்துயர்வடைதலொன்றே. (௧௧)

கடிமணஞ்சவுளமேலாக்களையுபநயனஞ்செய்தல்
படிதவிர்கூபம்வாவிபனவரிற்பதிட்டைசெய்த
னொடியிலெவ்வருணத்தாருநோக்குமவ்வாண்டிற்செய்யார்
முடிவிலோர்பயனுமின்றிக்கழிவதைமுன்னிமாதோ. (௧௨)

வழிவருமாட்டையின்கண்மலரவனெடுமாலாதிப்
பழியில்வானவருங்கங்கைமுதற்பலபுனலுந்தத்த
மொழிவருந்தானஞ்சேர்ந்துவிளங்கலாலுஞற்றும்யாவுங்
கழிதராவிதமவ்வாண்டிற்கடைப்பிடித்தியற்றல்வேண்டும். (௧௩)

கடியவெங்கலியினந்தக்கலிதருதோடநீக்கி
நெடியவனுணராவெங்கணின்மலப்பெருமான்றாளிற்
குடியமர்சிறப்புமுன்னாக்குறித்தபற்பலவுநல்கும்
படியதத்தீர்த்தமொன்றேபார்முழுவதுந்தேர்ந்தாலும். (௧௪)

மறையவர்குரவன்றந்தைமாதேவனிவற்குச்செய்த
நிறைபெருந்துரோகந்தியோர்பாற்சென்றுநிதிமுற்கோட
லறைதருமவரைநட்டலான்றநட்பிடைவஞ்சித்தல்
குறையகறீர்த்தநிந்தையிவ்வகளாற்கூடுந்தோடம். (௧௫)

சிவதிரவியங்கைக்கோடல்சிவதருமத்தைக்கோறல்
சிவதளிக்காகமுன்னோர்செய்தசெம்பொருளைவௌவல்
சிவனமர்தளியுட்சென்றுசெயத்தகாக்கருமஞ்செய்தல்
சிவபரன்றனைப்பூசிக்குந்திருமறையவரையெள்ளல். (௧௬)

நண்ணியவுருத்திராக்கஞானநூல்கரவிற்கோட
லண்ணியதந்தைசெய்தவறத்தினைப்பிறர்பால்விற்றல்
புண்ணியவரசுவில்வமுதற்பொலிவறக்கெடுத்த
லெண்ணியதருவேனென்றுமுன்புரைத்தீதராமை. (௧௭)

நீரமைவாவிதூர்த்தனிலவனமாதிவிற்றல்
சீரமைவில்வம்விற்றல்சிவலிங்கங்கரவிற்கோடல்
பாரமைகன்னிவிற்றல்பசுக்களைவருத்தஞ்செய்த
லேரமைநட்பினோரைப்பிரித்துமிக்கிகலுண்டாக்கல். (௧௮)

கருவினைச்சிதைவுசெய்தல்கன்னியைத்திருடல்வானோ
ருருவினைச்சிதைத்தல்வேலைமுயன்றுறமிடித்தாரொய்துந்
திருவினைச்சிதைத்தனீழலொடுபயன்சிறப்பநல்குந்
தருவினைச்சிதைத்தறண்டாற்சர்ப்பத்தைப்புடைத்துக்கோறல். (௧௯)

சூதகவடிசிலுண்டனட்பிடைச்சொற்றயாவு
மேதகவொழிவிரோதமேவிடிற்பிறர்பால்விள்ளல்
காதகமுருடர்பின்போய்க்கைகட்டியேவல்கேட்டல்
பாதகமனைத்துஞ்செய்யுங்கொலைசெய்துபரிந்துண்டல். (உ0)

சிவனடியவரைக்காணிற்சென்றெதிர்தொழற்குநாணல்
சிவனடியவருக்கூறுதீர்த்திடாதிருத்தன்மேலாஞ்
சிவனடியவர்கைக்கொண்டபொருளினைக்கவர்ந்துசீறல்
சிவனடியவருக்கூட்டாதயல்வைத்துச்சிறப்பவுண்டல். (உக)

பரமனைவியர்தோடோய்தல்பரிவின்மற்றுடன்பிறந்த
வரமடந்தையர்தோடோய்தன்மாமியர்தந்தோடோய்த
லிரவின்வெவ்வலியிற்பற்றியிழிந்தமங்கையர்தோடோய்தல்
புரவின்மங்கையர்தோடோய்தல்பூத்தமங்கையர்தோடோய்தல். (உஉ)

கன்றுயிர்பதைப்பவாவைக்கறந்துபாலுண்டலொன்று
தொன்றுபட்டிருந்துவேட்டதுற்றபினொழிந்துபோதல்
பொன்றுவெவ்விடங்கொடுத்தல்பொலிதழன்மனையில்வைத்த
லென்றுவந்தெழுதறோர்ந்துமினைவிழைச்சொழியாதோம்பல். (உங)

ஈன்றவர்சிராத்தநாளிலேந்திழையவர்தோடோய்த
லீன்றவர்பசித்துவாடக்கண்டுமின்னமுதமுண்ட
லீன்றவர்சிராத்தஞ்செய்யாதிகழ்ச்சியின்மறுத்துப்போக்க
லீன்றவர்தளர்ந்தகாலத்தெறிந்துவைதிழித்துப்போக்கல். (உச)

உறுவரர்கொடுக்குநீற்றையொருகரநீட்டியேற்றன்
மறுவறுகற்பினோர்க்குவழுவுறத்தோடமேற்றல்
சிறுவிலைக்காலமேவச்சிந்தித்தலீதராது
மறுவுறப்பொருளையீட்டிமண்ணுறப்புதைத்துவைத்தல். (உரு)

இனையவைவிளைக்கும்பாவமெண்ணியமனவாக்காதி
யனையவைவிளைக்கும்பாவமதிபாவமுபபாவங்கூர்
வினையமர்பாவமுற்றும்வெயின்முனம்பனிபோனீங்கும்
புனையமாமகநீர்சொன்னவிதிப்படிபோந்தமூழ்கின். (உசு)

உற்றமாமகதீர்த்தத்திலொருதரம்பரிந்துமூழ்கிற்
சொற்றமாபாவமெல்லாஞ்சுடர்முனமிருள்போற்போகுங்
கற்றமாதவருமேத்தக்கமழுமெய்ஞ்ஞானமுண்டாங்
கொற்றமார்முத்தியின்புங்கூடுறத்தடையொன்றின்றே. (உஎ)

அத்தகுதீர்த்தந்தன்னிற்றினந்தொறுமாடல்செய்த
லுத்தமமாகுமன்னதொல்லுமேதென்னின்மாசி
சித்திரைத்திங்கணற்கார்த்திகைமதியிந்தமூன்றும்
வித்தகமாகவாடல்வேண்டுமாலறிவின்மிக்கீர். (உஅ)

அன்னதுமொல்லாதென்னினவிர்குடமதியினேனு
நன்னர்செய்முதனாட்டொட்டுநலமருவிறுதிகாறு
மென்னருமுழுகல்வேண்டுமின்னதுமுடியாதென்னிற்
சொன்னநன்மகநாளேனுந்துணிந்துபோய்முழுகல்வேண்டும். (உகூ)

மறறதுமுற்றுதென்னின்மாமகநாளிலேனும்
பற்றறமுழுகல்வேண்டும்பங்கொடுவறுமையாலே
சொற்றதுமுற்றுதென்னிற்றுணேந்துபோய்மூழ்கினேனாக்
கற்றவர்புகழுமாறுகண்டுகும்பிடுதல்வேண்டும். (நூ0)

உரைத்ததுமுடியாதென்னினுயர்குடமூக்குத்திக்கில்
விரைத்தநன்மலர்கவேிமேதகப்பணிந்துபோற்றி
நிரைத்தமாமகநீருள்ளஞ்சிந்தித்தேயிருத்தல்வேண்டும்
புரைத்தமற்றதுமுற்றுதேற்புகலுவதப்பாலின்றே. (நூக)

குருவிடைமாதத்தோற்றங்குலவுமீரயனம்பாம்பு
நகுமதிகதிரைத்தீண்டுநற்றினம்பிருகுவார
மிகுவிதிபாதமாரல்விடுகயதுரங்கச்சாயை
தகுசிவநிசியிந்நாளின்மூழ்கினுந்தவாதநன்காம். (நூஉ)

குடமதிமகதீர்த்தத்துக்குலப்பிதிருவகையெய்தத்
தடவிரணியசிராத்தந்தருப்பணமெதுசெய்தாலு
மடல்செழுகயையின்மேவியயுதஞ்செய்வதனுளுள்ள
திடமிகுபயனேயெய்திச்சிறப்புறவாழ்வர்மாதோ. (நூநூ)

அதிசாரனுகவேனுமவக்கிரனுகவேனுந்
துதிமேவுமாண்டளப்பான்சிங்கத்திற்றொடரவந்தா
னிதிநேர்மாமகமேயென்னவிசழ்தருகாலமுண்டா
மதியோடாண்டளப்பானென்றேரிராசியின்மருவுவார்கள். (நூச)

ஆன்றுறுமுவாவுமிக்கவிசேடநாளாகுமின்னு
நன்றுறுகுட்டத்திற்செங்கேழ்ப்பரிதியுநகுசிங்கத்தி
லொன்றுமாண்டளப்பவன்றனுறின்மகாமகவிழாவா
மென்றுநூலுணர்ந்தோர்சொல்வார்யாவையுமுணர்ந்துளீரோ. (நூரு)

பன்னிரண்டாண்டிற்கோர்காற்பகருமாண்டளப்பான்சிங்க
மன்னினன்வருமப்போதுமாகமாமகமந்நாளிற்
கன்னியரத்தீர்த்தத்துங்கடத்திடையுதித்தநாதன்
சந்நிதியிடத்தும்வாழ்வார்சாகரூகைகளாய்மன்னே. (நூசு)

தவமலிவுடையோர்போற்றுமாமகந்தவாதநாளும்
பவவியவிளம்பிசாதாரணதுந்துபியும்பராவு
மவமறவவ்வவாண்டிலணைந்தநன்னீர்மூழ்கிச்
சிவபிரானுதிகும்பநாதனைச்சேவைசெய்து. (நூஎ)

கூறியவிசேடபஞ்சக்குரோசயாத்திரையுஞ்செய்து
நாறியகடுக்கைமோலிநாகேசராதியோரை
யேறியவன்பிற்போற்றியேற்றதானமுநன்காற்றி
வீறியகும்பநாதன்மேம்படுபணியுஞ்செய்து. (நூஅ)

மறைபலவுவந்துபோற்றுமங்களவல்லிபாத
நிறைபெருவிருப்பிற்போற்றிநிலவுமத்தலத்துவாசங்
குறையறச்செய்துமேலாமுவகைதென்புலத்தார்கொள்ளக்
கறைதபுசிராத்தஞ்செய்புரியதிகைக்கொண்டாரெல்லாம். (நூகூ)

கணிதமில்செல்வத்தோடுகாசினிபுரத்தல்பூண்டு
பிணிசிறிதேனுமின்றிப்பெருங்கிளைசூழவாழ்ந்து
மணிகிளர்தெய்வநாட்டுமன்னனாய்விளங்கிப்பின்பு
பணியணிபுகழ்க்கும்பேசன்பதங்கலந்தின்பந்துய்ப்பார். (௨0)

ஞானதானவிதிப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். கூ௩௭

---

## சண்டிமுத்தியடைந்தபடலம்.

வண்டிவலைமணிகொழிக்குமாமகதீர்த்தங்குடையா
வுண்டிசுருக்குதலாதியுற்றபெருவிரதியரோ
கண்டிவருங்குடமூக்கிற்கடேசரடிகைதொழுதி
சண்டியுயர்கதியடைந்தகாதையினிச்சாற்றிடுவாம். (க)

எள்ளரியமலர்வாவியிடத்துவெடித்தெழுவாளைக்
கள்ளரியதென்னுதகற்பத்தின்கழுத்தொடிக்க
விள்ளரியவானுடர்மேன்மேலும்வெருஉக்கொள்ளுந்
தள்ளரியபெருவளமேசால்சவுராட்டிரதேயம். (௨)

அன்னவளமலிதேயத்தந்தணர்தங்குலத்துதித்தான்
றன்னனையபெருந்தவத்துச்சவுனகற்கோத்திரத்தான்
மின்னனையமுந்நூலேபுறந்தோன்றிவிளக்கமுறப்
பன்னரியபன்னூலுமகங்கொண்டபான்மையினான். (௩)

வெள்ளியநன்னீறணிந்துமேதருகண்மணிபூண்டு
வள்ளியவைந்தெழுத்தெண்ணுமாறுதவியமத்தா
னுள்ளியபன்மறையோருமுனற்றரியபன்மகமு
நள்ளியவன்பொடுசெய்தானுன்மறையின்முடிபுணர்ந்தான். (௪)

நாலாயமறைமுடிபாநன்னெறியேநெறியாக்கொண்
டாலாயவயிற்றுமைகூற்றண்ணலுருக்குறித்திருப்பான்
பாலாயவிராசமுதற்பதின்மூன்றுமறக்கடிந்தம்
மேலாயநெறியுற்றான்வேதசன்மனெனும்பெயரான். (௫)

அன்னமறையவன்மனைவியருந்ததியிற்சிறப்புடையா
டன்னமர்காதலன்வழியேசாருமொருதுணிபுடையா
ணன்னரதிதியரடையினயந்தூட்டும்பெருங்குணத்தாள்
கொன்னவில்வேலனுக்கியகட்குணவதியென்றிடும்பெயராள். (௬)

அத்தகையபார்ப்பனிதனுவிலைநேர்தருமசட்டி
னுத்தமநற்குணமனைத்துமோருருக்கொண்டெனமருவா
வித்தலமேன்மேற்புகழவத்தலமுமெடுத்திசைப்ப
வித்தகமேவொருமைந்தன்வெளிக்கொண்டுவந்தனனால். (௭)

அன்னவன்சத்தியசீலனெனுநாமமறைதரக்கொண்
டுன்னரியமறையாதியுள்ளபலகலையுணர்வாற்
சொன்னவிலும்பெருங்குணத்தாற்குற்றமிலாநல்லொழுக்காற்
றன்னனையதந்தையினுமேம்பட்டான்றனாவியப்ப. (அ)

அந்தமகன்பொலிவுதெரிந்தற்புதங்கூர்மறைச்சருமன்
சந்தமிகுநன்னாளிற்சண்டிதனைமணம்புணர்த்தி
வந்தமகிழ்ச்சியிற்பலநாள்வசித்திருந்துபின்னாளிற்
பந்தவுடற்பரநீத்தான்பண்ணவர்களெதிர்கொள்ள. (௯)

ஏன்றபுகழ்ப்பெருங்கணவனிவ்வுலகநீத்ததனைத்
தோன்றவுளத்துணர்ந்துபெருந்துயர்க்கடலின்மூழ்கியபி
னூன்றமிகுதுணிபனையானுடன்பிரியாவாழ்க்கையுற
வான்றகுணவதிமாதுமனுமரணஞ்செயத்துணிந்தாள். (௧0)

அன்னையுறுதுணிபையுணர்ந்தலறுபுசத்தியசீல
னென்னையிதுசெயத்துணிந்தாயென்னையடியேன்புரிதோந்
தன்னைமறைத்தொழிந்தானிற்றாய்புரிதலழகாமோ
முன்னைவினையிப்படியோமுடிந்ததெனப்புலம்புதலும். (௧௧)

பற்றுமிகக்கொடுதுயரிற்படுமைந்தன்முகநோக்கிச்
சற்றுமொருசலனமிலாத்தாய்துணிபினிஃதுரைப்பாள்
கற்றுமுழுவதுமுணர்ந்தகாதலவென்வாய்மொழிகே
ளுற்றுமகிழ்நனைப்பிரியாருத்தமமங்கையரானோர். (௧௨)

கொழுநனமுதுண்டதன்பின்றாமுண்பார்குலவுபணி
யொழுகியவன்றுயின்றதனபின்றாந்துயில்வாருறங்கியவ
னெழுவதன்முனெழுந்திருப்பாரில்லறத்திற்குரியவராய்ப்
பழுதகல்கற்புயர்நெறிகொள்பண்புமிகுபாவையரோ. (௧௩)

வனைதருபொற்கலனனைத்துமாற்றவளுக்கீதரினுந்
தினையளவுமுனியார்கடனிவழியுஞ்செல்லார்க
ளனையினுமோர்முதுமாதர்துணையன்றியயலகத்து
நினைதரார்புகுதல்செயநீடியகற்புடைமாதர். (௧௪)

ஆயகறைமேற்கிடக்குமம்மியின்மேலுலக்கையின்மேற்
பாயவெழினிறைவாயிற்படியின்மேன்மரீஇயமரிற்
றூயதிருவகலுமெனதுண்ணிந்திராரொஞ்ஞான்று
நேயமிகுபெருங்கற்புநிறைந்தகுலமடமாதர். (௧௫)

புறமாகுமூர்நாளுநோக்குறார்புருடன்முக
மறமாகும்விளாந்தென்றேர்மொழியேனும்வசனியா
ரறமாகும்படிபுனலிற்றோய்ந்தனையன்முகம்பார்ப்பார்
திறமாகுங்கற்புநெறிதிறம்பாதசேயிழையார். (௧௬)

புண்ணியநன்னீராடல்போற்றுமொருநோன்புகொள
லெண்ணியநான்முகன்முதலோரிமையவரைத்தொழுதேத்த
லண்ணியநாயகனனுஞையல்லாதுசெயத்துணியார்
கண்ணியவான்பெருங்கற்புக்கடப்பாட்டுக்காரிகையார். (௧௭)

கடவுளாரியனின்றுன்காமருறப்பெற்றெடுத்தா
ளுடனுதித்தார்மற்றுமுளவுற்றார்களெல்லோரு
மடமகனுயகனேயென்றொருப்பாட்டின்வாழ்தருவார்
திடமிகுவண்பெருங்கற்பிற்சிறந்துவளர்சேயிழையார். (௧௮)

கற்புநெறிதவறுதார்கால்வைத்தவிடமெல்லாம்
பொற்புமலிகேத்திரமென்றுரைசெய்வார்புண்ணியர்க
ளற்புமிகுகணவனிறவமர்ந்துகுழன்முடிப்பாரேற்
பற்பலநாணரகமுழுந்தும்பதியானேனென்றுரைப்பார். (கக)

என்னுயிர்நாயகனிறந்தும்யானிருத்தலாற்பயனென்
மன்னுயிரென்முகங்காணவிருப்புறுமகிழ்வில்லை
தன்னுயிர்நன்னெறியடைதறடுப்பாருமுளரேயோ
பன்னுயிரிங்கிருந்துமவண்படர்ந்தன்றிக்கதியுண்டோ. (உ0)

ஈன்றதாயடைகதியைவிலக்குதல்புத்திரர்க்கியல்போ
மான்றநீதெளியென்றுமகற்குரைத்தாளப்பொழுதே
யான்றகாவலனுமுணர்ந்தன்னையிதுதவிரெனவுந்
தோன்றவவனையுமறுத்துத்துணிந்தெழுந்தாள்சிதைசேர. (உக)

மன்னவனுமதுநோக்கிமற்றதனைமுற்றுவிப்பான்
பன்னருஞ்சந்தனக்குறடுகுங்கிலியம்பசுந்தைல
நன்னரமைகருப்பூரமுதலியவுநன்குதவத்
தன்னமர்நாயகனோடுந்தழற்சிதைசார்ந்துயிர்விடுத்தாள். (உஉ)

கற்புமடவரல்விண்ணிற்கணவனொருடனமர்ந்தா
ளற்புறுசத்தியசீலனுற்றபரக்கிரியையெலாம்
பொற்புமலிதரச்செய்துதுயர்தீர்ந்துபொலிநாளிற்
றற்புகழ்தலமையாதுசண்டிமுதுக்குறைந்தனளே. (உங)

தன்னுடையமாமிசெயறகவுணர்ந்துமறிவில்லாண்
முன்னுடையதீயூழான்மோகமிகப்பூண்டாளாய்த்
தென்னுடையதன்கொழுநன்றெருப்புறம்போய்வருமுன்னம்
பொன்னுடையபூண்வேற்றுப்புருடர்தோள்கலந்துவப்பாள். (உச)

கொழுநன்வரிற்பாய்க்கிடக்கைகொள்ளுவாளவன்பசியுற்
றழுதிடினுமட்டில்புகுந்தட்டிடாளின்மொழிகள்
பழுதறப்பற்பலசொலினும்பாங்கென்றுசெவியேலாள்
விழுமியதென்பதுகாய்ந்துவேறெல்லாஞ்செய்தொழுகும். (உரு)

இவள்செயுன்மற்றிதுவாகவென்செயுஞ்சத்தியசீல
னவளுரிமையொழியானுய்ச்சின்னுளவ்வாறிருந்து
துவள்கெழுதன்னுடனீத்தான்றூர்த்தையுமிக்குளமகிழ்ந்து
திவண்மணிப்பூண்பலபூண்டுதெருவெல்லாஞ்சஞ்சரிப்பாள். (உசு)

முன்னவரிற்பலர்புணர்ந்தார்மொய்த்தெழுவெங்காமத்தான்
மன்னவரிற்பலர்புணர்ந்தார்வலிந்தணைத்தலானுய்க
ளென்னவரிற்பலர்புணர்ந்தாரெய்தரியமயல்பூண்டு
பின்னவரிற்பலர்புணர்ந்தார்பெய்வளைத்தோட்சண்டியையே. (உஎ)

ஒல்லாமலிவளொழுகற்குற்றவினையாதென்னிற்
செல்லார்வண்பொழில்வேற்றுத்தேயசாகலமறையோ
னல்லார்சொல்பிதிருவப்பானுடுசிராத்தம்புரிந்தான்
வல்லாருண்டவர்களிலோர்மறையவனுண்டதுகான்றுன். (உஅ)

நட்டநமக்குற்றதெனநாடியுளத்துறவுணர்ந்து
சட்டமறுநாள்வேறுசமையான்வாளாவிருந்தான்
பட்டவறியாமையினப்பண்புநோக்கியபிதிர
ரிட்டமறநீகெடுதிகுலநசிக்கவென்றுரைத்தார். (௨௯)

பிதிர்சாபந்தடித்தெழுந்துபிதிராதுவளைத்திடலு
மதிர்சேரநெருப்புவிழுந்தழிந்ததவளமர்கிரக
முதிர்சோகமுறவறுமைமூடியதந்நாடொழிந்து
விதிர்சேர்சாகலனடைந்தான்வேறுதேயம்புகுத. (௩0)

மனைவியொடும்பிதிர்சாபம்வளைத்தகாலத்துதித்த
புனையிழையிச்சண்டியொடும்வழிநடந்துபோகுங்காற்
றனையமுகிலெழுந்துமழைசொரிந்துருமுவீழ்த்திடலா
லனையமனையொடுமடிந்தானறிவில்லாச்சாகலனே. (௩௧)

எஞ்சியவிச்சண்டிமெலிந்தெழிற்சவுராட்டிரமடைந்து
தஞ்செனவோர்மறையவன்பாற்சார்ந்துவளர்ந்தவன்கொடுப்ப
வஞ்சமில்சத்தியசீலன்மனையானாள்பிதிர்சாபந்
துஞ்சவுதித்தமையாலித்துட்டையாயினளம்மா. (௩௨)

பன்னாளிப்படிக்காமம்பற்பலர்பாலினுந்துய்த்த
மின்னாள்வெவ்வராத்தீண்டமெலிந்துயிர்விட்டனளொருநாட்
டன்னாள்கொண்டெதிர்விடுக்கத்தண்டதரன்மிகச்சினந்து
சின்னாள்வெங்கொடுந்தண்டந்தீராதுசெய்ததற்பின். (௩௩)

அலக்கணுறமூன்றுமனுவந்தரம்பொல்லாநிரயக்
குலக்கணமுத்துபுவிடுக்கக்குளிர்கோதாவரிதீரத்
தலக்கணமர்பிரமேசர்தளிப்பணிசெய்தனக்கிணையிந்
திலக்கணிலாச்சுப்பிரபைமகளாகிநிகழ்ந்தனளே. (௩௪)

பருவமுறும்பொழுதுமுனம்பதிக்காற்றுதுரோகத்தா
லுருவவிலைமகள்கிருமியுற்றரோகத்தாலும்
வெருவவெழுமூத்திரரோகத்தாலுமிகமெலிந்தா
டிருவமிகுபுருடரெலாஞ்சீசீயென்றிகழ்ந்திடவே. (௩௫)

அந்தநாண்மாகமகமணித்தாகவுற்றுணர்ந்து
சந்தநான்மறையவர்கள்குடமூக்கைச்சார்தருவான்
முந்தவாதரத்தெழுந்தார்முன்பதிசெய்சிவபூசைக்
குந்தவோர்நாளுதவியுஞற்றியபுண்ணியமுதவ. (௩௬)

அன்னவர்தம்மொடுங்கூடியவருரைக்குந்திப்பியமாம்
பன்னருநற்குடமூக்குமான்மியம்பண்புறக்கேட்டு
மின்னகுநுண்ணிடைமடந்தைமேவிநாடிருக்குடந்தை
முன்னருமாமகதீர்த்தமவரொடும்போய்மூழ்கினாள். (௩௭)

முழுகியெழுதலுங்காணாண்மூத்திரரோகமுஞ்செந்நீ
ரொழுகியழிதருகிருமிரோகமுமுள்ளூறவுவந்தாள்
பழுதமையமுன்புரிந்தபாவசேடமுங்கழிந்த
திழுதையராடினுந்தீர்த்தந்தன்னியல்பினிரிதருமோ. (௩௮)

அந்தமறையவர்களொடுமைங்குரோசமுஞ்சூழ்ந்தாள்
பந்தமறுத்தடியாரைப்பரிந்தளிக்குங்கும்பேசர்
மந்தவுணர்வொழித்தருளுமங்களநாயகியிவர்முற்
சந்தமலியாவவரையுந்தரிசித்துவிடைபெற்ருள். (௩௯)

மீட்டுமறையவர்களொடுமேவிக்கோதாவரிநீர்
நாட்டுகரையிடத்தமர்தன்னகர்புகுந்துமிகவாழ்ந்து
பாட்டுமறையுணராதகும்பேசர்பதங்கருதிக்
கோட்டுமுலையவளடைந்தாள்கோலமலிசிவலோகம். (௪௦)

சண்டிமுத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௯௭௭.

## கிருதவீரியன்புத்திரனையடைந்தபடலம்.

அத்திரமாலெனவங்கைக்கொண்டவை
வத்திரவரனடிவயங்குமன்பறு
கித்திரமருவியகிருதவீரியன்
புத்திரவளமுறல்புகலுவாமரோ. (௧)

வயலின்வண்டாமரைக்குளத்தின்வாவியி
னயலினல்லோடையினமைந்தகால்களிற்
பயலினெண்கொக்கரைபயின்றுலாவிடு
மியலின்மல்கேகயமென்னுந்தேயத்து. (௨)

பொருதவரனைவரும்புறங்கொடுத்திட
வொருதவர்வளைத்துமிக்குடலுமாண்பினன்
விருதவரியாவரும்விழைந்துபோற்றிடுங்
கிருதவீரியனெனக்கிளக்குமன்னவன். (௩)

ஆதிநாட்டருமறூலனைத்துமோர்ந்துதோங்
காதிநாட்டஞ்சிவன்கழல்வைத்தார்களு
மோதிநாட்டரும்வளமொருங்குமல்கிய
சேதிநாட்டமர்புகழ்சிறந்தமன்னவன். (௪)

ஆயவனருந்தவத்தழகிற்றேன்றிய
தூயவண்பெருங்குணச்சோபனுங்கிமுன்
மேயவரறுவரைவிதியின்வேட்டனன்
யாயபல்புவனமும்பழிச்சவாழுவான். (௫)

சுந்தரமருவியசோபனுங்கியோ
டந்தரமணவுதன்னடுக்குமாளிகைச்
சந்திரகாந்தஞ்செயுபரிகைத்தலை
யிந்திரதிருவனேர்தினத்திருந்தனன். (௬)

மன்னவனத்தலைமருவிடும்பொழு
துன்னரும்பெருவளமோங்குமந்நகர்ப்
பின்னவனொருவனேர்பிள்ளைபெற்றன
னென்னருமிழித்திடுமியல்பனச்சிறுன். (௭)

ஒருசெவியில்லவனொருகணில்லவன்
பருவரநாசியோர்பாதியில்லவன்
பெருநகைவெளிப்படவோட்டம்பேர்ந்தவ
னிருகரத்தினும்விரலதிகமேய்ந்தவன். (அ)

அனையவனத்தெருவாடுமைந்தரோ
டினைதரலின்றிமற்றிணைந்துமன்னவன்
புனைதருமாளிகைமுன்புபோந்தன
னினைதருமாட்டெலாநிகழ்த்திமேவினான். (கூ)

பெற்றவன்வெளியிடைநின்றுபேணுமி
லுற்றனன்மைந்தனையுவப்பக்கண்டிலான்
பற்றுடைமனைவியைப்பார்த்துநங்குலத்
தற்றமின்மைந்தனெங்கடைந்துளானென்றான். (க0)

அன்னவண்மறுகிடையாடுமென்றன
ளென்னகாரியஞ்செய்தாயென்றுகோபியா
முன்னரும்விருப்பொடுமுயன்றுதேடினான்
மன்னவன்மனையெதிர்வந்துகண்டனன். (கக)

காண்டலும்விருப்பொடுகனிந்தெடுத்தனன்
பூண்டபல்லுறுப்பினும்புழுதிபோக்கினான்
மூண்டவன்பமைதரமுத்தங்கொண்டன
னீண்டடைந்தமையெவனென்றுபுல்லினான். (கஉ)

மற்றவன்வந்ததுமகனைக்கண்டதுஞ்
சொற்றதுமுவந்ததுந்தோளிற்சேர்த்தது
முற்றவுமன்னவன்முருகுவார்குழற்
பொற்றொடிமனையொடும்புரிந்துநோக்கினான். (கஙு)

கண்ணவாவாதவிக்காதலன்றனை
யெண்ணவாவன்பின்மற்றென்செய்தானென்று
மண்ணவாநெடும்புயமன்னர்மன்னவன்
பண்ணவாமொழியொடுபரிந்துகூறியே. (கச)

அருகுறும்படிவிரைந்தவனைக்கூவியே
மருவியவிருபவிம்மகவையிங்ஙனம்
பெருகியவிருப்பொடுபேணலென்னெனக்
கருதியச்சூத்திரன்கழறன்மேயினான். (கரு)

ஐயனேயடியனேனமைந்தவங்கிசு
முய்யவந்துதித்துளானும்மையாற்றிய
வெய்யவெந்தீமையால்விருபியாகினான்
செய்வதென்னினியவற்றீர்ந்துநானரோ. (கசு)

புத்திரனெனும்பெயர்ப்பொருளுணர்த்திடி
னுத்தமகதியெனக்குதவுவோனவ
னித்தகைமகனெவ்வாறிருந்தபோதினுஞ்
சித்தம்வைத்தோம்புதல்செய்யநீர்மைத்தே. (கஎ)

என்றுரைத்தடிதொழுதேகினனவ
னென்றுமற்றவனுரையுள்ளங்கொண்டன
னன்றுமற்றிவன்செயலெனநயந்தன
னன்றுதொட்டருமகவாசைபூண்டுளான். (கஅ)

வறுமையன்சூத்திரன்மண்கொளாவொரு
சிறுவனையிங்ஙனஞ்சிறப்பிற்போற்றுமே
லுறுநிலமுழுவதுமொருங்குகாக்குநான்
பெறுவதெந்நாளெனப்பெரிதுமெண்ணுவான். (கசு)

இயல்பினன்மகப்பெறலெண்ணங்கொண்டிடாச்
செயலினனின்னதுதெரிந்துமென்கொலோ
முயலிலனிருந்தனன்மூர்க்கனேனொரு
வயர்வடைந்தனன்மனையாட்டியோடுமே. (உ0)

ஆயதோர்காலையிலறிவின்மேலவன்
பாயநூலனைத்துநன்குணர்ந்தபண்பினன்
மேயசாகல்லியனென்னும்வித்தகன்
றூயமற்றவனவைதுனைந்துமேயினன். (உக)

முனிவனைக்காண்டலுமுகிழ்த்தவோகையிற்
றனியெழுந்தெதிர்கொடுதாழ்ந்துபோற்றியே
யினியநல்லாசனத்திருத்தியெய்தரும்
புனிதநல்லருக்கியங்கொடுத்துப்பூசித்தான். (உஉ)

அம்முனிவரன்மகிழ்ந்தாசிகூறுபு
செம்மலேயிருக்கெனச்செப்பிமைந்தர்முன்
மம்மரில்கிளைஞரும்வலியரோவென
விம்முபேரருளினுல்வினவியினனரோ. (உ௩)

வினவலுமெதிர்பணிந்தெழுந்துவேந்தனு
மனகமாமுனிவநீயாவுந்தேர்ந்துளாய்
கனகமாமுடிபுனைகாதலற்பெறு
வினமிகுமென்றுயரொண்ணிலாததென். (உச)

அறிவிலாவென்முனமடைந்ததீமையரன்
மறிவினின்ஞானமுமறைந்துபோயதோ
நெறிதருமகன்முதலெனநிகழ்த்தினுய்
சிறியனேற்கத்திறஞ்செப்புகென்றனன். (உரு)

என்றலுமுனிவரனுள்ளத்தெண்ணுபு
தொன்றுறுபவத்திடைத்தொடர்ந்தபாவமு
நன்றுசெய்தருமமுநலஞ்செய்மைந்தனை
யின்றியுள்வெதும்பலுமிதனுக்கேதுவாய். (உசு)

அந்நகர்ச்சூத்திரனறைந்தவாய்மையு
மென்னவுந்தெளிந்தனனேந்தன்மன்னவா
முன்னம்யாமுணர்ந்திலேனுய்மொழிந்தனன்
பொன்னினும்விரும்பியாமகனைப்போற்றுவோன். (உஎ)

மொழிதருவார்த்தையான்முளையவாவையுற்
றழிதருநெஞ்சமோடல்லற்பட்டனை
சழிகவத்துயரொனக்கரையமன்னவன்
விழிவழிநீருகவிளம்பன்மேயினன். (உஅ)

முற்பவத்தடியனேன்முக்கண்மூர்த்தியை
யற்பறப்பூசனையாற்றினேன்கொலோ
கற்புடைமடந்தையர்மனங்கலங்குறச்
சொற்படுபழிமிகத்துறுத்தினேன்கொலோ. (உக)

சிவனடியருச்சனைசெய்கின்றார்களை
யவமுறவிழித்துவெய்தறைந்தனன்கொலோ
குவலயத்தறவர்கள்குலைகுலைந்துவெங்
கவலையிற்படத்துயர்கண்டுளேன்கொலோ. (௩0)

அரிமுதலாகியவளவிறேவரைத்
திரிபுறவிழித்துரைசெய்துளேன்கோலோ
பரிதரவமுமகப்பார்த்துமுள்ளத்துப்
பிரியமதறத்துயர்பெருக்கினேன்கொலோ. (௩க)

இரந்தவர்வருந்துறவில்லையென்றவர்
சுரந்தபல்லிழிபையுந்தூற்றினேன்கொலோ
வரந்தருமுனிவரர்மற்றையோருளத்
தரந்தையுற்றிடநகையாடினேன்கொலோ. (௩உ)

புண்ணியமறையவர்பொலிவினல்குறு
மெண்ணியநீற்றினையிகழ்ந்துளேன்கொலோ
கண்ணியசிவாலயங்கலந்துநாயகற்
கண்ணியதிரவியமவாவினேன்கொலோ. (௩௩)

அரவமர்புற்றினையழித்தனன்கொலோ
வுரவதன்முட்டையையுடைத்தனன்கொலோ
பரவியபடத்ததுபரிந்துமாழ்குறப்
புரவகறண்டிஞற்புடைத்துளேன்கொலோ. (௩ச)

மறைகளைநிந்தனைவகுத்துளேன்கொலோ
மறைமுடிபினுக்கிகழ்வழங்கினேன்கொலோ
மறையுணர்ந்தவர்தமைவைதுளேன்கொலோ
மறையினுகமங்களைமதித்திலேன்கொலோ. (௩௫)

உற்றவர்பசித்திடவுண்டுளேன்கொலோ
நற்றவர்தமக்கிடர்நாட்டினேன்கொலோ
கற்றவர்துயரறக்கண்டிலேன்கொலோ
மற்றவரிடருறவாழ்ந்துளேன்கொலோ. (௩௬)

ஆவுறுதுயருறவடித்துளேன்கொலோ
மேவியஃதுண்ணுநீர்விலக்கினேன்கொலோ
வோவறவதற்கிழிபுரைத்துளேன்கொலோ
காவில்கன்றினைத்திடக்கறந்துளேன்கொலோ. (௩எ)

மேதகுசிவலிங்கம்விற்றுளேன்கொலோ
வாதரவாவியையழித்துளேன்கொலோ
தீதமைதரக்கருச்சிதைத்துளேன்கொலோ
கோதுறப்பிதிர்க்கடன்குலைத்துளேன்கொலோ. (௩அ)

சிவாலயத்தறங்களைச்சிதைத்துளேன்கொலோ
சிவாலயத்தியல்பிலசெய்துளேன்கொலோ
சிவாலயத்தழிவுறச்செயிர்த்துளேன்கொலோ
சிவாலயத்தருமராஞ்செகுத்துளேன்கொலோ. (௩௯)

ஒருவர்செய்நன்றியையொழித்துளேன்கொலோ
வருவருப்பையர்பாலடைந்துளேன்கொலோ
வெருவறப்பிறர்பொருள்விழைந்துளேன்கொலோ
பருவருங்கொடுமைகள்பண்ணினேன்கொலோ. (௪0)

என்னபாதகங்கொலோவிந்தச்சன்மத்து
நன்னரோர்மகவுமில்லாதுநைந்துளேன்
பன்னகாபரணனிற்படர்ந்தவந்தணு
வன்னதையருளெனவடிபணிந்தனன். (௪௧)

அந்தமன்னவனிடத்தருள்விராவுறச்
சந்தமாமுனிவரன்சாற்றலுற்றன
னந்துமுற்பவத்தொருநாய்களுகிநீ
சிந்துதலறபபொருளீட்டல்செய்தனை. (௪௨)

சிறுதயையேனுமில்லாதசெய்கையி
னுறுமனையாளொடுமுற்றுவாழுநாண்
மறுவினெய்க்கலயத்துவாய்வைத்திட்டது
குறுவளைமுனையுகிர்குலவொர்பூனையே. (௪௩)

மனையவட்ண்டெடுத்துதவவாங்கிநீ
யினைதல்கொண்டயலவர்விலக்குமேற்றிலாய்
துனைதரப்புடைத்தனைதுடிதுடித்தவீழ்ந்
தனையதுமடிந்ததுபாவமாயிற்றே. (௪௪)

தற்பரன்மேவுசிசைலக்கோயிலிற்
பற்பலர்முயன்றுநற்பணிநடாத்தல்கண்
டற்பகனகமதிப்பவாவிநல்கினை
பொற்பமைபுண்ணியம்பூத்ததன்னதால். (௪௫)

அன்னபுண்ணியத்தினுலரசுபெற்றனை
யின்னபாதகத்தினுன்மகவிழந்தனை
மன்னவப்பாதகமாற்றுபாயமு
நன்னரோதுவனுளநயந்துகேட்டியால். (௪௬)

அம்மநன்மாமகதீர்த்தமாடுநா
ளிம்மதிக்காறெனுந்திங்களெய்துமான்
மம்மரில்பெருங்குணமனைவியோடும்போய்ச்
செம்மனற்குடந்தையத்தீர்த்தமாடுதி. (௪௭)

உரைத்தவத்தீர்த்தத்தினுதிசிக்கோட்டிடை
விரைத்தபிப்பலத்தருவிழைந்துசூழ்தியக்
கரைத்தளிவிச்சுவநாதற்கண்டொன்பான்
புரைத்தகன்னியரையும்புரிந்துபோற்றுதி. (சஅ)

கும்பலிங்கேசர்முன்குறிக்கும்பற்பல
வம்பவிழிதழியம்படலேமார்பரை
நம்பவிர்தரநயந்தேத்திப்போற்றுதி
யும்பருந்தொழுதெழவுவக்குமம்பிகை. (சகூ)

மங்களநாயகிமலர்ப்பொற்பாதமுஞ்
சிங்கலிலன்பொடுசேவித்தேத்துதி
யங்கவர்திருமுனமறைந்ததாணங்கள்
சங்கையில்லாதறஞ்சாரநல்குதி. (ரு0)

தமனியங்கொண்டொர்மார்ச்சாலஞ்செய்துகண்
ணமர்தருகழுத்துமேதகத்தினூற்றுதி
யுமிழ்சுடர்வெள்ளியின்முகவுரோமமு
நிமிர்சுடர்நீலத்தினிறைந்தபுள்ளியும். (ருக)

பன்மணியுங்கொடுபாவுபுச்சமு
மின்மலிவயிரத்தின்விளங்குதாலமு
நன்மைகொள்பதுமராகத்தினுசியு
மென்மலர்மரகதத்திமைக்குங்காதுஞ்செய். (ருஉ)

புருடராகத்தினூற்பொலிபின்றட்டமு
மருவுபன்மணிகளால்வயிறுஞ்செய்துபி
ன்னொருவுமங்குலமொரோழைந்தின்மாண்புறப்
பெருகிநீள்பூனையின்பிறங்குகண்டத்தில். (ருரு)

எழுசதங்கைகளொலித்திடப்புனைந்துபொற்
பழுதறுதண்டமேழ்சாணிற்பண்ணியே
வழுவறவிவைபலமலிபொற்றட்டுவைத்
துழுவலன்பொடுஞ்சிவபிரானையுன்னியே. (ருச)

காலமாபுருடனேக்கண்டத்தட்டம்வைத்
தேலநன்முகமனீரொட்டுமாற்றுபு
ஞாலமாதரித்தகாலாயநன்மனு
மூலமாவனைத்தையுமொழிந்தருச்சித்தே. (ருரு)

அருணவகன்னியரகிலநாயக
னிருமலர்ப்பாதங்களிலங்கப்பூசியாப்
பெருமறையவற்குநீலாடைபெய்மல
ரொருவறுகலன்களாலுறப்புனைந்தரோ. (ருசு)

குங்குமம்புனைந்துகைகூப்பிப்போற்றுபு
வெங்குணமொழிந்துபல்வேதவித்தெனத்
தங்குபுசிவனடிசார்ந்தமற்றவற்
கங்கதைத்தட்டினோடன்பினல்குதி. (ருஎ)

மீட்டுமாமகப்புனல்விதியினுடியே
பாட்டுமாமறைபுகழ்பவானிமாமதிக்
கோட்டுவார்சடைப்பெருங்குழகன்மற்றிவர்
நாட்டுதாளுளங்கொளுநலம்விராவியே. (ருஅ)

கோலமார்ந்தோங்குமைங்குரோசயாத்திரை
சீலமார்தரச்செய்துசிறந்தவேதியர்
சாலவுமகிழ்கொளத்தானநல்கியே
சூலபாணியைத்தளிதோறும்போற்றுதி. (ருகூ)

அருளமைகும்பலிங்கேசராதியா
வெருளகல்பலர்க்குநல்விழாத்தொடங்குதி
தெருளமைதசதினந்தீர்ந்தபின்னர்வெம்
மருளகன்மறையவர்க்கூட்டுவாலனம். (௬0)

தென்புலத்தவர்மனமகிழ்ச்சிசேர்தர
வன்புலப்பரியதோர்சிராத்தமாற்றுதி
நன்புலப்புத்திரப்பேறுநல்குமா
றின்புலப்பரியபொற்றட்டியற்றியே. (௬க)

தூயவத்தட்டிற்கோதூமமிட்டுநள்
ளேயவோர்மாதுளங்கனியிருத்தியே
யாயபொற்பட்டினுன்மறைத்தொரந்தணற்
கீயவனுசியுமினிதுகோடியால். (௬உ)

கேத்திரவாசிகளாயகேடிலாச்
சாத்திரவேதமோர்ந்தவர்க்குவேண்டிய
பாத்திரமாதியபலவுநல்குபு
தோத்திரஞ்செய்தவர்த்தொழுதுவேண்டிதி. (௬௩)

மகபதிகன்னிமாமதியின்மேவு
திகழொருகுருவினிற்றிருவிழாச்செய்து
தகவொருசயந்தனைத்தான்பெற்றனல
மிகவளரவ்விழாவிரும்பிநீயுஞ்செய். (௬௪)

என்னபாதகங்களேயெனினும்யாவர்க்கு
நன்னர்செய்கும்பகோணத்துமேவிய
முன்னவனொருதினவிழாமுடித்திடி
லன்னபாதகந்தொலைத்தறமுமாக்குமே. (௬ரு)

ஆதலிற்கும்பகோணத்தையண்மிநீ
காதலினுரைத்தவாறியற்றுகான்முனை
மேதகப்பெறுகுவையென்றுவிண்டனன்
பாததாமரைமலர்பணிந்துமன்னவன். (௬௬)

ஐயநீவந்தமையறைதியென்றலுஞ்
செய்யதோர்பொன்மகஞ்செயத்தொடங்கினேன்
வெய்யமுக்கோடிபொன்வேண்டுமென்றனன்
குய்யமிலரசனுங்கோடிநல்கினன். (௬எ)

பின்புசாகல்லியன்பெருமகிழ்ச்சிகூர்ந்
தன்பினீருடந்தையையணுகுமுன்னரோ
யின்பவிம்மகமுடித்தியானுமெய்துவேன்
முன்புசெல்லென்றருண்முகிழ்ப்பப்போயினன். (சுஅ)

முனிவரன்சென்றபின்முனிவின்மன்னனு
மினியநாண்மனையொடுமெண்ணிலாரொடு
மினியவிர்பொன்னொடும்விரைந்தெழுந்தன
னனியவிர்கும்பகோணத்தையுற்றனன். (சுகூ)

சொல்லியபடிமகமுடித்துத்தூயசா
கல்லியமுனிவனுங்கலந்துகொண்டனன்
வல்லியமனையவம்மன்னர்மன்னனு
மெல்லியலவனடியிறைஞ்சியேத்தினன். (எo)

அம்முனிவரன்விரித்தறைந்தவண்ணமே
செம்மனத்தரசனுஞ்செய்துமுற்றினன்
றம்மனத்துவகையேதழைத்துவேதியர்
கொம்மெனவாசிகள்கூறினாரரோ. (எக)

முன்னுநன்மகப்புனல்குறுகிமூழ்குதன்
மன்னுகும்பேசர்மங்களையைப்போற்றுத
லென்னுமிவ்விரதங்கொண்டிராறுதிங்களங்
குன்னுமெய்க்கிருதவீரியனுற்றனரோ. (எஉ)

மன்னவனின்னணம்வசிக்குநாட்குட
முன்னவனருணனிமுகிழ்த்துத்தோன்றலாற்
சொன்னநல்லெழிலுடைச்சோபனுங்கிபாற்
கன்னவில்புயஞ்சகத்திரங்கலப்பவே. (எஙு)

களியுறத்தோன்றினன்கார்த்தவீரிய
னளிகெழுகூந்தற்காமாங்கிபான்மிக
வொளிகெழுசாமனென்பவனுதித்தனன்
றெளிவளர்கிளையெலாஞ்சிறப்பிற்போற்றவே. (எச)

முன்னியபேரொழின்மோகனுங்கிபாற்
றுன்னியபெருவலிச்சுகர்மன்றோன்றினன்
பன்னியபெருங்குணச்சித்திராங்கிபான்
மன்னியகாமக்கியன்வந்தானரோ. (எரு)

முனிவருஞ்சித்திரமோகனைப்பெண்பாற்
கனிதரத்தோன்றினன்காமவாகுமற்
றினியபொற்சித்திரரூபியாளிடைத்
துனியறச்சுகர்முகன்றோன்றினனரோ. (எசு)

அறுவருமறுவறாயளித்ததோர்ந்துமெய்
யுறுபெருமகிழ்ச்சியினோங்கிமன்னவன்
மறுவில்சாகல்லியன்மற்றைவேதியர்க்
கறுதியில்பெரும்பொருளள்ளிவீசினன். (எஎ)

கும்பலிங்கேசர்முற்கூறும்யாவர்க்கு
நம்பவிர்விழாமுதற்பலநடாத்தியே
செம்பொனுமணிகளுந்திகழ்பட்டாடையு
மும்பரும்விரும்புபல்லூருநல்கினன். (எஅ)

மீட்டுமோர்வருடமங்கமர்ந்துவெண்ணிலாக்
காட்டுமாமுடிச்சுதைக்கடேசராரருட்
பூட்டுநீங்காதுபல்சனமும்போற்றத்தன்
னாட்டுமேவினன்சுகநண்ணிவாழ்ந்தனன். (எகூ)

(வேறு.)

ஒருமுளைவேண்டினேற்காறுதவிமுன்மறமும்போக்கித்
திருவருள்கும்பலிங்கத்தெய்வமாமகநற்றீர்த்தந்
தருமலிசும்பகோணத்தலமொருமூன்றும்போலப்
பொருவரிதாயமற்றோர்புவனத்தும்பெறுவதின்றே. (அ0)

கிருதவீரியன்புத்திரனையடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கoருஎ.

## சுதன்மன்புத்திரனையடைந்தபடலம்.

:o:

புலையுணர்வுடையார்தம்புந்தியின்மருவாது
தலையுணர்வுடையாருட்டங்கியகுடமூக்கி
னிலையுணர்வுறமேவிநீர்படிந்தொருசுதன்மன்
கலையுணர்மகற்பெற்றகாதையையெடுத்துரைப்பாம். (க)

திரையெறிபெரும்பொருனைத்தீரத்துச்செறிநகருட்
டரைபுகழ்வளவிசையாசனமெனுநகருறைவான்
குரைமறையுணர்ந்தகவுண்டின்னியகோத்திரத்தான்
வரையறவெந்நூலும்வடித்தெடுத்தினிதுணர்ந்தோன். (உ)

தேவசன்மாமைந்தன்செறிபுகழ்ப்பெருஞ்சுதன்மன்
மூவருமுழுதொழிலின்முகிழ்த்தபைம்பயிரோங்கித்
தாவறவிளைதலினற்றுனியவளமிக்கோ
னேவருமிவற்குநிகரில்லையென்றிடவாழ்வான். (ங)

ஈன்றவனிளம்பருவத்திவ்வுலகினைநீத்தான்
சான்றவளெனுந்தாயுமவற்றமுவுதலமைந்தா
ளேன்றதன்மனையாளோடிரதியுமதனுமெனத்
தோன்றநன்னலமுவர்தான்சுதன்மனென்பவன்மாதோ. (ச)

தொலைவரும்பெருங்காமச்சுவைநலநுகர்தருநா
ணிலையிலளாய்மனைவிநீத்துயிர்துறந்திட்டாண்
மலைவறவொருமாதைமணந்தனன்மற்றவளுந்
தலைமகளெனனீத்துத்தலைமனைவியையொத்தாள். (ரு)

பின்னருமொருமாதைப்பேணுபுமணஞ்செய்தா
னன்னளுமனையாரினுயினளவன்மீட்டு
நன்னலவொருமாதைநாடுபுமணஞ்செய்தா
னிந்நலந்தெரித்தவளுமூவரோடியைந்தனளே (சு)

உறுநலநுகர்காலத்தொழிந்தனர்நால்வருமெத்
தெறுவினைகொல்லென்றுசிந்தனைமிகக்கவன்று
மறுவலுமொருமாதைமணந்தனனவளிரங்குற்
றிறுதியில்சுகமெய்தக்கணவனைடியைந்தமர்ந்தாள். (எ)

அன்னவள்பேர்சித்திராங்கியென்றெடுத்தறைவார்
பன்னலமவளொடுமப்பனவன்றுய்த்தமர்நாளி
னன்னலத்தொருமதலைநல்கினளஃதீன்ற
மின்னகுபொலந்தாயைவெறுத்துமும்மதியின்கண். (அ)

முந்தியதாய்மாரைமுன்னுபுதழுவிற்று
லந்திலிப்படியொவ்வொன்றாகவொர்பதினெட்டு
மைந்துடைமகவீன்றுண்மற்றவைகளும்வெறுத்து
நந்தியமுதன்மகவின்செய்கையைநண்ணினவால். (கூ)

பின்னருமுளந்தளர்ந்தோர்பெண்மகவினையுயிர்த்தா
ளன்னதுமுன்பிறந்தாரவரொடுங்கலப்புற்ற
துன்னரும்வளச்சுதன்மனுழிவருங்கவலையனு
யென்னசெய்குவலென்றேயெண்ணிமற்றிதுசெய்யும். (க0)

நந்தனவனஞ்செய்துநன்னிழற்றருவளர்த்து
மந்தமில்சுவைதாங்கியமைதருகன்னட்டும்
பநதமதறநாகப்பதிட்டைநன்குறச்செய்துஞ்
சுந்தரமூவரொனுந்தாருவைவலஞ்சூழ்ந்தும். (கக)

மன்னியபுகழ்ச்சேதுமாப்பெரும்புனரேய்ந்தும்
பன்னியசுவையன்னம்பனவர்துய்த்திடவிட்டு
முன்னியகோதானமுதலியபலசெய்துந்
துன்னியவினைமைந்தர்துணிபடைந்திலதம்மா. (கஉ)

முடிவறுபொருள்பெற்றுமுன்மனைவியர்போலப்
பிடிநடையிவள்பெற்றபிள்ளைகளாதலினு
னெடிதருபயனென்னேயென்றுளநுனித்துணர்ந்து
படிமுதற்பொருளெல்லாமித்திரர்பால்வைத்து. (கங)

புண்ணியமலிதீர்த்தயாத்திரைபோதுமெனக்
கண்ணியமனைவியொடுங்கவலையிற்படுசுதன்ம
னெண்ணியதுணிபோடுமெழுந்தனனகர்நீத்தா
னண்ணியநடைவநடந்தவனியைவலங்கொள்வான். (கச)

அன்னதொர்பொழுதின்கணகத்தியன்மாணக்கன்
பின்னமில்கலையுணர்ந்தோன்குசிகனெனத்திடும்பெயரோன்
முன்னமற்றிவன்புரிந்தபுண்ணியமுளைத்தெழலா
னன்னலத்தொடுமெதிரோநண்ணினன்கைதொழுது. (கரு)

ஒழிந்தபன்மனைமகவின்மென்மையுமொழியாது
கழிந்தவெவ்வினையூழின்வன்மையுங்கசிந்தோதி
யழிந்தநெஞ்சுடையானுயமுதனனப்போது
பொழிந்தநல்லருட்குசிகனின்னதுபுகல்வானல். (கசு)

வருந்தியவொருநீமுற்பவத்தொருமறையோனுய்ப்
பொருந்தியவளவேதபுரத்திடைப்பிறந்திருந்தாய்
திருந்தியபரன்கோயிற்சிறப்புறப்புதுக்கியதா
லருந்தியவுணவாதியிப்பவத்துறவடைந்தாய். (௧௭)

குறிசெயிப்பவமுன்புகுண்டினபுரமேய
நெறிசெயும்பெருமறையோர்நெடுங்குலத்திடையுதித்துப்
பறிசெயுமெழிற்பெண்கள்பதின்மரையினிதீன்று
வெறிசெயுமூத்தோராய்மெலிபவர்தமைத்தேர்ந்து. (௧௮)

ஒவ்வொருமாதருக்குநிட்கமொராைந்நூறு
செவ்விதிற்றரப்பெற்றுமணஞ்செய்துசேர்த்தனைபி
னெவ்வமிலொருமாதையிரும்பொருள்வேண்டாது
கௌஃவயிலொருவனுக்குக்கடிமணஞ்செய்தளித்தாய். (௧௯)

பல்லிலர்நரைதிரையிற்பட்டவர்கயரோகம்
வெல்லிலர்தண்டங்கைவிட்டிடினடவாதா
ரொல்லிலர்விழியிருந்துமிரவிவந்தெழுமுன்னம்
புல்லிலரணுத்துணையுமிமைப்பொழுதுங்காமம். (௨0)

இன்னவர்தமைத்தேடியீந்தனையாதலினு
லன்னவர்வெங்காமவடுதழலவிப்பார்போற்
பன்னரும்புனற்பொருனைபாய்ந்தனர்சிலரிறந்து
முன்னவர்குளிப்பினுமென்றுரைத்ததைமுனிந்தனரோ. (௨௧)

சிலர்விடமயின்றிறந்தார்சிலர்மணமலர்மாலை
யலர்தருபசுமஞ்சளாதியநீத்திருந்தா
ருலர்தலிலிப்பாவமொருங்குனைவளைந்ததனுற்
பலர்மனைவியர்நுகரும்பக்குவத்துனையொழிந்தார். (௨௨)

ஒருமகடனைத்தானமுதவியபுண்ணியத்தாற்
றிருமகளினுமொருத்திசேர்ந்துனக்கிருக்கின்றுண்
மருவியவிவையன்றிவகுப்பதின்னமுமுண்டா
லொருவரும்வளச்சீவைகுண்டமென்றொருநகரம். (௨௩)

அந்நகர்ப்பெருமான்வாழாலயத்தகத்துள்ள
நன்னருங்கனிமுழுதுங்கவர்ந்தனைநயந்துண்டாய்
பன்னருமக்கொடியபாதகப்பேற்றுலே
யென்னரும்பிறந்துபிறந்திறந்தனருனக்கம்மா. (௨௪)

இத்தருபாவமெலாமெரியிடுதுய்யாக
வுத்தமமகத்தோன்றியுன்பொருட்குறவாக
வித்தகக்குடமூக்குமேவுதிமாமகாட்
சுத்தவண்புனன்மூழ்கிச்சூழ்திகும்பேசனையே. (௨௫)

குரோசமொராைந்தனையுங்குறிக்கொடுவலங்கோடி
சரோருகமலர்வாவித்தளியமர்நாகேச
ரோகநம்விசுவேசராதியர்தமைப்பணிதி
யுரோகணிமறுநாண்மேலுமைபயலாற்றெழுதி. (௨௬)

யானுமுற்பவத்தின்கணிரும்புகள்ளியவினையா
லானவெங்கருங்குட்டமறுவதுகுறிக்கொண்டே
யூனமிலென்னுசானுரைப்படிவருகின்றேன்
மானவநடவென்றான்சுதன்மனுண்மகிழ்பூத்தான். (உ௭)

அவனெடும்வழிக்கொண்டேயருஞ்சுதைக்குடத்துதித்த
சிவனமர்குடமூக்குச்சென்றனன்மாமகநா
ளுவமையில்பெருந்தீர்த்தமொய்யெனப்படிந்தெழுந்தான்
குவலயகளனெல்லாக்கோயிலும்போய்த்தொழுதான். (உ௮)

ஆற்றிடப்படுமற்றையாவையுமினிதாற்றி
நீற்றிடப்படுவினையானுருபுகழ்மறையோன்
போற்றிடப்படுமுக்கட்புண்ணியக்கும்பேசன்
சாற்றிடப்படுமலர்த்தாடணப்பதற்கஞ்சினனாய். (உ௯)

பற்பனாளாங்கேபரிவுடனமர்ந்திருந்தான்
வெற்புவிற்கும்பேசர்மேதகுதிருவருளா
லொறகமிலொருமைந்தற்பெற்றனனுவன்வளர்ந்து
கற்கவுமுயலுவதைக்கண்டுளமகிழ்ந்தனனே. (௩0)

மங்களநாயகிசேர்வானவன்றிருவருளாற்
சிங்கலில்குசிகனுக்குஞ்சிதைந்ததுகருங்குட்ட
மங்கவனுடன்கூடியண்ணறன்விடைபெற்றுத்
தங்கொருநகர்விசையாசனமடைந்தனன்சுதன்மன். (௩௧)

செந்தமிழ்நறுநாற்றஞ்செறிதருதிருச்செவ்வா
யந்தணனடிசார்ந்தானன்புமிக்கெழக்குசிகன்
சந்ததமகவோடுந்தழைதரவாழ்ந்திருந்து
பந்தமிலடிசார்ந்தான்பார்புகழ்சுதன்மனரோ. (௩௨)

சுதன்மன் புத்திரனையடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪0௮௧.

---

## வீரவன்மன்புத்திரனைப்பெற்று முத்தியடைந்தபடலம்.

---

திருமன்மாமலரோன்போற்றத்திகழ்தருகும்பகோணப்
பெருமன்மாதிரங்கொண்டாடும்பேரருட்சிறப்பினாலே
குருமன்மாதவர்சூழ்மாகக்குளிர்புனறோய்ந்துவீர
வருமன்மாமதலைபெற்றுக்கதிமருவியதுசொல்வாம். (௧)

எறிதசட்டகட்டுவாளையெழுந்துயர்தெங்கின்மோதப்
பறிபடுபழம்பைங்கந்திப்பழக்குலைமுறியச்சாய்த்துச்
செறியுமாங்கனிகள்சிந்திவருக்கையுஞ்சிதைத்துவீழு
நறியபூவோடைசூழ்ந்தகலிங்கநற்றேயந்தன்னில். (௨)

மாற்றலர்மடவாரொல்லாமங்கலங்கழித்துவீசப்
போற்றுறைகழிக்கும்வாளான்புண்ணியப்பெருமைமிக்கா
னேற்றமார்கலைகளெல்லாமினிதுநன்குணர்ந்ததீரான்
சாற்றரும்புகழான்வீரவருமப்பேர்தாங்குமன்னன். (௩)

துங்கமார்கற்புவாய்ந்தசுமதியென்றுரைக்குமில்லோ
டங்கவனளாவிவாழ்நாளவிர்விழியொன்றில்லானுய்ப்
பங்கமார்முகரோமத்திற்கோசமும்படையானுகி
நங்கவாமதலையொன்றுநாடெலாநகைப்பப்பெற்ருன். (௪)

அங்கவீனத்தனுயபிள்ளைவந்தமைந்ததோர்ந்து
கங்கவாம்வடிவேன்மாட்டுங்கரியகட்சுமதியோடு
மங்சமாற்றலளாவாட்டுமன்னவனுளமாழாந்தே
யெங்கவாய்நன்மகப்பேறெய்தலாமென்திருந்தான். (௫)

ஆயதோர்பொழுதுவந்தானனைத்தையுமுணருஞான
மேயசாண்டில்லியப்பேர்முனிவரன்விழைந்துபோற்றித்
தூயமாதவனேயீனந்துறுத்தவிம்மகப்பேறெய்தத்
தீயபாதகமென்செய்தேன்செப்புதிதெரியவென்ருன். (௬)

என்னலுமுனிவனுள்ளத்தெண்ணுபுதெரிக்கலுற்ருன்
மன்னவமுற்பவத்துமன்னனுய்ப்பிறந்திருந்தா
யன்னதோர்காலைமாடமழகினுென்ருற்றினுயப்
பன்னருமாடஞ்சேரும்படியினிதமைக்கவெண்ணி. (௭)

அரசடியறத்தராலேபதிட்டைசெய்தமையவைத்த
விரவுபன்னுகமெல்லாம்வேரறப்பறித்துவந்து
பரவுறப்பிளக்கச்சொற்ருய்பரிந்ததுசெய்யுங்காலை
குரவர்வந்தடாதேயென்றுகூறியதுணர்ந்துவிட்டாய். (௮)

அரவமாஞ்சிலைகளெல்லாமழிதரப்பிளந்ததோடம்
விரவலாலங்கவீனமகவினைவெறுப்பப்பெற்ருய்
பரவுமத்தோடந்தீர்ந்துநன்மகப்பயக்குமாறு
கரவறவுரைப்பேன்கேட்டியென்றிதுகரையலுற்ருன். (௯)

மனையொடுங்கும்பகோணமாமகதீர்த்தமாடி
நினைதருகும்பலிங்காதனைநெறியிற்போற்றி
வனைதருமறையோர்கொள்ளவயங்குமெள்ளுண்டைபன்னுென்
றினைதராவண்ணஞ்செய்துதக்கணையோடுமீந்து. (௧௦)

தொடியிரண்டிருபத்தைந்துதூயதாநவநீதத்தால்
வடிவமையிலிங்கஞ்செய்துபூசித்துமணிபொன்னேடு
நெடியமாமறையோர்க்கீந்தானிலவுநன்மகவுண்டாகும்
படியறுகதியுமுண்டாம்படருதியின்னேயென்ருன். (௧௧)

குரவன்வாய்மாற்றங்கேட்டுக்கோமகன்மனைவியோடும்
பரவியசேனையோடும்பனவர்களுரைத்தநாளில்
வரமிகவுவந்தெழுந்துவழிநடந்தடைந்தானென்று
மரந்தனவிழையாள்பாகனமர்பெருங்கும்பகோணம். (௧௨)

புலிங்கதேசொளிரநாளும்பொலிதருநுதல்விழிக்கும்
பலிங்கதேவருளாலின்னேபடர்ந்ததற்கிடையூறெய்தா
மலிங்கதேயடைதலின்னமலிதரப்பெறலாமென்று
கலிங்கதேயத்தானெல்லாவளங்களுங்கண்டுவந்தான். (௧௩)

கண்ணியதீர்த்தமாடக்கருதுமாமகநாளென்னும்
புண்ணியநாளும்வந்துபுகுந்தது விதியினாற்று
ணண்ணியதீர்த்தமாடிநாகேசரபிமுகேசர்
தண்ணியகவுதமேசர்தலம்புகழ்விச்சுவேசர். (கச)

போற்றுசோமேசர்பாணபுரியீசருமையோர்பாகர்
சாற்றுமற்றுள்ளார்யாருமகிழ்தரச்சார்ந்துபோற்றி
யேற்றுவெண்கொடிக்கும்பேசரினிதமர்கோயினண்ணி
யாற்றுபேரருள்சாலெங்களம்மையோடவாவிப்போற்றி. (கரு)

திருப்பணிபலநடாத்தித்திருவிழாச்சிறப்புஞ்செய்து
குருப்பணிபலகொடுத்துக்குலவுபட்டாடைநல்கி
வெருப்பணியணிவார்யாருமிகமகிழ்பூப்பச்செய்து
தருப்பணிகரத்தான்றெய்வமறையவர்சாரக்கூவி. (கசு)

இனியநன்னவநீதஞ்செயிலிங்கமாதிகளுநல்கி
முனிவறவசிக்குங்காலைமுருகனேயென்னத்தக்க
தனிமகவுதித்தான்பின்புதன்னுடைத்தேயம்புக்குக்
கனிதரவாழ்ந்துதக்ககாலத்திலுலகமேத்த. (கஎ)

மைந்தற்குமகுடஞ்சூட்டிமண்ணரசாட்சிநீத்துச்
சந்தப்பூட்புயத்தான்பின்னுங்கும்பகோணத்தைச்சார்ந்து
கந்தப்பூங்குழலினுண்மங்கலையொடுமினிதுமேவு
மந்தச்சுந்தரனைப்போற்றியிடையறுவன்புசெய்து. (கஅ)

அன்னகும்பேசர்முன்னரவிர்புனற்றடத்துந்தோய்ந்து
பன்னருமருட்சோமேசர்முதலியபற்பல்லோர்க்கு
நன்னர்வண்பணிகளாற்றிநந்தனவனமுஞ்செய்து
தன்னமுங்குறையாவன்பிற்றண்மலரொடுத்தர்ச்சித்து. (ககூ)

கூடியவிருப்பாற்பஞ்சக்குரோசயாத்திரையுஞ்செய்து
நாடியமருதராதியைவரைநயந்துமுன்மா
றேடியகும்பநாதர்திருவடியடைந்துநன்னூல்
பாடியவொன்றியொன்றுப்பரகதியுற்றானன்றே. (உ0)

வீரவன்மன்புத்திரனைப்பெற்றுமுத்தியடைந்தபடலம் முற்றிற்று,
ஆ திருவிருத்தம் - ககOகூ.

## ஞானவான்முத்தியடைந்தபடலம்.

தேனெனுமென்மொழிபாகருவந்துசெழித்தமர்சிவலோகந்
தானெனுமோர்நடமூக்கையடைந்துதவாதொருதான்செய்த
கானெனும்வெம்பவமுற்றுமொழிந்துகழிந்தொழிதரஞான
வானெனுமோர்மறையோன்கதிமேவியவண்ணமுரைத்திடுவாம். (க)

மறுவறுகண்ணுவமாமுனிகோத்திரம்வந்தவன்மன்றுடுஞ்
சிறுமதிசூடியநம்பெருமானடிசிந்தைபதித்துள்ளோ
னறுதியின்மாமறையாதியயாவுமறிந்தவனெம்மகமு
முறுதியினாற்றிடவல்லவனும்பருமோதிடுநல்லவனே. (உ)

ஏற்றவொழுக்கினனெக்கியசீலனெனும்பெயர்பூண்டுள்ளான்
மாற்றநயத்திவன்மாமனைகற்புவழாதசிறப்புடையாள்
போற்றமைசீலவதிப்பெயர்பூண்டவண்மற்றவளொடுபொலியா
வாற்றமகிழ்ந்தமர்நாள்களினெண்பஃதாட்டையின்மேலாக. (௩)

யானெனுமெனதெனும்வெய்யசெருக்கையிரித்திடலான்ஞான
வானெனுமோர்பெயர்பூண்டவனீண்டவன்மாமலரோனுணராத்
தேனெனுமெங்கள்பிரான்றிருவார்த்தைகள்சிந்தைநிறைத்துடையா
னூனெனும்யாக்கையின்மானமிலாவொருமைந்தனுதித்தனனே. (௪)

அத்தகுமைந்தனொடுங்கலவிக்களியார்தரவாழ்நாளி
லுத்தமகூர்மமகஞ்செயவுன்னியொளிர்ந்தமகச்சாலை
வித்தகமாமறையோன்மனையாளொடுமேவியமர்ந்தெண்ணிப்
புத்திரன்மாமுகநோக்கினனீதுபுகன்றிடலுற்றனனே. (௫)

வாரியளாயதகூர்மமனுச்சொலிவளர்வருணனைவேண்டிச்
சீரியநீயுபவாசமோர்மூன்றுதினத்துறமேவுவையேற்
பாரியகூர்மமவன்றருமற்றதுபற்றியிவண்வருதி
நாரியனீயிவணெய்தளவும்முனைநல்கியதாயோடும். (௬)

யானுபவாசமிருந்திடல்வேண்டுமிருந்திடுவலிமேவக்
கானுயரிம்மகசாலையொர்காலொடுகட்டிபுசெல்லுதிநின்
வான்வரல்கண்டபினேமவுபக்கிரமஞ்செயவேண்டுமிது
தானழியிற்றலைவற்கழிவெய்துதறப்புவதில்லையரோ. (௭)

என்றுரையாடவியைந்தவனேதியவண்ணமிருங்காலி
னன்றுறயாத்துவணங்குபுவிடைகொடுநண்ணினனலையின்வா
யொன்றதவுத்தளிரோடுதருப்பையுவந்துகைபற்றுபுநீ
ரின்றலையேயதகூர்மமனுச்சொலியியல்விதிபெறவனையா. (௮)

எண்ணியதினமொருமூன்றுமுக்காலமுமிங்ஙனமேசெய்து
கண்ணியநதநதிபதியேமணிபலகளிமிகநல்கிடுவோ
யண்ணியமுகிலறல்கவர்தரநல்கியெவ்வகிலமுமோம்பிடுவோய்
புண்ணியவுருவமுளாயொருகூர்மம்பொருக்கெனநல்குதியே. (௯)

என்றியலுங்கடவிறைவனையின்னணமினிதமர்துதிசெய்யா
நன்றியலும்பொழுதேயவன்முன்புரிநல்வினையலதெய்த
வொன்றியலக்கடனின்றெருகன்னிகையுறைசெறிவீணையொடும்
வென்றியன்மாமையொடும்படுதேசொடுமேயினளாயிடையே. (௧௦)

( வேறு. )

மறையவன்மகன்முன்மாகவதியெனுமனையமாது
குறையறுவிருப்பிற்கூடிக்குளிர்சிறுமுறுவல்கோட்டி
நிறையருண்முனிவன்மைந்தநிலவயான்பாடுங்கீத
மிறையவனுதிவானோர்யாவரும்விரும்பாநிற்பர். (௧௧)

பிறைமுடிப்பெருமான்செய்தபேரனுக்கிரகத்தாலே
நிறைபுனனுப்பண்வாழ்வேனீரரமடந்தையென்றுங்
குறைவிலோர்பெயரொளக்குக்கூறுவருலகரின்னு
மறைவதொன்றுண்டாலுன்னைப்புணருமாறவாவுகில்லேன். (௧௨)

அணிகலமாதிவேண்டுமாசையுமில்லேனென்றுந்
தணிவிலென்பாடல்கேட்குமதுவொன்றேகுறித்துச்சார்ந்தேன்
கணிதமிலென துபாட்டுன்காதிடைப்புகுநோர்யானு
மணிகெழுபுனிதஞ்சேர்வேனவாவியதுனக்குமெய்தும். (க௩)

கனிவறமறுத்தியேலுன்காலடியுயிரைமாய்ப்பேன்
வனிதையர்தகவிரும்பமறுத்தவன்சண்டனுவன்
புனிதமிலுருவுமாகியள்ளனீர்புகுந்துதாழ்வ
னனியிஃதுணர்திகேட்டுநயத்தலேவேண்டுமென்றாள். (க௪)

மறுப்பதற்கஞ்சிவாளாவிருந்தனன்மறையோன்மைந்தன்
வெறுப்பதொன்றில்லாயாழின்மேற்பொலிபோர்வைநீக்கிக்
கறுப்பின்மாடகந்திரித்துக்கருத்துறத்தெறித்துள்ளோர்ந்து
பொறுத்தமாபத்தர்யாழ்க்கோல்சுவற்புறம்போகச்சேர்த்து. (க௫)

மேதகுதானந்தோறும்விரனடந்தூசலாட
வாதரித்திசைத்தாளன்னாள்யாவருமவசமுற்றார்
காதலின்வீணைசேட்டுக்களிப்பெருங்கடலுண்மூழ்கிச்
சாதநன்முனிவன்மைந்தன்றன்னையுமறந்திருந்தான். (க௬)

எழுதினம்வீணையிவ்வாறிசைத்தலுமறையோனின்ப
முழுகுபுகருமமுற்றுமுனிந்துநின்றுடிப்பாடித்
தொழுதுகைகுலைத்துச்சென்னிதுளக்கிநீர்விழியின்வாரப்
பழுதில்சித்திரம்போல்வாளாவிருந்தனன்பகலொட்டாநாள் (க௭)

உள்ளத்தின்மகிழ்ச்சிபொங்கப்பாடினளுவந்துகொண்டு
மெள்ளத்தன்னிருக்கைபுக்காள்விலகியுமூந்நாளந்தப்
பள்ளத்திற்படிந்தேயொன்றும்பற்றிலனிருந்தான்பின்னாள்
வள்ளற்றன்றந்தைதாயர்வருந்துவரொனநினைந்தான். (க௮)

தந்தையென்னுற்றான்கொல்லோதாயெவனுனள்கொல்லோ
முந்தைவல்வினையிவ்வாறுமுடிந்ததேயென்றுநைந்து
சிந்தையிற்கவலைகூர்ந்துதெருமருஞ்சீசீயென்னு
மந்தையிற்படுமித்தீமையெங்ஙனமறுப்பேனென்னும். (க௯)

உரைசெயித்துயரத்தாழ்ந்தோனொருவிதமுளந்தெளிந்து
திரைசெயக்கடற்குவேந்தைமீளவுந்தியானஞ்செய்து
வரைசெய்மற்றவன்கொடுக்கமமகூர்மமனுவாலேற்றுப்
புரைசெய்நீர்நிறையிற்போக்கிப்பொலிகுழையதவான்மூடி. (உ0)

தலைமிசைச்சுமந்தியாகசாலையிற்புகுதுமுன்னே
மலைவில்சேயெய்துமென்றுவழிகுறித்திருந்ததந்தை
நிலைதளர்மூப்பினுலுநிகழுபவாசத்தாலு
முலைவறுந்துயரமேன்மேலுற்றுநாலாநாண்மாண்டான். (உக)

அன்னையுங்கொழுநன்செய்கையறிந்தனுமரணஞ்செய்தா
ளென்னைவந்துற்றதென்னுவிருத்துவிக்களுமிரிந்தார்
பின்னையென்னுவதென்றுகிளைஞர்பெட்டிருந்தார்சூழ்ந்து
முன்னைவெவ்வினையிவ்வாறுமுடிந்ததென்றுரைத்தார்மற்றோர் (உஉ)

ஆயதோர்காலைமைந்தனடைந்தனன்கமடத்தோடு
மேயயாவையுந்தெரிந்துவெய்துயிர்த்தலறிவீழ்ந்து
பாயநீர்விழியின்வாரப்பதைபதைத்தழுதுசோர்ந்து
தீயனேன்பிழைத்தேனின்னுஞ்செத்திலேனிருந்தேனென்றான். (௨௩)

உற்றவர்தெருட்டத்தேறியொழிந்தவர்க்கியற்றத்தக்க
முற்றவும்விதியிற்செய்துபவித்திரமுளத்தபின்னோர்
நற்றவர்புகழுமிந்தநயிமிசவனத்தைச்சார்ந்து
கற்றவர்புகழ்நும்பாற்றன்கரிசெலாங்கழறினானே. (௨௪)

அன்னதுகேட்டநீவிரகங்கையாற்காதுபொத்தி
யுன்னருஞ்சிவநாமங்களொருங்குரைத்தெழுந்துபோகி
முன்னருமழலோன்பாங்கர்மோசிக்குங்கழுவாய்தேர்ந்து
பின்னருமவன்பாலுற்றுப்பேசுதலுற்றீரீது. (௨௫)

முந்தியபவத்துநீர்முழுவளமதுரைமூதூர்
நந்துபின்னவர்குலத்துப்பிறந்துநன்கிருந்தாயந்நா
ளந்தமில்பசுக்கணின்பாலமைந்தனவவற்றுண்மேகஞ்
சிந்துறுமழையாற்பல்லசெத்தனவளித்தலின்றி. (௨௬)

புரவினிற்குறைவுசெய்துபாதகம்புணர்ந்தாயென்றே
யுரவினிற்சிறந்தமேலோருரைத்திடவிருபானுக்கள்
பரவுபன்மறையோர்க்கீந்தாய்பசுக்கொடையறத்தினாலே
விரவுமிப்பவத்துநல்லவேதியன்மைந்தனானாய். (௨௭)

ஆக்கலைப்புரத்தலின்றியழிவுசெய்திட்டதீங்கான்
மீக்கிளர்தந்தைதாயர்வெங்கடுங்கொலையும்பூண்டாய்
போக்குதற்குபாயமுண்டுபுண்ணியக்கும்பகோண
மாக்கிளர்மாகமாதமாமகநாளிற்சென்று. (௨௮)

புண்ணியதீர்த்தமாடிப்பொருவருங்கும்பலிங்கர்
தண்ணியமலர்த்தாள்போற்றிக்கரிசிலத்தலத்துநாளு
நண்ணியவானோரெல்லாநயப்புறத்தொழுதுபோற்றி
யெண்ணியவைங்குரோசஞ்சூழ்தலுமியற்றுவாயால். (௨௯)

இதுசெயினுனதுபாவமிரிதருமற்றொன்றாலு
முதிர்தராதென்றீரப்போதுவந்தவனெழுந்துசென்று
சதுமுகன்முதலோர்போற்றுந்தவாப்புகழ்க்கும்பகோண
முதுநகரடைந்தான்போற்றிமுழுகினான்கன்னிதீர்த்தம். (௩௦)

மங்களவல்லியோடுமருவியகும்பலிங்கப்
புங்கவன்பதமுமற்றைப்புண்ணியர்பதமும்போற்றிச்
சிங்கலிலைங்குரோசஞ்சிறப்புறச்சூழ்ந்துசின்னா
ளங்கமர்ந்திருந்தான்வெய்யபாதகமழிந்ததன்றே. (௩௧)

பாதகமழிதலோடும்பரவுமெண்மகவுபெற்றுக்
காதல்செய்மனைவியோடுங்கலந்துவாழ்ந்திருந்துபின்னர்
மேதகுகும்பலிங்கவித்தகனருளாலன்னான்
பாததாமரையேசேர்ந்தான்பத்திகூர்ஞானவானே. (௩௨)

ஞானவான்முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௧௧௪௧.

# ஏமவாகுமனைவிவேதாளநீங்குபடலம்.

நனைவிராம்பொழில்சூழ்கும்பகோணநன்னகரஞ்சார்ந்து
புனைவியாழஞ்சிங்கத்துப்பொலிதருமகநன்னாளிற்
கனைவிடாத்தீர்த்தமூழ்கிக்காவலனேமவாகு
மனைவிவேதாளவாதைமாற்றியகாதைசொல்வாம். (௧)

கழையெனத்தடிக்குஞ்செந்நெற்காடுசால்பழனமோங்கி
விழைபெருவளங்களெல்லாமேய்பாகலியநாட்டிற்
புழைமதநெடுங்கையானைப்புண்ணியவாகுமைந்தன்
மழையெனக்கொடுக்குமேமவாகுநன்னுமமன்னன். (௨)

துடியிடைப்பணைத்தகொங்கைச்சுலோசனைமனைவியோடும்
படியிடையின்பந்துய்த்துப்பார்புரந்திருக்குநாளிற்
கடியிடையருதவிஞ்சிக்காமருகுருகையூரின்
முடியிடையருதுதாங்கிமூரிநீருலகாண்மன்னன். (௩)

ஒருவன்முனிருந்தானன்னாற்கொருமகளாகித்தோன்றி
மருவுமிவ்வேமவாகுமனைவிமுற்பவத்திருந்தா
டிருவெனவமருநாளிற்சிறுமடமாதரெல்லாம்
வெருவுறத்தலைவிரித்துவிரூபமாங்கோலங்கொண்டு. (௪)

அச்சமேயுறுத்தாநிற்பளன்றியுந்துறவுபூண்டா
ரொச்சமேபுரியாநிற்பாரொய்திடினிகழாநிற்ப
ணிச்சமேயினையதிங்குநிகழ்த்தியபாவமேவக்
கச்சமேயில்லாவிரக்கனகவாகுவைக்கலந்து. (௫)

மாலையங்குழலாளோவமண்டபநாப்பணுள்ள
சோலையையடைந்தாளாங்குத்துன்னுபல்வளமுநோக்கி
வேலையங்கதிரோயன்னவிளக்கஞ்சால்வாகுவோடுஞ்
சேலைநன்கமைந்தவாவிச்செறிகுளிர்நன்னீராடி. (௬)

வாசநன்கமைந்தவன்னமண்டபத்தமளிசேர்ந்தாள்
கூசலில்போகமெல்லாங்கொழுநனோடளாவித்துய்த்துக்
காசணியல்குன்மங்கைகாமர்வேறமளிமேவி
மூசளிக்கூந்தல்சோரமுருகின்மென்கலையுஞ்சோர. (௭)

நித்திரைசெய்தாளாகநிகழுமச்சமையநோக்கிப்
பொத்தியவனையசோலைப்புறத்தமரொருவேதாள
மெத்தியவிருப்பின்வந்துவிராயொருபுருடன்போல
வொத்தியல்போகமெல்லாமொருங்குதுய்த்திருந்ததன்றே. (௮)

அதுமருவியவந்நாடொட்டாயிழையழகுகுன்றிக்
கதுமெனநகைப்பள்யாருங்கலங்குறவழுவள்வாசப்
புதுமலர்க்கூந்தல்சோரப்புரிந்தகட்டவிழ்ப்பளுற்ற
தெதுவெனவினவுவாரையெரியெனச்சினந்துவைவள். (௯)

உறுதுயர்க்குழிசியாகிச்சுலோசனையுழல்வதோர்ந்து
மறுவறுகாதன்மன்னன்வாடுபுமனமாழாந்து
தெறுதுயர்தவிர்ப்பார்யாரோதேர்கிலேனென்றுசோர்ந்தோர்
வறுநிலங்கிடந்தானுங்குக்கார்க்கியமுனிவன்வந்தான். (௪0)

வந்தவனமைச்சராஞேர்மாமுகங்கவன்றுநோக்கி
யிந்தமன்னவனுக்குற்றதென்னெனவினுவவன்ஞர்
சிந்தனைசெய்துநீயேதெரிதியென்றடியிற்றாழ்ந்தார்
நந்தலின்முனியுமோர்ந்துதுணிந்திதுநவிலலுற்றான். (௧௧)

முற்றியவனப்புமங்கைமுற்பவத்திழைத்ததீங்காற்
பற்றியதொருவேதாளம்பாற்றிடவேண்டுமென்னிற்
செற்றியபொழில்சூழ்காசித்திருநகர்க்கெழுகவென்றான்
சுற்றியவமைச்சர்சூழ்ந்துதுணிந்துமன்னவனுக்கோத. (௪௨)

மன்னனுங்கவலைநீங்கிமாமுனிபாதம்போற்றி
நன்னர்மங்கலநாளெல்லாவளங்களுநண்ணிமொய்ப்பத்
தன்னருமனைவியோடுந்தாபதனெடுமெழுந்து
கன்னவில்வரையுங்கானுங்கடந்துதண்காசிபுக்கான். (௧௩)

புக்கவப்பொழுதேதெய்வக்கார்க்கியமுனிவன்போந்தே
யக்கமூன்றுடையனுயவகிலநாயகனைத்தாழ்ந்து
தக்கவெண்ணீறுகொண்டுதவாதுமந்திரித்துச்சாத்தித்
தொக்கவேதாளமாதைத்துணைவஞேடழைத்துச்சென்று. (௧௪)

அலையெறிதெய்வக்கங்கையாவரைப்புனனிறுத்தி
மலைவறவிருவர்தானைநுனிவழாவகைமுடிந்து
தலைமைசெய்கிரந்திபூசைதவாவிதிப்படியேயாற்றி
யுலைவறமுழுகுமென்றானுரைத்தவாமுழுகினாரே. (௧௫)

விதிவழிமுழுகினர்கள்வெளிவரக்கண்டாரில்லை
மதியழிந்தந்தோயாதுவந்ததுதெரியோமென்று
கொதிகொதித்தமைச்சராதியாவருங்குலைந்தாரந்தப்
பதியுளார்பலருநோக்கிப்பதைபதைத்தழுங்கினாரே. (௧௬)

முழுதுணர்முனியுமெண்ணிமுற்றியவனைத்துந்தெள்ளிப்
பழுதுவந்தடைந்ததில்லைப்பசர்குருமடங்கல்சேரத்
தொழுதகுமகநாள்வந்துதோன்றியதாதலாலே
யொழுகுமிக்கங்கையந்நீராடுதற்குற்றாளன்றே. (௧௭)

மேயமாமகநீராடவிழைந்துசெல்கங்கைநங்கை
யாயவிவ்விருவரோடுமேடைந்தனளென்றுகூறத்
தூயவாகாயவாக்குந்தோன்றியதுண்மையென்று
தேயமார்பலருமுள்ளந்தெளிந்திறும்பூதுற்றாரால். (௧அ)

வரநதிகும்பகோணமாமகநன்னீராட
விரவியதளவாநீத்தமிகச்சுருங்கியதினுலு
மூரவுறத்தெளியலாமென்றுரைத்தனனுரைத்தவாறே
கரவறத்தெளிந்தியாருங்கருத்திறும்பூதுற்றாரே. (௧௯)

அனைவருமங்குநின்றுமடர்பொழிற்கும்பகோணந்
துனைதரவடைந்தார்தெய்வத்தூயமாமகநற்றீர்த்தப்
புனைதருகரைக்கண்மேவிப்பொற்றொடியோடும்வேந்த
னினைதரலின்றிமேவியிருப்பதுகண்டாரன்றே. (உ0)

கண்டவர்பணிந்துமன்னுகாமருதேவியோடு
மெண்டருகங்கைதோய்ந்தாயிங்கெவ்வாறடைந்தாயென்ன
விண்டலம்புகழுங்கங்கைவிரைதரக்கொடுவந்திந்தத்
தெண்டிரைவாவியுய்த்ததொழிந்ததுதீங்குமென்றான். (உக)

கங்கையுமிங்குமேவிக்காதலின்முழுகுமென்னிற்
சங்கையிலினையதீர்த்தப்பெருமையார்சாற்றவல்லார்
மங்கையோர்பாகப்பெம்மான்மகிழ்ந்தருள்கொழிக்குமிந்தக்
கொங்கையார்பொழில்சூழ்கும்பகோணம்போற்றலமுமின்றே. (உஉ)

என்றளவறப்புகழ்ந்தியாவருமங்கீர்மூழ்கிக்
கன்றலில்கும்பலிங்கக்கடவுளைமற்றுளோரை
யொன்றநன்கடியிற்றாழ்ந்தேயுரைத்தவைங்குரோசஞ்சூழ்ந்து
பொன்றலிலங்குமேவியிருந்தனருவகைபூப்ப. (உங)

அரசியைத்தொடர்ந்தசார்பாலடல்செய்வேதாளந்தானும்
பரசுமாமகநீர்மூழ்கிப்பண்ணவவடிவமுற்ற
திரசதமலையான்கும்பத்தெழுந்தவனருளினாலே
வரசுலோசனையுமாங்கோர்மைந்தனைப்பெற்றாளன்றே. (உச)

அரதனப்பணியுஞ்செம்பொனுடையுநகருமற்றும்
பரவுகும்பேசராதியாவர்க்கும்பரிந்துநல்கி
வரமிகுகனகவாகுமாண்புறவருமைந்தற்கு
விரவுறுதருமவாகுவெனும்பெயர்விளம்பினானே. (உரு)

கருதரும்பெருமைவாய்ந்தகார்க்கியமுனியும்போதப்
பொருவருமேமவாகுயாவரும்புகழ்ந்துசூழ
வெருவருந்தனதுதேயமேவிவாழ்ந்திருந்தானன்பி
னொருவருங்கும்பலிங்கப்புராணனையுள்ளத்தோர்ந்தே. (உசு)

ஏமவாகுமனைவிவேதாளநீங்குபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ககசுஎ.

## மங்களநாயகிமகிமைப்படலம்.

:o:

தொழுபவர்க்கிரங்கிமேலாமாரருள்சுரந்துநாளுஞ்
செழுமலர்ப்பொழில்சூழ்கும்பகோணத்துட்சிறப்பமேவு
மழுவலப்பெருமான்பாகமங்கலைமகத்துவங்கண்
முழுமையுமுணராமேனுந்தெரிந்தவாமொழியலுற்றும். (க)

மருவளர்கமலம்பூத்தமாமகதீர்த்தமாடித்
திருவளரபிமுகேசர்சேயொளிக்கவுதமேச
ருருவளர்விச்சுவேசரோங்கொளிவளர்சோமேசர்
குருவளர்திருநாகேசர்கூர்ங்கணைப்பெயர்ப்புரோசர். (உ)

இவர்திருப்பாதமன்பினிணர்மலரிறைத்துப்போற்றித்
தவர்புகழ்கும்பலிங்கசாமிசந்நிதியின்மேவிப்
பவர்படுசடிலமோலிப்பண்ணவகாத்தியென்று
கவர்மனமின்றிநானபலனவன்கையினல்கி. (ந)

நலனயன்முதல்வானுடர்நண்ணுமாகடைக்கணேக்கும்
வலனுயர்சிறப்புவாய்ந்தமந்திரபீடவல்லி
குலனமர்நறும்பொற்றாளிற்குங்குமமாதிகொண்டு
பலன்மிகப்பேறுவான்பூசைபத்தியிற்புரிந்துபின்னர். (ச)

பாயவத்தளியின்மேயபரவருண்முக்கணுல்வாய்
மேயவைங்கரங்கொளாதிவித்தகக்களிற்றைவெஞ்சூர்
மாயவைவாய்வேறுட்டவள்ளலைமற்றுளோரை
நேயமோடருச்சித்தேத்தினின்மலமாவனன்றே. (ரு)

இன்னுமற்றவன்றன்வானேர்பிதிரர்மானவரிம்மூவர்
மன்னுசெய்கடனினின்றும்விடுபட்டவனுமாவான்மற்
றுன்னுமக்குடந்தைவானத்துயர்தருநிதியந்தேனு
முன்னுமற்றதுநேரொன்றுமொழிவதற்கையமின்றே. (சா)

அறுவகைப்பகையுமாய்ப்பாரமரரிற்சிறந்தோராவார்
தெறுவினைக்காலதண்டஞ்சேர்தரார்பிறவிதீர்வார்
மறுவறுகும்பகோணமாத்தலவாசஞ்செய்து
நறுமனுப்பீடவல்லிநறுமலர்ப்பதங்காண்போரே. (எ)

கோதறுமறுபத்தாறுகோடிதீர்த்தமுமுட்கொண்ட
மேதகுதெய்வமாகமகப்புனல்விதியினுட
லோதருங்கும்பகோணத்துறைதல்கும்பேசர்பாகத்
தாதரங்குலவுமம்மைதரிசனமமையச்செய்தல். (அ)

ஆயவோர்மூன்றுநீத்தேயாடுதலாதிமூன்றும்
பாயவேறமைவோர்நாற்காற்பசுக்களேயையமில்லை
தூயபால்கனியொழித்துத்தூயதாகாவுவர்ப்புத்
தீயநீர்வறுங்காய்நேடித்திரிதருவோருமாவார். (கூ)

மந்திரபீடமேயமந்திரசொரூபிதன்னைத்
தந்திரவிதிவழாதபிருகுநாட்சார்ந்துபோற்றி
னந்திரவியமென்றெல்லாவானருநயந்துபோற்று
மிந்திரதிருவராகியெண்ணிலாவின்பத்தாழ்வார். (க0)

திருந்துபஃறுனமேயதேவிகடேசுவெல்லாம்
பொருந்துநல்வதனமோங்கிப்பொலிவியாசிருதிமோலி
வருந்துதறவிரொண்டிக்குமணிக்குழைமரீஇயகாது
மருந்துசெய்நிடாதமாதியெழுசுரவானோர்கண்டம். (கக)

பார்மகள்பின்பானத்தம்பகலிருசந்திகைகள்
சீர்கெழுமேருவாதிசிலம்புகளனைத்துங்கொங்கை
யேர்கெழுவயிறுதான்மற்றெந்தச்சாத்திரவானோரு
மார்தருமங்கமாறுமமைதருசந்திமாதோ. (கஉ)

இருடியர்விசுவதேவரிலங் குகைவிரல்களாவார்
மருடருபரவைநாபிமருங்குலாகாயமாகு
மருள்செய்மந்தணவருத்தமதிந்தவர்குய்யமாவர்
பொருண்மலிசத்ததீவும்பொலிதருசகனமாதோ. (கரு)

ஆகமதேவரொல்லாமணிகெழுமுழந்தாளாவர்
மோகவெந்திரவானோரேமொழிதருகணைக்காலாவர்
சேகறுவேதமெல்லாந்திருவடியகாரமாதிச்
சோகமில்சுரங்களெல்லாஞ்சொற்றகால்விரல்கண்மாதோ. (கச)

பரவுமந்திரசொரூபம்பரிந்தமர்பீடமற்றும்
விரவுசாத்திரங்களெல்லாம்விளம்புமற்றுறுப்பாமின்ன
வுரவுறுமங்களாம்பிகையையொருநாட்சேவிப்போர்
வரவுபோக்கிறந்தவின்பவாரியுண்முழுகுவாரோ. (கரு)

மன்னர்செயிடரினேனும்வாதமுற்பிணியினேனுந்
தன்னமர்கருமநீத்தானந்தியிற்றரிசிப்பானே
லுன்னருமனையதோடமொழிதருமிடருநீங்கு
மென்னபல்வளமுமெய்துமின்பமேயிலாபமாகும். (கசு)

மறையெலாமெடுத்துக்கூறுமந்திரபீடமேய
நிறைபுகழ்ச்செல்வியேகதேசபார்வையினீடு
பொறையெனப்பொலிபைசாசபூதவேதாளமாதி
யறைதருபலவுநாளுமஞ்சியோட்டெடுக்குமாலோ. (கஎ)

மாமகவருடமேவுசுக்கிரவாரந்தோறுங்
காமர்செவ்வரத்தப்பூநூற்றெட்டினுற்கண்ணிகட்டி
மாமருவன்பிற்சூட்டிமங்களாம்பிகையைப்போற்றிற்
காமனிற்பொலிசேய்வாய்ந்துகச்சமில்செல்வத்தாழ்வார். (கஅ)

சிங்கமாமதியிலக்கஞ்செவ்வரத்தப்பூக்கொண்டு
மங்கலைக்கருச்சிப்பார்கண்மற்றவரலியரேனுந்
துங்கமார்புருடராகித்தூயபுத்திரரைப்பெற்றுச்
செங்கண்மால்பொருவவாழ்ந்துசிவபதஞ்சிவணுவாரோ. (ககூ)

பிருகுநல்வாரந்தோறும்பிறங்குசெவ்வரத்தப்பூவான்
முருகுசெய்கொண்டைமாலைமூவுலகேத்துஞ்செல்விக்
குருகுமெய்யன்பிற்கட்டியுவப்பொடுசாத்துவோர்கள்
கருகுவெவ்வினையினீங்கிக்கனககாவலனேயாவார். (உ0)

சகத்திரநாமங்கூறிக்குங்குமஞ்சாத்துவோர்க
ளிகத்திரவியங்களெல்லாமெய்திப்பின்கதியுஞ்சேர்வர்
பகத்தனியொளிருமஞ்சட்பலகைகொண்டருச்சிப்போர்க
ணகத்துயர்பிதிரரொல்லாநற்கதியேறச்செய்வார். (உக)

சண்பகமலர்கைக்கொண்டுதகவருச்சிப்போர்நாளும்
புண்படுசுவாசகாசரோகங்கள்போக்கிவாழ்வா
ரெண்படுதுரோணமாலையிலங்கியவில்வமாலை
நண்புறச்சாத்துவோரோநன்னிதிக்கிறைவராவார். (உஉ)

சந்தனக்குறடுதேய்த்துத்தகப்பனிநீரளாவி
நந்தலில்பசுங்கற்பூரநானமுஞ்சேர்த்துச்சாத்தி
னிந்திரதிருவராகியெண்ணருஞ்செல்வத்தாழ்ந்து
மந்திரவுருவன்மேயகைலையேமருவிவாழ்வார். (உங)

விரைகெழுவெட்டிவேரான்மேனியைமறைப்போர்மேலா
முரைபடுசெல்வந்துய்ப்பாரொளிர்மணிக்கலன்கள்செம்பொற்
புரைபடுவில்வமாலைபொருந்துறச்சாத்துவோர்க
டரைபடுதேயமெல்லாந்தம்மடிப்படுத்துவாழ்வார். (உச)

செய்யபொன்மலரால்வாசஞ்செறிமலர்ப்பந்தானும்
வெய்யவன்சமழ்க்குந்தெய்வவிளங்கொளிமணியானூற்றெட்
டையமற்றமையுமாறேயருச்சனைசெய்வோரெல்லாம்
வையகத்தனைத்துமெய்திவான்பெரும்பதமுந்துய்ப்பார். (உரு)

இலக்கமஞ்சுரங்கொண்டேயெழில்வரவருச்சிப்பார்க
ளலக்கண்வல்வினையினீங்கியிலக்கத்துக்கதிபராவர்
நலக்கவக்கதைகள்வாசநலம்பெறவருச்சிப்பார்தம்
விலக்கருமனையினின்றும்விடுபடாதமரும்பொன்னே. (உசு)

விரைமலிபொடிகைக்கொண்டுவிரும்பியாயிரத்தெட்டேனு
முறைசெயுநூற்றெட்டேனுமுவந்தருச்சனைசெய்வார்க்குப்
புரையிலக்கதைக்குச்சொன்னபொருவிலாப்பயனேமேவுந்
தரைபுகழ்தீபமாலையிட்டவன்றனைமுற்றுள்வான். (உஎ)

நாகமொண்பதுமஞ்சூலநலஞ்செய்கோபுரமாலியானை
மேகமண்டலத்தும்பாய்மாவிளங்குமண்டபமிராசி
சேகறுபுருடன்வாவிதிகழ்கும்பமாதிதீப
மோகமார்கைலைவைக்குமூன்றனைக்கோடிகற்பம். (உஅ)

முனிவருமாநெய்த்தீபமுகூர்த்தமற்றதனிற்பாதி
கனிதரவைப்போர்கோடிகுலங்கரையேற்றுவார்கள்
பனிதருநவநீதத்தாற்பகரொருதீபம்வைப்போர்
மனிதருட்சிறந்தோராகிவானரும்வியப்பவாழ்வார். (உகூ)

மந்திரசொரூபமானவாசிகைவயங்கச்சாத்தி
னிந்திரதிருவராகியேழுலகமுநன்காள்வார்
சந்தநற்றூபக்காறீபத்தடந்தட்டுமுன்னு
வெந்தநற்கலமுமீவோரிகபரபோகந்துய்ப்பார். (ஙo)

பிருகுநல்வாரந்தோறும்பெருமகநன்னீராடி
யுருகுமெய்யன்பினீரப்புடவையேயுடுத்திக்கொண்டு
முருகுசெய்கூந்தற்றெய்வமங்களைதிருமுன்னுமாப்
பெருவிளக்கிடுவாள்வந்தியாயினும்பிள்ளையெய்தும். (ஙக)

படுமிகுசுவையவன்னம்பாயசம்பூபமாதி
வடுவறநிவேதிப்பார்கள்வான்முழுதாளாநிற்பர்
விடுபடாவிலக்கவில்வவருச்சனைவிழைந்துசெய்வோர்
கடுவிராங்களத்துமுக்கட்கடவுடனுருவங்கொள்வார். (ஙஉ)

தூயபாறயிலஞ்சந்தங்குங்குமந்துதிசால்கங்கை
மேயவிவ்வபிடேகங்கள்விருப்பொடுசெய்வோரெல்லாம்
பாயபல்பிணியுந்தீர்ந்துபார்முழுவதும்புரந்து
நேயவிண்பதமுந்துய்த்துநின்மலராகிவாழ்வார். (ருரு)

மங்களவல்லிமேயமணிகிளர்விமானக்கோயி
லங்கதுபுதுக்குவோருங்கிலமறவாற்றுவோரு
மங்கலில்குடநீராட்டல்விழாச்செயல்வயக்குவோரும்
பங்கமின்மற்றுமுள்ளபணிபலசிறப்பிப்போரும். (ருச)

மண்ணகத்தொருநோயின்றிமன்னவர்திருவின்வாழ்ந்து
பண்ணகத்தரம்பைமார்கள்பயில்பெருநகரமாய
விண்ணகத்தமர்ந்துபோகம்யாவையும்விழைந்துதுய்த்து
நண்ணகத்தமருமெங்கோனகுசிவலோகஞ்சேர்வார். (ருரு)

**மங்களநாயகிமகிமைப்படலம் முற்றிற்று.**

**ஆ திருவிருத்தம் - கஉ0உ.**

---

## சுவர்னரோமன் முத்தியடைந்த படலம்.

:o:

கொழுமலர்ப்பொழில்சூழ்கும்பகோணத்தினினிதுமேய
முழுமுதல்கும்பலிங்கமூர்த்தியோர்பாகமேய
வெழுதருமலர்ப்பூஞ்சொம்பினிணையடியேத்திமுன்னாள்
வழுவறுசுவர்னரோமன்கதிமருவியதுரைப்பாம். (க)

கிளர்வளையரணஞ்சூழ்ந்தகேரளதேயந்தன்னிற்
றளர்வறவாம்பலோம்புஞ்சந்திரகுலத்துவந்தா
னுளரளித்தொடையன்மார்பனுறுபுகழிருட்டரோமன்
வளர்தவத்துதித்தமைந்தன்மாண்புசால்சுவர்னரோமன். (உ)

மதரரிக்கருங்கட்செவ்வாய்மாதொருபாகத்தெம்மான்
சிதர்தலிலருள்சாறெய்வத்திருவடிக்கன்புபூண்டோ
னதர்வணவேதமுற்றுமறிந்தவனன்பினுற்ற
பதர்புகழ்சதியென்றேதுமனையொடும்பயப்பவாழ்நாள். (ரு)

மறைமுழுதுணர்ந்தவல்லான்காசிபகுலத்துவந்தான்
கறைமிடற்றடிகள்பாதமுளங்கொடுகளிக்குநீரா
னுறைகெழுவடிவாளேந்துங்காஞ்சனவுரோமற்காண்பா
னிறைபெருவிருப்பினோடுநிலவவனவைவந்தானே. (ச)

இனிதமைதருமசீலனெனும்பெயர்வாய்ந்துவந்த
முனிவரன்வரவுநோக்கிமுன்சென்றுசுவணரோமன்
கனிவொடுவணக்கஞ்செய்துகாமருமிருக்கைநல்கிப்
புனிதநல்லருக்கியாதிபூசனையியற்றினனே. (ரு)

பூசனைபுரிந்தபின்புபுண்ணியத்தருமசீலன்
றேசவிருணர்வுமற்றைச்சிறப்புறுமொழுக்குமுக்க
ணீசனுக்கன்பும்வேடத்தெழிலமைபொலிவுநோக்கிக்
கூசலின்றடிகள்போற்றுந்தரவனுக்கொண்டானன்றே. (சு)

ஆரியனுகக்கொண்டோனவனடிவணங்கிநாயேன்
பாரியவுலகங்காப்பேன்பளகறக்காத்தல்வல்ல
சீரியனெனினும்வந்துசெறிதரும்பாவமன்ன
தோரியல்பன்றேயுள்ளதொழித்திடுமுபாயம்வேட்டேன். (எ)

அன்னதற்காகவையவடியனேனுற்றதக்க
தின்னதென்றுரைத்தல்வேண்டுமெவ்வகைநூலுமோர்ந்தாய்
பன்னருந்தெய்வந்தந்தைபயந்ததாய்மற்றுமுள்ள
வெந்நருநீயேயென்றுனிதுசொலுந்தருமசீலன். (அ)

வேறு.

வளரொளிசெய்கயிலாயஞ்சீசைலங்கேதாரம்வளக்கோகன்னங்
கிளர்முடியிந்திரநீலப்பருப்பதமனேகதங்காவதங்கேழில்லா
துளரளியார்பொழில்சூழவுறைகாசிகாளத்தியுவக்குங்காஞ்சி
தளர்விலண்ணாமலைவிருத்தாசலமயிலையொற்றியூர்தழைவண்பாக்கம். (கூ)

மேயகழுக்குன்றம்வளரிடைச்சுரம்பாதிரிப்புலியூர்வேற்காடோத்தூர்
பாயபுகழ்த்தூங்கானைமாடமறையணிநல்லூர்பனங்காட்டேர்நன்
காயதிருவெண்ணெய்நல்லூரருட்டுறையூரரத்துறைநல்லாலங்காடு
தூயதிருவான்மியூர்திருப்பாசூர்சோபுரமாமுல்லைவாயில். (கம)

காழிசிதம்பரமோமாம்புலியூர்வாளொளிபுற்றூர்கன்றாப்பூர்நல்
லாழிபுலகேத்துதிருக்குறுக்கைதிருவதிகையாமாத்தூர்கோவல்
வாழியபந்தணைநல்லூர்புள்ளிருக்கும்வேளூர்நல்வளஞ்சால்புன்கூர்
வீழிசுவேதாரணியஞ்செங்காடுமறைக்காடுமிளிர்நள்ளாறு. (கக)

மன்னுமயிலாடுதுறைவளத்திருவாவடுதுறைநல்வழூவூர்கோட்டேர்
பன்னுமிடைமருதுதிருப்பஞ்சநதமகத்தியான்பள்ளிவாய்மூர்
மின்னுதிருப்பூந்துருத்திதுருத்திபுறம்பயம்வைகாவிசயமங்கை
யுன்னுசிராப்பள்ளிதிருவானைக்காபைஞ்ஞீலியுறுவாட்போக்கி. (கஉ)

நெடுங்களங்கற்குடியெறும்பிமலைபாண்டிக்கொடுமுடிசேர்நிகழுமீங்கோய்
படுங்கனகமதிற்கருவூர்காஞ்சிவாய்ப்பேரூர்வண்பயற்றூர்நல்லூர்
கொடுங்கைவளைபரிமுழங்குந்திருவாரூர்வாஞ்சியநீர்க்குளிர்நாகேச
மொடுங்குதலிலாப்புகலூர்திருநாகைக்காரோணமொளிர்பட்டீசம். (கங)

ஆலவாயாப்பனூரிராமேசங்குற்றாலமருநெல்வேலி
கோலமார்பரங்குன்றங்கொடுங்குன்றமுசாத்தானங்குளிர்சிற்றேமஞ்
சீலமார்பெருந்துறையுத்தரகோசமங்கைவளஞ்செறிகானப்பேர்
சூலமார்மணிமாடஞ்சுடர்விடுபுத்தூர்வானோர்தொழுங்கேதீசம். (கச)

வேறு.

இவைமுதற்பலவாயுள்ளவெம்பிரானமருந்தான
மவைகளுளொன்றைமேவியரும்பெறற்றீர்த்தந்தோய்ந்து
சிவையொருபாகற்போற்றிற்செய்தபாவங்கடீருங்
குவைபடுவளங்களெல்லாங்கூடுமாலன்றியின்னும். (கரு)

கங்கைநீராடனல்லோர்களாசிவகீதைகேட்டல்
செங்கைநீரிறைத்துக்காயத்திரிப்பெருமனுவையோத
றுங்கமார்வில்வம்போற்றறுயவெண்ணீறுபூசல்
சிங்கலிலன்புபொங்கச்சிவநிசிவிரதங்கோடல். (கசு)

பரசிவநாமங்கூறல்பரசிவலிங்கபூசை
வரமுறச்செய்தலெட்டாவகுத்தமற்றிவற்றுளொன்று
விரவுவெம்பாவமுற்றும்விளித்திடும்வளமுண்டாக்கு
முரவுசெயிவையல்லாமனுவைப்பதொன்றுண்டாலின்னும். (கஎ)

எட்டனுட்கங்கையாடல்சிவநிசிவிரதமேற்றன்
மட்டலரொடுத்திலிங்கபூசனைவயங்கச்செய்த
றட்டறவிவையோர்மூன்றுந்தவாவெப்பாதகமும்போக்கு
மிட்டநன்குதவுமன்றியின்னுமொன்றிசைப்பதுண்டால். (கஅ)

நாடுமம்பலத்துளாடுநடேசர்குஞ்சிதத்தாளுள்ளங்
கூடுமாறிருத்தலொன்றேகொடியபாதகங்கண்மாய்க்கு
நீடுபல்வளமுமெய்துநிரம்புநற்கதியுமுண்டாம்
பாடுசாலிதுபோலொன்றுபயன்படன்மற்றொன்றின்றே. (கக)

விதிவழியொருகாற்கங்கைமேவிநீராடுவாரோன்
மதிசெயும்பிரமலோகம்வருடமெண்ணிலவசிப்பார்
கதிதருமந்நீர்யாதுட்கருதுபுமூழ்கினுலுந்
திதியுறவளிக்குமென்றாற்செப்புதன்மற்றுமென்னே. (உ0)

திருவளர்மகரமாதம்விதிப்படிசேதுமூழ்கி
யருமணலெடுத்திராமலிங்கர்தமநுஞைபெற்று
வருபுகழ்க்காசிமேவிவைரவரநுஞைகொண்டு
பொருவரும்விசுவநாதர்தரிசனம்பொலியச்செய்து. (உக)

காசியைங்குரோசஞ்சூழ்ந்துகாமருமறையோர்ப்போற்றி
மாசகல்விசுவநாதர்மாதவர்துண்டியானை
பேசருந்தண்டபாணிவயிரவர்பிறங்குசெவ்வேள்
வாசமென்குழற்பவானிமணிகன்னிகைவான்கங்கை. (உஉ)

இவர்களைத்தியானஞ்செய்தேயெறிபுனற்கங்கையாற்றுக்
கவர்மணல்பூவோடிட்டுக்கரிசறமூழ்கிப்பின்னர்த்
தவர்புகழ்தருமூவேணிதன்னிற்சென்றன்பின்மூழ்கி
யிவர்விருப்பெய்தவாங்கணெழின்மணலெடுத்துக்கொண்டு. (உங)

கங்கையம்புனலோடேகிக்கருதிராமேசம்புக்குச்
செங்கைகொண்மணலையந்தச்சேதுவிலிட்டுமூழ்கி
நங்கைபாலுடையிராமநாதற்குக்கங்கையாட்டிச்
சங்கையிருனமாதிதவறறச்செய்தபின்பு. (உச)

குடிகொளுநகரமேவிக்குறையறமறையோர்க்கெல்லா
மடிசினன்குவப்பவூட்டினழிதரும்பாவமெல்லா
மொழிவறநடேசர்பாதமுதற்குமேற்றியானஞ்செய்து
மிடியறவிருத்தியென்றுவிளம்பினன்றருமசீலன். (உரு)

மழைபொழிபுனலேயானுமற்றதின்மூழ்குங்காலைக்
குழைதருகங்கையென்றேகுறிக்கினப்பலனேயெய்தும்
விழைதருகாசியெய்திவிருப்பினக்கங்கையாடிற்
றழைபயனெற்றுமென்றுபின்னருஞ்சாற்றினானே. (௨௬)

தண்மைசான்முனிவனின்னசாற்றலுந்தருமநோக்கி
யுண்மையேயுரைத்தானென்னுமலர்மழையொருங்குபெய்த
தண்மைசாலனையான்சென்னிமிசையஃதறிந்துவேந்தன்
வண்மைசாலிறும்பூதெய்திமகிழ்ச்சியிற்றிளைத்தானன்றே. (௨௭)

அளவறுசெம்பொனல்கியாரியன்றன்னைப்போக்கி
யுளமகிழமைச்சர்பாங்கருரியவையனைத்துஞ்சேர்த்து
வளமிகுமனைவியோடும்வேண்டியமாந்தரோடுங்
கொளவருஞ்செம்பொனோடுமெழுந்தனன்கொற்றமன்னன். (௨௮)

சேதுவினடைந்துமூழ்கித்திகழ்தருமிராமநாதன்
கோதுதீரருளைபெற்றுக்குளிர்மணலெடுத்துக்கொண்டு
போதுநீர்க்காசிபுக்குப்புகன்றவாமுழுதுஞ்செய்து
காதுவேன்மன்னர்மன்னன்சேதுவைக்கலந்தான்மீட்டும். (௨௯)

அருண்மலியிராமநாதற்கபிடேகமாதிசெய்து
பொருண்மலிதன்னூர்மேவும்போதிடையொருவன்வந்து
வெருண்மலிபகைஞர்மேவிநின்புவிவிழைந்துகொண்டார்
க்ருண்மலிமனத்தராகியாவருங்கவலவென்றான். (௩0)

என்றலுங்கவலைபூண்டேயிந்தநைமிசத்தைச்சார்ந்து
மன்றநும்பாதம்போற்றிமலியறம்விழைந்தேற்கிந்தக்
கன்றல்செய்கவலைவந்தகாரணமென்னேயென்றா
னொன்றநன்குணர்ந்துநீவிர்சவுநகற்குரைத்தியென்றீர். (௩௧)

தவமலிந்துயர்ந்தோனாயசவுனகமுனியைத்தாழ்ந்தே
கவலையுற்றிடவடைந்தகாரியமுழுதுஞ்சொற்றா
னவனுநன்குள்ளத்தோர்ந்தேயனைத்தையும்விளங்கத்தேறிப்
புவனமுற்றளிப்போயீதுகேளெனப்புகலலுற்றான். (௩௨)

திரையெறிகங்கைமூழ்கிச்சேதுவிற்கலத்தலானிற்
குரைசெயும்பாவமெல்லாமொழிந்தனவெனினுமொன்று
புரையுறவிருத்தலாலேபோயதுநினதுபூமி
விரைதரவதுவென்னென்னில்விளம்புதுங்கேட்டிமன்னா. (௩௩)

கோடிசங்கரமென்றோதுங்குளிர்நகரிடத்துமுன்னை
நீடியபவத்திராமப்த்திரனெனும்பேர்நீங்கா
தாடியல்வணிகனாகப்பிறந்துநீயமர்ந்தாயுள்ளம்
வாடியமனையிம்மாதப்பவத்தினுமனைவியோர்தி. (௩௪)

அந்தநன்னகரநாய்கர்பலருளுமதிகனாய்நீ
முந்தவாணிகமேசெய்துவிருத்தியேமுகந்துகொண்டாய்
சந்தமிக்குயர்ந்தகோடிசங்கரப்பெருமானுக்கு
நந்தபிடேகஞ்செய்யநயந்தந்நகரில்வாழ்வோன். (௩௫)

மறையவனொருவனல்லோன்சுப்பிரமணியனென்போ
னிறையுநின்கடைக்கடுத்துநிகழ்கடைவழக்கமுள்ளோ
னறையவன்றன்னைநீநின்கடையகத்தணைவான்கூவக்
கறைதபுவழக்கந்தீர்தல்காரியமன்றேயென்றான். (ருசு)

இவன்வசப்பட்டான்மிக்கவிலாபநாமடைவோமென்றே
யவன்வசப்படுமாறெண்ணியந்நகர்ச்சிவபிரானுக்
குவமையில்பத்துநிட்கம்பெறுபொருளுவப்பநல்கிக்
கவலையின்மறையோயிந்தக்கார்த்திகைச்சோமவாரம். (ருஎ)

நலமுறவபிடேகஞ்செய்நான்கிற்குந்தருவேனென்றாய்
குலமலியவனவ்வாறேகொண்டபிடேகஞ்செய்து
புலமலிநின்பானட்புப்பூண்டுநின்கடையேவந்து
வலமலிபொருள்கண்முற்றும்வாங்குவானாயினனே. (ருஅ)

எண்ணியவாறேவந்தானிச்சிவமறையோனென்று
கண்ணியபலவுநல்கிக்கணக்கினீவஞ்சஞ்செய்தப்
புண்ணியமறையோன்கொள்ளப்பொருத்திநீகவர்ந்துகொண்டா
யண்ணியபெருமான்செம்பொனாறிரண்டாண்டுகாறும். (ருகூ)

சிவனபிடேகஞ்செய்யச்சிலபொருணல்கலானும்
பவனவன்பொருள்வஞ்சித்துப்பற்பலகோடலானு
முவமையில்புண்ணியம்பாதகமிவையொருங்குபெற்றா
யிவருமிப்புண்ணியத்தாலிப்பவத்தரசனானாய். (சo)

சொற்றவப்பாதகத்தாற்றுன்பமப்பிறப்பேயுற்று
முற்றவும்வருந்திமாண்டுமுனிதருநரகில்வீழ்ந்து
சற்றலவென்னப்பன்னாளுழன்றுபின்றரைமேல்வந்து
பெற்றனைமூன்றுசன்மம்பெருங்குரலூமனாக. (சக)

பின்னர்வந்தரசனாகப்பிறந்தனைபாவசேட
மன்னலிற்பூமிமுற்றுமாற்றலர்கவர்ந்துகொண்டார்
முன்னருங்கங்கையாடன்முதலியவற்றான்மற்றை
யென்னபாதகமுந்தீர்ந்ததிதுவொன்றுந்தீர்ந்ததின்றே. (சஉ)

இன்னதுந்தீருமாறொன்றியம்புதுங்கேட்டிமன்னா
கன்னலங்கழனிசூழுங்காமருகும்பகோண
நன்னகரின்றேசென்றுமாமகநன்னீராடி
யன்னகுகண்டத்திண்டோளாதிகும்பேசமூர்த்தி. (சங)

வாமபாகத்துமேவுமங்களாம்பிகையையாடிக்
காமருபிருகுவாரமுதற்பலகருதுநன்னா
ளேமமிக்கமையப்போற்றிநிவேதனமியையநல்கி
மாமலிசெவ்வரத்தமலரருச்சனையுஞ்செய்தி. (சச)

இன்னணம்வழிபாடாற்றியினிதினங்கமர்வாயென்னி
லன்னவள்காட்சிநல்கியடல்கெழுவாளொன்றீயு
மின்னகுமதனான்மாற்றார்வெருவரத்தொலைத்தல்செய்து
முன்னமர்ந்திருந்தவாறேமுயன்றினிதிருத்தியென்றான். (சரு)

முனிவரனுரைத்தவார்த்தைமுழுவதுஞ்செவிக்கணேற்றுக்
கனிதரவடியின்வீழ்ந்துகற்புடைமனைவியோடும்
புனிதநல்விடைபெற்றேகிப்பொலிபெருங்கும்பகோணத்
தனிநகரடைந்துகன்னித்தடப்புனலாடினானே. (சகூ)

ஆடியபின்னராங்கணமரபிமுகேசராதி
நாடியபலருந்தத்தநல்லருள்வழங்கத்தாழ்ந்து
கூடியகும்பலிங்கக்குழகனைவணங்கிப்போற்றிப்
பாடியமறைகொண்டாடவமர்பவள்பாங்கருற்றான். (சஎ)

பிருகுநல்வாரமாதிபேசுபற்பலவாரத்து
முருகுமெய்யன்பிற்போற்றிப்பாயசமுதலாவுள்ள
வருகுதலடைதராதசுவைநிவேதனமருது
முருகுசெய்செவ்வரத்தமுழுமலரிறைத்தன்மற்றும். (சஅ)

மன்னியவுவப்பிற்செய்யமங்களாம்பிகைநேர்தோன்றி
மின்னியவாளொன்றீந்தாள்விழைந்ததுபணிந்துவாங்கிப்
பன்னியகேரளத்துப்படர்ந்துமாற்றலைமாற்றித்
துன்னியவரசுபெற்றான்சொன்னரோமப்பேர்மன்னன். (சகூ)

மங்களையருளினாலேகீர்த்திமானென்றோர்மைந்த
னங்கடைதருமாதோன்றமுடியவற்கமையச்சூட்டிச்
சங்களைமென்மலர்க்கைச்சதியொடுங்கும்பகோணத்
தெங்களையாளுஞ்செல்விதிருமுனரெய்தினானே. (ருo)

எய்தியபொன்னரோமனிலங்குபட்டாடைபொற்பூண்
மெய்திகழ்மணிப்பூண்மற்றும்வெறுப்புறவிருப்பினல்கிப்
பொய்தவிர்வழிபாடாற்றிமனையொடும்புகுந்துவாழ்ந்தான்
சொய்மலர்ப்பொழில்சூழ்தெய்வக்கோலமார்சிவலோகத்தே. (ருக)

சுவர்னரோமன் முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஉருங.

## கும்பேசர்பணிவிடைசெய்வோர்பேறுரைத்தபடலம்.

உ

ஏறுவார்கொடியேறவுயர்த்தவர், நாறுகூவிளநக்கபொலஞ்சடை
யாறுசேர்கும்பலிங்கரடிப்பணிப், பேறியாருந்தெரிதரப்பேசுவாம். (க)

பாங்குசேர்கும்பலிங்கப்பரமனுக், கோங்குமாமகவுற்சவஞ்செய்பவர்
வீங்குதீவினையாவும்வெரீஇச்குடி, வாங்குபேரருட்செல்வத்துவாழ்வரோ. (உ)

பாண்டுநீறுபரிக்குங்கும்பேசருக், காண்டுதோறுமடையுமகவிழா
வீண்டுமாறியற்றுந்திருவாளர்தாம், வேண்டுபோகங்கடெய்த்துவிண்ணுள்வரோ.()

சீதகும்பச்சிவன்றிருமுன்னருங், காதல்கூரக்களிக்கும்விழாவினும்
வேதமோதுதல்செய்விக்குமேலையோர், சாதமச்சங்கரன்மயமாதலே. (ச)

நாடுநங்கும்பநாதன்றிருவிழாக், கூடுகாலத்துக்கூடவருபவர்
தோடுசார்பொழில்சூழுங்கயிலையி, னூடுமேவியுறைவதுசத்தியம். (ரு)

பொங்குகும்பப்புராணன்றிருவிழா, வங்குமேவியவமைதரக்காண்பவர்
தங்குவாம்பரிமேதத்தவாமக, நங்குதீரநடத்தினராவரால். (சு)

வாழுங்கும்பவரதன்பொற்கோயிலைத், தாழுமன்பிற்றவாவலஞ்செய்பவர்
வீழும்வானும்விராயமதிகதிர், சூழுமேருவைச்சூழ்ந்தவராவரே. (எ)

அல்லைவெல்களத்தண்ணல்கும்பேசற்கு, முல்லைமல்லிகையாதிமொய்பூக்களால்
வல்லைமாலைசெய்திட்டுவணங்குவோர், செல்லையூரிந்திரபதஞ்சேர்வரே. (அ)

கற்றைச்செஞ்சடையாளர்கடேசர்தம், பற்றைச்சேர்தளிப்பாற்பசுநெய்யினு
லொற்றைத்தீபமுறுத்திடுவார்களு, மெற்றைக்குமிருப்பாரிமையாரொடும். (கூ)

கவிகைபிச்சங்கவரிமுதலிய, நவிகையேந்துகும்பேசற்குநல்குவா
ரவிகையின்றியனைத்தும்பொலிதரப், புவிகையேந்தப்பொருந்தரசாள்வரே (க0)

பருப்புச்சொன்றிநெய்பாய்குளப்போனகம், விருப்பிற்பாயசமிக்கவபூபமுற்
பொருப்புச்சாபப்புராணற்களிப்பவர், கருப்புச்சாற்றிற்கலந்துலகாள்வரே. ()

கடத்துதித்தநங்கண்ணுதல்வாழ்தளி, யிடத்துநாளுமியமுழங்கச்செய்வோர்
திடத்துமேவிப்பல்செல்வமும்வாய்ந்தராப், படத்துமேற்புவிமுற்றும்பரிப்பரே.

நலக்கமேவியநங்கள்கும்பேசர்தாட், கிலக்கம்வில்வமெடுத்தருச்சிப்பவ
ரலக்கணீங்கியவனுருவங்கொடு, கலக்கமின்றிக்கயிலையில்வாழ்வரால். (கங)

பாவின்பாலமர்சீர்க்குடப்பண்ணவற், காவின்பால்கறந்தாட்டுமெறிவினர்
பூவின்பாலமர்புண்ணியனுகிப்பின், மேவின்பாலொப்புவீத்தவராவரே. (கச)

மடந்தைபாலுடைவள்ளல்வளப்பெருங், குடந்தைமேயகுழகற்குச்சாத்துவான்
றடந்தைநந்தவனஞ்சமைப்போர்வினை, கடந்தையாநிதிக்காவலராவரே. (கரு)

கும்பநாதன்குளிர்முடிக்கேற்றிடும், வம்பவாமலர்நந்தனஞ்செய்பவர்க்
கிம்பரோதுணையாகுமியல்பினு, ரும்பராகியுறுநலந்துய்ப்பரே. (கசு)

தன்னின்மேலில்கும்பேசநஞ்சாமிக்குப், பொன்னின்வெள்ளியிற்போற்றுபல்
பாத்திர, மின்னினேங்கிவிளங்கக்கொடுப்பவர், மன்னின்பத்தமர்வார்சிவலோ
கத்தே. (கஎ)

அந்தமில்லாவமலகும்பேசற்குச், சந்தனங்கருப்பூரந்தண்குங்குமம்
வந்தமென்மலர்மற்றுங்கொடுப்பவர், முந்தவாழ்வித்தவர்கிளைமுற்றுமே. (கஅ)

வெருவுதீர்கும்பலிங்கவிமலற்கு, மருவுமோர்முழவத்திரநல்குவோர்
திருவும்போகமுஞ்சேர்தரவாழ்ந்துபி, ன்ஞெருவுமாதவயோகியராவரே. (ககூ)

பட்டுவத்திரமாதிபரிவொடுங், சட்டுவார்சடையாளர்கடேசற்குத்
தொட்டுநல்குனர்தூயவெண்சித்திக, ளொட்டுந்தம்பணிசெய்யவிருப்பரே. (உ0)

ஐயமங்கஃயாளொருபாகற்கு, வையமேத்தைம்பருவவிழாவளஞ்
செய்யவாற்றுந்திருவுடையாருயி, ருய்யவெங்குமொருகுடையாள்வரே.(உக)

ஏகனஞ்சமுதாக்குமிறையுமை, பாகனஞ்செழுத்தான்பரிந்தூரப்பொன்
வாகனஞ்செய்துவைக்குந்திருவினர், மேகனஞ்சலிக்குந்திருமேவுவார். (உஉ)

வரதன்மங்களவல்லிமணாளனுக், கிரதமாதியிலங்கப்புரிபவர்
விரதயோகரும்வேட்குந்திருவராய்ச்,சரதம்வாழ்வர்தகுஞ்சிவலோகமே.(உந)

அரியகும்பத்துதித்தவமலனுக், குரியகோயிலுறுசுடரேற்றுவான்
றெரியவாமிருப்பைப்பொழில்செய்பவர், பிரியமாரவன்றன்னிற்பிறங்குவார்.()

மேயவற்பின்விமலன்றளிக்கில, மாயனைப்புதுக்குந்திறலாளர்தாம்
பாயமண்முழுதாண்டுபெரவவ, னேயமாருங்கலப்பினிலவுவார். (உரு)

வையமேத்துங்கும்பேசநம்வள்ளஃச், செய்யவன்பிற்சிவநிசிப்போதெல்லாம்
பொய்யவாவறப்பூசிப்பவர்பல, மையயாவரறைதரவல்லரே. (உசு)

பாயமேன்மைப்பரமன்கும்பேசனைத், தூயதாம்பிரதோடத்திற்கார்த்திகை
யாயமாமதிவாரத்திலர்ச்சிப்பா, ரேயவிந்திரராகியின்பெய்துவார். (உஎ)

மன்னுகும்பத்துவள்ளன்மகிழ்தர, மின்னுசோற்றபிடேகஞ்செய்வித்தக
ருன்னுமோரவிழ்க்கோர்பரிமேதஞ்செய், துன்னுமாப்பயனெய்தித்துளங்குவார்

எந்தநாளினுமெங்கள்கும்பேசனைச், சந்தமேவவணங்குந்தகையினர்
பந்தமோதிப்பரகதிச்செல்வராய், நந்தவாழ்வர்நவிலுவதென்னரோ. (உகூ)

இனையமான்மியமுண்மையென்றெண்ணுரூர், வினையமேவுமளற்றிடைவீழ்வரா
ற், புனையவாகாப்புஃயருமாகுவார், மனையவாவொழிமாண்புடையந்தணீர். ()

வானநாடர்மகபதிசத்தியத், தானமேவுஞ்சதுமுகனுதியோ
ரானவாழ்க்கையடைந்திறுமாப்புற, லீனமோவுநம்மீச்சுரன்பூசையால். (நக)

கும்பேசர் பணிவிடைசெய்வோர் பேறுரைத்த
படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஉஅச.

---

## கருமசன்மன் முத்தியடைந்த படலம்.

---

வலர்சேர்தரமன்னுகுடந்தைநக, ரலர்சேரிதழித்தொடையாரருளாற்
கலர்சேர்தொழிற்கன்மசன்மப்பெயரா, னலர்சேர் கதிநண்ணியதோதிடுவாம்.

தக்கார்புகழ்தாவில்குடந்தையின்வாழ், மிக்காளெருவேதசன்மப்பெயரா
னக்கார்மனைநங்கைசுசந்தரையோ, டிக்காசினியேத்திடவாழ்தருநாள். (உ)

பொல்லான்மிகுபுன்மைபுரிந்துழலும், வல்லானொருமைந்தனுதித்தனனக்
கல்லான்பெயர்கன்மசன்மன்புகலி. னெல்லானறமென்பதிலுண்மையிலான்.()

காராளெெடுசெம்மறியாடுகவின், ஞாராமதுவெண்டயிலங்கவரா
வோராவிலைசெய்தலுவந்துடையான், பாராரிழிபேபரவப்புனைவான். (௪)

அனையான்செயன்முற்றுமறிந்துபிதா, வினையாவிதான்றலவென்றிடவுந்
துனையானதுசோரவிடற்குமனம், புனையாவிழிவிற்படுபுந்தியினன். (௫)

அதுகண்டபிதாவுளயர்ச்சியினு, லிதுகண்டிலனென்றுயிர்விட்டனனின்
மதுவொண்குழன்மாமனையும்முடனே,குதுமென்றுதொடர்ந்தனள்கூடினளே. (௬)

ஈன்றாரிருவோருமிகந்தொழியச், சான்றாண்மையிலாதுதபுங்கொடியோன்
மான்றாரமின்றிவருந்தியுருத், தோன்றாவறுமைக்கடலுட்டுளைவான். (௭)

வம்பேபுரிகின்றமனக்கொடியோன், கும்பேசர்குலாவுபெருந்தளியுட்
பம்பாதரவிற்பரிசாரகனாய், வெம்பாவுழல்வேலையின்மேவினனே. (௮)

ஒருநாணலமோங்குபதஞ்சமையா, வருகாவபிடேகமதாற்றிடுவான்
றருகாதலிற்றண்டுலநூறுசிவந், திருகாதளந்தார்சிலபுண்ணியரோ. (௯)

எடுத்தான்சிலதண்டுலமேற்பமணல், விடுத்தான்சமைத்தானந்தவெவ்வினையாற்
சுடுத்தானெனக்காகவலிப்படையப், படுத்தான்கழிபாயுறவாயினனே. (௧௦)

(வேறு.)

பொல்லாதகொடும்பிணிக்கோட்பட்டுழலும்பொறியில்லான்
கல்லாதமுழுமூடரிணக்கமறக்கைவிடுத்து
வெல்லாதமறையாதிமிக்குணர்ந்தவேதியனு
யொல்லாதவொழித்தமருமொருபுராணிகற்சார்ந்தான். (௧௧)

அன்னவனங்கும்பேசராயலத்துமுன்னமர்ந்து
பன்னரியபுராணமொன்றுபற்பலருமுணர்பாக்கு
நன்னயத்தின்விரித்துரைப்பான்பரசிவனற்பொருள்கவர்ந்தா
ரொன்னராயினுங்காகவலிப்புமுதற்பிணியெய்தி. (௧௨)

வெய்யதுயர்க்குழிசியராய்மெலிந்துசழிந்திறந்துபின
ரையகொடுநரகமெலாமாழ்ந்தாழ்ந்துகவலுவவொன்
றுய்யுமுறைையெடுத்துரைத்தானுதுகேட்டுக்கருமசன்ம
னையும்வினைப்பிணிமேவுகாரணநன்குறவுணர்ந்தான். (௧௩)

கருதரியவதுதீர்க்குங்கழுவாயுமற்றவன்பா
லொருதவறுமின்றியுணர்ந்தொய்யெனத்தான்கவர்ந்தபொரு
ளருகலிலொன்றனுக்குமூன்றபராதமாக்கொடுத்துப்
பெருகுபணிவிடைசெய்துபெரும்பிணியுமொழிந்துய்ந்தான். (௧௪)

பன்னாளும்பணிசெய்துபற்பலர்க்குமறியாது
மின்னாளுஞ்சடைப்பெருமான்பொருள்கவரவிளைந்தநோய்த்
துன்னாளுந்திறமுமதன்றொலைவுமுணர்தரப்புகன்று
பின்னாளும்பருமெய்தாப்பெருங்கதிபுக்கினிதமர்ந்தான். (௧௫)

கருமசன்மன்முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௨௧௧.

## மாந்தாதா பேறுபெற்ற படலம்.

---

தந்தநேரிடைமங்களநாயகிதன்னே
டுந்துபேரருட்கும்பலிங்கேசரையுவந்து
நந்துநீர்க்குடமூக்கினுணயந்துமாந்தாதா
வந்துபூசித்துப்பெற்றதையுணர்தரவகுப்பாம். (௧)

நாகுவஞ்சியர்மதனெனநயப்புறமிக்கு
வாகுதண்குலத்தொருகதிரவனெனவந்தான்
சேகுவிண்டநல்லறந்தழீஇப்பரந்தவெண்டிக்கும்
போகுமின்புகழ்ப்போர்வையான்பொருவின்மாந்தாதா. (௨)

நலத்தின்மிக்கவன்மாற்றலர்கூற்றெனநடுங்கும்
வலத்தின்மிக்கவன்மாமுனிவரர்களுமதிக்கும்
புலத்தின்மிக்கவன்புண்ணியம்பொருளெனப்போற்று
மலத்தின்மிக்கவனண்ணலங்கவிகையினனையான். (௩)

தக்கமாதவவசிட்டனுங்குரவனைத்தாழ்ந்து
மிக்கமண்முழுதாண்டிடவிழைந்துளனதற்குப்
பொக்கமோவுமெத்தவம்புரிவேனதுபுகல்வாய்
திக்கவாவியகுணத்தினாயெனவவன்செப்பும். (௪)

மன்னநன்றுளம்விழைந்தனைமற்றுளம்விழைந்த
தென்னதாயினும்பெறுவதற்கையமொன்றின்று
சொன்னமாமதில்சூழ்குடமூக்கினைத்துன்னி
யன்னமூர்பவன்போற்றுகும்பேசரையடுத்து. (௫)

அந்தநாயகர்க்கெதிரமாமுதநற்றீர்த்தஞ்
சந்தமார்தரப்படிந்தொருதிருவிழாச்சமைத்துக்
கந்தமென்மலராதியகவர்ந்தருச்சித்து
முந்தவேத்துதிமுன்னியயாவையுமுற்றும். (௬)

என்றுகூறினன்முனிவரனவனடியிறைஞ்சி
யன்றுநல்விடைபெற்றெழுந்தான்றமாந்தாதா
துன்றுபல்சனஞ்சூழ்தரச்சூழ்பவர்பாவங்
கொன்றுவீடருள்கும்பகோணம்புகல்குறித்தான். (௭)

பேசியாவரும்பெட்புறும்பெருநலம்பிறங்குங்
காசியாதியதலமெலாங்கண்டுசென்றிறைஞ்சி
யாசிமாதவரறைந்திடவேற்றவிர்வேத
வாசியானமர்கும்பகோணப்பதிவந்தான். (௮)

வந்தமன்னவன்கும்பகோணப்பெருவளங்கண்
முந்தநோக்கிமிக்கதிசயித்திருகையுமுகிழ்த்துச்
சிந்தவெவ்வினையாவையுஞ்சங்கற்பஞ்செய்து
பந்தமோசிக்குமமுதவாவிப்புனல்படிந்து. (௯)

நீறுபூசியொண்கண்மணிபுனைந்துநெஞ்சமூர்ந்தக்
கூறுமைந்தெழுத்தழுத்தியந்நின்றொர்நீஇக்குலவு
நாறுகூவிளஞ்சடைக்கணிநங்கள்கும்பேசர்
மாறுதீர்தளிநுழைந்தனன்கோபுரம்வணங்கி. (௧௦)

நாடவாமுடிமன்னவனடுத்தலுநயந்து
மேடமாதமுமடுத்ததுபூசிக்கும்விருப்ப
நீடவாசநெய்பாறயிர்முதற்பலநிரப்பி
யாடமன்றவாமண்ணலுக்கன்புறவாட்டி. (௧௧)

பொருந்துபற்பலபட்டினுற்பொன்னிழைத்துகிலாற்
றிருந்துபன்மணிமகுடங்கேயூரஞ்செங்கதிரும்
வருந்துமொண்குழைமதாணிமுற்பலகலவகையா
லருந்துநஞ்சுடையண்ணன்மேனியையலங்கரித்து. (௧௨)

தளவமல்லிகைசண்பகம்பாடலமலரி
கொளவமைந்தபைங்கொன்றைகூவிளநறுங்குருந்து
பிளவமைந்தவாய்த்தாமரைபிறங்குசெங்கழுநீ
ருளவளங்கெழுமலரொலாமொருங்குறச்சாத்தி. (௧௩)

நெய்விராம்பதம்பாறயிர்குளநிரம்படிசில்
குய்விராங்கறிபாகுபாயசங்குலவபூப
மெய்விராம்வனமாதிநின்றெய்தியகனிகண்
மெய்விராமுளத்தன்பொடும்விழைதரலூட்டி. (௧௪)

இன்னுநன்றுசெய்முகமனென்பனவெலாமியற்றி
மன்னுநல்லருண்மங்களாம்பிகைக்குமிவ்வாறே
பன்னுநல்லபிடேகமாதியபலசெய்து
மின்னும்வேலுடைப்புரவலன்விருப்பொடுபணிந்து. (௧௫)

மற்றுமம்மதித்திருவிழாவாற்றிடமதித்துச்
சுற்றுமெங்கணுஞ்சுடர்தரநகரலங்கரித்துப்
பற்றுமன்னராதியரவட்பாவிடப்புரிந்தே
யெற்றுநீருலகேத்திடவிடைக்கொடியேற்றி. (௧௬)

எண்ணுமொன்பதுதினத்தினும்விமானமேறியானை
பண்ணும்வாம்பரியாதியாப்பைம்பொற்றேரீறாக்
கண்ணுநல்விழாநடத்துபுபத்தெனக்கனைய
நண்ணுநாள்வருபூரணையுதயத்துநயந்து. (௧௭)

தண்டவாதபொற்றாமரையமுதநீர்த்தடத்தி
லண்டரோத்திடவத்திரதேவனையாட்டிக்
கொண்டல்போற்பணைமுழங்கிடக்கும்பலிங்கேசர்
வண்டவாங்குழன்மங்களநாயகியோடும். (௧௮)

மற்றுளாரொடுமெழுநகர்சூழ்விழாவயக்கி
யுற்றுமேலவர்புகழ்தரவாலயமுறுவித்
திற்றுவல்வினையிரிதரவின்பமூற்றெடுப்பப்
பற்றுமேவரப்பணிந்தெழுந்தெதிர்நின்றுதுதிப்பான். (௧௯)

அடியரெண்ணியவெண்ணியாங்களிப்பவசரணங்
கொடியர்முப்புரநீறெழக்குறித்தவசரணங்
கடியர்சிந்தையுளகப்படாக்கண்ணுதல்சரண
நெடியராயினுமேத்திடநிலவுவாய்சரணம். (உ0)

போற்றிசங்கரபுண்ணியபூரணபுராண
போற்றிநான்முகனுதியரறிதராப்புனித
போற்றிமுப்புரநீறெழக்கொண்டவிற்பொருப்ப
போற்றிமங்கைவனமுலைதழுவுபொற்புயத்த. (உக)

சரணமெங்களையாளவிங்கமர்தருசம்பு
சரணமங்கையொருபுறந்தழுவியசாமி
சரணமன்பருக்கின்பவீடளித்தருடலைவ
சரணம்வெள்விடைமேல்வருதவாவருட்டனியாய். (உஉ)

புவனமெங்கணுமுயிர்க்குயிராயினும்பொலிசம்
புவனமாதியபஃறலந்தழுவினும்புடவி
புவனமேமுதலெட்டுருவுடையபுண்ணியநம்
புவனமாலையான்பரவுநின்பொன்னடிபோற்றி. (உங)

கந்தவேடனைப்பயந்தவகாமமாதியவி
கந்தயோகியருள்ளத்தாய்கனையெறிகடன்மு
கந்தகார்புனைகண்டத்தாய்கடுக்கைமாலிகைச்சு
கந்தமோலியாய்நின்னடியடைந்தனன்கடையேன். (உச)

என்றுதோத்திரம்புரிதரவெம்பிரானிரங்கி
யொன்றுவெள்விடைமேலுமையாளொடுந்தோன்றக்
குன்றுநேர்புயக்கோமகனடிபணிந்தெழுந்தா
னன்றுநின்னுளம்விழைந்ததென்னவிலுதியென்றான். (உரு)

ஐயநின்னடிக்கிடையறுவன்பெனக்கமைய
வெய்யபாவியரேனுமிம்மேடமாமதியிற்
செய்யநின்விழாச்சேவிப்போர்புனிதராய்ச்சிறக்க
வையமேத்துமிவ்விழாச்செய்வோர்மன்னராய்வயங்க. (உசு)

பாயகாஞ்சனத்தாமரைநீர்த்தடம்படிந்து
மேயநின்னடிபோற்றுவார்பெருந்திருமேவ
வாயமண்ணெலாமடியனேயொருவனேயாள
நாயனேயுனதடிக்கலப்பீறறினனண்ண. (உஎ)

வேண்டுமென்றனன்கொடுத்தவைமறைந்தனன்விமலன்
ஞண்டுவாம்பரிமன்னவன்றனதிடஞ்சார்ந்தா
ஞண்டுவையகமுழுமையுமீற்றுவந்தடைந்தான்
கூண்டுவானர்தாழ்சும்பநாயகனடிக்குளிர்பூ. (உஅ)

மேடமாமதித்திருவிழாத்தரிசித்தல்விழைந்து
கூடவேவலஞ்சூழுதலிரணியங்கொடுத்து
நீடமற்றதைச்சிறப்பித்தலுறுபலநிகழ்த்தி
னூடல்வல்லவரருளினுலொன்றற்கொன்றதிகம். (உகூ)

புரவுவாய்ந்தபொற்றுமரைப்பெருந்தடம்புகுந்து
பரவுநூல்விதிப்படிபடிஞெடிதரப்படிந்து
கரவுதீர்கும்பலிங்கரைக்காமர்மங்கலையை
யுரவுமேவப்போற்றிடுபவர்பலமெவருரைப்பார். (௩௦)

மாந்தாதாபேறுபெற்றபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௩௨௬.

---

## பொற்றுமரைப்படலம்.

---:o:---

வார்த்தவாக்குங்குமக்கொங்கைமங்கலை, யார்த்தபாகத்தமலர்கும்பேசனூர்
பார்த்தபார்வைபராயபொற்றுமரைத், தீர்த்தமேன்மைசிறிதுவிளம்புவாம். (௧)

பொங்குதெய்வப்புனிதகுடச்சுதை, தங்குகாரணத்தாலத்தடத்தினை
நங்குதீரமுதத்தடநாமம்வைத், தெங்குமோதுமிடைத்தடையின்றியே. (௨)

எங்கள்கும்பலிங்கேசரருளினுற், றிங்கள்வாண்முகச்செய்யவடோன்றுமா
றங்கள்வார்ந்தபொற்றுமரையாதலாற், பங்கமோவப்படுபெருவானமும். (௩)

வாரிசூழ்பெருமண்ணும்பொற்றுமரை, யூரிநீரொன்றுரைக்குமொழிந்தவிப்
பேரியாவர்பிறங்குறக்கூறினுஞ், சீரியோரவராவதுதிண்ணமே. (௪)

அறமளித்தலின்ப்புனல்செய்யபொன், னிறமளித்தலினப்புனனீளின்பத்
திறமளித்தலினப்புனல்சன்மந்தீர், புறமளித்தலினப்புனலென்பரால். (௫)

மன்னுமேடமதிப்பருவத்தினுர், றன்னுகார்த்திகைச்சோமநல்வாரத்து [ம்.
முன்னுவான்குருமொய்ம்மதித்தோற்றத்து, மின்னுமேன்மையியலுநன்னாளினு

அறந்தவாவளத்தப்புனன்மூழ்குபு, சிறந்தயோகியர்கொள்ளச்செழும்பொரு
ணிறந்தவாதநன்னீர்மையினல்குவோர், பிறந்தவான்பயன்பெற்றுத்தினைப்பரோ

சொற்றபுண்ணியகாலந்தொறும்படிந், தற்றமோர்ந்துநம்மாதிகும்பேசனைப்
பொற்றமங்கலையைத்தொழல்பூண்டவர், பெற்றமேறப்பிரானுருக்கொள்வரோ

அன்னபுண்ணியதீர்த்தமவாய்ப்படீஇப், பின்னமின்றிப்பிதிரர்தஞ்செய்கட
னன்னராற்றுநயப்பினரியாவரு, மின்னல்வாரியினன்னரையேற்றினூர். (௯)

ஆயதீர்த்தத்தமுழக்கஞ்செயா, வேயத்தோய்ந்துவெண்ணீறிலங்கப்புனைஇத்
தூயவைந்தெழுத்தெண்ணுந்துணிபினோர், தீயராயினுஞ்செல்வர்சிவபுரம்.(௧௦)

வருணனென்பவன்வந்தப்புனல்படிந், தருணமேனியமுதகும்பேசனைப் [ன்
பொருணயந்துறப்பூசைசெய்தேத்தினன், றெருணயந்தோர்திசைக்கரசாயினு

பூப்படைத்தவப்புண்ணியதீர்த்தமை, மாப்படைத்தவசுவந்துமூழ்கிமா
லேப்படைத்தகும்பேசனைப்போற்றியேழ், நாப்படைத்துநலமுறவாழ்ந்தனன்.

காலன்வந்துகருதும்பரணிநாண், மாலன்போடுமவ்வாவிபடிந்துமை [டனன்.
பாலன்கும்பப்பகவனைப்போற்றிச்செந், கோலன்றென்றிசையூர்க்குடிகொண்

இன்னுமிங்ஙனமெய்தியளவிலார், மன்னும்பொற்றாமரைப்புனலாடியே
முன்னுங்கும்பமுதல்வனைப்பூசித்துப், பன்னும்போகங்கள்பற்பலவெய்தினர்.()

மாடுவேண்டினும்வையம்புரந்தருள், பீடுவேண்டினும்பெட்புறுகற்பக
நாடுவேண்டினுநல்லருள்சால்பர, வீடுவேண்டினும்வீசும்பொற்றாமரை. (சரு)

சாற்றுமேன்மைப்பொற்றாமரைச்சுற்றினு, மாற்றுவில்வமளவிலமொய்ப்பன
வேற்றுமத்தளிர்கொண்டுகும்பேசனைப்,போற்றுமன்பினர்புண்ணியர்நாளுமே

வானநாடர்மகபதிநாளில்வந், தானதீர்த்தமவாவிப்படிந்துதம்
மூனந்திரவொருகுடமேவிய, ஞானநாதனைப்போற்றிநயப்பரால். (கள)

அன்னநாளினுமாதிரைநாளினு, மன்னதீர்த்தமுள்ளன்பிற்படிந்தெழா
வன்னவான்குடத்தண்ணலைப்போற்றிடி, னன்னமூர்பவன்போற்றுநராவரோ.()

பொற்றாமரைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கருஅள.

# இந்திரன்பூசைப்படலம்.

சந்திரன்றவழுமோலிச்சங்கரனெழுத்தைந்தாய
மந்திரனோன்காறெட்டுவருதலையிருபான்பத்துத்
தந்திரன்குடந்தைமேயதற்பரன்பொற்பார்பாத
மிந்திரனருச்சித்தேத்திப்பெற்றபேறெடுத்துச்சொல்வாம். (க)

இரைநவின்றவாவிவீழ்ந்தோரிராயிரங்கோடிவண்டர்
திரையெறிமதுவமாந்திச்செவ்விதிற்கனைத்தல்செய்து
புரைதவிர்ந்தொருங்குமீட்டும்பொள்ளெனக்குடஇக்குமட்டிக்
கரையறவெதிரொடுக்குங்கற்பகமாலைவேந்தன். (உ)

வானவர்மலர்கவேிமலர்ப்பதமுடிகடீட்டத்
தானவரற்றநோக்கிப்புறங்கடைத்தளர்ந்துவைக
வேனவர்புகழ்ந்துபோற்றவிருடியராசிகூறக்
கானவராகமல்குங்கற்பகமதுப்பிலிற்ற. (ங)

முழுமதிவிளக்மன்னமுத்தவெண்குடைநிழற்ற
வொழுகொளிவயிரவொள்வாளொருவலப்புறங்கதிர்ப்பச்
செழுமதிக்கிரணமாய்க்குந்திவளொளிக்கவரிதுள்ளக்
கெழுமணிச்சிவிறியாலவட்டங்கள்கிளர்ந்துபொங்க. (ச)

அரமடந்தையருட்சில்லோர்பாகடையவாவிநீட்ட
விரவெழிலமைந்தார்சில்லோர்மிளிர்மணிக்களாசியேந்தப்
பரவியசதியிற்சில்லோர்பரிபுரப்பதம்பெயர்க்க
வரமிகுமாகாவூகூவடித்திசையமுதமூட்ட. (ரு)

வெள்ளியங்கிரிநின்றென்னவிளங்கயிராவதப்பேர்
வள்ளியபகடுமுச்சைச்சிரவவாம்பரியுநேரோ
துள்ளியகளிப்பினிற்பச்சுந்தரவாழ்த்துமல்க
வொள்ளியவிருப்பிற்சில்லோர்கையுறையுதவாநிற்ப. (சு)

இருநிதிகாமதேனுவெழிற்சிந்தாமணியைந்தாய
தருவிவையனைத்தும்பார்வைக்குறிதசநோக்கிமேவ
வருபெருமுரசமார்ப்பமாகதர்புகழ்ந்துபாட
வொருவருங்களிப்பின்மேவியரியணையமர்ந்தானோர்நாள். (எ)

அரியணையமர்ந்தவேந்தனுவளகமடுத்தகாலை
வரிமதர்க்கருங்கட்செவ்வாய்வளம்பொலியிந்திராணி
விரிமுலைக்குவட்டுமேவிவிருப்புறுசெவ்வாயூறற்
புரிதருமதுவந்துய்த்துப்பொலிவுறவமரும்போழ்து. (அ)

மகவிலாவறுமையாலேமனந்தளர்ந்தொருங்குநைந்து
தகவிலாவுயிரின்மாழ்குந்தகையினேனென்றுசாம்பி
யிகவிலாச்சசியோடெண்ணியென்செய்வாமிதற்கென்றெய்ந்து
நகவிலாதரித்தபெம்மானருள்செயினன்றேமென்று. (கூ)

மற்றவன்றன்னைப்போற்றிவழிபடின்விரைந்துநல்கும்
பற்றுமிக்காயதானம்யாதெனப்படர்ந்துந்தேரான்
பொற்றவிந்திரனிவ்வாறுபுந்திகொண்டமருமேல்வை
கற்றவர்புகழாகிற்குங்காமராண்டளப்பான்வந்தான். (க0)

வந்தவனடிகள்போற்றிமகவிலாவறுமையாலே
நொந்தனனடியேனந்தநோதகவொருகோட்டும்பல்
கந்தனைப்பயந்தமுக்கட்கடவுளைவழிபாடாற்றிற்
பந்தமுற்றறுமென்றுள்ளம்படர்ந்தனன்வழிபாடாற்றின். (கக)

விரைதரவருளுந்தானமேதினியிடத்தியாதென்று
புரைதபவாய்ந்தேனென்றுந்தெளிகிலேன்போதமூர்த்தி
தரையகத்தின்னதென்றுசாற்றிடல்வேண்டுமென்றான்
களையறவுணர்ந்தவாசான்றெளிந்திதுகரையலுற்றான். (கஉ)

அறமணுத்துணைசெய்தாலுமேருவினமையுந்தானம்
புறனடைந்தவர்க்குமெல்லாவிலாபமும்புணர்க்குந்தானந்
திறமுறநினைத்தபோதுஞ்சிந்தித்ததெய்துந்தான
மறமறவிரைந்தியார்க்கும்பயன்றரவல்லதானம். (கங)

கொண்டலம்பணையார்கும்பகோணமாநகரமொன்றே
கண்டவர்வசித்தோருள்ளங்கருதினோரெவர்க்குநாளு
மண்டர்தம்பதமுன்னுகயாவையுமளிக்கவல்ல
தெண்டருமதன்பாலெய்தியிறைவனைப்போற்றுகென்றான். (கச)

குரவன்வாய்மாற்றங்கேட்டுக்கொண்டலூர்பவனப்போதே
பரவருங்கன்னிமாதம்பகர்குருமேவுநாளிற்
றிரமிகுகும்பகோணச்செழுநகரடைந்துநாளும்
வரமலிதெய்வப்பொற்றாமரைப்புனல்விதியினாடி. (கரு)

திருமலிநீறுபூசிச்சிறந்தகண்மணியும்பூண்டு
குருமலியெழுத்தோரைந்துங்கோதறவுளங்குறித்து
மருமலிகடுக்கைமோலிவள்ளல்கும்பேசன்மேய
வுருமலிதளியுட்புக்கானொள்ளியவயிரவேலான். (கசா)

மாலயனுணராமுக்கண்வள்ளலாரினிதுமேய
வாலயமுழுதும்பொன்னாலவிர்நவமணியான்மற்றுஞ்
சாலவுள்ளனவான்மேலாத்தகுமலங்காரஞ்செய்து
கோலமார்தயிலமாதியபிடேகங்குளிரச்செய்து. (கஎ)

பல்வகைமலர்நற்பட்டாற்படாமணிப்பணியாலின்ப
மொல்வகையலங்காரஞ்செய்துறுசுவைபலவாமன்ன
மல்சலிலபூபவர்க்கமாதியபலவுமூட்டி
மெல்கலினுபசாரங்கள்யாவையும்விளைத்தபின்னர். (கஅ)

மடைதிறந்தொழுகுமன்பின்மருவுமட்டாங்கமாக
வுடையநாயகன்முற்பல்காலொழிவறத்தாழ்ந்தெழுந்து
பெடையொடுசுரும்புபாடும்பிரணவப்பூந்தார்பூண்டாய்
கடையனேற்கருடியென்றுதோத்திரங்கணாயலுற்றான். (கக)

காலனைக்காய்ந்தகாலகனல்விழிகதிர்க்கும்பால
மாலறத்தெளிந்தாரோலமறையுமுனைதிராஞ்சில
வாலமொத்தவிருஞ்சூலவருட்பராபனைபாற்கோல
நூலகத்தமர்விசாலநுவலருமூலபோற்றி. (உ0)

சக்கரப்படையாய்போற்றிதரக்கதனுடையாய்போற்றி
செக்கரஞ்சடையாய்போற்றிசிறுமைசற்றனடையாய்போற்றி
தக்கவரிடையாய்போற்றிதவலருங்கொடையாய்போற்றி
பொக்கமில்விடையாய்போற்றிபுகழ்தருநடையாய்போற்றி. (உக)

ஜடனேபோற்றிமுக்கணமலனேபோற்றிசூலக்
கையனேபோற்றிநெற்றிக்கண்ணனேபோற்றிமேனிச்
செய்யனேபோற்றிநீங்காச்செல்வனேபோற்றிவெய்யோர்
வெய்யனேபோற்றியெங்கும்விளங்குகும்பேசபோற்றி. (உஉ)

எங்கணும்வாசபோற்றியிருந்தழலாசபோற்றி
பங்கவெம்பாசபோற்றிபடுபவநாசபோற்றி
யங்கனிதேசபோற்றியருட்பிரகாசபோற்றி
மங்கலைநேசபோற்றிவயங்குகும்பேசபோற்றி. (உங)

கழைகுழைத்தளிநாண்பூட்டுங்காமனைக்காய்ந்தாய்போற்றி
யுழைமருள்கருங்கட்செவ்வாயொருத்திபாலேய்ந்தாய்போற்றி
தழைபுகழ்ச்சங்கமேவித்தண்டமிழாய்ந்தாய்போற்றி
விழைதருபொருள்கண்முற்றும்விராவறத்தோய்ந்தாய்போற்றி. (உச)

தொடுசெழற்கிராதனாகிச்சுதைக்குடஞ்சிதைத்தாய்போற்றி
நடுவணக்குடத்துத்தோன்றிவிதிதொழமேயந்தாய்போற்றி
கொடுமையிற்பொலிந்தசண்டிக்கிருங்கதிகொடுத்தாய்போற்றி
யடுபடைக்கிருதவீரியற்குச்சேயளித்தாய்போற்றி. (உரு)

வயங்கெழுசுதன்மன்வீரவன்மன்வந்திறைஞ்சிப்போற்ற
நயங்கெழுமகவுநல்கிநல்லருள்சுரந்தாய்போற்றி
பயங்கெழுஞானவான்பொன்னுரோமன்பாதகத்துக்கஞ்சாக்
கடங்கெழுசருமசன்மன்றெழுவருள்கவிழ்த்தாய்போற்றி. (உசா)

மன்னியவேமவாகுமனைமெலிவொழித்தாய்போற்றி
பன்னியபுகழ்மாந்தாதாதொழவருள்பரிந்துநல்கி
மின்னகுதழலோன்காலன்மேதகுவருணன்போற்ற
முன்னியவளித்தாய்போற்றிமுனிவில்கும்பேசபோற்றி. (௨௭)

என்றிருந்துதிகள்கூறுமிந்திரனெதிரேபெம்மா
னன்றியல்காட்சிநல்கிவேட்டதுநவிறியென்றான்
குன்றவிற்குழகாணைமந்தற்பெறுவரங்கொடுத்தியின்னு
மொன்றவித்தினம்பூசிப்போரப்பொருளுறுவான்செய்தி. (௨௮)

அடியனேனாண்டுக்கோர்காலமைந்தவிந்நாளினெய்தி
முடிவறப்பூசித்தேத்துமுறைமையுமளித்தியென்றா
னொடிவறவனைத்துநல்கியும்பர்தம்பிரான்மறைந்தான்
வடிமலர்க்கற்பவேந்தன்மங்களாம்பிகைபாற்சென்று. (௨௯)

இந்தவாறாட்டியூட்டியியம்பிநல்லருளும்பெற்றுச்
சந்தமார்தானஞ்சென்றுசயந்தனைமகவாப்பெற்று
முந்தவாதரித்துவாழ்ந்தான்முனிவறவாண்டுதோறும்
வந்தவாறமலற்போற்றிவணங்குவான்வானநாடன். (௩௦)

இந்திரன்பூசைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம். ௧௩௭௭.

## சோமேசப்படலம்.

ஓமேயபொருளாய்நாளுமொளிர்தருபுகழ்க்கும்பேசர்
தாமேயதளிமுன்மேயதடப்பொற்றாமரையின்கீழ்பாற்
கோமேதம்பதுமராகங்குலாஞ்சினகரச்சிக்கேசர்
சோமேசனெனுமோர்நாமம்பெற்றதுசொல்லலுற்றாம். (௧)

பரவுசெங்கதிர்பரப்பிப்பங்கயமலர்த்துவான்போல்
விரவுவெண்கதிர்பரப்பிமேவரக்காம்பலாதி
யுரவுகொண்டிடமலர்த்தியொருபுடைமுழுதும்வெய்ய
வரவுகொள்ளினுமற்றொன்றால்விளக்கஞ்செயாலோனென்பான். (௨)

சிறுவிதிதவஞ்செய்தீன்றசேயிழைமடவார்தம்முன்
மறுவறுமிருபத்தேழுமகளிரையொருங்குவேட்டுக்
குறுநகையனையர்செம்பொற்கொங்கையங்குவட்டுமேவி
நறுமுறுப்பிமையோரெய்தநலனுகர்ந்தமருநாளில். (௩)

விதியினையாவர்வெல்வார்விண்ணவராசனோடு
பதிதருமன்பிற்போற்றப்படுபெருஞ்சிறப்புவாய்ந்து
மதிநலமருளுமாசான்மனைவியையஞ்சானாகிக்
கொதிபெருங்காமந்தீர்ப்பான்கூடுதன்முயன்றானன்றே. (௪)

முலைமுகம்வருடிச்செவ்வாய்முத்தமுண்டேறன்மாந்திக்
கலைகுலைத்தகலப்போக்கிக்கடிதடந்துழையச்செய்து
நிலையுகிர்க்குறிமுன்னாயகரணங்கணிகழவாற்றி
மலைவருமின்பந்துய்த்தான்வருவதுசற்றுந்தேரான். (௫)

கண்டனனுண்டளப்பான்கடுங்கனன்மூண்டாலென்னக்
கொண்டனனடங்காக்கோபங்கொதிகொதித்தாலகால
முண்டனனெனப்புழுங்கியுளைந்துகட்புலிங்கஞ்சிந்த
விண்டனன்கயநோய்கொண்டுவீடுதிதுரோகியென்றே. (௬)

என்றலுங்கொடியசாபமிறுகுறப்பற்றிக்கொண்ட
தன்றருந்தேசுமாழ்கிக்கலைகளுமடைவேதேய்ந்து
நன்றமையறிவுங்குன்றிநாசமுமுறுவதோர்ந்து
வென்றமைகுரவன்பாதம்வீழ்ந்திதுவேண்டுமிந்து. (௭)

அடியனேனறிவிலாமலாற்றியகுற்றநோக்கி
முடியவாங்கடியசாபமொழிந்தனையதுசூழ்ந்தென்னைத்
தடியயான்வருத்தம்பூண்டுசரணமென்றுனையடைந்தேன்
கொடியனேன்பிழைநோக்காதுகுறித்தருள்செய்தியென்றான். (௮)

என்றலுமிரங்கியாசானேற்றமார்கும்பகோண
நன்றவிர்கும்பலிங்கநாயகன்றிருமுன்மேவும்
பொன்றலில்லாதபொற்றாமரைப்பெயர்ப்புனற்குக்கீழ்பால்
வென்றவன்புகழின்வாழ்வார்மேதகுசிக்கநாதர். (௯)

அன்னவரிடப்பான்மேவுமம்மைதன்றிருமுன்னாக
நன்னர்வண்புனலொன்றாக்கிநலமுறவதிற்றோய்ந்தந்த
முன்னவர்பாதம்போற்றிமுயன்றவண்வசித்தல்செய்யிற்
பின்னவரருளாற்சாதல்பிழைத்துநீயுய்வாயென்றான். (௧௦)

குருவருண்மொழியுட்கொண்டுகும்பிட்டுவிடைபெற்றேகிப்
பருவரலடைந்தோர்க்கெல்லாம்பாற்றிடுங்கும்பகோணத்
திருநகரடைந்துதெய்வச்சிக்கேசரடியிற்றாழ்ந்து
பொருவருமுமையாண்முன்புபொலியவோர்தீர்த்தங்கண்டு. (௧௧)

அன்னநன்னீருண்மூழ்கியமலனையனையநீரான்
முன்னருமன்பினூட்டிமுனிவறப்பூசைசெய்து
பன்னருநெடுநாள்வைகப்பரம்பரன்கருணைபூத்துக்
கொன்னவில்விடைமேற்காட்சிகொடுத்தனனமரரார்ப்ப. (௧௨)

மதியடிபணிந்துபோற்றிமறைமுழுமுதலேயன்பர்
நிதியமேகருணைவாழ்வேநிமலமெய்ஞ்ஞானானந்தா
பதிதனேனிழைத்ததீங்கின்பான்மைமுற்றொழித்தாட்கொண்டு
திதிபெறவருளல்வேண்டுஞ்செய்குவதின்னுமுண்டால். (௧௩)

பொங்கொளிநினக்குநின்பாற்பொலிதருமுமைக்குநீவிர்
தங்குமித்தளிக்குநாயேன்சமைத்ததண்புனற்குநாளுந்
துங்கமிக்கென்பேர்முன்னாச்சொலப்படுநாமமாக
விங்கிவையருள்கவென்றானிளைத்துவந்தடைந்தசோமன். (௧௪)

குரவனென்றுளங்கொளாதகொடியபாதகநீசெய்தாய்
விரவதுதனக்குத்தீர்வுவிளம்பினேமல்லோமேனும்
பரவுமித்தலத்துவந்துபரிந்தெமைப்பூசைசெய்தா
யுரவுறுமதனாலந்தப்பாதகமொழித்தேங்கண்டாய். (௧௫)

முடிதலுமொழித்தோஞ்சாபமொழிந்தவனமக்கன்புள்ளோன்
படியறுமனையன்வார்த்தைபழுதடையாமற்றேய்ந்தும்
பொடியணிநமைப்பூசித்தபுண்ணியத்தால்வளர்ந்துங்
கடிதலில்பயிற்சிகோடிகலைகுலாமதிப்பேரோயே. (௧௬)

பின்னுநீவிழைந்தவெல்லாம்விழைந்தவாபெறுதியென்று
முன்னவன்மறைந்தானன்றுமுதலறிவினர்சோமேசர்
துன்னுநல்லருள்சால்சோமசுந்தரிசோமதீர்த்தம்
பன்னுசோமேசமென்றுபகருவர்யாருமுய்ய. (௧௭)

இந்தவாறருளிச்செய்தவேந்தலைமீட்டும்போற்றி
மந்தபேரன்புபூண்டமதியந்தன்னுலகஞ்சேர்ந்தா
னந்தமற்றவன்வாரத்திலண்ணலஞ்சோமநாத
னந்தமலர்ப்பாதம்போற்றினண்ணுவர்நினைத்தவெல்லாம். (௧௮)

சோமவாரத்துச்சென்றுசோமதீர்த்தம்படிந்து
சோமநாதனைப்பராவுசோமசுந்தரியைப்போற்றிச்
சோமமாதலத்துவாசந்துணிதரச்செய்வோரந்தச்
சோமசேகரன்றளீற்றிற்றுன்னுவர்போகந்துய்த்து. (௧௯)

மகப்பெறவேண்டினுலுமாநிலமுழுதுங்காக்கை
தகப்பெறவேண்டினுலுந்தானமாதியில்வாழ்வாழ்க்கை
மிகப்பெறவேண்டினுலும்வெவ்வினையறுத்துமுத்தி
நகப்பெறவேண்டினுலுநல்குமச்சோமதீர்த்தம். (௨௦)

மற்றொருகாலத்தந்தமாத்தலத்தாலோனெய்திப்
பற்றொருங்கறுத்தாளந்தப்பண்ணவன்பூசையாற்றி
யுற்றொருங்கியலுமன்போடோடதித்தலைமையுற்றான்
சற்றொருகணப்போதேனுமவனடிதாழ்ந்துபோற்றின். (௨௧)

அன்னவருயிர்கட்கெல்லாந்தலைமையுற்றமர்வரந்த
முன்னவன்சோமநாதன்முண்டகமலர்ப்பொற்பாத
நன்னர்நெல்லாதிவித்தும்பொழுதுளநயப்பவெண்ணி
லென்னபல்வளமுநன்றாய்ப்பொலிவதற்கிடையூறின்றே. (௨௨)

பின்னொருகாலஞ்சோமநாதனைப்பிறங்குமால்வந்
துன்னொருவருடம்பூசித்தொருங்குதானவரைச்சாய்க்கு
முன்னொருவரம்பெற்றானக்காரணமுகிழ்த்தவாற்றான்
மன்னொருவனுமவீசன்மாலீசனெனும்பேர்பெற்றான். (௨௩)

சோமேசப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௬௦௦.

---

## மாளவேசப்படலம்.

:0:

அடுத்தவர்மெலிதராமலாரருள்சுரந்துகாத்து
வடுத்தவிர்த்தருள்சோமேசர்வளர்சினகரத்துநாளுங்
கடுத்தலொன்றின்றிமேலாங்கண்ணருள்சுரந்தற்றானை
யெடுத்தினிதருளுமாளவேசர்தம்வரவுசொல்வாம். (௧)

வளமையின்மிக்கதாயமாளவதேயம்வாழ்வோன்
கிளரொளிநீறுபூசங்கிரசெனுமறையோனுளு
முளநலமுடையானெங்களுமையொருபாகற்கன்பு
தளர்வறக்கொண்டோனன்னான்றனையரோர்மூவரம்மா. (உ)

உரைதருமுன்னவன்பேருசத்தியனவற்குப்பின்னோன்
புரையறுதவத்தான்மிக்குப்பொலிபிரகற்பதிப்பேர்
தரைபுகழ்தரக்கொண்டுள்ளான்மற்றவன்றனக்குப்பின்னோன்
கரைசம்வாத்தகசிவாசாரியனெனக்கரைவர்யாரும். (ந)

இனையருண்முன்னோன்பின்னோனெனும்பிரகற்பதிப்பேர்
புனைபவன்கும்பகோணம்பொலிதருபுகழ்ச்சோமேச
நனையமென்கடுக்கைமாலைநம்பன்சோமேசற்போற்று
நினைவுறக்கொண்டான்றெய்வப்புரோகிதநிகழ்பேறெண்ணி. (ச)

தந்தைபால்விடையும்பெற்றுத்தவலருங்குடந்தையுள்ளால்
வந்தையானனன்சோமேசன்மலரடித்துணைகள்போற்றிப்
பந்தைநேர்கொங்கைச்சோமசுந்தரிபதமும்போற்றி
யந்தைதீருளத்தனுகியருந்தவம்புரியலுற்றான். (ரு)

சிலபகன்மூலமுண்டுஞ்சிலபகல்கனிகளுண்டுஞ்
சிலபகல்பசுங்காயுண்டுஞ்சிலபகல்சருகேயுண்டுஞ்
சிலபகல்புனலேயுண்டுஞ்சிலபகல்வாயுவுண்டுஞ்
சிலபகல்வறிதிருந்துஞ்செய்தனன்றவமேன்மேலும். (சு)

மழைபொழிகாலந்தன்னில்வாரிசமலர்கள்பூத்து
விழைதருசோமதீர்த்தத்துட்புகூஉவிராயிருந்துந்
தழையுதிர்வேனிற்காலந்தழனடுவமர்ந்துமிவ்வா
றுழைகொள்கைச்சோமேசன்றாளுளங்கொடுநோற்றான்பன்னாள். (எ)

இன்னணநோற்குநோன்பிற்கிரங்கிநல்லருட்சோமேச
முன்னவன்காட்சிநல்கமுனிவரனடியிற்றாழ்ந்து
பன்னருந்துதிகள்கூறிப்பராபரமுதலேநாயேற்
குன்னருள்வழங்கல்வேண்டுமென்றெதிருவந்துநின்றான். (அ)

நின்றவன்றன்னைநோக்கிநிகரிலாவருட்சோமேச
னென்றநின்சிந்தைவேட்டதின்னதென்றுரைத்தியென்றான்
பொன்றலிலாததெய்வப்புரோகிதம்வேட்டேனின்றாட்
கன்றலிலன்பினோடுமளித்தியென்றடியில்வீழ்ந்தான். (கூ)

(வேறு.)

வீழ்ந்தமுனிவனைநோக்கிவிழைதருமக்கினிட்டோமம்
வாழ்ந்தபிரகற்பதிசவனமெனுமிம்மகமிரண்டும்
போழ்ந்தவினையாயின்னேபுரிந்தெமக்குத்திருத்திசெயிற்
சூழ்ந்தவரங்கொடுத்துமெனச்சூழ்ந்துமுனிவரனுரைப்பான். (கo)

இருமகமும்புரிவதனுக்கெண்ணிறிரவியம்வேண்டு
மொருமுதல்வவென்செய்கேனொருசிறிதுமிலேனென்னக்
கருணைமிகுசோமேசன்கனகவரையனைநினைத்தா
னருகுறவந்தவனடிதாழ்ந்தையபணியெவனென்றான். (கக)

இப்பிரகற்பதியாகமிரண்டின்னேசெயல்வேண்டு
மப்பிரபலத்தொழிலுக்கான்றநிதிநீகொடுத்தி
யொப்பினிதிக்கிறைவவெனவுவந்துவடதிசைத்தலைவ
னெய்ப்பினில்வைப்பேபுத்தியென்றெழுந்தத்திறஞ்செய்வான். (கஉ)

முன்னுபிரகற்பதிதன்முகநோக்கிவடதிசைக்கோன்
மன்னுமகந்தொடங்குதியிவ்வளச்சோமப்புனற்கோட்டி
லென்னுமுனங்கெய்தியவனிருத்துவிக்கடமைக்கொண்டே
யுன்னுமிருமகத்தினுக்குமுபக்கிரமஞ்செய்தனனே. (கங)

அக்காலைநவநிதியுமத்தீர்த்தக்கரைமேவித்
தக்கானுமரசாணைதாங்குபுபொன்மழைபொழிய
நக்கார்வமிகப்பெருகநன்முனிவன்கைக்கொண்டு
பக்காவன்பொடுவானோர்பற்பலரும்வரக்கூவி. (கச)

இருமகமுமுற்றுவித்தானெல்லாத்தேவருமகிழ்ந்தா
ரொருமுதல்வன்சோமேசனுள்ளமிகமகிழ்வுற்றுத்
தருமலர்மாமுடித்தேவர்தமைநோக்கியின்றுமுதற்
பொருவில்பிரகற்பதிநுங்குருவாகப்புணர்த்தினமால். (கரு)

எல்லீருநனிவழிபாடியற்றிநலம்பெறுதிரொண
வல்லீருமணிகண்டத்தண்ணலாரடிதொழுது
வல்லீர்நுந்திருவாணைவழிநிற்போமென்றிசைந்தார்
சொல்லீரும்பெரும்புகழிற்றேய்ந்தபிரகற்பதியை. (கசு)

மருவருளின்முகநோக்கிவாக்கினுக்குப்பதியாகி
யொருவறநீவிளங்குகநம்பத்தியுமிக்குளதாக
வெருவில்குணத்தாய்சேறியென்றருளிவிடைகொடுத்தான்
பொருவின்மகிழ்வொடுபலவானவர்களுந்தம்மிடம்புக்கார். (கஎ)

மேயபுகழ்வானவர்கடத்தமிடமேவியபி
னேயபுகழ்ச்சோமேசராலயமீட்டும்புகுந்து
பாயவளமாளவத்துப்பனவனுந்தன்பெயரா
னேயமிகவோரிலிங்கநிறீஇயினன்சுரகுருவே. (கஅ)

ஏற்றமிகுபுகழ்மாளவேசனெனும்பெயர்நிறுவி
யூற்றமிகுபேரன்பினொடியாதுபூசித்துத்
தோற்றமிகுமருள்பெற்றுச்சுரருலகம்போய்ப்புகுந்து
சாற்றமிகுவானவர்கடங்குரவனுய்ப்பொலிநதான். (கக)

பொலிமாளவேசனடிபூசித்துவழிபடுவார்
கலிமாயநினைத்தவெலாங்கைகூடமிகத்தழைவா
ரொலியாரும்பொன்மழையாலோங்குமேமாகரப்பேர்
சலியாதவளச்சோமதடம்பெற்றதுணர்வுடையீர். (உ0)

மாளவேசப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கசஉ0.

---

# சோமேசப்படலம்.

பூமேயநான்முகத்தோன்முதலாயபுத்தேளிர்
தாமேவிப்போற்றிசைக்கத்தவாதபெருவரங்கொடுத்துத்
தேமேயகருங்கூந்தற்செல்வியொடுமினிதமருஞ்
சோமேசராலயத்துட்சோழேசர்வரவுரைப்பாம். (க)

ஏர்முழுதுமொருவடிவமெடுத்தன்னவுருவத்தான்
றார்முழுதுமுறத்தாங்கித்தயங்குபெருந்தடந்தோளான்
கார்முழுதும்வெள்குகொடைக்கரதலத்தான்கடல்சூழ்ந்த
பார்முழுதுந்தனிபுரப்பான்பராந்தகனென்றொருசோழன். (உ)

அன்னபராந்தகச்சோழனொன்றபலவறம்புரிந்து
மின்னமுதமழலைவாய்மகவில்லாதேங்குவான்
றன்னமராசிரியனடிதாழ்ந்துமனக்குறையுரைப்பப்
பொன்னவனிற்பொலியுமவனுளத்தோர்ந்துபுகன்றிடுவான். (ங)

கோலமணிமுடிவேந்தேகும்பகோணம்புகுந்து
ஞாலம்வியப்புறுசோமதீர்த்தநறும்புனல்படிந்து
சீலமிகுசோமேசர்செய்யதிருவடிபோற்றிப்
பாலவிழிச்சிவலிங்கப்பதிட்டையுமங்கினிதாற்றி. (ச)

மன்னுபுகழ்ச்சோமேசர்மாசிவிழாமுதலாகப்
பன்னுவிழாப்பற்பலவும்பாங்காகநடப்பித்துப்
பொன்னுமணியுஞ்சிறந்தபூசுரர்கைக்கொளவீசி
யின்னுமியலறம்பலவுமினிதாகவவணியற்றில். (ரு)

மருவுபெருங்கல்வியினால்வலியினாற்கொடையினாற்
பொருவுதவிர்தரச்சிறந்தபுத்திரனோரீயடைவை
வெருவுதவிர்த்திப்பொழுதேமேவுதியென்றருள்செயவக்
குருவுரைசென்னியிற்கொண்டுகோச்சோழனுங்கடுத்தான். (சு)

தூயவேமாகரப்பேர்ச்சோமதீர்த்தம்படிந்து
நாயனருட்சோமேசனற்பதங்களொடுதேத்தித்
தீயரணுகாமரளவேசர்திருவடிபோற்றிச்
சாயன்மயிலம்மையிருதாட்கமலமருச்சித்து. (எ)

தேயமெலாங்கொண்டாடுஞ்சிவலிங்கப்பதிட்டையுஞ்செய்
தாயபுகழ்ச்சோழேசனெனுநாமமசற்கியம்பி
மேயவிதிப்படிபூசைவிழைந்துபுரிந்துறத்துதித்துத்
தாயனையான்மாசிவிழாத்தலைசிறப்பச்செய்வித்து. (அ)

மறையவர்கைக்கொளத்தானம்வழங்கியாலயப்பணியிற்
குறையறயாவையுஞ்செய்துகொழுங்கலமாடைகள்பிறவு
நிறையவெடுத்துதவிமனநெக்குருகத்துதிசெய்து
பொறைவளவனெதிர்நிற்பப்புண்ணியன்பேரருள்சுரந்தான். (கூ)

மதலைபெறுவரமளித்தோமன்னவநீசேறியென
விதலைதவிர்ந்தொருசோழன்மேவினன்றன்னிருக்கை
முதலையுளங்கொடுவாழ்நாண்முளையொன்றுதோன்றியது
சிதலைதினப்படுமாற்குச்செழித்தவீழ்தோன்றுதல்போல். (௰)

புத்திரனுண்டாகுதலும்புந்திமிகமகிழ்ந்தாறு
யத்திரவிற்பெருவளவனருளமைசோமேசருக்கும்
சித்திரச்சோழேசருக்குந்திசழ்மாளவேசருக்கும்
பத்திரமுற்கொடுபோற்றிப்பலசிறப்புச்செய்தனனே. (௧௧)

மன்னியசோழேசர்திருமலர்ப்பாதந்தொழுதெழுவார்
முன்னியவெலாமடைவர்முயன்றிலிங்கப்பதிட்டைசெய்து
பன்னியவாளியக்கர்குலக்குமுதனலம்படப்போற்றித்
துன்னியநற்பெருவாழ்வுந்தூக்கதியுமடைந்தனனே. (௧௨)

சூலமார்திருக்கரத்துச்சோமேசர்சினகரத்துக்
கோலமார்பெருங்கருணைக்குமுதேசர்தாள்பணிவார்
ஞாலமார்பெரும்போகநாடுசிறப்புறத்துய்த்துப்
பாலமார்விழியவர்தம்பாததாமரையடைவார். (௧௩)

தாமரைமென்மலர்செற்றுத்தண்குவளையுறக்கொண்ட
சோமநறும்புனல்படிந்துசோமேசர்பதம்போற்றிக்
காமர்வடதிசைத்தலைவன்கருதருந்தோழமைபெற்றான்
மாமறைகளெடுத்தேத்தவயங்கவர்பாலெஞ்ஞான்றும். (௧௪)

சோமேசம்வலஞ்சூழ்ந்துதோற்றுபெருங்கருணையுடைச்
சோமேசரருள்பெற்றுச்சோமதீர்த்தக்கரையச்
சோமேசரினிதுவக்கச்சோமயாகம்புரிவார்
சோமேசர்திருவருளுக்குரியராய்த்துலங்கிடுவார். (௧௫)

பற்பலயாமுளைப்பதெவன்பன்மறைசொல்சோமேசத்
தற்புதனுஞ்சோமேசனடிக்கன்புசெய்யாதார்
பொற்பவவன்பூசைவிழாப்பொலிதருமாறியற்றாதார்
கற்பமளவிலசெலினுங்கதிகாணுதுழலுவரோ. (௧௬)

சோழேசப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௪[illegible]௬.

# நாகேச்சுரப்படலம்.

மலர்மகனமுதகும்பமாமுடிசூட்டும்வில்வத்
தலர்தழையவ்விருக்சமாகியதேத்துத்தோற்றிப்
பலர்தொழப்பொலியுமீசன்பரவுநாகேசனென்றே
ருலர்தலினுமம்பூண்டவுண்மையையுரைக்கலுற்றாம். (௧)

ஒளிசெழுசடிலப்பெம்மானுயிர்க்கிளைப்பாற்றலெண்ணி
யளிகெழுகருணையாலேயடங்கலுமொடுக்கிமீட்டுங்
களிகெழுமாயைநின்றுங்கழிந்தனவனைத்துந்தோன்றத்
துளிகெழுமெண்ணங்கொண்டான்றேன்றியவனைத்துமாதோ. (௨)

திரைகெழுகடல்சூழ்வைப்பிற்றிசைகளோரெட்டுந்தாங்கப்
புரைகெழுவரையோரெட்டும்புழைக்கைமாலியானையெட்டுஞ்
சுரைகெழுமுனையெயிற்றுச்சுடுசினவரவோரெட்டு
முரைகெழுவலியினுக்கியுறுத்தினனுங்காங்கம்மா. (ங)

அகலிடநடுவட்டாங்கவாயிரஞ்சென்னிதாங்கிப்
பகலரும்வலிவிராமோர்பாப்பரசினையுண்டாக்கி
நகலுறநிறுவிக்கீழானுடொறுமமர்ந்துதாங்க
விகன்மிகுதனதுகூற்ருங்கூர்மத்தையிருத்தினனே. (ச)

தரைநடுச்சுமக்கப்புக்கதலையொராயிரங்கொள்சேட
னுரைசெய்சிஃறலையினலேயுற்றசின்னுட்சுமந்து
புரைதபவிளைத்தல்பூண்டுபொருந்துபஃறலையினலும்
வரையுறச்சின்னுடாங்கிவருந்தினன்வலியிலானய். (ரு)

வருந்திமெய்யிளைத்தசேடன்மதிமுடிப்பெருமானுனை
பொருந்தியிங்களிக்கவென்றுபுகன்றுதான்கயிலையுற்று
முருந்திளமுறுவல்பாகமுதல்வனையடியிற்ருழ்ந்து
விருந்தினுமெளியேன்பாடன்மிசைசெவிக்கினியவோதி. (சு)

ஐயனேயடியார்த்தாங்குமமலனேகமலமோலிச்
செய்யனேயனைத்துமாயசெல்வனேசெழுமானேர்துங்
கையனேசையர்காணுக்கருத்தனேமுதனூல்பூண்ட
வையனேவையந்தாங்கவலியிலேனேலமென்ருன். (எ)

ஓலமென்றுரைத்தவார்த்தையுமையொருபாகன்கேட்டுக்
காலமெத்துணையானுலுங்களித்தொருதலையின்மீதே
ஞாலமுற்றவுநீதாங்கநாடொறுமாற்றலீவாஞ்
சாலவெக்கலையுங்கற்றுத்தவாமுதுக்குறையுள்ளாயே. (அ)

என்றலுமுவந்துசேடனெழிற்பதமீட்டும்போற்றிப்
பொன்றலில்கருணைவாழ்வேபுண்ணியப்பொருளேதெய்வ
மன்றலங்குழலோர்பாகவள்ளலேயதுசெய்யாயேற்
கன்றலினழுங்கிநாயேன்சழிகுவதுண்மையென்ருன். (கூ)

அரவுரைக்கிரங்கியின்பமரவுரைச்சருளியெங்கும்
பரவுறைபடைத்தமூர்த்திபாப்பரசதனைநோக்கி
யுரவுரைமேருத்தென்பாலுவமையில்சம்புத்தீவில்
விரவுறைப்பரதகண்டமிளிர்திராவிடதேயத்துள். (க0)

வேழவெண்மருப்புமுத்தும்வெள்வயிரமுஞ்செம்பொன்னுங்
கோழரையகிலுஞ்சந்துங்கோட்டுறவெடுத்துவீசி
யாழ்திரைப்பரவைகீண்டேயார்த்தொழுகுறுநீர்ப்பொன்னி
சூழ்தருவளவநாடாஞ்சொலற்கரும்வளவனுட்டில். (கக)

குணகடன்மேல்பானுன்கியோசனைகுறிக்கொளெல்லை
யணவுவெண்டரங்கப்பொன்னியாற்றுதக்கல்லாக்கோட்டின்
மணமலிமலர்ப்பூஞ்சோலைவளைசும்பகோணமென்ருேர்
தணவருந்தலமுண்டன்னதலத்துநேரொங்குமின்ருல். (கஉ)

அத்தலத்திடைநாமென்றுமாதிரும்பேசராதி
முத்தலம்புகழ்பல்லோராய்முளைத்தமர்ந்தினிதுவாழ்வேஞ்
சத்தறிவின்பருபத்தவாதயாமனையராகிச்
சித்தமுற்றமராநின்றதானமுஞ்செப்பக்கேட்டி. (௧௩)

மறைபுகழ்தருகும்பேசமன்னியபுகழ்ச்சோமேசங்
குறையறவிளங்காநிற்குங்கூவிளவனேசநாளு
மிறைதவிரபிமுகேசம்விசுவேசங்கவுதமேசம்
பொறையினர்மருவுபாணபுரேசமென்பனவுண்டின்னும். (௧௪)

கூறுமித்தலங்கடம்முட்கூவிளவனேசநண்ணி
நாறுமென்மலர்கள்கொண்டுநம்மடியருச்சிப்பாயே
லேறுமெய்வலியுந்தேசுமேனவும்பெறுவாயென்றான்
மாறுகண்டதிருஞ்சேடன்வணங்குபுவிடைகொண்டானே. (௧௫)

வெள்ளியங்கயிலைமேருமந்தரமிளிர்கேதாரம்
வள்ளியவாரணாசிவளங்கொள்சீசைலம்யாரு
முள்ளியமகவானீலப்பருப்பதமொளிர்கோகன்னந்
தள்ளியவினையோர்போற்றித்தாழ்ந்தெழுந்திருக்காளத்தி. (௧௬)

மழைதவழ்சோலைசூழுமாவிருபாக்கநாளுங்
குழையவிரொருமாக்காஞ்சிகுலவுறுமோத்தூர்பாசூர்
வழைமலிமயிலையொற்றிவான்மியூர்கழுகுவெற்பு
விழைதருகச்சூர்யாரும்விரும்புபாதிரிப்புல்லூரே. (௧௭)

முதுகிரியருணைவெற்புமுனிவிறுங்கானைமாடம்
விறுவமர்குடுமிமாடவெண்ணெய்நல்லூராமாத்தூர்
பதுமமென்மலரான்போற்றும்பனங்காட்டூர்திருமுண்டீச
மதுமலர்ப்பொழில்சூழ்தில்லைவாரிதிவணங்குங்காழி. (௧௮)

ஆன்றபுள்ளிருக்குவேளூராடலம்புகழ்மாயூரம்
வான்றவழ்மதில்வெண்காடுமன்னுநாகைக்காரோணம்
பூன்றநள்ளாறுவேதம்பூசித்தவனமாலங்கா
டேன்றமெய்யுதவுமாறொப்பில்வாஞ்சியநல்வீழி. (௧௯)

பிப்பிலாரணியநாளும்பிறங்கிடைமருதுமுன்னாத்
தப்பிலாத்தலங்களெல்லாந்தவாதபேரன்பிற்போற்றி
வெப்பிலாப்பொன்னியாற்றுத்தென்கரைவிழைந்துவந்தான்
றப்பிலாவிரதம்பூண்டசுடர்மணிப்பாப்புவேந்தே. (௨௦)

தவலருங்கும்பகோணத்தலத்தினையினிதுநோக்கி
நுவலருமகிழ்ச்சிபூண்டுநோன்புகூர்பொன்னியாடிக்
கவலருமுளத்தனாகிக்கருதுகூவிளவனேசத்
தவலரும்பலர்நீரொன்னுமச்சுவத்தத்தையுற்றான். (௨௧)

அரசுநற்றீர்த்தமாடியாலயம்பலகாற்சூழ்ந்து
பரசுகூவிளவனேசர்பரவுசந்நிதியிற்போந்து
விரசுமெய்யன்பிற்போற்றிவெற்புயிர்த்தெடுத்ததூய
வரசுகுணப்பூங்கோதைப்பெரியநாயகிபால்வந்து. (௨௨)

உருகுமெய்யன்பிற்போற்றியொளிமணிகொண்டர்ச்சித்துப்
பெருகுபூசனையிவ்வாறுபிறங்குறச்செய்துபன்னு
ளருகுதீர்காதலோங்கவையனையகத்துக்கொண்டு
திருகுதீர்தரவசித்தோர்தேத்தினியமர்ந்தான்பன்னுள். (உ௩)

நாள்பலவருந்திநோற்குநாகத்திற்கிரங்கிநாளும்
வாள்பலதிரண்டாலென்னவயங்கிலிங்கத்துநின்றுந்
தோள்பலவினுநீணுகந்துலங்கமென்மதியந்தோன்றக்
கோள்பலதிரண்டாலொத்தகுரூஉப்பன்மாலைகளும்பொங்க. (உச)

மருவலம்பொலியாநிற்பமானிடத்துசளாநிற்க
முழுதுலகீன்றவன்னைமுனிவறவிடப்பான்மேவ
வழுவருமமரரேத்தமால்விடைவெரிந்மேற்கொண்டு
செழுவியகாட்சிதந்தான்றேவர்கடொழுமாதேவன். (உரு)

கண்ணுதல்காட்சிநல்கக்கடிதெழுந்தடியிற்றுழா
வெண்ணுதல்பிறிதிலானுயின்பவாதரவுபொங்க
நண்ணுதலெந்தஞான்றுநகுதவமில்லார்க்கில்லா
வொண்ணுதல்பாகத்தான்முன்னுற்றுநின்றேத்தலுற்றான். (உசு)

சோதியேகருணைவாழ்வேதூயமெய்ஞ்ஞானனந்த
வாதியேயமலமூர்த்தியற்புதக்கூத்தாவம்மை
பாதியேபரவுபொன்னிக்குடந்தைக்கீழ்க்கோட்டம்பற்று
நீதியேதேவதேவேநின்னடித்துணைகள்போற்றி. (உஎ)

புற்புதமனையதாயபொய்யுடன்மானநீத்தோர்
கற்புதவுள்ளநீங்காக்கருணையங்கடலேபாகம்
வெற்புதவுமையாண்மேவக்குடந்தைக்கீழ்க்கோட்டமேய
வற்புதக்கூத்தாமேலோரவாவுநின்னடிகள்போற்றி. (உஅ)

தாரணிசடிலம்போற்றிதழையருள்வதனம்போற்றி
காரணிகண்டம்போற்றிகையமர்மழுமான்போற்றி
கூரணிகருணைபோற்றிகுடந்தைக்கீழ்க்கோட்டமேய
வேரணிகோலம்போற்றியின்பவாரிதியேபோற்றி. (உகூ)

அறிதருமவர்க்கேநாளுமகத்தொளியானாய்போற்றி
செறிதருபிரமனுதித்தேவர்தாழ்தேவேபோற்றி
குறிதருகருணையோடுகுடந்தைக்கீழ்க்கோட்டமேய
நெறிதருவில்வநீழனின்மலமூர்த்திபோற்றி. (௩0)

எண்ணியதடைவானிவ்வாறேத்திடுமரவைநோக்கிப்
புண்ணியமுதல்வன்வேண்டும்பொருளேவனுரைத்தியென்னத்
திண்ணியபுடவிதாங்குந்திண்மையுமிடையறாது
கண்ணியநின்றாட்கன்புங்கருத்துறவளித்தியின்னும். (௩க)

அடியனேன்பெயராலிந்தத்தலமச்சுவத்ததீர்த்த
முடிவிலாதெந்தஞான்றுமுனிவறவிளங்கல்வேண்டு
நெடியனுமுணரவொண்ணுநீயுமென்னுமம்பூண்டே
கடிதராதொளிர்தல்வேண்டுங்கருதுமென்னுலகந்தன்னில். (௩உ)

மதிகதிரின்மையாலேவருதுணங்கறலைமாய்ப்பான்
றுதிகொணின்மேனித்தேசுதொடர்புறவிளங்கல்வேண்டு
நிதியமுற்பலவுமெய்திநினைத்தொழுபவர்மண்வாழ்ந்து
கதியுமீற்றடைதல்வேண்டுங்கருணைசெய்தருடியென்றான். (௩௩)

என்றலுமுரைத்தவெல்லாமியம்பியவாறேநல்கி
யொன்றுறவெவருமாடியுய்யநஞ்சூலத்தாலே
முன்றழைதரவமைத்தமுரிவிலித்தீர்த்தக்கோட்டுக்
சன்றலின்மூவராயதருக்கலந்தூற்றதன்றே. (௩௪)

ஆதலினச்சுவத்ததீர்த்தமென்றதன்பேராயிற்
றோதருமந்நீர்மூழ்கியுவந்துநந்தமைப்பூசிப்பா
ராதரம்பயக்குமெல்லாப்போகத்துமமைவாரொன்று
காதலினுரைத்தியாருங்கருதுதன்னிலிங்கத்துற்றான். (௩௫)

பரம்பரன்மறைதலோடும்பணுடவியுரகர்வேந்த
னிரம்புறுமுவகைபொங்கநீடுதன்னுலகமெய்தி
வரம்பறுவலியனுயோர்தலைமிசைவையமுற்றுந்
தரம்பெறச்சுமந்தானீசனருளுறிற்சாராதென்னே. (௩௬)

கூவிளவனமந்நாண்முற்குலவுநாகேசமாய
தோவிலச்சுவத்ததீர்த்தமொருநாகதீர்த்தமாய
தேவுகூவிளவனேசனுகேசனெனும்பேர்பெற்றான்
றூவிலத்தீர்த்தந்தோய்வார்சர்ப்பத்துக்கஞ்சுறாரோ. (௩௭)

மன்னுபாதாளநின்றும்வயங்கமேலெழுந்துநாளும்
பன்னுபேரொளிசெய்மாண்பாற்பாதாளபீசநாத
னென்னுமோர்பெயரும்பெற்றானெம்மையாளுகநாதன்
றுன்னுபாதலத்தினுள்ளாற்றுணங்கறலிலதாயிற்றே. (௩௮)

திருவளர்நாகநாதன்றிருமுனர்ப்பொலியாநிற்கு
முருவளர்நந்தித்தேவுக்குருத்திரமனுவாளுரு
மருவளர்தைலமாதிவயங்கபிடேகஞ்செய்வோர்
வெருவளர்பிணியினீங்கிவீட்டின்பமருவிவாழ்வார். (௩௯)

பன்னரும்பெருமைவாய்ந்தபாதாளபீசநாத
ருன்னருமாங்குத்தோன்றும்பொழுதுடனுதித்தவாற்று
லென்னருஞ்சுயம்புநந்தியென்றெடுத்துரையாநிற்பர்
முன்னருமவனைப்போற்றின்முன்னியவனைத்துங்கூடும். (௪0)

மன்னியநாகதீர்த்தம்வயங்குமாதிரைநாண்மூழ்கி
மின்னியநாகநாதர்விரைமலர்ப்பதம்பூசித்துப்
பன்னியவுணவுநீத்துப்பாரணமறுநாட்செய்வோர்
துன்னியபோகமெல்லாந்துய்த்துவீடடைவதுண்மை. (௪௧)

நாகேச்சுரப்படலம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் - கசுஎள.

---

# உமாபாகப்படலம்.

---:o:---

கோங்குவழைமந்தாரங்கூவிளம்பாடலந்தாது
தாங்குமடற்கைதைநறுஞ்சண்பகந்தாதகிகுரவந்
தேங்குமகிழ்புன்னாகஞ்செருந்திமுதன்மிடைகுடந்தை
யோங்குபெருங்கீழ்க்கோட்டத்துமாபாகர்வரவுரைப்பாம். (க)

மந்திபலவுழுதுழக்கமதுப்பொழிந்துமணம்வீசு
முந்திமலருதித்துலகமொருங்குபடைத்தருள்பிரம
னந்தியகைப்பெருவிரலினன்குதித்தானுறுமத
தந்தியினுஞ்செருக்குடையான்றக்கனெனும்பெயர்பூண்டான். (உ)

மன்னுபெருந்தவத்தாலேமங்கையரீரொண்மர்களை
மின்னுநிகரெனப்பெற்றான்விளங்குமீரொண்மருளும்
பன்னுமெழிற்சிரத்தாமைத்திரிதயாமைத்திரிபா
ருன்னுகுணப்பெருந்துட்டியொள்ளியவாள்விழிப்புட்டி. (ங)

உற்றகருங்குழற்கிரியையுன்னதிமெல்லியற்புத்தி
செற்றமறத்திகழ்மேதைதிருதிவனப்பமைசாந்தி
கற்றவர்நாவுறகீர்த்திகாமரிநீமூர்த்தியென்
றற்றமில்பன்மூவரையுமறக்கடவுட்குதவினனால். (ச)

மேயகுணச்சுவதைதனைவிளங்குபிதிர்த்தேவனுக்கு
மாயவெழிற்சுவாகைதனையாரழற்குமினிதளித்துத்
தூயபெருமாதவத்தாற்றேற்றியபேரருட்சதியை
பாயபெருகொளிக்கயிலைப்பரம்பரனுக்குதவினனால். (ரு)

தன்னுடையபுதல்வியருட்சதியுமொருபுதல்வியென்றும்
பொன்னுடையப்பொலிகழற்காற்பொற்புறுதன்மருகருளு
மின்னுடையத்திகழ்சடிலவித்தகனேர்மருகென்று
முன்னுடையவூழ்வலியான்முன்னினனச்சிறுவிதியே. (சு)

இன்னபடிநினைந்தொழுகலியன்றசிதம்புத்தக்கன்
றன்னமர்பன்மருகரிடந்தான்சென்றொருதினத்தி
லன்னவர்களிருக்கையெழுந்தெதிர்வந்தேயடிபணிந்து
முன்னரியவுவப்பொடுபன்முகமனியற்றிடமகிழ்ந்தான். (எ)

இன்னபடிமுகமனெலாமெய்தலாமெனநினைந்தே
யன்னமுயர்த்தவனெடுமாலாதியர்கடொழுங்கயிலைப்
பன்னகபூடணனுமெம்பரம்பரன்றனைத்திருத்தான்
முன்னருங்கேடனைத்தினுக்குமூலமாகியமூர்க்கன். (அ)

சிறுவிதிதனகச்செருக்குஞ்சிந்தனையுந்திருவுளங்கொண்
டறுதியிலான்சிறுநகைசெய்தலங்கரியாதனத்திருந்தான்
மறுவிலயன்மான்முதலோர்வணங்கிலனென்செய்தானிவ்
வுறுதியிலாத்தக்கனெனவுளத்துவெறுத்தயனின்றார். (கூ)

எல்லாருநறுமுறுத்தங்கிருந்தயனிற்பதுமுணரான்
வில்லாருஞ்சடைமோலிவிமலனருமையுமுணரான்
புல்லாருமிழிக்கவெழுபொல்லாங்குற்றதுமுணரான்
பல்லாருந்தொழுதேத்தும்பரம்பரன்பாற்சினங்கொண்டான். (௪௦)

என்னேமற்றிவனெனைக்கண்டிருக்கையெழுந்திலனெதிர்வந்
தன்னேநின்வரவரிதென்றஞ்சலிசெய்திலனிவற்கு
மின்னேவென்றிடுமருங்குன்மெல்லியலைக்கொடுத்திட்டே
னன்னேக்கமில்லிவன்பானுறேனெனமீண்டான். (௪௧)

அன்புசிறிதில்லானையனைத்துயிருஞ்சங்கரித்தே
யென்புநரம்பசண்மயிர்பூண்டிடுகாட்டிற்பொடியாடும்
வன்புசெறிமனத்தாற்குமகட்கொடுத்தேன்பிழையென்று
முன்புபலர்செவிவெதும்பமொழிந்துதனதகமுற்றான். (௪௨)

மன்னுமறக்கடவுண்முதன்மருகரொலாம்வரக்கூவி
யுன்னுமொருதணமில்லாவுருத்திரன்பாலின்றடைந்தேன்
பன்னுமெலையெண்ணுதுபண்ணவர்முனவமதித்தான்
றன்னுமவன்றனைவெறுத்தேன்சுருங்குமிடைச்சதியோடும். (௪௩)

நீயிருமற்றவனுறவைநீக்குமினென்றுரைசெய்தான்
காயிரும்புசெவிநுழையக்கலங்கினர்போலுளங்கலங்கி
யாயபெரும்பொல்லாங்கின்றடைந்தஃதென்றகத்தெண்ணித்
தூயவறக்கடவுண்முதன்மருகரொலாமிதுசொல்வார். (௪௪)

ஐயனேசதியையொருபுத்திரியென்றகங்கொண்டாய்
செய்யமறைமுழுதுமவடிறம்புகல்வதுணர்ந்திலாய்
பையரவின்முடிக்கிடந்தபார்முதற்பல்புவனமெலா
முய்யமுனமெளிதீன்றவொருதாயென்றுணரவலை. (௪௫)

அவனிமுதலுரைத்திடுமாறாறினுக்குமப்பாலான்
னவனிமுதலோரொட்டுமான்றமனுமுதலாறு
மவனியையுண்டாக்கிடுவானாதியுருவொன்பானு
மவனியைந்துமேவியுமோருருவமுந்தற்கமையாதான். (௪௬)

உரைசெறியைந்தொழில்புரிந்துமொருதொழிலும்புரியாதான்
விரைசெறிமென்குழற்பாவையொடுபுணர்ந்தும்விகாரமிலான்
றிரைசெறிநீருடைப்புவிமுனுலகெலாஞ்சென்றுதொழும்
வரைசெறிவிற்றடந்தோளான்பெருமையெவர்வகுத்துரைப்பார். (௪௭)

அறுவகையசமையருக்குமவ்வவர்தங்குறியாகி
மறுவில்குறிவேறுனன்மறைகூறுங்குறிகடந்தா
னிறுதிமுதலில்லாதானென்றுமொருகுணமுமிலா
னுறுதியடியடைந்தார்க்கேயோவாமலுறுவிப்பான். (௪௮)

வந்தியருமாமறையேவாசிகளுமாமறையே
நந்தியசொன்மாமறையேநல்லணையுமாமறையே
முந்தியபொற்பாதுகையுமொய்யொளிசேர்கோவணமு
மிந்தியநீத்தெஞ்ஞான்றுமிறைஞ்சுவதுமாமறையே. (௪௯)

யாராலுமளப்பரியவித்தகையபெருந்தேவை
யோராருமாலயனேடொருவனெனவுரைசெய்யார்
காராருமறிவானெங்களினொருவனுக்கருதிப்
பேராரத்தீங்குறனன்றன்றென்றுபேசினார். (உ0)

மருகருரைசெவியேறவடவையெனக்கொதித்தெழுந்து
திருகுசினந்தலைக்கொண்டுசெறிந்ததாமதகுணத்தா
னொருவனையோர்தேவனெனவுன்னுகிலேனீயிரவ
னருகுறுவீரொன்றுமென்பாலடைகலீரொன்றுரைத்தான். (உக)

எட்டுருவப்பெருமானையெண்ணாதுநிந்தித்துக்
கெட்டொழிவானெவ்வாறுகிளப்பினுங்கொள்ளானென்று
முட்டறுமுள்ளுணர்ந்தனையான்முனிவொழித்தேகுதல்கருதிச்
சட்டவெழுந்தடிபணிந்துசாற்றுதலுற்றார்மருகர். (உஉ)

சிறியரோமறியாதுசெப்பியசொலுளங்கொள்ளே
னறியதாமரைமலர்மேனான்முகத்தேவினுஞ்சிறந்தோய்
நெறியநீசொற்றபடிநிற்போம்யாமென்றுரைத்துக்
குறியதாமமருமிடங்குறிக்கொண்டுபோயினார். (உங)

அறக்கடவுண்முதலியரங்ககன்றசற்பினறிவில்லா
மறக்கொடியமனத்தக்கன்மகமொன்றுசெயநினைந்து
நிறக்குமணிபலவீசுநெடுங்கங்கைக்கரையடைந்தா
னுறக்குமாவறமுமிலாதொழிமகச்சாலையுஞ்சமைத்தான். (உச)

வேண்டுமுபகரணமெலாம்விரைந்திட்டிநாளமைத்து
நீண்டவனிமுழுதளந்தான்முதலாயநிகழ்தேவர்
மாண்டதவத்துயர்முனிவர்மற்றுளயாவருமடுப்பத்
தூண்டினன்பஃறூதுவரைத்துனைந்தவர்சென்றோதுதலும்: (உரு)

விரைகெழுகற்பகநறுந்தார்விண்ணவருமகபதியு
மரைமலர்வீற்றிருப்பானுமாசுணமேற்கிடப்பானுங்
கரையறுபன்முனிவர்களுங்கரையாதமற்றோரு
முரைகுறுமகச்சாலையுற்றுநெருங்கினரம்மா. (உசு)

மன்னுகுணமருகர்களுமாண்டவெழிற்புதல்வியரும்
பன்னுபலமைந்தர்களும்பன்னிமுதற்பல்லோரு
மின்னுபெருமகச்சாலைமேவினார்சயிலாயத்
துன்னுமுமையம்மையொடுமும்பர்பிரானுந்தவிர. (உஎ)

எல்லாருங்கூடியதோர்ந்தெண்ணமில்லாப்பெருந்தக்கன்
வில்லாருமகச்சாலைமேவிவினைபுரிபொழுது
சொல்லாருஞ்சிலர்கயிலைதுன்னியுமையாட்குரைப்ப
வல்லாருங்களபமுலைமாதேவன்றாடொழுது. (உஅ)

புண்ணியமாமுதலேயென்றந்தையெனும்பொறியில்லா
னண்ணியவோர்மகம்புரிவானதுகாணுநலங்குறித்தே
யண்ணியயாவருமடைவார்யாமுமவணடைதருவாங்
கண்ணியபேரருள்புரிந்தேயெழுந்தருளாயெனக்கரைந்தாள். (உகூ)

பொல்லாதமூர்க்கனவன்புரியுமகச்சாலையுறி
னெல்லாருங்கருங்குழலாயவமதித்தல்சரதமே
யெல்லாரும்வரத்தெரித்தானியம்பிலானமக்கதனாற்
பொல்லாதுபடுமின்றேபோதல்விருப்புண்டாகில். (௩௦)

சென்றுநீவருதியெனச்சிவபிரான்விடைகொடுத்தான்
குன்றுநேர்தடமுலைப்பொற்கோற்றொடியாடொழுதெழுந்து
நன்றுசேர்சயைவிசயைமுதலாயநங்கையரு
மொன்றுசீரியகணமுமொருங்கெழுந்துபுடைசூழ. (௩௧)

மதியநிகர்குடைநிழற்றவாலியசாமரையிரட்டத்
துதியமைவந்தியர்பரவத்தூரியங்கண்முகின்முழங்கக்
கதிருதையமெழுந்ததெனக்கதிர்க்கும்விமானத்திவர்ந்து
சதியெனுமோர்பெயர்மடந்தைதழற்சாலையருகணைந்தாள். (௩௨)

உலகமெலாமினிதீன்றவொருமுதல்விவரவுணர்ந்து
கலகமெலாம்புரிகொடியகருண்மனப்பாதகத்தக்க
னிலகவிவளுறுவரவையாருநோக்கலிரென்றான்
விலகலருமனைமுதலோர்வெய்யவதற்குடன்பட்டார். (௩௩)

தேசுவிமானத்திழிந்ததேவிபுவிமிசைநடந்து
மாசுபடுமனத்தக்கன்மருங்கணைந்தாளக்கொடியோன்
பேசவெறுப்புடையானாய்ப்பேசாதுசெயிர்த்திருந்தான்
மூசுமலக்கோட்பட்டமூர்க்கர்செயலிதுவன்றே. (௩௪)

கெடுபாவிக்கொடுந்தக்கன்கீழ்மைமனத்துணர்ந்தாளா
யடுசாபக்கொடும்புருவத்தன்னையமரிடம்புகுந்தாள்
விடுநேசத்தன்னவளும்வெறுத்திருந்தாளேனோருங்
கடுவாரக்கண்டதெனக்கைத்திருந்தாரதுகாலை. (௩௫)

அண்ணலாருரைத்தபடியாயிற்றென்றுளங்கலங்கிக்
கண்ணலாருயிர்க்கெல்லாங்கனிந்தருளும்பெருமாட்டி
யொண்ணலாரிவன்மகளென்றுரைப்பதனையொழிப்பலென
வெண்ணலார்யோகவழலெழுப்பியதனுட்பாய்ந்தாள். (௩௬)

தேவியோகழல்வளர்த்துத்திருமேனிமறைத்திடலு
மாவிபோயொழிவாரினமருளங்கவன்றிருந்தார்
பாவியாகியதக்கன்பதைப்பின்றியேயிருந்தான்
மேவிநாரதமுனிவன்வெள்ளிமால்வரையடுத்தான். (௩௭)

மும்மையுலகமும்போற்றுமுழுமுதல்வனடிவணங்கி
வெம்மைமனக்கொடுந்தக்கன்விளைத்தவவமானத்தா
லம்மைதிருவுருக்கரந்தாளாரழல்வாயென்றிடலுங்
கொம்மைமழவிடைப்பெருமான்கோபமொருசிறிதரும்ப. (௩௮)

ஒருசடிலம்வாங்கிநிலத்தோங்கியறைந்தனனப்போ
தருவரைகணிலைகுலையவண்டமெலாமடுக்கழியப்
பொருதிரைவாரிதியலைந்துபுடைபெயர்ந்துதடுமாறத்
திருகுசினத்ததிர்கழற்காற்செயவீரன்றோன்றினனால். (௩௯)

தோன்றியவாள்வயவீரன்சுந்தரநாயகன்பாத
மூன்றியவன்பொடுதாழ்ந்துபணியென்னையுரைத்தியென
நான்றியலுஞ்சடையுதித்தாய்நமையெண்ணாக்கொடுந்தக்க
னேன்றியலவளர்க்குமகமழித்திங்கெய்துகவென்றான். (௪௦)

சொற்றவுடன்பூதகணந்துவன்றியீட்டத்தானெழுந்து
செற்றம்வடவையிற்கதிப்பத்திசையெலாநடுநடுங்கக்
கொற்றமுடிவானவர்தங்குழுவெலாம்பதைபதைப்பக்
கற்றவர்கள்புகழ்வீரன்மகச்சாலைகலந்தனனே. (௪௧)

கடியபெருவிறற்பூதகணத்தினொடுங்கலந்துற்ற
நெடியவயவீரனுருக்காணுதலுநிலைகலங்கிக்
கொடியபுலிப்போத்தடையக்கண்டமான்குழுப்போல
முடியமையுமுடிவானோர்முகம்புலர்ந்தோட்டெடுத்தனரால். (௪௨)

ஓடியவானாடரெலாமோடாமலொருங்குவளைத்
தாடியவல்விறற்பூதமணிமுடிகைகான்முதலா
நீடியபல்லுறுப்பனைத்துநிலத்துவிழச்சேதிப்பான்
கூடியதன்னோக்களித்தான்கொற்றவாள்வயவீரன். (௪௩)

சிற்சிலர்தம்வாய்கீண்டுஞ்சிற்சிலர்தம்விழிதொட்டுஞ்
சிற்சிலர்தநகைதகர்த்துஞ்சிற்சிலர்தந்தலைதடிந்துஞ்
சிற்சிலர்தங்கையறுத்துஞ்சிற்சிலர்தங்கால்குறைத்துஞ்
சிற்சிலர்தநிறம்போழ்ந்துஞ்செய்தனபாரிடந்தண்டம். (௪௪)

செய்யவாய்க்கருநெடுங்கட்டெய்வமடமாதர்களு
ளையசிலர்மூக்கிழந்தாரான்றசிலர்காதிழந்தார்
நெய்யகருங்குழலிழந்தார்நீடுசிலரிவ்வாறு
வெய்யதிறற்பாரிடங்கள்விளைத்தனதண்டம்பலவா. (௪௫)

பாரிடங்களிவ்வாறுபற்பலதண்டம்புரியத்
தாரிடங்கொள்புயவீரன்றக்கனெதிர்புகுந்துசினந்
தேரிடங்கொளுபகரணமிருந்தனவெலாஞ்சிதைத்துக்
கூரிடங்கொளொளிவடிவாள்கொண்டனையன்றலைதுணித்தான். (௪௬)

மான்வடிவமெடுத்தோடுமகளுப்பன்றலையறுத்துப்
பான்மதியினுடறேய்த்துப்பகலவன்றனகைதகர்த்தாங்
கூனமையவேற்றிடுகையொள்ளியசெந்தழற்கறுத்தே
யீனமலிதருதண்டமேனோர்க்குந்தகப்புரிந்தான். (௪௭)

பரசிவனைநிந்தைபுரிபாதகனைச்சார்ந்துசுவை
விரவியவூனுணறவிர்ந்துவிருப்புறுதக்கணையுமொழிந்
துரவுமலியவமானமுறப்பெற்றார்மாமறையோர்
வரமில்கொடியரைச்சாரின்வருதுயருக்களவுண்டோ. (௪௮)

இன்னபெருங்கொடுந்தண்டமெண்ணியவாறேயியற்றி
யன்னமகத்தழலொடுதனதுகோபத்தழலவித்து
நன்னர்வளம்பொலிகைலைநாதன்மலரடிபணிந்து
மன்னநிகழ்ந்தனவுரைத்துமற்றுமவனருள்வழியே. (௪௯)

மீட்டுமகச்சாலையுறீஇவெய்யகொடுந்தக்கனுக்கோ
ராட்டுவறுந்தலைபுணர்த்தியளப்பிலாமற்றையர்க்குங்
கூட்டுமுறுப்புறக்கூட்டிக்கோதிலாத்திறல்வீர
னீட்டுசுடர்த்திருக்கயிலைநெடுமலைபுக்கினிதமர்ந்தான். (௫0)

(வேறு.)

சதியெனுநாமந்திரத்தழலிடைப்புக்கதேவி
மதிதவழிமையச்சாரல்வளம்பொலியொருசுனைக்கட்
பொதியிதழவிழ்ந்தகஞ்சப்பூவினோர்குழவியாகிப்
பதிதரவமர்ந்தாளந்தப்பருப்பதத்திறைவன்கண்டு. (௫௧)

விழைதரவுவந்தெடுத்துமேனைகைக்கொடுத்தானுள்ளங்
குழைதரவனையள்வாங்கிக்கொங்கையின்னமுதமூட்டித்
தழைதரவளர்க்கநாளுந்தனிப்பிறையெனவளர்ந்து
பிழையில்பார்ப்பதியெனும்பேர்பெற்றொளிர்கலன்கள்பூண்டு. (௫௨)

தனைநிகரிளம்பிணைக்கடம்மொடுமாட்டயர்ந்து
வனையுமைந்தகவையாகமாதேவன்விரைந்துவந்து
புனைமணம்புரிதலுன்னிப்பொலிதவச்சாலைபுக்குக்
கனைகடலுலகமேத்தக்கனிதவம்புரிந்திருந்தாள். (௫௩)

வெள்ளியங்கயிலைப்பாங்கர்விளங்குகல்லாலின்கீழா
லொள்ளியசனகராதிநால்வருமுவந்துபோற்றத்
தெள்ளியவுண்மைதேற்றிச்சிவபிரான்யோகிருந்தா
னள்ளியவிருவருஞ்செய்தவத்துறநயந்தகாலை. (௫௪)

ஏத்தைமாமுகப்பிரானையெண்ணுறுதிகழ்ந்துகெட்ட
வூத்தைவாய்ச்சிதம்புத்தக்கனொடுவிராவியபொல்லாத
சீத்தையாரானதேவர்செறிமனமுதன்மூன்றானுங்
கூத்தையாடவற்குச்செய்தகொடுமையேமுளைத்ததென்ன. (௫௫)

கொடுவலிச்சூரபன்மன்கோளரிமுகத்துத்தோன்ற
லடுதிறல்படைத்ததாருகாசுரனென்றிம்மூவர்
விடுதலில்வலியிற்றோன்றிவெய்யமாதவம்புரிந்து
படுபெருவரங்களெல்லாம்பரம்பரன்றன்பாற்பெற்று. (௫௬)

ஐயவாயிரத்தெட்டென்னுமண்டமுற்றுங்கைக்கொண்டு
வெய்யகோனடாத்திவானோர்திருவெலாம்விழைந்துவௌவிப்
பொய்யவாமசுரரொல்லர்ம்பொலிதருசிறப்புச்செய்து
செய்யவானவைதீர்பாக்குச்செறிந்தரசளித்தாரன்றே. (௫௭)

அலரணைக்கிழவனானுமைந்துறுப்புனைப்பானானன்
பலர்தொழுமுருந்தன்சொன்னபடிதிரிந்துழல்வானானா
னுலர்தலில்பணிகளெல்லாமுஞற்றுவோர்திசைகாப்பாளர்
கலர்புரிதொழிலான்மற்றைக்கடவுளோர்க்கின்பமுண்டோ. (௫௮)

வானவரொருங்குசூழமகபதியொருநாள்வந்து
பானலங்கனிந்தசெவ்வாய்ப்பங்கயச்செல்விகேள்வ
னூனமில்பாதம்போற்றியுறுதுயருளத்துத்தேக்கி
யானபஃறுயரமெல்லாமடைவெடுத்துறையலுற்றான். (௫௯)

தண்ணியதுளவத்தண்டார்த்தடம்புயத்தண்ணல்சேட்டி
கண்ணியகொடுமைமுற்றுங்கண்ணியவாறேநாளும்
பண்ணியதுணிந்ததீயதானவர்பாங்கர்யாங்கள்
புண்ணியமிழந்துதேம்பியகப்பட்டுப்புலம்புகின்றோம். (௯௦)

தானவர்கொடுமையாலேதவலருந்தானநீத்து
வானவரெனும்பேர்மாறிமண்ணவரினுங்கீழ்ப்பட்டே
யூனமிக்குடையரானோமுததியுட்புகுந்துபற்பன்
மீனமும்பிடித்துக்கொண்டுவந்திடுவினையும்பூண்டோம். (௯௧)

இழிதொழிலசுரர்க்கெல்லாவேலையுமியற்றாநின்று
மொழிவழியொழுகுவோராய்முடிந்தனமினியென்வேண்டும்
பழியலகிடுதலாதியாவையும்பரித்தோமிந்தக்
கழிதுயரொழியுமாறுகனிந்துளங்கருதுகென்றான். (௯௨)

என்றலுநெடியமாயோனிமையவர்துயரநோக்கிக்
கன்றல்கொண்மனத்தனாகிக்கண்சணீரரும்பிச்சொல்வான்
முன்றனிமுதல்வனிந்தைமொழிந்தமாபாவித்தக்க
னன்றமைவேள்விச்சாலையடுத்துநாமளாயதீங்கால். (௯௩)

இன்னமாதுயரமெல்லாமெய்தினோமிதுவுமந்த
முன்னவன்கருணையாகுமொழிந்தமற்றிஃதுறேமே
லென்னபன்னரகுங்கற்பமெண்ணிலவீழ்வதாகு
மன்னதுசாராவண்ணமித்துயரடைந்ததன்றே. (௯௪)

ஆயினுமினையதுன்பமடங்கலுமொழியுமாறு
தாயினுமினியனாயசண்முகன்றோன்றல்வேண்டுங்
காயினுமருளேயாகுங்கண்ணுதல்யோகுநீங்கி
வேயினும்பொலிதோளம்மைவெம்முலைதழுவல்வேண்டும். (௯௫)

தழுவுறினன்றியந்தச்சண்முகன்றோற்றல்செய்யான்
முழுமுதல்யோகுநீங்கிமுதல்வியைப்புணருமாறு
கொழுவியமுயற்சிசெய்வாமென்றுளங்குறித்துக்கூறிச்
செழுவியகருப்புவில்வேள்வரும்படிசிந்தைசெய்தான். (௯௬)

நினைத்தலுஞ்சிலைக்கைமாரன்ஞெரேலெனவடுத்துப்போற்றிக்
கனைத்துவண்டருந்திப்பாடுங்கன்னியந்துளவத்தாரோய்
வினைத்திறமெதுசெய்பாக்குவிழைந்ததென்வரவையென்றா
னனைத்துமாய்நிறைந்தபெம்மான்யோகினையகற்றவென்றான். (௯௭)

என்றலுமயங்கிவீழ்ந்தானிணர்த்துழாய்முடியோனாதி
வென்றவானாடர்யாரும்விரைந்தெடுத்துபசரிப்ப
நன்றறிவுதித்தெழுந்தானக்குவானவனைநோக்கிக்
கொன்றமைதரலிற்றீங்குகுறித்ததென்னெனக்குநீவிர். (௯௮)

பிரானொடுமாறுபட்டார்பிழைப்பதுமுண்டுகொல்லோ
பராவுமற்றவனையென்கைப்பகழியென்செய்யவல்ல
தராவணைப்புயலேமற்றையமரர்காளென்னினைந்தீர்
விராவமற்றெனக்குமுற்றாதென்றனன்விண்டுசொல்வான். (௯௯)

காதலசேட்டியாரும்புணர்ப்பின்றிக்கவலுகின்றார்
மீதலவளங்களெல்லாம்வெய்யசூர்கொள்ளைகொண்டான்
பூதலமருங்கும்வானோர்புகுந்துறப்பயிலலொட்டா
னோதலங்கமையாவண்ணமுலப்பருந்துயரஞ்செய்வான். (எ0)

அன்னவன்விளியுமாறுமமரர்களுய்யுமாறும்
பன்னருமுயிர்களெல்லாம்படரறத்தழையுமாறு
முன்னவனிமவானீன்றமுதல்வியைமணந்துநாளு
நன்னலங்கொழிக்கும்வெள்வேற்கந்தனைநல்கவேண்டி. (எக)

நின்னையாமிரந்துகொண்டோநீயினிமறுத்தல்செய்யேற்
பொன்னைநேர்புதல்வாவென்றுபுனத்துழாய்முடியோன்கூற
மின்னைநேர்மணிப்பூண்மார்பவேளுடன்பட்டானந்தோ
முன்னையூழ்வினையைவெல்வார்மூவுலகத்துமுண்டோ. (எஉ)

இரதிவந்தடியில்வீழ்ந்துதடுப்பதுமெண்ணங்கொள்ளா
னரதனம்பொலிகேயூரத்திடப்புயமாடனோக்கான்
விரதமாதவத்தார்க்குண்மைவிளக்குவான்யோகமேய
வரதன்மேற்பகழிதூண்டமதித்தெழுந்தனன்வின்மாரன். (எங)

தென்றலந்தேரினேறிச்செறிகருஞ்சுரும்பர்பூட்டி
நன்றமைகரும்புகோட்டிநகுமலரொன்றுநாட்டி
யொன்றவெவ்வுயிர்க்குந்தானோருயிரெனநின்றபெம்மான்
முன்றடையறுமாசெல்லமுடுக்குபுவிட்டானன்றே. (எச)

விடுமலர்ப்பகழிசென்றுவிமலன்மேற்படுதன்முன்னங்
கடுமையிற்கொதித்துநெற்றிக்கட்டழல்சிறிதுதாக்கப்
படுதுகட்சாம்பரானான்பண்ணவராயினோரும்
வடுவகிர்க்கண்ணளாயமனைவியுங்கலங்கமாதோ. (எரு)

மாரவேளிறந்துதீர்ந்தான்வள்ளல்யோகிருந்தான்முன்போல்
வீரவாளசுரர்தாக்கவிண்ணவர்மெலிந்துதேய்ந்தார்
சாரவாமுயிர்களெல்லாம்புணர்ப்பின்றித்தானுவொத்த
தீரநாள்பலவிவ்வாறுதேவியைநினைத்தானையன். (எசு)

ஒருமுதுமறையோனாகியொருகழையூன்றிக்கொண்டு
திருமலிநீற்றுக்கோலந்திருமேனியழகுசெய்யப்
பொருவருமிமையஞ்சார்ந்துபுண்ணியமுதல்விவைகும்
பெருகொளிச்சாலைமுன்புபெட்பொடுபுகுந்தானன்றே. (எஎ)

புருமுதுமறையோன்றனையடியரிற்புந்திசெய்து
நகுமுகமலர்த்தியம்மைநன்குபசாரஞ்செய்து
தகுவகையிருக்கைநல்கத்தானினிதிருந்துதேவி
யுகுதலிறவத்தின்கோலமொருங்குகண்டுளைக்கலுற்றான். (எஅ)

மலையரசுயிர்த்தபாவாய்வாலைநீதவமேற்கொண்ட
நிலையெவனுரைத்தியென்னநீற்றினுனிறைந்தகோலத்
தலைமறையவரோயன்பர்தம்முளமகலாவிந்து
கலைமதிமுடியாற்சார்வான்கைக்கொண்டேனிந்நோன்பென்றாள். (எகூ)

அனையவனென்புசாம்பரணிந்திடுகாட்டுளாடும்
வினையினனவனைநீயேன்வேட்பதுகுறித்தாயென்னப்
புனையிழைசீற்றங்கொண்டுபுந்தியின்மறையோயையன்
றனையவமதித்துச்சொற்றாய்சற்றுநீநல்லையல்லை. (அ௦)

நல்லையென்றுணர்ந்துநீயிங்குறுவதுநயந்தேன்பொல்லாத்
தொல்லைவல்வினைவிராயதுட்டனீயெழுந்துபோதி
வல்லையென்றுறச்சினந்தாண்மறையவன்முறுவல்பூத்தே
யல்லைவெல்குழலாயீதுகேளெனவறையலுற்றான். (அக)

வளமிலென்பணியுந்தோளான்வந்துனைமணப்பதென்று
தளர்நடையுடையனேனுந்தவாதுனைத்தாங்கவல்லே
னிளநலம்வாடநோற்றலொழிந்தெனைமணத்தல்செய்தி
யளமருங்கருத்துநீத்தென்றறைந்தனனுடல்வல்லான். (அஉ)

அன்னசொற்கேட்டலோடுமடங்கருங்கோபச்செந்தீ
யுன்னரிதெனமேற்பொங்கவொய்யெனப்பதைத்தெழுந்தாண்
முன்னவனஃதுணர்ந்துமுதுவடிவொழிந்துவல்லே
மின்னகுவிடைமேற்றோன்றிநின்றனன்விண்பூப்பெய்ய. (அங)

காண்டலும்வெருவியையன்கைதவங்கொல்லோவென்று
நாண்டருமுளத்திற்றாழ்ந்துநங்கையோர்புறத்துநிற்பப்
பூண்டருமுலையாயுன்னைப்பொள்ளெனமணப்பேனென்று
மாண்டவல்விடையைத்தூண்டிவள்ளறன்கயிலையுற்றான். (அச)

வெள்ளியங்கயிலையுற்றேழ்முனிவரைவிரையத்தூண்டி
வள்ளியவரைக்கோனுள்ளமியைதருவண்ணந்தேர்ந்து
தெள்ளியபிரமன்மாயோன்முதலியதேவர்போற்ற
வொள்ளியகணங்கள்சூழவிமவரையுற்றானன்றே. (அரு)

மலையரசெதிர்கொண்டேத்தமணஞ்செய்மண்டபத்துட்புக்குக்
கலைமறையுரைத்தவாறேகருதுசெந்தழன்முன்னாக
விலையில்பன்மணிப்பூண்பூண்டுவிளக்கஞ்சால்கொம்பைவேட்டா
னுலைவிலாமகிழ்ச்சிபூத்தாரொண்மலர்தூவியும்பர். (அசு)

தளவரும்பனையமூரற்றையலைமணந்தேயண்டத்
தளவருமுயிர்களின்பத்தழுந்துறப்புரிந்தபின்றைக்
களவருமிரதிவேண்டக்காமனைநல்கியாரு
முளவரும்பெருமான்வெள்ளிவரையினவ்வுமையோடுற்றான். (அஎ)

பிரிதலினுண்டாந்துன்பம்பெரிதனுபவித்ததேவி
யரியநற்றவங்களாற்றியமலன்மெய்ப்பாதிவேண்டக்
கரியவண்கண்டத்தெண்டோட்கண்ணுதற்சாமிவாம
முரியவவ்வுமைக்குநல்கியுமாபாகனெனும்பேர்பெற்றான். (அஅ)

அண்ணலங்கயிலைவாணனாறுமாமுகனைத்தோற்றி
விண்ணலநனிகூட்டுண்டவெய்யசூராதியோரைக்
கண்ணலங்கமையுமாறுகளத்திடைமாட்டுவித்தே
யொண்ணலமகவானாதியும்பருக்களிப்பித்தானே. (அகூ)

ஆயதோர்காலேவிண்ணோராடலங்களிற்றுவேந்தன்
பாயதாமரையின்மேலான்படவராப்படுக்கைமாயோன்
மேயமற்றெவருங்கூடிவெள்ளியங்கயிலேசார்ந்து
நாயனேயடியிற்றாழ்ந்துநலமுறத்துதிக்கலுற்றார். (௧0)

அராவணிசடையாய்போற்றியறப்பெருவிடையாய்போற்றி
விராமழுப்படையாய்போற்றிவெய்யதோலுடையாய்போற்றி
பராவருண்டையாய்போற்றிபடுதலேத்தொடையாய்போற்றி
யொராமறையிடையாய்போற்றியுமையொருபுடையாய்போற்றி. (௧௪)

அருமறையேகபோற்றியடியர்பான்மோகபோற்றி
திருவளராகபோற்றிசெலுத்திடுமேகபோற்றி
மருவனாகபோற்றிமாப்பெருந்தியாகபோற்றி
பொருவரும்போகபோற்றிபுணருமாபாகபோர்றி. (௧௨)

என்றுரைந்திரங்கியேத்துமெண்ணில்வானவரைநோக்கிக்
குன்றுவெஞ்சிலேயாக்கொண்டான்குறித்ததெனுரைமினென்று
னன்றுவெஞ்சூரனாற்றலகற்றுவித்தெமைப்புரந்தாய்
நன்றுநின்னடனங்காணநயந்தனமருடியென்றார். (௧௩)

விண்ணவருரைத்தவார்த்தைவிமலனஞ்செவியினேற்றே
யண்ணலங்கும்பகோணமடைந்துகாவிரித்தீர்த்தத்துந்
தண்ணமைந்தொளிருமம்பொற்றாமரைப்பெருந்தீர்த்தத்து
நண்ணருமகதீர்த்தத்துநலமலிவிதியின்மூழ்கி. (௧௪)

மன்னியபுகழ்க்கும்பேசம்வளமலிதருசோமேசம்
பன்னியகவுதமேசம்படர்புகழபிமுகேச
மின்னியவிச்சுவேசமிளிர்பாணபுரேசமாதித்
துன்னியதானமெல்லாந்தொழுதுநாகேசம்புக்கு. (௧௫)

அரவதீர்த்தத்துமூழ்கியாங்கமர்வில்வமூலம்
பரவவீற்றிருக்குநந்தங்குறியினேப்பரிந்துபோற்றி
விரவவாங்கமர்மின்சின்னாள்விரும்புமையொடுயாமாங்குப்
புரவவாயடைந்தேயாடல்புரிந்தருள்செய்வோமென்றான். (௧௬)

அளவருங்கருணேமூர்த்தியருளியவார்த்தைகேட்டாங்
குளமலியுவகையோடுமொண்மலரடியிற்றாழா
வளமலிவானோரெல்லாமாப்பெருங்கும்பகோணப்
பளகருந்தலத்துட்புக்குப்படிந்தனர்தீர்த்தமூன்றும். (௧௭)

மேயகும்பேசமாதிவிளம்பியதானமெல்லாம்
பாயபேரன்பிற்போற்றிப்பரவுநாகேசம்புக்காங்
காயவாளரவுநீர்தோய்ந்தலங்குமாலூரமூல
நேயமாரருளின்மேயநின்மலவிலிங்கங்கண்டார். (௧௮)

கண்டுகைதொழுதுவீழ்ந்துகண்கணீரருவிபாய
மண்டுமெய்ப்புளகம்போர்ப்பவலம்புரிந்தாடிப்பாடித்
தொண்டுபூண்டினியபூசைதொடங்கிநல்விதியினாற்றி
விண்டுவாதியருமங்குமேவிவீற்றிருந்தாரன்றே. (௧௯)

நிரம்புபல்கதிர்சேர்ந்தென்னநிகழ்சபையாவதென்று
பரம்பரன்வருவதென்றுபயிலிடம்புரிவதென்று
வரம்பெறுபேரானந்தமருவிநாமுய்வதென்றென்
றுரம்பெறநினைத்திருந்தாருலப்பிலாவன்பினும்பர். (௪௦௦)

இணர்படிதுளவத்தாரோனிண்டைமாமலரோனாதி
யுணர்தருமமரர்யாருமின்னணமுறையுநாளில்
வணர்படுகூந்தற்செவ்வாயுமையவளொடுமாதேவன்
புணர்பெருங்கயிலைநின்றும்வருவதுபுந்திசெய்தான். (௪௦௧)

விரைசெலற்பரிகள்பூண்டுவிளங்குபொன்விமானத்தேறிக்
கரையறுகணங்கள்சூழக்கணக்கிலார்விருதுபாடப்
புரைதவிர்முரசமார்ப்பப்பொலிகுடையாதிமொய்ப்பக்
குரைகடலுலகமேத்துங்கும்பகோணத்தையுற்றான். (௪௦௨)

இதுநமதொளிர்கும்பேசமிதுபொற்றாமரைநற்றீர்த்த
மதுபுகழ்மிகுசோமேசமதுமிளிர்கவுதமேச
முதுபொலியபிமுகேசமுதுவளர்விச்சுவேசஞ்
சதுமுகன்முதலோர்போற்றத்தகுமிதுமாகதீர்த்தம். (௪௦௩)

பொலிதருமீதுபாணபுரேசமென்றுள்ளவெல்லா
மலிதருமுவகைபூப்பமாதுமையவட்குக்காட்டிக்
கலிதருதுயரந்தீர்த்துக்கண்டவர்க்கின்பநல்கு
மொலிதருபுகழ்நாகேசமுற்றனனும்பரார்ப்ப. (௪௦௪)

வந்தனன்சாமியென்றுமலரயன்முதலோர்யாரு
நந்தலிலுவகைபொங்கநன்கெழுந்தடியில்வீழ்ந்து
சந்தமென்மலர்கடூவித்தட்டமிட்டாடிப்பாடி
யந்தமில்களிப்புமேவிநின்றனரன்னகாலை. (௪௦௫)

புண்ணியவுமையோர்பாகப்புராதனனருளினாலே
தண்ணியகைலைநின்றுஞ்சார்ந்தபொன்விமானமவ்வா
றண்ணியதேசுமேவுமாலயமாகித்தோன்ற
வெண்ணியவதற்றுநாப்பணிருஞ்சபையொன்றாயிற்றால். (௪௦௬)

அத்தகுசபையினாப்பணாயிரங்கதிரோர்காலத்
தொத்தமைந்துதித்தாலென்னவொளிர்திருவுருவின்மேவி
வித்தகவொருவெம்பூதவென்னிடையொருதாளூன்றிச்
சுத்தமெய்ஞ்ஞானமேயாய்ச்சுடருமற்றொருதாடூக்கி. (௪௦௭)

அம்பிகையிடப்பானின்றேயங்கையிற்றாளமொத்த
வம்பியறுளவத்தாரான்வயங்குவேய்ங்குழலிசைக்கத்
தும்புருநாரதாதித்தூயரின்னிசையெழுப்பப்
பம்புமற்றுள்ளோர்யாரும்பரிந்தரகரவென்றேத்த. (௪௦௮)

அடுதொழிற்றகுவனாய்வழற்சினக்களிற்றைமாய்த்துப்
படுதுயர்க்கடலுளாழ்ந்தபண்ணவர்தமைப்புரந்து
விடுதலில்சீர்த்திபெற்றுவிளங்கியகருணைமூர்த்தி
வடுவிலோர்கோட்டுப்பெம்மான்மத்தளமுழக்காநிற்க. (௪௦௯)

தமருகமொருகையார்ப்பத்தழலெழுந்தொருகைப்பொங்க
வமரொருகரங்கவிப்பவபயமாங்கொருகைசெய்யச்
சமர்தருபுயத்தராவுந்தலைப்பெருந்தொடையுநாலப்
பமரநன்றிரைக்குங்கொன்றைப்பசுந்தொடைவாசம்வீச. (கக0)

புரிசடைதிமிர்ந்துசூழப்பொலிமதிநிலவுகால
விரிதிரைக்கங்கையாறுமேதகுதிவலைசிந்தப்
பரிமறைச்சிலம்புபாதபங்கயத்தொலியாநிற்பத்
தெரிதரவரையிற்சூழ்ந்துசினப்புலியதள்விளங்க. (ககக)

ஒள்ளியகடைக்கட்பார்வையுமைதிருமுகத்துலாவத்
தெள்ளியமறைகள்வாழ்த்தமுனிவர்பல்லாண்டுசெப்ப
வள்ளியவடியாராயமற்றையருள்ளத்தோகை
துள்ளியவங்கைகூப்பித்தொழுதிருவிழிநீர்பெய்ய. (ககஉ)

அலகில்பல்புவனமெல்லாமானந்தமயமேயாக
வலகில்பல்வளஞ்சால்கும்பகோணநன்கநிலத்துள்ள
வலகில்பன்னகரமெல்லாம்வென்றரும்புகழ்படைப்ப
மலகிலாவானந்தக்கூத்தாடினனமலமூர்த்தி. (ககங)

அற்புதமடந்தைபாகனாடியகூத்துநோக்கி
பொற்புறுமயன்மாலாதிப்புங்கவர்பணிந்துபோற்றிக்
கற்பனைகடந்தாயிந்தக்காமருநடனமென்றும்
பற்பலர்புகழுமிந்தத்தலத்துநீபயிறல்வேண்டும். (ககச)

அடுசிலைமதியின்மேயவாதிரைநாளிலிந்த
வடுவறுநடனஞ்செய்தாய்மாதேவவிணையநாளின்
முடுகிவந்தொருநீயாற்றுமுனிவலிந்நடனங்காண்பார்
படுபெருஞ்செல்வந்துய்த்துன்பாதமேயடைதல்வேண்டும். (ககரு)

இவ்வரந்தருதியாலென்றிமையவரிரந்துவேண்ட
வவ்வரமவ்வாறேயீந்தலகிலாவுயிருமுய்ய
வெவ்வரந்தடியாச்சூலவித்தகன்மடந்தைபாகன்
செவ்வரம்பொலியவாங்குத்திருநடம்புரிந்துநிற்பான். (ககசு)

மன்னியமடந்தைபாகன்மாநடந்தெரிசிப்போர்கண்
முன்னியபோகமெல்லாமுன்னியவாறேதுய்த்துப்
பன்னியவிமையோராகிப்பற்பனாள்வாழ்ந்துபின்ன
ரன்னியமில்லாதன்னனடிக்கலப்புற்றுவாழ்வார். (ககஎ)

உமாபாகப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். கருகூச.

## சூரியன்பூசித்தப்படலம்.

மறைபலமுழங்கச்செந்தாமரையரும்புடையவெங்கு
நிறையிருடொலையயார்க்குநிலவியகருமச்சான்றாய்
முறையுதித்தெழுவோன்மேன்மேன்முகிழ்வளம்பொலிநாகேசப்
பிறைமுடியவனைப்போற்றிப்பெற்றபேறெடுத்துச்சொல்வாம். (க)

பொருவருந்துவட்டாவீன்றபுத்திரிசஞ்சைதன்னை
வெருவருங்கதிரோன்வேட்டுவெம்முலைக்குவடுபுல்லி
மருவருமியமனோடுவயங்குகாளிந்தியென்னு
மிருவருமுதிப்பநல்கியினிதுவாழ்ந்தமருநாளில். (உ)

மெல்லியற்சஞ்சையென்பாள்வெய்யவன்கிரணமாற்று
ளொல்லியற்றனதுசாயைதன்னைத்தன்னுருவாச்செய்து
நல்லியற்கதிரோன்பாங்கர்நலமுறவிருத்தியீன்ற
சொல்லியற்குதலைமக்களிருவருந்துயராவண்ணம். (ங)

மற்றவள்பாங்கர்ச்சேர்த்துமருவுகாப்பாற்றுகென்று
சொற்றவணீங்கிநீங்குஞ்சூருளங்குறியாளாகிக்
கற்றவர்புகழ்துவட்டாமுன்சென்றுகைகுவித்தாண்
மற்றவன்புதல்விவந்தவரவெலாம்வினவித்தேர்ந்து. (ச)

கற்புடைமடவாரொன்னகடுந்துயருற்றபோது
மற்புடைப்பதியைநீங்காராயிழாயென்செய்தாயென்
றிற்புடையழைத்தல்செய்யாதெரியெழச்சினந்தான்றாழ்ந்து
பொற்புடைவரன்பாற்செல்வேனெனப்புகன்றுங்குநீங்கி. (ரு)

மந்தரகிரிப்பாற்சென்றுவடவையினுருவங்கொண்டு
சுந்தரவதன்ச்சஞ்சைதூத்தவம்புரிந்திருந்தா
ளந்தரமருங்குற்சாயையழகியகொங்கையென்னுஞ்
சந்தரதனக்கோடுற்றுச்சனியையீன்றெடுத்தான்வெய்யோன். (சு)

முடவனுஞ்சமனுமோர்நாண்மூண்டவெங்கலாம்விளைத்துத்
திடமிகுமொருவன்சென்னிச்சிகையைமற்றொருவன்பற்றி
விடலரிதென்னப்புல்லிவெய்யகால்காலிற்சாய்த்தும்
படமுகத்தறைந்துமுட்டிபடைத்தகைத்தாக்குச்செய்தும். (எ)

இழியுறவைதுகொண்டுமிருவரும்புரண்டுவீழ்ந்து
மொழிவரும்பெரும்போர்செய்யவுதயமார்த்தாண்டன்கண்டு
கழிதுயர்கொடுவிலக்கிக்கடும்பயமுறுத்திப்பின்றைப்
பழிதபவொருதாய்பெற்றபாலரோயானுரின்னோர். (அ)

ஆனவர்பெருங்கலாஞ்செய்தழலுதற்கேதுவென்னென்
றூனமில்கருத்திலாராய்ந்துண்மையையுரைத்தியென்று
பானலங்கருங்கட்சாயைதிருமுகம்பார்த்துக்கேட்க
வீனமிலவளுந்தாழாவெழுந்திதுபுகலலுற்றாள். (கூ)

ஐயநின்மேனிவெப்பமாற்றவல்லாதசஞ்சை
செய்யதன்னிழலாலென்னைச்செய்துநின்பாங்கர்வைத்து
வையமுற்றேத்துந்தெய்வமந்தரகிரிப்பாலுற்று
வெய்யபெண்குதிரைமேனிமேவிநோற்றிருந்தாளன்றே. (க0)

அன்னவள்பெற்றமைந்தனடுதிறலியமன்மற்றைப்
பின்னவளாயவென்னாற்பெறப்படுபுதல்வன்மந்த
னின்னவர்கலாம்விளைத்தலியற்கையேயாகுமென்றாண்
மன்னவளுரைத்தவார்த்தையுணர்ந்தமார்த்தாண்டனென்பான். (கக)

பெருகெழிற்சஞ்சையல்குற்பெருந்தடம்படிவானெண்ணி
யுருகுசிந்தையளுயோராண்குதிரையினுருவங்கொண்டே
திருகுவெஞ்சீற்றமாக்கள்செறியுமந்தரவிலங்க
லருந்தவந்துற்றுனன்னதறிந்தனள்சஞ்சையென்பாள். (கஉ)

இங்கும்வந்தனனேயென்றுவெடுத்தவவ்வுருவநீத்துப்
பொங்குமுன்னுருவங்கொண்டுபுக்கனடந்தையில்லம்
வெங்குலக்கதிரினோனும்விறற்பரியுருவநீத்துத்
தங்குதன்னுருவங்கொண்டுசார்ந்தனன்றொடர்ந்துமாதோ. (கரு)

கதிரவன்வருதல்கண்டகடுவலித்துவட்டாவென்போ
னதிர்தரப்பிடித்துச்சாணையகத்திட்டுக்கதிர்களெல்லா
முதிர்தரத்தேய்த்தான்வெய்யகிரணங்களொழிதலாலே
பிதிர்தலின்மதியம்போன்றுன்பெருகொளியமைந்தவானோன். (கச)

கடுங்கதிரனைத்துந்தீர்ந்துகவலையுற்றிருக்குங்காலை
யொடுங்கலில்கும்பகோணமுற்றுநாகேசம்புக்குப்
படுங்குளிர்புனலொன்றாக்கிப்பரமனைப்பூசிப்பாயே
னடுங்குதலொழிவாயென்றோர்நபமொழியெழுந்ததன்றே. (கரு)

அருளசரீரிவாக்கோர்ந்தலரியுள்ளுவந்தெழுந்து
பொருளமைகும்பகோணம்பொலியுநாகேசம்புக்குத்
தெருளமைபெரியவல்லிதிருமுனோர்தீர்த்தமாக்கி
மருளறத்துமிக்குமந்நீர்வாஞ்சையினுடிச்சென்று. (கசு)

அன்னநீராட்டியாட்டியலங்குநாகேசனோடு
பின்னமில்கருணைவாய்ந்தபெரியநாயகியைப்போற்றித்
தன்னமர்விருப்பிற்சென்றுதவாவருண்மடந்தைபாகர்
பொன்னடிமலரும்போற்றிப்போக்கினன்பலநாளாங்கு. (கஎ)

இன்னணம்வருந்திநோற்குமினனெதிர்மடந்தைபாகர்
நன்னலங்கனியத்தோன்றிநட்டவெங்கதிர்கணல்கி
யந்நலங்கனிந்தசஞ்சைக்காற்றிடுவலியுநல்கி
யுன்னமர்கருத்தையோதினுதவுதுமின்னுமென்றார். (கஅ)

என்றலும்பணிந்துவெய்யோனெளியனேனமைத்ததீர்த்த
நன்றவிரொன்பேர்பூண்டுநாடொறும்விளங்கல்வேண்டு
மொன்றவத்தடத்தென்வாரமுற்றுளக்களிப்பினுடி
நின்றனைத்தொழுவாரெல்லாநினைத்தவையடைதல்வேண்டும். (கக)

இன்னகேத்திரத்துப்பன்னளிருந்துமாதவம்புரிந்தே
னன்னகாரணத்தாலிந்தக்கேத்திரமடியேன்பேர்பூண்
டுன்னரும்வளத்தாலோங்கியெற்றைக்குமொளிர்தல்வேண்டும்
பன்னருநின்றட்கன்பென்பால்விடாதிருத்தல்வேண்டும். (உ0)

இன்னபல்வரமும்வேண்டுமென்றனனனைத்துநல்கி
முன்னவன்மறைந்தான்வெய்யோன்முற்கதிரனைத்தும்பெற்றுத்
தன்னமருலகஞ்சார்ந்துசஞ்சைதன்பணைத்தோள்புல்லிப்
பன்னருங்களிப்புமேவிப்படரிருளிரித்துவாழ்ந்தான். (உக)

செறிபொழிற்கும்பகோணந்திருந்தியவன்றுதொட்டுப்
பறியெனப்பெற்றதம்மாபாற்கரகேத்திரப்பேர்
மறிவில்வெங்கதிரோன்றீர்த்தமற்றவன்வாரமூழ்கி
முறிவிலுகேசம்போற்றுமவரொலாமுத்தராவார். (உஉ)

சூரியன்பூசித்தப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கசுகசு.

## பகவன்முத்தியடைந்தபடலம்.

இகவரும்பெருவளவிருங்குடந்தையுண்
மகமுனிவரர்தொழுமடந்தைபாகனார்
தகவருள்புரிந்திடத்தவமிக்காற்றிய
பகவனென்பவன்கதிபடர்ந்ததோதுவாம். (க)

ஒளிகெழுபவளமுமுறந்தமுத்தமுந்
துளிகெழுபெருந்திரைக்கரங்கடேக்கியே
யளிகெழுகடலிறைத்தடிவணங்கிடுங்
களிகெழுதிருமறைக்காடென்றோர்தலம். (உ)

அத்தலத்தமர்பவனறிவின்மேலவன்
முத்தலம்புகழ்திருநீற்றுமோகத்தா
னெத்தவங்களுமமரிறைவன்கோலமங்
கைத்தலக்கனியெனக்கண்டுவாழ்பவன். (௩)

தகவனல்லொழுக்கினன்றவாதமேன்மையை
முகவனன்பினனலமுழுதுந்தங்கிய
வகவனிட்டிகள்பலவமையவாற்றியோன்
பகவனென்றியாவரும்பகருநாமத்தான். (ச)

அன்னவன்மறைவனத்தருளின்மேவிய
முன்னவன்பணிவிடைமுயன்றுநாடொறு
மென்னவன்பினையனன்பென்னயாவரும்
பன்னவன்பொடுபுரிபண்பின்வாழுநாள். (ரு)

ஈன்றவண்மண்ணுலகிருக்கைவாழ்க்கைநீத்
தான்றவிண்ணுலகினையடைந்துவைகினாள்
சான்றநூல்விதிப்படிதகச்செயாவையுந்
தோன்றவாற்றினனிதுதுணிந்துளானரோ. (சு)

அத்தியைச்சுமந்துகொண்டடைந்துகங்கையிற்
பத்தியின்விடுத்திடிற்பயந்துளாள்பெரு
முத்தியையடைவளென்றுன்னிமுந்தியச்
சுத்திகொள்வினைசெயறுனைவிலாற்றுவான். (எ)

ஒருசிறுகடத்தினென்புள்ளயர்வையு
மருவுறச்செறித்துமேல்வட்டஞ்சுற்றியே
கருதமுள்ளுவகையிற்கைக்கொண்டானுடன்
வருமொருசிறுனெடும்வழிக்கொண்டானரோ. (அ)

வழியமர்புண்ணியவாவியாவுந்தோய்ந்
தழிவருசிவதலமநேகம்போற்றியே
சுழிமகிழ்வுறவருகற்றவேதியன்
கொழிநலமலிகும்பகோணமுற்றனன். (௯)

கூறுபல்வளக்கும்பகோணமுற்றவ
னூறுமின்சுவைப்புனலுவப்பினுடிவா
னுறுவில்வத்தடிநயந்துளார்தளிப்
பேறுசெய்யுத்தரம்பிறங்குபொன்னியில். (க0)

ஒருபடித்துறையடைந்தொருவிருக்கத்து
மருவுமென்புக்குடம்வயங்கத்தூக்கியே
திருகுதீராயிடைச்சிறுனேக்காவல்வைத்
தருகுவண்பொன்னிநீராடப்போயினன். (கக)

மற்றவன்வருமுனம்பசிவருத்தமிக்
குற்றவச்சிறுன்சுவையுறந்தபக்கணஞ்
செற்றவண்குடமெனச்சிந்தைசெய்திதே
யற்றமென்றக்குடமவிழ்த்துப்பார்த்தனன். (கஉ)

நறியபுண்டரீகங்கணறியபற்பல
வெறியபன்மலர்களாய்விளங்கக்கண்டனன்
வறியநாமொன்றெணமற்றென்றுயதீ
தறியவந்திடிலெவனுமென்றஞ்சினன். (கங)

பண்டுபோன்மூடுதல்பண்ணித்தூக்கினன்
மண்டுசேர்ப்பகவனும்வயங்குபொன்னிதோய்ந்
தண்டுபேரன்பொடுமருட்கும்பேசனைத்
தொண்டுபூண்டவர்க்கருள்சோமநாதனை. (கச)

மன்னியபெரும்புகழ்மடந்தைபாகனை
நன்னியமஞ்செயுநாகநாதனை
மின்னியசெஞ்சடைவிச்சுவேசனை
யன்னியமிலாவருளபிமுகேசனை. (கரு)

காமலிவளம்பொலிகவுதமேசனைப்
பூமலிபாணபுரேசனைத்தொழாத்
தாமலியென்பமர்தேத்துச்சார்ந்தனன்
மாமலிசிறுனெடும்வழிக்கொண்டேகினன். (கசு)

துகளெலும்பார்குடந்தோளிற்றூக்கியே
நகவிளைதருவளநாடுங்கானமு
மிகவுயர்குன்றமும்யாற்றின்வீக்கமும்
பகவனென்றுரைப்பவன்பலகடந்தனன். (கஎ)

அடுத்தவர்தமக்கருளள்ளிவீசுசீர்
மடுத்தபுண்ணியம்புகழ்வயங்குகாசியைத்
தொடுத்தநல்லொழுக்கினன்றுனேந்துசார்ந்துநீ
ரொடுத்தகங்காநதியிறைஞ்சியெய்தினன். (கஅ)

மேயவந்நதிக்கரைவிழைந்திருந்தன
ஞயவெற்புக்குடமவிழ்த்துவைத்தன
னேயசங்கற்பநன்காற்றுமேல்வையிற்
றூயநற்சிருன்குடந்தனைந்துநோக்கினுன். (கசு)

கொழிநலமிகப்பொலிகும்பகோணத்திற்
பொழிபுனற்பெருக்குடைப்பொன்னிமாநதிச்
செழிபெருங்கோட்டிடைச்சிறந்தகஞ்சத்தேன்
வழிமலராயமைவண்ணந்தேர்ந்தனம். (உ௦)

ஈங்குவெள்ளெனும்பெனவிருப்பதென்னையென்
ருங்குளத்தாய்ந்துளதறிவிப்பாமெனப்
பாங்குயர்பகவனைப்பணிந்தெழுந்தன
னீங்குதலிலாதெதிர்நின்றுகூறுவான். (உக)

ஐயமுற்கும்பகோணத்தையண்மிநீ
செய்யகாவிரிப்புனலாடச்சென்றனை
வெய்யவெம்பசியினுல்விரும்புணுவென்று
பையவிக்குடத்தினையவிழ்த்துப்பார்த்தனன். (உஉ)

பொலிதருநறுமலர்ப்புண்டரீகமாய்
மலிதரல்கண்டனன்மறித்துங்கட்டினே
னொலிகெழுமிவணெனும்புருவமாயதான்
மெலிவறவித்திறம்விளைந்ததென்னென்ருன். (உங)

சிறுவனீதுரைத்தலும்பகவன்றேர்ந்தன
னுறுபெருமகிழ்ச்சியினுரைத்ததுண்மையோ
வறுவியமொழிகொலோமைந்தவோதென்ருன்
றறுகணிலாதவசரதமேயென்ருன். (உச)

சரதமென்றிடின்முனஞ்சாற்றிடாதமர்
விரதமென்னெனப்பயம்விரவலாலென்ருன்
வரதனங்கருணையுன்வயிற்றிற்குத்துவாய்ப்
பரவியதோவெனப்பரிந்துகூறினுன். (உரு)

போற்றியகுடமுனம்போலக்கட்டினுன்
சாற்றியசிறுவனைத்தழுவிக்கொண்டனன்
காற்றியதீவினைக்காசிநின்றெழா
மாற்றியகவலையான்வழிநடந்தனன். (உசு)

முன்புபோலிடமெலாமுடுகிநீத்தன
னன்புலக்கும்பகோணத்தையுற்றன
னன்புசேர்காவிரியத்துறைக்கணே
யென்புசேர்குடத்தினையிறக்கிவைத்தனன். (உஎ)

விரைதரவவிழ்த்தனன்விரும்பிப்பார்த்தனன்
புரைகெழுமெனும்பெலாம்புண்டரீகமாய்
வரைவறுமணத்தொடுமலரக்கண்டனன்
கரையறுமுவகையங்கடலுளாழ்ந்தனன். (உஅ)

ஆடினனித்தலமளியதாலெனப்
பாடினன்பன்முறைபணிந்தெழுந்தனன்
கூடினன்மகிழ்ச்சியுட்கொண்டதுன்பெலாஞ்
சாடினன்சிறுவனைத்தழுவிக்கொண்டனன். (உக)

விதிமுறையியற்றுவவிளைழுந்தியற்றினன்
பொதிதருமெலும்பையப்பொன்னிமாநதி
மதிகெழுதுறைப்புனன்வயங்கவிட்டனன்
பதிதருகளிப்பினும்படிந்துளானரோ. (௩0)

என்புதாமரைமலரொன்னச்செய்தவவ்
வன்புசேர்காவிரியாற்றிற்கொப்பதோ
வின்புசால்கங்கைமுனெண்ணிலாதவும்
புன்புலாலுடலினிப்புகாதவந்தணீர். (௩க)

அத்தலவிசேடமுணர்ந்தவந்தண
னெத்தலங்களுமிணையிலதென்றெண்ணியே
முத்தலங்களும்புகழ்முனிவிலத்துறைக்
கைத்தலக்கனியெனக்கடன்கழிப்பனால். (௩உ)

தருப்பணசிராத்தமுற்சாற்றும்யாவையும்
விருப்பொடுபுரிந்தவண்விடுபடாதமர்ந்
தொருப்படுமனத்தனுயுமையோர்பாகனார்
மருப்பொலிபதமுளம்வைத்துநோற்றனன். (௩௩)

அருந்தவம்பல்பகலாற்றுவான்முனம்
வருந்தலற்றுலகுயமடந்தைபாகனார்
பொருந்தினர்பொருந்தலும்பொருக்கென்றோர்ந்துளத்
திருந்தவனெழுந்தடியிறைஞ்சிப்போற்றினன். (௩ச)

வேண்டுவதென்னைகொல்விளம்புவாயென
வாண்டவநின்னடியடைதல்வேண்டும்யான்
மாண்டவித்துறையென்பேர்மருவல்வேண்டுமிந்
நீண்டநீர்த்துறைபடிநேசத்தாரெலாம். (௩ரு)

இகபரமுத்திமுற்றெய்தல்வேண்டுமித்
தகவுடைவரமெலாந்தருதியாலென்று
னகனமர்ந்தமலனுமளித்துப்போயினன்
சகமுழுவதும்புகழ்தன்னதாலயம். (௩சு)

பரகதியடைந்தனன்பகவனென்பவ
னரனருள்வலத்தினாலற்றைநாண்முதற்
றிரமலியத்துறைபகவதீர்த்தமென்
றுரனமையொருபெயருற்றுமேவுமே. (௩௭)

பாய்தருபெரும்புகழ்ப்பகவதீர்த்தத்துத்
தோய்தரிற்பதிதருஞ்சுத்தராகுவ
ரோய்தருவளமெலாமெய்திவாழ்ந்துபின்
வேய்தருபரகதிமேவிவாழ்வரோ. (௩அ)

ஓங்குமாபாசுகேத்திரத்தினுற்றெரு
பாங்குசாலக்கினிட்டோமம்பண்ணுவார்
வீங்குசீரச்சுவமேதமாமகந்
தேங்குபற்பலபுரிபேறுசேர்வரால். (௩௯)

பகவதீர்த்தத்துறைபண்பின்மூழ்குபு
பகவனுகேசனுட்பரியுமாநடப்
பகவனெண்மலர்ப்பதம்பரவிப்போற்றினப்
பகவனேயெனப்பொலிபண்பராவரோ. (௪0)

அத்துறையொருமருப்பண்ணலோடம
ருத்தமப்பகவனையுவந்துபோற்றுவார்
வித்தகஞானமுள்விளையுமாபொலிந்
தித்தலத்திறையருட்கிலக்கராவரோ. (௪௧)

பகவன்முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கசுருள.

## பகவதீர்த்தமகிமைப்படலம்.

பார்த்தவிடமெல்லாம்பரமனிடமாகவளம்
போர்த்தகுடமூக்கிற்பொலியுங்கீழ்க்கோட்டத்திற்
கார்த்தவடதிசையினுங்காவிரிப்பகவ
தீர்த்தமகிமையினுஞ்சிறிதுசெப்புவாம். (௧)

மன்னுபுனல்வளஞ்சான்மாளவதேயத்ததிபன்
மின்னுமதிகுலத்துவந்தவிறல்வேந்தன்
பன்னுசிவநேசம்பாலிக்கும்பண்பினன்
றுன்னுபுகழ்ச்சத்தியகீர்த்திப்பெயர்த்தோன்றல். (௨)

சான்றவமைச்சர்முதலாயினர்தழுவப்
பூன்றபரமன்பொலியாலயந்தழைப்ப
வேன்றமனுநீதியிறையுந்தவறுமை
லான்றவொழுக்கமவாய்க்கோல்செலுத்துநாள். (௩)

ஒருநாள்விடியலுணர்ந்துநீராடிப்
பெருநார்விபூதிபிறங்கப்புனைந்து
மருநாண்மலர்கொண்டுமாதேவற்போற்றி
வெருநாணிலாதான்வெளிவந்தானம்மா. (௪)

ஆயதொருகாலையாகாயநின்றுமொரு
தீயகுரல்கூகூவென்றுதிகழ்ந்தெழலு
மேயவுளநடுங்கிமேனிவெயர்ப்பேறப்
பாயபுகழான்பரிந்துண்மையோருவான். (௫)

உண்மையுணர்வானுறுசெவியினுள்ளேற
வண்மைமறையோர்குலத்துவந்தேன்மடங்குடிகொள்
பெண்மையுருவேன்பிறக்கியமாபாவத்தாற்
றண்மையிலாப்பிரமராக்கதஞ்சாரப்பட்டேன். (௬)

பொல்லாப்பிரமவிராக்கதமென்பாற்போந்து
சொல்லாக்கொடுநாண்கழுத்திற்சுருக்கிட்டு
வல்லாத்திறமுணர்ந்திவ்வானிலலைத்திடுமால்
வெல்லாப்புகழோய்விரைந்தித்துயரொழித்தால். (௭)

ஓவாதபுண்ணியநிற்குண்டாகுமில்லையெனின்
மேவாதபாவமெலாமேவுமெனச்சொற்றழலுந்
தாவாதகீர்த்தியுடைச்சத்தியகீர்த்திப்பெயரோ
னாவாதமியாட்கடுத்ததுயரென்னென்று. (௮)

பக்கமுறநின்றபனவன்புரோகிதனுந்
தக்கதொழில்வேதசன்மன்முகநோக்கி
யக்கமொருமூன்றுணருளாலிவட்குற்ற
துக்கமனைத்துந்துடைப்பேனிப்போதென்றான். (௯)

அன்னபொழுதினவள்புரிந்தமாபாவ
மன்னவுணர்ந்தமறைச்சருமனோதுவா
னென்னமொழிந்தாயிவடன்மைதேரராம
னன்னருளைப்பேனயந்துணர்தியென்றுரைப்பான். (௧0)

முந்தைப்பவத்துமுயங்குங்கணவனொடு
சிந்தைக்கினியசெழும்போகந்தெவ்வுநா
ணந்தைத்திருவுருவினல்லிளையளுண்டானா
ளந்தைக்குரியாளழுக்கற்றிதுபுரிந்தாள். (௧௧)

வந்தவிளையாள்வதனமிறைநோக்காது
நந்தவொருதனையேநாடும்வகைகருதிச்
சந்தமிகுபாலிற்றக்கமருந்துவிரா
யுந்தமுகமனுரைத்தூட்டினாள்பதிக்கே. (௧௨)

இட்டமருந்தாலிருமற்பிணியெழுந்து
கட்டமுறுத்தக்கலங்கிமாய்ந்தான்மறையோன்
சட்டவனுமரணஞ்செய்தாடவாவிளையா
ணட்டமுணராதிந்நங்கைகளித்திருந்தாள். (௧௩)

விண்டமலர்மஞ்சண்முதலொன்றும்வெறுத்திலளாய்க்
கண்டபுருடரொவரோனுங்காமுற்று
மண்டநுகர்ந்துகொடுவன்பிணிக்கோட்பட்டிறந்து
தண்டதரனாணைதாங்கிநிரயம்புகுந்தாள். (௧௪)

பன்னாளளற்றிற்பதைத்தழுந்தித்துன்புற்ற
மின்னாள்பல்சூகரமாய்வெய்யவாய்ஞாளியாய்
வென்னாள்பரந்தாங்கும்வீங்குகுரற்கரமாய்ச்
சொன்னாள்பலசழித்துத்தூய்தமைநின்றேயத்து. (௧௫)

சாதுமறையோனொருவன்றன்மகளாய்த்தோன்றினா
ளேதுசெறிமுற்பாவசேடமிருத்தலினா
லோதுகொடும்பிரமராக்கதமொன்றுற்றிக்
காதுபுரியக்கவல்வாள்சழிசருநாள். (௧௬)

ஆண்டுவிதித்ததுவுமாயிரமாமாயிரத்து
னீண்டுகழிந்தவிருநூறொருநூறுந்
தூண்டுமெழுநூறுண்டுதுன்பப்படுவாளைத்
தாண்டுபரிவேந்தேபுரப்பலெனச்சாற்றினுய். (கஎ)

எவ்வாறுகாப்பாயியம்புதியெற்கென்றிடலு
மொவ்வார்நடுங்குமுரவுத்தோள்வேந்தனுமென்
செவ்வாய்மைபொய்யாதுதேர்ந்துரைத்தியென்றிடலு
மவ்வாறுவேதசருமனினிதாய்ந்தறைவான். (கஅ)

ஆயபுகழ்நீர்நாட்டருட்கும்பகோணமெனுந்
தூயதலத்தைத்துன்னைந்தடைந்துகும்பேச
நாயன்முதலாகநண்ணுபலரையுந்தாழ்ந்
தேயவளங்கூரிருங்காவிரியடைந்து. (கக)

அத்திநறுமணஞ்சாலம்போருகமாக்குஞ்
சித்தியமைபகவதீர்த்தத்துமூன்றுநாட்
பத்தியுறமுழுகியப்பயனைப்பார்ப்பனிக்குச்
சுத்தமுறக்கொடுத்தாற்றுன்பமொழிந்துய்வளென்றான். (உ0)

என்றபொழுதேயெழுந்தரசனீர்நாட்டு
மன்றமலிகுடந்தைமாநகரத்துட்புகுந்து
நன்றமையும்பொற்றாமரைநீர்நயந்தாடி
யொன்றமிளிர்கன்னிதீர்த்தமுவப்பிற்படிந்து. (உக)

தூயதிருநீறணிந்துசூழ்கண்மணிபூண்டு
பாயவெழுத்தைந்தும்பரவவுளங்குறித்து
மேயபுகழ்க்கும்பேசர்மேன்மைதருசோமேசர்
நேயவடியார்க்குநிரப்பும்விசுவேசர். (உஉ)

பாணபுரியீசர்பயனென்பதையடியா
ராணவளவிலருணரிகேளீசர்
காணவுவப்பேயருள்கவுதமேசரரா
நாணமரைக்கசைத்தநாகேசராதியரை. (உங)

அன்பினுறப்போற்றியருட்காவிரியடைந்தே
யென்புமலர்செய்தவிருந்துறைமுந்நாண்முழுகி
வன்புமிகுபலனைமற்றவட்குநல்குதலுந்
துன்புதவிர்ந்துதுலங்கினாள்பார்ப்பனியே. (உச)

அண்ணலேகின்றலடுபிரமராக்கதத்தோ
டெண்ணலேயுற்றதுயரொல்லாமொழிந்துய்ந்தே
னண்ணலேயின்பமெனுநங்கையுரைகேட்டமுத
முண்ணலேய்ந்தாரினுவந்தானரபதியே. (உரு)

ஒருவன்முழுகியுறுபலனைநல்கப்
பருவமடந்தைதுயர்பாறியுய்ந்தாளென்னிற்
றிருவமிகும்பகவதீர்த்தப்பெருமை
மருவவுரைப்பாரிவ்வையத்தெவருளரோ. (உசு)

தேயம்புகழ்சத்திடகீர்த்திமன்ன
னாயதுறைநீரவாய்ச்சிலநாண்மூழ்கித்
தூயவறத்தின்சுவையுடையனாகி
மேயதன்னாடெய்திவிருப்பமிகவாழ்ந்தான். (உ௭)

தான்புரிந்தபாவந்தழலிடுதெய்யாதலொடுந்
தேன்புரிந்தசெஞ்சொற்செழும்பார்ப்பனிமகிழ்ந்து
கூன்புரிந்தசங்கந்துலாமத்துறைபடிந்து
வான்புரிந்ததெய்வமகிழ்நனொடுஞ்சேர்ந்தமர்ந்தாள். (உ௮)

பகவதீர்த்தமகிமைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கசு௮௫.

---

## கவுதமேசப்படலம்.

சுருதிமுழக்கொழியாதுதுவன்றியெழுந்துடமூக்கிற்
பொருதழலோன்றிசைத்தீர்த்தமேல்கரையிற்புலவரொலாங்
கருதுமுபவீதேசர்கவுதமநாயகரென்னு
மொருதிருநாமம்புனைதற்குற்றகாரணம்புகல்வாம். (க)

ஓங்குதிரேதாயுகத்திலொண்மறைகண்முழுதுணர்ந்தான்
வீங்குபெருங்குணசீலன்விலகாநல்லொழுக்கமுளான்
றாங்குகருணைத்திறத்திற்றன்னுயிர்போலெவ்வுயிரும்
பாங்குபெறக்கருதிடுவான்பரமனடிக்கன்பொழியான். (உ)

மன்னுமறைச்சாரமெனவயங்குதிருவெண்ணீறுந்
துன்னுபெருங்கண்மணியுந்தோன்றமேனியிற்றரித்து
முன்னுமெழுத்தைந்தனையுமுற்றியவன்பொடுகணிப்பான்
மின்னுகவுதமமுனிவனெனவிளங்குநாமத்தான். (௩)

அன்னமுனிவரனெழில்சாலகலிகைமாமனைவியொடு
மன்னவளரில்லறத்துவழுவாதுவாழுநா
ளுன்னுமறையவரொருநாட்கெத்தனைபேருற்றாலு
மின்னுகளிப்பெழவவர்க்குவேண்டுமமுதருத்துவான். (௪)

எடுத்தமுதமினிதூட்டுமிணையில்கவுதமமுனிவன்
றொடுத்தநறுமலர்க்கூந்தற்றோகையகலிகையோடும்
விடுத்தமலத்தினருளஞ்சார்வித்தகர்வாழ்தலங்கடொறு
மெடுத்தபிரியத்துடன்சார்ந்திறைஞ்சநினைந்தெழுந்தனனே. (௫)

பாகன்னமொழியாரோடடைபனவருண்டிடத்தோம்
போகன்னமினிதூட்டிப்புகழ்படைக்குமாமுனிவ
னாகன்னமலர்வாவிநறும்பொழில்சூழ்ந்தோங்குதிருக்
கோகன்னம்விழைந்தடைந்துகோமான்பொற்பதம்பணிந்தான். (௬)

பாதாரவிந்தமெனப்பட்டபயனளித்தடியார்க்
காதாரமாவானையல்லன்முழுதொழிப்பானை
மாதாரமொழிக்கவுரிமணாளனைவண்பொழில்புடைசூழ்
கேதாரம்புகுந்திறைஞ்சிக்கேடிலுவப்பெழப்பெற்று. (௭)

பெருக்காசிமறையோரும்பெட்புமிகமற்றேரு
முருக்காசிரியப்போற்றவுவர்தருளும்பெருமானை
மருக்காசிந்தியமதுரமதுமழையிற்பெருக்கெடுக்குந்
திருக்காசியகம்புகுந்துசேவித்துத்துதிசெய்து. (அ)

இருப்பதமென்றெல்லோருமெடுத்தியம்பத்தீவினைசெ
யுருப்பதகர்களுமொருகாலுளங்குறிப்பினவர்பவநோய்க்
கருப்பதகமாவானையாதிநூன்மாவானைப்
பருப்பதநன்கடைந்திறைஞ்சிப்பன்மலர்கொண்டருச்சித்து. (கூ)

சதிதாழ்கூத்துடையானைச்சலந்தாழுஞ்சடையானைக்
கொதிதாழ்சூற்படையானைக்கோத்தாழ்கால்விடையானை
மதிதாழ்நூனடையானைவானவரோடடைந்துமக
பதிதாழிந்திரநீலப்பருப்பதத்திற்சென்றிறைஞ்சி. (க0)

மாவானைக்காவானைமாமேருவிற்கொளுமா
லேவானையடியரலாலேவானைநஞ்சுண்டுஞ்
சாவானைமூவானைத்தாவாததருமமெனு
மாவானையன்பினனேகதங்காவதத்திறைஞ்சி. (கக)

ஆடரவப்பூணானையன்பினர்பாற்கோணானை
வீடரியவேணானைமிக்கபெருமாணானை
நாடுரகநாணானைநல்லருள்கொள்பாணானைச்
சூடயன்மால்காணானைச்சோமநாதத்திறைசி. (கஉ)

நல்லானையன்பிலர்பானண்ணானைநால்வேதச்
சொல்லானைக்காளத்திமால்வரையிற்றெழுதேத்தி
வில்லானைமாமேருவித்தகனைக்கண்டமட்டு
மல்லானையெல்லானையாலங்காட்டிற்பணிந்து. (கங)

மாசூருநெஞ்சமுடைவஞ்சரணுகற்கரிய
பாசூரும்பல்லூரும்பண்பினெடுத்தேத்தமிகு
தேசூரும்பொன்மாடத்திருவொற்றியூருமடைந்
தேசூருமாதிர்ந்திறைவனடிகைதொழுது. (கச)

மயிலைமுல்லைவாயிதிருவான்மியூர்கச்சூ
ரொயிலையகலாதவிடைச்சுரம்வெண்பாக்கங்
கயிலைநிகர்மேன்மைக்கழுக்குன்றஞ்சென்று
குயிலைநிகர்மொழியாள்கூறனடிபோற்றி. (கரு)

பொன்மதில்சூழ்காஞ்சிபுரமுமொளிர்மேற்றளியுந்
தன்மயமாமோத்தூருஞ்சார்ந்தபனங்காட்டூரு
மின்மலியாமாத்தூருமெய்க்கோவலல்லூருஞ்
சென்மலியுமாடத்திருவெண்ணெய்நல்லூரும். (கசு)

அண்ணாமலையுமருள்சான்முதுகிரியு
மண்ணுமணியொளிருமாடவதிகைப்பதியும்
பண்ணார்மொழியார்பயில்பாடலவனமுங்
கண்ணுவணங்கிக்கௌதமமாமுனிவன். (கஎ)

மேன்மேலெழுந்துவிளைந்தமுதிர்பேரன்பின்
மான்மேலெழுஞ்சோலைவண்டில்லைமாநகரி
னூன்மேல்விருப்பமொழிந்தமுனிவரன்போந்
தான்மேல்வருவானருளுநடங்கும்பிட்டு. (கஅ)

அன்னதலத்தேசிலநாளினிதமர்ந்து
பன்னமுடியாப்பரமனடங்கும்பிட்டு
நன்னர்மறையோர்நயக்குமமுதும்படைத்தான்
சொன்னதவத்திற்சுடருங்கவுதமனே. (ககூ)

மின்னுமிணையமுனிமேவியெவணுற்றாலும்
பன்னுமமுதுபடியாய்வயல்விளையுந்
துன்னுமதனாலேதொக்கமறையோர்பலர்க்குங்
கொன்னுமமுதுகுளிரப்படைத்துவப்பான். (உ0)

அந்தத்தலமொருவியான்றதவமுனிவன்
சந்தத்திருக்காழிமாநகரந்தான்வந்து
பந்தத்திருக்கறுக்கும்பண்ணவன்பொற்றாள்பணிந்து
வந்தற்புதமருவவைகினனந்நாளில். (உக)

(வேறு.)

வெய்யவன்செய்யோன்முன்னர்விரைசெலப்பிருகுவென்னுஞ்
செய்யவன்றொடர்ந்துபின்புசெல்லுநாண்மேவிற்றாகத்
தெய்யபன்னிரண்டாண்டெல்லைதீர்ந்ததுநமக்குவேலை
யெய்யவென்றெழிந்துபோயவிடம்படர்தருகார்மேகம். (உஉ)

குழைமுகின்மழைத்துவாரந்தூர்தலுங்குளகுதீர்ந்து
கழைசுளிகளிநல்யானைக்கருங்கடாம்பொழிதுவாரந்
தழைவறத்தூர்ந்தவுண்டிதபுதலினிளஞ்சேயூட்டு
முழைமருள்கண்ணார்கொங்கைத்துவாரமுமொழிந்ததன்றே. (உங)

பரவுகந்தரமென்றாலும்படுபயோதரமென்றாலு
முரவுசெய்கழுத்துக்கொங்கையாதியென்றுணராநிற்பர்
வரவுசற்றேனுமில்லாமழைமுகிலென்பாரில்லை
யிரவுகண்டறியாயாருமிறந்ததுவிலக்கினாரில். (உச)

கருமுகிலென்பதேட்டிற்கண்டனமெந்தஞான்று
பொருவரும்விசும்பிற்காண்போமெனப்புகன்றிடுவார்சில்லோர்
பெருமுகிற்கருப்பமின்றுபெருங்கயக்கருப்பமாயிற்
றொருவரும்பன்னிராண்டுகழிதரினுறலாமென்பார். (உரு)

வளையகமருவியாதிகுறைந்தனவயங்குகான
நிளையகங்கான்யாறுதிசுருங்கினநிலவும்பண்ணைத்
தளையகமோடையாதிவற்றினதாவாவோங்கைத்
திளையகம்பவளமாதியஃகினமழைத்தீர்புற்றே. (உசு)

திணைமுதல்வளங்களெல்லாந்தீர்ந்தனகுறிஞ்சிவைப்பி
னிணைவரகாதியெல்லாநீங்கினமுல்லைவைப்பில்
வணையுநெல்லாதியெல்லாமாய்ந்தனமருதவைப்பிற்
பணைமுதலுணங்கன்மட்டும்பரவினநெய்தல்வைப்பில். (உஎ)

குளிர்மழைபொழிதலற்றுக்கோடையேபரந்தவாற்று
லொளிர்வரையாதிநான்கென்றுரைசெயும்பேதந்தீர்ந்து
தளிர்விரிந்தென்னச்செந்தீதவழ்தரும்பாலையேயா
யெளியதென்றுரைத்தநீர்ந்ததுயிர்த்திறமென்னுங்கொல்லோ. (உஅ)

ஆரணமோதலாதியையர்களொழிந்தார்மன்னர்
போரணவுதன்முனெல்லாம்போக்கினர்துலாக்கோறூக்கிப்
பாரணவுஞற்றலாதிபாற்றினர்நாய்கர்பின்றோ
ரேரணவுழுதலாதியிரித்தனர்மழையிலாதே. (உகூ)

உழுதருமுழக்கமெங்குமொழிதலால்வேதமாதி
யெழுதருமுழக்கமில்லையிருங்கடிமுழக்கமில்லைப்
பழுதருமற்றுமுள்ளமுழக்கெலாம்பறந்துசோறென்
றழுதருமுழக்கமேமிக்காயதுபுவனமெங்கும். (௩0)

கொண்டவன்வழிநில்லாதுகரவினிற்பிறரைக்கூடும்
பெண்டிர்கள்சில்லோர்கற்பிற்பெய்வளையாரையொத்தார்
கண்டியன்மொழியார்பல்லோர்க்கலப்புறுமைந்தர்தாமு
மெண்டருவிரத்தர்போலவிருந்தனருணவில்லாதே. (௩க)

ஆற்றின்மேலாசைநீத்தாராடுதல்செய்வான்மஞ்சட்
சேற்றின்மேலாசைநீத்தார்செழும்பணியாடைமைந்தற்
பேற்றின்மேலாசைநீத்தார்பெருத்துணிபடைந்துநாளுஞ்
சோற்றின்மேலாசைநீவார்சுரிகுழன்மடவார்மைந்தர். (௩உ)

பிலமடைவதற்கோர்மார்க்கம்பேணுபுசெய்வார்போலத்
தலமடைகூபங்கீழ்ப்போய்த்தவாதுறக்கல்லினூலும்
பலமடைநன்னீர்காணார்காணினும்பகலோன்வெப்பக்
குலமடைவீர்க்குமுந்திக்குடங்கொளினஃதேயீர்க்கும். (௩௩)

வயலொடுவாய்க்காலேரியாதிகள்வரம்பென்றுள்ள
செயலொடுதீர்ந்தவாற்றூற்செறிசமநிலமேயாகி
யியலொடுநகரத்துள்ளாரொனதுனதெனும்வழக்கு
மயலொடுமேவாவண்ணமிருந்ததுவானும்போலும். (௩ச)

கண்ணுதற்பெருமானியோகங்கருதிவீற்றிருந்தவந்நா
ளொண்ணுதன்மகளிர்மைந்தரொன்றுறுதமைந்தாற்போல
விண்ணுதலிடையார்மைந்தர்மேவலாலசட்டுச்சூலு
நண்ணுதலொழிந்தார்வானநாட்டுளார்தம்மையொத்தார். (௩௫)

பருவரலடைந்துசின்னூட்பட்டினியுற்றுச்சற்று
ஞொருவர்தம்பாங்கர்ப்பெற்றுருண்டிடும்போதுசிந்தை
வெருவரவொருவர்வந்துமேல்விழுந்திழுப்பர்சொற்ற
விருவருமன்றியின்னுயிழுப்பவர்பல்லோரம்மா. (௩௬)

ஒழிதருமிச்சிலன்னமென்றுரைப்பதுவுங்கொள்ளார்
வழிசுவையமுதின்மேலாமாண்பினதென்றுபற்றி
யிழிவறவருந்தாநிற்பரோற்றவிப்பண்புதேரிற்
பழிதபுமவியூணென்றேபலருமுட்கொண்டார்போலும். (௩எ)

கதிரவன்வெப்பந்தாக்கக்ககனத்துப்பறவாநின்ற
வுதிர்தலில்பறவையெல்லாமொய்யெனக்கருகிவீழ்ந்து
பிதிர்தலில்காகம்போன்றுபிறங்குவவிடங்களெல்லா
மதிர்குரன்மாக்களெல்லாமாணையிற்கறுத்தமாதோ. (௩அ)

அழித்தனமிருகமெல்லாம்பயிரையென்றறைவாரில்லை
யொழித்தனர்கள்வரிற்பாலுற்றதென்றுரைப்பாரில்லை
விழித்தனர்காத்தார்காவல்வினைஞரொன்றிசைப்பாரில்லை
வழித்தனமாதியெல்லாப்பொருள்களுமாய்ந்தவாற்றால். (௩௯)

வற்கடகாலமென்னுமன்னன்வீற்றிருக்கச்செய்த
வொற்கமில்பளிக்குப்பீடமொத்ததுபயிலும்பேய்த்தே
ரற்குமற்றவற்கெடுத்ததிபங்களனையமண்மே
னிற்கும்வன்மரங்கள்கற்றீநிலாயெழுந்தெரியுந்தோற்றம். (௪0)

இனையவற்கடம்வந்தெய்தவிருங்கவுதமப்பேர்வள்ள
லனையபொற்கடுக்கைவேணிநம்பனாருளினாலே
புனையமிக்கமையுந்தோணிபுரத்தினிதமர்ந்துகொண்டு
துனையநற்புனற்றடாகஞ்சோலைமுற்பலவுங்கண்டு. (௪௧)

தண்டுலம்விளையாநிற்குந்தடிபலவமைத்துக்கொண்டு
வண்டுலவாதகோதைமாதொருபாகற்போற்றி
விண்டுலவாதபத்திவேதியர்பலரைக்கூட்டி
மண்டுலவாதவன்பின்வாஞ்சையினன்னமூட்டும். (௪௨)

உலையமைத்திடுகின்றாருமுலையிடையரிசிபெய்து
மலைவறுபதம்பார்ப்பாரும்வடித்ததுமிமிர்க்கின்றாருந்
தொலைவறுகறிகளெல்லாந்தூய்மையிற்றிருத்துவாரு
மலைவறவவைக்குவேண்டுஞ்சுவைபலவமைக்கின்றாரும். (௪௩)

சுவைபெறுமபூபவர்க்கத்தொகைபலவியற்றுவாரு
நவையறுபாலளாயநல்லனமடுகின்றாருஞ்
செவைகொள்குய்ப்புகையளாவுந்திறங்கறிபொருத்துவாருங்
குவைநவநீதமுற்றுங்குலைதரவுருக்குவாரும். (௪௪)

இலைபலதிருத்துவாருமினிதிடம்பண்ணுவாரு
மலைவறமறையோர்க்கூவியாதனத்திருத்துவாரு
நிலையுறவட்டவெல்லாநிரைநிரைபடைக்கின்றாரு
முலைவறப்படைத்தயாவுமுணவுபசரிக்கின்றாரும். (௪௫)

இன்னணமறையோர்சில்லோரியற்றிடமறையோர்பல்லோர்
நன்னரொண்மனைவிமைந்தர்கிளையொடுநன்குதுய்த்துப்
பன்னரும்விரைகள்பூசிப்பாகிலையாதிமென்று
மன்னவனமருந்தானவாழ்க்கையும்வெறுத்துவாழ்ந்தார். (௪௬)

மறையவரளவிலாராய்வந்துவந்துறநெருங்க
நிறைசுவையமுதமூட்டிவற்கடநிலைகெட்டோடக்
குறையறுத்துவப்புச்செய்தான்குணக்கவுதமப்பேர்வள்ள
றனைமுதலெவ்விடத்துந்தவத்தினிற்சிறந்ததுண்டோ. (௪௭)

மாதவனிவ்வாறேம்பவற்கடகாலந்தீர்ந்து
காதலின்முகில்களெல்லாங்கடல்குடித்தெழுந்துபோந்து
மீதலமடங்கமூடிமின்னுபுமழைகள்பெய்ய
வோதருவறுமையோடியொழிந்ததுபுவனமெல்லாம். (சஅ)

உழுதொழிலெங்குமல்கியுலப்பில்செஞ்சாலியோடு
பழுதிருனியங்களெல்லாம்பரவினமஞ்சளிஞ்சி
செழுவியகதலிகன்னலாதியசெழித்துமல்கிக்
கெழுதருதேயமெல்லாம்பொலிந்தனகேடொன்றின்றி. (சகூ)

காலமிவ்வாறுசெம்மைப்படுதலுங்கடும்பினோடுஞ்
சீலநன்மறையோர்தத்தந்தேயத்துச்செல்வானெண்ணிக்
கோலநன்முனிவன்பாங்கர்க்குறுகுபுகுறிப்பிற்சொற்று
மேலவன்விடுக்குமாறுவெளிப்படையாகச்சொற்றும். (ரு0)

அவனுளமியைதராமையறிந்தனர்மறையோரெல்லாங்
கவனுறுதோடமொன்றுகற்பித்துக்கழல்வானெண்ணித்
தவலருமாயையாலோர்பசுவினைச்சமைத்துவிட்டார்
சிவசிவமெலிந்தவவ்வான்சென்றதம்முனிவன்முன்னர். (ருக)

மெலிவுகொண்டடைந்தவாவைமெய்த்தவமுனிவனோக்கி
நலியும்வற்கடத்தால்வாட்டநண்ணியதின்னுந்தேறும்
வலியடைந்திலதாலென்றுமற்றதன்முன்னரெய்திக்
கலிதடிந்தருளுங்கையாற்கனிந்ததன்புறந்தைவந்தான். (ருஉ)

தைவரும்போதுமாயப்பசுதடுமாறிவீழ்ந்து
வெய்துயிர்த்தலறிச்சோர்ந்துவெருக்கொளக்காலுதைந்து
நையுயிர்விட்டதாகநாடியமறையோரெல்லாம்
பையவந்தடுத்துச்செய்தாய்பசுக்கொலையொருநீயற்றால். (ருங)

இனியுனைமருவுகில்லோமிப்பசுக்கொலைதீர்பாக்கு
நனியுயர்தலத்தினெய்திநவிற்றுதிகழுவாயென்று
தனிமறையவர்களெல்லாந்தத்தமூர்க்கேகலுற்றார்
புனிதமெய்முனிவனோக்கிப்புந்தியுட்கலக்கமுற்று. (ருச)

தவமுனிவரனுய்நீற்றுச்சார்பினின்றிடுநமக்கு
மவமுறுபசுக்கொலைத்தீங்கடைத்ததெவ்வாறென்றோர்ந்து
குவலயஞ்செழித்தவாற்றாற்குணமிலாமறையோர்செய்த
கவலைசெய்மாயமென்றுகருத்துறத்தெளிந்துசீறி. (ருரு)

குணமிலாமறையீர்நீவிர்குறித்தகாரியநன்றாயிற்
றணவுகோக்கொலைத்தீங்கெம்மையடைவித்ததழகேயாமும்
பணவராவணிந்தவேணிப்பண்ணவற்கடிமையென்னின்
மணமலிசைவமொன்றேவான்புகழ்ச்சமயமென்னில். (ருசு)

புண்ணியநீற்றுச்சார்பேபொலிமுத்திமார்க்கமென்னி
லெண்ணியவைந்தெழுத்தேயேற்றமார்மனுவாமென்னி
லண்ணியசிவன்பொற்றாளேயருச்சித்தல்பெருநோன்பென்னி
னண்ணியசிவமேமேலாநாட்டுவான்றெய்வமென்னில். (ருஎ)

மறைபுகறெய்வநீறுவயங்குகண்மணிகைவிட்டு
முறைதபவேறுவேறுமுயங்குபல்குறியும்பூண்டு
நிறையுமைந்தெழுத்துநீத்துநிறைதராப்பிறவுட்கொண்டு
நறைமலிகடுக்கைவேணிநாதனைநாளுமெள்ளி. (௫௮)

இழிதொழிலினரைச்சார்ந்தேயிழிதொழில்பலவுமாற்றி
மொழிதருமகந்தைபூண்டுமோகத்தைமுனியீராகிப்
பழிதவிர்சிவனையல்லாப்பசுக்களைப்பொருளாக்கொண்டு
வழிவழிநரகில்வீழ்ந்துமயங்குகவெனச்சபித்தான். (௫௯)

முனிவரன்மொழிந்தசாபமுழுமையுமேற்றுக்கொண்டு
பனிவருங்கண்ணராகிப்பார்ப்பனக்கடையர்போனார்
துனிசெய்வற்கடத்தினோம்பிச்சுற்றங்களொடும்புரந்தாற்
குனியவர்செய்ததீமையுனினவருய்ர்ந்தார்கொல்லோ. (௬0)

காழிமாநகரநீங்கிக்கவுதமமுனிவன்பின்ன
ராழிசூழ்புடவியேத்தவமைந்தபுள்ளிருக்குவேளூர்
சூழிமால்யானைபோற்றுந்தூயவெண்காடுபுன்கூர்
வாழிமாகடவூர்மற்றும்வழுத்திமாயூரம்புக்கான். (௬௧)

பொன்னிநன்னதிநீராடிப்பொலிசிவபூசையாற்றி
முன்னியதருண்மாயூரமுதலவன்றிருமுன்மேவிப்
பன்னியதுதியினோடும்பணிந்தனனனையகாலைத்
துன்னியங்கமருஞ்சைவத்துருவாசமுனியைக்கண்டான். (௬௨)

அன்னமாமுனிவனோடுமன்புறவளவளாவிப்
பன்னகாபரணனேயென்றுரைசெய்பண்ணவர்தங்கோவே
முன்னம்யான்புரிந்ததீங்கான்முனகவேதியருக்கூட்ட
மன்னுபாதகந்தீர்பாக்குவகுத்தியோர்கழுவாயென்றான். (௬௩)

பாத்திரமறிந்துதானம்பண்ணலேவிதியாமென்று
சாத்திரம்புகல்வதோர்ந்துந்தறுகண்வேதியருக்கூட்டித்
தோத்திரம்படையாத்துன்பஞ்சுமந்துளாய்மறையோனே
மாத்திரவறமுண்டாகும்வண்ணமோர்ந்தளித்தல்வேண்டும். (௬௪)

பரசிவற்கன்புபூண்டுபரவுநல்லொழுக்கம்வாய்ந்த
வரமிகுகுணத்தானெந்தவருணத்தானெனினுமந்த
வுரவுடையவற்கேயீதலொன்றளவில்லதாகும்
விரவியதவத்தாய்துட்டவேதியர்க்கூட்டுமாற்றால். (௬௫)

தீவினையடைந்தாயாவைச்செகுத்தனையென்றுகூறி
வீவினையடையாப்பாவமேவினரறிவிலாதா
ராவினைவதைத்தாயல்லையாயினுமவரைச்சார்ந்த
மாவினைதீருமாறுவகுக்குதுங்கழுவாய்கேண்மோ. (௬௬)

மறைபலமுழங்கநாளும்வயங்கிடுங்கும்பகோண
நிறைபெருந்தலத்தைச்சார்ந்துநின்மலக்கும்பலிங்க
விறையவனடிகடாழ்ந்தவ்விறைவனுத்தரத்திற்பொன்னித்
துறைமிகவிசேடமாமத்துறைப்புனல்படிந்தெழுந்து. (௬௭)

கும்பலிங்கேசர்நாளுங்குலவுபேரருட்சோமேசர்
நம்பநன்கருணைகேசர்நக்கசுரங்கணைப்புரேசர்
வம்பவிழபிமுகேசர்வளமலிவிச்சுவேச
ரும்பர்வந்திறைஞ்சிப்போற்றுமுமாபாகரிவர்தாள்போற்றி. (சுஅ)

மாமகதீர்த்தமேல்பால்வயங்குபவீதநாதர்
தாமரைச்சரணஞ்சார்ந்துதண்புனற்றடமொன்றாக்கிக்
காமரந்நீர்கொண்டாட்டிக்கரிசறப்பூசிப்பாயே
லாமவித்தீங்குநீங்குநலமெலாம்பெறுவையென்றான். (சுகூ)

என்றலும்பன்னியோடுங்கவுதமனெழுந்துதுள்ளி
நன்றகமகிழ்ந்துபோற்றிநலமிகுதுருத்திதாழ்ந்து
பொன்றலிலமூர்த்தூரோத்திப்புண்ணியப்பொருளாயுள்ளா
ரன்றலொன்றின்றிமேவுமாவடுதுறைவணங்கி. (எ0)

இடைமருதணைநன்கேத்தியிரும்பொழிற்கும்பகோணந்
தடையறப்புகுந்துபொன்னித்தடந்துறைவிதியினாடி
யடைபவர்க்கருள்கும்பேசராதியர்பலரைப்போற்றிச்
சடைமுடியுபவீதேசர்சந்நிதிமுன்னர்வந்தான். (எக)

அற்புதம்பயப்பவையரருட்டிருக்கோலநோக்கிப்
பொற்பமைமகிழ்ச்சிபூத்துத்திருமுனர்ப்பணிந்துபோற்றிச்
சொற்புனையவற்குமேல்பாற்றூயநீர்த்தடமொன்றாக்கிப்
பற்பலதீர்த்தமெல்லாமதிற்பயின்றிடத்தாபித்து. (எஉ)

அந்தநீர்மூழ்கிவெண்ணீறணிந்துநாயகற்குமாட்டிச்
சந்தனம்வில்வமொண்பூமுதலியதழுவிக்கொண்டு
நந்தலில்விதியின்ற்றானலமலிபூசையாற்றிச்
சுந்தரப்பெருமான்முன்னர்நின்றிதுதுதிக்கலுற்றான். (எங)

ஆரணிசடையாய்போற்றியறப்பெருவிடையாய்போற்றி
போரணிமழுவாய்போற்றிபொய்யறின்வழுவாய்போற்றி
பாரணிதேராய்போற்றிபகர்பலபேராய்போற்றி
நாரணிபொருளாய்போற்றிநலமலியருளாய்போற்றி. (எச)

நாமலிவேதபோற்றிநடம்புரிபாதபோற்றி
கோமலிநீதபோற்றிகுழையணிகாதபோற்றி
பாமலிசாதபோற்றிபகரொணுச்சீதபோற்றி
யோமலிபோதபோற்றியுபவீதநாதபோற்றி. (எரு)

என்றிருந்துதிகள்பாடியிருகணீரருவிபாய
நன்றியல்பூசைசெய்துநாள்பலகழித்தானப்பாற்
றன்றிருவருளாலையன்சவுந்தரவல்லியோடுங்
குன்றியல்விடைமேற்காட்சிகொடுத்தனன்புவிகொண்டாட. (எசு)

மன்னியபெருமான்காட்சிவழங்கலுமுனிவனோக்கிப்
பன்னியதுதியோடாடிப்பணிந்தெழுந்தெதிரேநிற்ப
முன்னியதுரைத்தியென்றுமுழுமுதலருளிச்செய்தான்
றுன்னியவன்புபொங்கக்கவுதமன்சொல்லலுற்றான். (எஎ)

அடியனேன்முனகராயவந்தணரோடுகூடி
நெடியநாளடைந்ததிங்குமுழுமையுநீங்கவேண்டுங்
கொடியமற்றவரொஞ்ஞான்றுங்கொடுந்துயரடையவேண்டும்
படியவாமினையதீர்த்தமென்பெயர்பற்றல்வேண்டும். (எஅ)

நீயுமென்பெயர்பூண்டிந்தவிலிங்கத்தேநிலவவேண்டும்
பாயுமால்விடையாய்நிற்காம்பணிபலவுஞற்றுவோர்க
ளாயும்வான்றிருவராயுன்னடிநிழலமர்தல்வேண்டுந்
தோயுமிவ்வரங்களெல்லாஞ்சுரந்தருளென்றுதாழ்ந்தான். (எகூ)

வள்ளலுமவ்வாறீந்துமறைந்திலிங்கத்துட்புக்கான்
கள்ளமிலன்றுதொட்டுக்கவுதமநாதரென்றுந்
தெள்ளருமலர்கள்பூத்தகவுதமதீர்த்தமென்று
மெள்ளருநாமஞ்சொல்வாரிறைவற்கும்புனற்குமேலோர். (அ0)

பின்னருமுனிவனுங்குப்பிரிவதற்கஞ்சிப்பன்னாள்
பன்னரும்பூசையாற்றிப்பரவுமத்தலத்தேவைகி
நன்னரும்பரும்பராவுநல்லருண்மிகவும்பெற்றுத்
தன்னருந்தானமேவியில்லொடுந்தழைந்திருந்தான். (அக)

இத்தருகவுதமேசரிரும்பணியன்பிற்செய்வார்
நத்தனும்புகழுமாறுநலமலிசெல்வந்துய்த்துத்
தொத்தலர்கற்பநாட்டுத்துளைந்துபல்போகமீற்றி
னுத்தமப்பெருமான்பாதத்தொன்றியொன்றுதுவாழ்வார். (அஉ)

கவுதமேசப்படலம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் - கஎசுஎ.

---

## சுவாகுகன் முத்தியடைந்த படலம்.

:0:

சித்தியடைந்தருடந்தைசெறிந்து, பத்தியடைந்தபயத்தினனாகிச்
சுத்தியடைந்தசுவாகுகனின்ப, முத்தியடைந்ததுரைத்துமுடிப்பாம். (க)

பாயவிலங்கல்பரம்புகிராத, தேயமுவந்தரசாற்றுதிறத்தா
னயவில்வீரரநேகரையுள்ளான், றூயதுளங்கொள்சுவாகுகனென்பான். (உ)

கல்வலிதேய்த்தொளிகாட்டுபுயத்தான், கொல்வலிகொண்டுயர்குற்றுடைவா
ளான்,செல்வலிமாய்த்தசினக்குரலுள்ளா,னொல்வலிவேட்டையுவப்பினனாளும்

அதிவலியவன்மனையாட்டிமருத்து, வதியெனுமொருபெயர்பூண்டவளத்தாள்
பதிமனமகிழ்தருபண்பினடப்பாள், கதியவனுறுபணியென்றுகளிப்பாள். (ச)

அன்னவளன்பினரும்பணியாற்ற, மின்னவிர்வேணிவிளைத்தகடுக்கை [ன்.
முன்னவன்முத்திமுதற்பெருந்தேவன்,பொன்னடிவாஞ்சையிற்பூசனைசெய்வா

சிவநிசிகார்த்திகைசேர்மதிவார, மவமறுசீர்ப்பிரதோடமுன்னய
வுவமையினுளில்விசேடமுண்டாகத், தவரறுபூசைசெய்தன்மையமைந்தான்.()

சங்கரசம்புசதாசிவவீச, பொங்கரவாபரணங்கொள்புராண
பங்கருருதபராபரயோக, துங்கவராவெனத்தோத்திரஞ்செய்வான். (எ)

இத்தகுபூசையருமலியற்றிச், சத்தறிவின்பசதாசிவன்முன்னர்
பித்தர்கள்போலநடித்தலும்பெட்டே, யுத்தமமாமனேயோடுறவாழ்வான். (அ)

வல்லியமெண்குவயக்கவயங்கள், சல்லியம்வன்றிதவாதகுரங்கம்
புல்லியமாமனாபூட்கைவிலங்கல், சொல்லியயாவுந்தொலேத்தலுவப்பான். (கூ)

ஈசைவிராவொருபாகனேயென்றும், பூசைபுரிந்திடுபுண்ணியனேனு
மோசைவிலங்கையொறுப்பதுதிரா, ஞசைபுலாலுணவாதியினீக்கான். (க0)

இன்னும்வெறிச்சுராயுண்டிறுமாப்பாற், பன்னுமடந்தையர்பற்பலர்தம்மை
யுன்னுமிராப்பகல்கூடியுவப்பான், கொன்னுமவன்செயல்கூறிடவற்றே. (கக)

அனேயவனிங்ஙனமைந்தமர்நாளின், மனேயவளன்புவழாதசிறப்பிற்
புனேயிழையாதலினுள்ளம்பொருது, தனேமணந்தான்முகம்பார்த்திதுசாற்றும்()

புண்ணியமார்சிவபூசனேயாற்ற, னண்ணியதேமிகநல்லதுகண்டா
யண்ணியவவ்வறனேடறஞகா, வெண்ணியதீயவியற்றுதலாமோ. (கரு)

சிவபெருமானடிசிந்தைமதிப்போ, ரவமுறுகள்ளுமருந்திடுவாரோ
வுவகைதபும்புலவுண்டிடுவாரோ, தவறுவிளேந்திடல்சத்தியமன்றே. (கசு)

வரமிகுதன்மனேவியர்வளமன்றிப், பரமனேவியர்வளம்பற்றிடுவாரோ
விரவுகொலேத்தொழில்வேட்டிடுவாரோ, புரவுடையாயிதுபோற்றலுமென்()

பொய்யுரையாரொருபுன்மையுமாற்றார், வெய்யவரோடுவிராவுதல்செய்யார்
கையர்செயுங்கொலேகண்ணினுநோக்கார், செய்யவருட்குரியார்திறல்வேந்தே()

வண்ணமமைந்துவழாதசிறப்பிற், பண்ணமைசொல்லொடுபல்பணிபூண்டு
திண்ணமமைந்தொருநான்சிறப்பாக, நண்ணவும்வேறுநயத்தறகாதே. (கஎ)

இழிதருமூனேவிரும்புநரெல்லாம், பழிதருவன்கொலேபண்ணுதலோவா
ரழிதருமக்கொலேயாலருளாளார், கழிதருவெந்நிரயங்கழலாரோ. (கஅ)

அழிதகவாயவனேத்துமொழித்துப், பழிதகவேதுமிலாப்பரமன்றாள்
செழிதகவேத்துதல்சீரியதன்றே, மொழிதகவென்றுமொழிந்தனளென்றாள்.

மேயமடந்தைவிருப்புறவோதுந், தூயதுகேட்டசுவாருகனென்பா
னேயமிகுந்துநிகழ்த்தினேயீது, மாயமிலாதவென்வார்த்தையுங்கேண்மோ. ()

(வேறு.)

நலமலிமடந்தாய்முன்னேப்பவத்தொருஞமலியாகிக்
குலமலிகும்பகோணத்தலத்தியான்குறித்துவாழ்ந்தேன்
புலமலிபொன்னியாற்றிற்பொருந்துகாசிபதீர்த்தத்து
நிலமலிபல்லோர்மூழ்குநெருக்கத்துட்புக்கேஞேர்நாள். (உக)

அனேயவர்முடுக்கவோடற்காகியவிடமில்லாமை
நினேயுமத்துறைவிராயநீத்தத்துளமூழ்ந்தவீழ்ந்து
துனேயமேலெழுந்துநீந்தித்தூரம்போய்ப்பிழைத்தேன்மூழ்கும்
வினேயினலெனக்கப்போழ்தேமேவியதுலவாஞானம். (உஉ)

ஞானநன்குதித்தலோடுஞமலிகளுடன்சேராம
லீனமில்கும்பலிங்கவிறையவன்திருமுன்னாக
வானபொற்சிகரிவாய்தலடைந்துகாலங்கடோறு
மானமுற்றியற்றுந்தீபவண்ணங்கண்டுவவாநிற்பேன். (உ௩)

பரசிவனடியாருண்டபாசிலைமறுகில்வீழ்ந்தால்
விரவுமவ்வீதிஞாளிவிரைந்துசென்முன்னமோடி
வரமுறவமைந்தசேடம்வாஞ்சையிற்கவர்ந்துகொள்வே
னரவொலியெடுப்பார்க்காணிலவரடிதொடர்ந்துசெல்வேன். (உ௪)

குரவமர்குழலோர்பாகங்கொண்டகும்பேசர்மேவும்
பரவுறுதளியினோர்நாட்பலிபிண்டங்கவர்வானெண்ணி
விரவினனிற்குங்காலைவிரைந்துபல்லிளைஞர்கூடித்
தரமிகுசிகரிவாய்தற்புதவினைச்சார்த்திக்கொண்டு. (உ௫)

தென்றிசைக்கோமான்றண்டிற்றெறலுறுதடியொன்றேந்தி
வன்றிறல்குன்றாராகிமுடுக்கினார்வாய்புலர்ந்து
கன்றுறுசாலநாற்றிக்கால்விசைத்தோட்டங்கொண்டே
னன்றுபோமிடமிலாமையாலயம்வலமாச்சூழ்ந்தேன். (உ௬)

பற்பலதரஞ்சூழ்ந்தன்னார்க்ககப்படாப்பரிசுசேர்ந்து
கற்பமையனையரெல்லாமிளையராய்க்கதித்தவாற்றால்
வற்புறுபயலோர்நேரோவந்துறமறித்துக்கொண்டார்
பொற்பறவிருவர்நாப்பணகப்பட்டேன்போக்கிலாமல். (உ௭)

இருவருந்தண்டாள்மொத்தவென்செயவேனுளையிட்டும்
பருவருமனத்தேனாகிப்பல்வெளிப்படக்குரைத்து
மொருவறச்சுருண்டுவீழ்ந்துமொய்யெனச்செந்நீர்கான்று
திருவளர்கும்பநாதன்திருமுனமிறந்தேனன்றே. (உ௮)

இருவருமுணராவள்ளலெங்கள்கும்பேசன்மேய
பொருவருந்தளியைச்சூழ்ந்தபுண்ணியப்பேற்றினானு
மருவருந்தீபங்கண்டுவணங்கியவிசேடத்தானுங்
கருவருமடியார்சேடங்கவர்ந்துண்டநலத்தினானும். (உ௯)

காசிபதீர்த்தமூழ்கக்கலந்தபுண்ணியத்தினானு
மாசகல்கும்பகோணம்பிறந்தமாவறத்தினானுந்
தேசமையத்தானத்தேவசித்துயிர்தீர்தலானு
மீசனக்கும்பநாதன்திருவருளெய்தப்பெற்று. (௩0)

இறவுளர்க்கிறைவனாயவிப்பிறப்படைந்தேனின்னும்
பெறலருமொருமுக்காலஞானமும்பிறங்கப்பெற்றே
னுறலரும்பரமற்போற்றியுவப்புறுசெயலும்பெற்றேன்
மறமலிகருங்கட்செவ்வாய்வாணுதாலினையனேனும். (௩௧)

முந்தியபிறப்பிற்பொன்னிமுத்தநீர்முழுகாமுன்ன
மந்தினனியற்றுபாவமடுத்தகாரணத்தினாலே
நந்தியபுலவுணாதிநயமிலாத்தொழிலுஞ்செய்தேன்
செந்துவர்க்கனிவாய்நங்காயன்னதுந்தீர்ப்பேனின்றே. (௩௨)

இருவருங்கும்பகோணமெனும்பெருந்தலத்தையெய்திப்
பொருவருங்கும்பலிங்கப்புண்ணியமூர்த்திபாத
மருவருமலர்தூய்ப்போற்றிவணங்கிநாம்வசிப்போமாகிற்
பருவரும்பிறவிநீத்துப்பரனடிகலப்பாமன்றே. (௩௩)

வருதியாலின்னேயென்றான்மங்கையுமுவகைபூத்துக்
கருதியாரணங்களேத்துங்காமருகுடந்தைமேய
வொருதிவாகரனாலோன்றீயுறுகணாற்கண்டுபாசம்
பொருதியீடழித்துவீடுபொருந்துதற்கெண்ணங்கொண்டு. (௩௪)

எழுந்தவன்முன்புசென்றாளிறவுளர்க்கிறையுமன்பு
கொழுந்துகொண்டெழுந்தன்னாண்முற்கூடுறநடந்தான்வெய்ய
தழுந்தொழிற்கிராதநாடுதள்ளியாறனந்தநீந்திச்
செழுந்தலைவளநாடெல்லாந்தீர்ந்துபிற்படநடந்து. (௩௫)

நிழலென்த்தொடர்ந்துசெல்லுநேயமார்மனைவியோடு
முழல்கொடுவட்டையெல்லாமொருங்குநீத்துவந்துபுக்கான்
சுழல்படுநீத்தப்பொன்னித்தூயதென்றாலைக்கண்மேவிக்
கழறராதெந்தஞான்றுங்கதித்தமர்கும்பகோணம். (௩௬)

காமருபொன்னியாற்றிற்காசிபதீர்த்தமூழ்கித்
தூமலிநீறுபூசிச்சுடர்த்தொடிமனைவியோடும்
பூமலராளிமுன்னாட்போற்றவீற்றிருந்தவையன்
றாமரைப்பாதம்போற்றச்சார்ந்தனன்சவரர்கோமான். (௩௭)

முன்னொருகிராதனாகிமூவுலகேத்தவந்த
பன்னகாபரணன்கோயிற்பைம்பொற்கோபுரமுற்றாழ்ந்து
நன்னருட்புகுந்துசூழ்ந்துநான்முகற்கருளிவைகு
மன்னபுண்ணியனைக்கண்டானளவிலாவன்புபொங்க. (௩௮)

பெரியருஞ்சிறுநாயேன்யான்பிறங்கருள்செய்தியாலென்
றாரியநின்றிருமுன்மேவியுரைசெய்வரதுவோபொய்ம்மை
யரியவசிறுநாயேன்யானருளுதியென்றுநின்முற்
பிரியமுற்றறைந்தேனென்சொற்பேசிடின்மெய்ம்மையாமால். (௩௯)

முன்னநீகிராதனாகிமூவுலகேத்தவந்தா
யன்னநின்னடிகள்சார்ந்தவடியனுங்கிராதனானேன்
பன்னருமொருகிராதன்படைத்தவூன்முழுதுமுண்டாய்
நன்னலம்பயப்பவெல்லாவூனுநாயேனுமுண்டேன். (௪௦)

ஆயினுமெனக்குநீயேயாண்டவனடிமையானே
தாயினுமினியாய்மற்றோர்சார்பிலேன்புரத்தல்வேண்டுந்
தீயினுங்கொடியவாய்தீமைகளனைத்துந்தீர்ந்து
நாயினுங்கடையேனுய்வானல்லருள்செய்தியென்றான். (௪௧)

என்றலுங்கருணைமூர்த்தியெண்ணிலாமகிழ்ச்சிபூத்து
நன்றருள்சுரப்பப்பெற்றுநற்குணமனைவியோடுஞ்
சென்றவரொன்றுமீளாத்திப்பியசிவலோகத்தி
லொன்றவுற்றமர்ந்தான்வேடருறுகுலத்துதித்ததோன்றல். (௪௨)

மாசிரியாதவோர்நாய்வந்துதன்னகத்துமூழ்க
மூசியமாசுபோக்கிமுக்காலவுணர்வுநல்கி
யீசனதருளிற்கூட்டியின்பவீடளிக்குமென்றாற்
காசிபதீர்த்தம்போலோர்தீர்த்தங்காசினியினுண்டோ. (சரு)

சுவாகுகன் முத்தியடைந்தபடலம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் - கஅகரு.

## காசிபதீர்த்தப்படலம்.

:o:

கொட்பமையிந்தியமற்றவர்நற்றவர்கூடியுவந்தமரு
நட்பமையுங்குடமூக்கமருங்குடநம்பர்தளிக்குவடக்
கொட்பமையோவியடைந்தவர்சேரொருகாவிரியோங்குதுறைப்
பெட்பமைகாசிபதீர்த்தமெனும்பெயர்பெற்றதுரைத்திடுவாம். (க)

மன்னியதாமரைமாமலர்மேலமர்வானவனருண்மைந்தன்
பன்னியநீறுபெருகண்மணிபூண்டுபராவுமெழுத்தைந்து
முன்னியநெஞ்சினனெண்ணிலநாள்கண்முயன்றுதவஞ்செய்தோன்
றுன்னியயோகிகள்காசிபனென்றுசொலும்பெயருள்ளவனே. (உ)

மாண்டநலத்ததிதிப்பெயராளிளமாமுலையவைபுல்லி
நீண்டதிறத்தொருமூன்றுதலைப்பெய்நிரம்பியவொருழப்பா
ஞண்டசிறப்புறுகோடியராகியவமரர்தமைத்தந்தா
னீண்டகடற்பெருமாநிலமுள்ளநிரம்புமுவப்புறவே. (ங)

பின்னரவட்கிளையாளெனவந்தபெருந்திதியைப்புணரப்
பன்னருமாறுதலைப்பெய்தவோரறுபான்பொலிகோடியரை
நன்னரளித்தனனன்னதுணர்ந்துநயந்ததிதிப்பெயராண்
முன்னவயாதுபுரிந்தனைநன்மைமுகிழ்த்தவொன்மைந்தர். (ச)

மற்றவருக்கிடையூறுபுரிந்திடும்வன்மையர்திதிமைந்த
ரற்றமிலாதவர்மிக்கவிருத்தியராகவளித்தனையா
னற்றவனேயிதுநன்றுகொலோவெனலம்பொலிமுலைபுல்லி
யுற்றபல்கோடியரைத்தருவாயெனவோதினளதுகாலை. (ரு)

கொதியமைதீங்குபுரிந்துழல்கின்றகொடுந்தகுவர்க்கனையாந்
திதிமுலைபுல்லுறுவாஞ்சையறுதசெயிர்த்துமறுத்திடலு
மதியமைவானவரன்னையெனுங்குணமாததிதிப்பெயராள்
பதிகழன்மீட்டும்வணங்குபுநன்மொழிபற்பலவோதினளால். (சு)

அன்னதுணர்ந்துமறுத்தனனென்னினியாற்றுதுநாமென்று
முன்னவண்மாமுலையாடைநெகிழ்த்துமுயன்றவன்றேடூவி
நன்னரவாயொருமுத்தமளித்தனணற்றவமாமுனியும்
பின்னமையுங்கருமந்தெரியாதுபெருஞ்சினமுற்றனனே. (எ)

தழுவியகைக்கள்பறித்தனன்வீசுபுதள்ளிமுகத்தெற்றி
விழுமலரோதிகுலைந்திடமண்ணில்விழுத்தடிகொண்டெற்றுப்
பழுதமைதுட்டையகன்றிடுநிற்றல்பயின்றிடினெரிசெய்வே
னெழுகொளிவின்னுடைமைந்தரொடும்மெனவோதியழன்றனனே. (அ)

அன்னதோர்காலையெழுந்ததிதிப்பெயராண்மிகுசினமுற்றுப்
பின்னமிலாவெனையிங்ஙன்வெறுத்திடல்பெட்டனையாதலினு
லின்னலமாதர்வெறுத்திடநீயலியாகுதியெனவைதாள்
சொன்னசொலோசையொழிந்திடுமுன்னதாசூழ்ந்ததமுனிவனையே. (க)

அலியுருவாகியகாசிபமாதவனுரனூர்நனிதாங்கிப்
பொலிதருதேசுமழுங்கியிதற்கெதுபுரிகுவமென்றெண்ணி
மெலிதரும்வீழுமழுங்குமுயிர்க்கும்வெதும்புமுகஞ்சாய்க்கும்
வலிதருமாண்மையிழந்தனமேயெனவாடுறுமாழ்குறுமே. (கo)

(வேறு.)

இன்னணமளவாப்பெருந்துயரழுந்துமிருந்தவக்காசிபமுனிவன்
பன்னரும்வளஞ்சால்சத்தியவுலகம்படர்ந்துதாமரைமலர்மிசைவாழ்
நன்னர்நான்முகத்துத்தாதைபொற்பாதநயந்துளங்கனிதரப்பணிந்தா
னன்னவானவனுமகனுளக்கவலையனைத்தையுமுகத்தினுலறிந்து. (கக)

மாதவமைந்தமனத்துறுதுயரொன்வந்தகாரியமெவன்வனையுஞ்
சீதளகமலமலர்முகம்புலர்ந்தாய்தேசெலாமழுங்கினைவந்தா
யோதல்செயெனலும்பின்னரும்பணியாவுரைசெயப்பன்முறைமுயல்வான்
காதலந்தந்தையாதலினுணிக்கவிழுவன்றுணிந்துபின்னுரைப்பான். (கஉ)

ஐயனேயதிதிதியொடும்புணர்தற்ககத்தெழுபொருமைமீக்கொண்டு
வெய்யவென்பாங்கர்வலியவந்தணைத்தாள்விலக்கியான்முனிதலுமுனிந்து
செய்யவான்குணமினீயலியாகித்திரியெனச்சபித்தனளதனுன்
மொய்யொளியாண்மையிழந்தனனின்பான்முன்னினனருடியென்றமுதான். ()

திதியொடுபுணர்ந்துதானவர்குலமேசெறிதரவிருத்திசெய்திட்டாய்
மதியமையதிதிவானவர்குலத்தைவளர்ப்பதற்கெண்ணினண்முனிந்தாய்
கொதிவலித்தகுவர்விருத்தியாகாமைகுறித்தலியாகெனச்சபித்தா
ளதிகுணவவண்மேற்பிழையிலைநீயேயறப்பிழைத்தித்துயரடைந்தாய். (கச)

ஆயினுமினியகும்பகோணத்தையடைந்துமாதவர்பணிந்தேத்துந்
தாயினுமினியகும்பலிங்கேசத்தம்பிரானமர்தளிவடக்கு
மேயினுமருள்கூர்காவிரித்துறைநீர்விதிப்படிதோய்ந்துநன்காங்குக்
காயினுமருளாமங்களாம்பிகைதாள்கருத்துறக்கொண்டவணிருத்தி. (கரு)

அனையவடோன்றியலிமைநிற்கசுற்றியாண்மைநன்களித்தருள்சுரக்கு
நனையவிழ்கடுக்கைச்சும்பலிங்கேசநம்பனாருளுமாங்கடைவை
யினைதலொன்றின்றியேகுதியென்றனென்றலுமவனடிதொழுது
புனைதருதவத்துக்காசிபமுனிவன்பொருக்கெனவிடைகொடுமீண்டான். (கசு)

வெள்ளியங்கயிலைவிளங்குகோகன்னமேதகுகாசிகேதாரம்
வள்ளியசைலமகபதிநீலமால்வரைவகாவிருபாக்க
மள்ளியபொலிசீர்ச்சோமநாதம்பேரநேகதங்காவதமெவரு
முள்ளியதிருக்காளத்திமால்காஞ்சியோங்குகோபருப்பதமோத்தூர். (கஎ)

முதுகிரியருணசலங்கழுக்குன்றமுழங்குபாதிரிப்பெரும்புலியூர்
மதுமலர்ச்சோலைவளைக்கும்வான்றில்லைவளமலிகாழிமுன்னக
விதுமுடிப்பெருமானமர்தலம்பலவும்விருப்பொடுசென்றுசென்றேத்திக்
கதுமெனவந்துபுகுந்தனன்முனிவர்கருத்தமர்பெருங்கும்பகோணம். (கஅ)

ஓதரும்புகழ்சால்கும்பகோணத்தையுற்றகாசிபன்புவிகிழித்துப்
போதரும்பொன்னிக்குடிஞையிற்கும்பப்புண்ணியன்றளிக்குநேர்வடக்கி
னார்தருந்துறையின்விதிப்படிமூழ்கியமலநீறணிந்துகண்மணிகள்
சேர்தருதொடையும்பூண்டெழுத்தைந்துஞ்சிந்தையுட்பதித்துநோற்றிடுவான்()

ஒருதவச்சாலையாவயிற்சமையாவுவந்ததிற்சுகாதனத்திருந்து
மருமலர்க்கூந்தன்மங்களாம்பிகைதன்மலர்ப்பதஞ்சிந்தையுட்பதித்து
வெருவரச்சின்னாள்கந்தமேதுய்த்தும்விரும்புசின்னாள்கனிதுய்த்துந்
திருவுறச்சின்னாள்பசியகாய்துய்த்துஞ்செறிசின்னாளுதிர்சருகயின்றும். (௨௦)

சிலபகல்வளியாகாரமேகொண்டுஞ்சிலபகலன்னதுந்தவிர்ந்து
மலகறுமுறைப்பினாயிரவருடமமர்ந்தனனிங்ஙனமாக
மலர்தலையுலகமுழுதுமீன்றெடுத்தமங்களநாயகிமகிழ்ந்து
திலகவாணுதலினனிந்திதைமுதலோர்செறிந்துகைகுவித்தருகெய்த. (௨௧)

குடைகொடிகவரியொலியறண்சிவிறிகுளிர்மணியாலவட்டங்கண்
மிடைதரவிருதுமாகதர்பாடவிண்ணவர்பூமழைபொழிய
நடைகெழுதவத்துமுனிவர்பல்லாண்டுநவின்றிருபுடையினுநெருங்க
வுடைகடன்முழக்கிற்றூரியமொலிப்பவுற்றவிஞ்சையரிசைபாட. (௨௨)

மலையரசுயிர்த்தமடக்கொடிவந்தாண்மாநிலம்புரப்பவள்வந்தாள்
கலைமறைமுடிவுகாணொணாள்வந்தாள்கடேசர்தம்பங்கினள்வந்தா
ணிலையவைந்தொழிலுநடாத்துவாள்வந்தாணிகரிலாவடியவர்க்கெதுவு
மிலையெனுமங்களாம்பிகைவந்தாளென்றுபொற்சின்னங்களியம்ப. (௨௩)

அரகரமுழக்கமடியவர்புரியவண்ணலங்காட்சிதந்தளித்தா
ளாரவுடைமுனிவனுணர்ந்தனனெழுந்தானைய்யெனநிலமிசைப்பணிந்தான்
கரதலங்குவித்துச்சென்னிமேலமைத்துக்கண்கணீரருவியின்வார
வரமிகச்சூழ்ந்தமயிர்சிலிர்ப்பெய்தமங்களாம்பிகைமுனநின்று. (௨௪)

பொறியிலேனுய்ந்தேன்பூரணானந்தப்பூவைநீகாட்சிதந்தமையா
னெறியிலேனுய்ந்தேனிகமமாதிகளுநிகழ்த்திடுநின்னுருக்குறிக்குங்
குறியிலேனுய்ந்தேனின்னடியவரைக்கூடுபுகொள்ளுமானந்த
வெறியிலேனுய்ந்தேனெனதுபொய்த்தவமுமெய்த்தவமாகியதன்றே. (௨௫)

சத்தியாய்விந்துவாய்மனோன்மனியாய்ச்சாந்தமார்மகேசையாயுமையாய்
முத்தியலழிக்கும்வெண்ணகைத்திருவாய்முகிழ்முலைவாணியாயின்னு
மொத்தியலிறைவனெங்ஙனநிற்பானுதற்கியைதரும்படிநின்று
பொத்தியமலநோயுயிர்க்கொழித்தருளும்பூரணிநின்னடிபோற்றி. (௨௬)

படைத்திடல்படைத்தவனைத்தையுங்காத்தல்பரிவுறக்காத்தவையனைத்துந்
துடைத்திடல்கருமந்துய்த்திடமறைத்தறுவந்தமாம்பாசங்களனைத்து
முடைத்திடலிவையோரைந்துநாயகனுக்குடனிருந்தியற்றிடும்பாவா
யடைத்திடலறியாப்பொறியினேற்குவகையளித்தநின்பேரருள்போற்றி.(௨௭)

மறைமுடிபின்னுமுணர்தராப்பொருளேமன்னுயிர்ப்பிறவிநோயொழியப்
பிறைதவழ்சிகரப்பெருவரையுயிர்த்தபெறலருந்திப்பியமருந்தே
கறைதபுமடியார்களைகணேகருணைக்கதித்தினிதெழுந்தகற்பகமே
நிறையருண்ஞானதீபமேமலநீக்கியேநின்னடிபோற்றி. (௨௮)

ஒளிவளர்பரமானந்தவான்பெருக்கேயுலப்பிலாக்கருணைவாரிதியே
தெளிவளர்ஞானயோகுடைப்பெரியோர்சித்தத்தூட்டித்திக்குந்தேனே
யளிவளரடியேமடைபெரும்பேறேயன்பமருளத்தளிவிளக்கே
வளிவளருலகமுழுதுமீன்றளித்தமங்கைநின்திருவடிபோற்றி. (உகூ)

எண்ணியவனைத்துமெண்ணியாங்கெய்தவெண்ணியவடியவர்க்கருளும்
புண்ணியமுதலேபூரணப்பொருளேபோக்கருஞ்சுடர்ப்பெருவிளக்கே
தண்ணியசாந்தரூபியேநாளுந்தவாதமந்திராசனவாழ்வே
மண்ணியமணியேவளமலிகுடந்தைமங்கலையேநின்றுள்போற்றி. (௩௦)

என்றுநற்றுதிசெய்முனிவனுக்கிரங்கியெம்மையாளருட்பெருஞ்செல்வி
நன்றுநின்றுதிக்குநீசெய்நோன்பினுக்குநாமுளமகிழ்ந்தனமெனினு
மன்றுநிற்சபித்தவதிதிநம்மடிகட்கன்புளாளவட்கிதமாக
வொன்றுநீநடத்தலுண்மையேலனையாளுறுத்தியசாபமின்றொழிப்பாம். (௩௧)

தேவியிவ்வாறுதிருவருள்புரியத்திருவடிபணிந்துமாதவத்தோன்
பாவியேனனைநீபணித்தவாநடப்பேன்பற்றியவலிமையைப்போக்கு
மேவியவாண்மையுதவிடல்வேண்டும்விளங்குகாவிரிநதியினைய
பூவிரிதுறையென்பெயர்கொடுவிளங்கிப்புவியிடைப்பரவுதல்வேண்டும். (௩௨)

இன்னுநூற்றெட்டுமனுவினுலடியேனிலங்குநிற்கருச்சனைசெய்ய
மன்னுமோர்வரமும்வேண்டுமென்பெயரால்வயங்குமித்தீர்த்தத்துப்படிவோர்
முன்னும்யாவையுமுன்னியபடிபெற்றுமுத்தரோயாகவும்வேண்டும்
பன்னுமிவ்வெல்லாமருளுதியென்றான்பரிந்தினிதளித்தனண்மறைந்தாள். ()

மறைநெடுமுதல்விமறைதலுமாண்மைமருவியகாசிபமுனிவ
னிறைமகிழ்பூத்துச்சினகரம்புகுந்துநின்மலக்கும்பநாயகனை
முறையுறவருளுமங்களாம்பிகையைமொழிந்தமந்திரத்தருச்சித்துக்
கறைதபுமருள்பெற்றெழுந்துசோமேசங்கலந்துசோமேசனைப்போற்றி. (௩௪)

திருந்துநாகேசம்புகுந்துபோற்றெடுத்துத்திசழ்கவுதமேசமும்பணிந்து
பொருந்திபிமுகேசங்கைதொழுதிறைஞ்சிப்புகழ்விசுவேசமும்பரவி
மருந்துநேர்பாணபுரேசமுமலர்தூய்வழுத்தியைங்குரோசமுஞ்சூழ்ந்து
வருந்துதீர்முனிவனுறையுள்சார்ந்ததிதிவனமுலைதினைத்துவாழ்ந்திருந்தான். ()

ஓங்கியபுகழ்சால்காசிபதீர்த்தமுண்மையிற்படிந்தரும்பேசர்
வீங்கியகொங்கைமங்களவுமையாள்விரைமலர்ப்பதந்தொழுதவத்தோர்
வாங்கியகடல்சூழ்வைப்பிடைவாழ்ந்துவானிடத்தின்பமுந்துய்த்துத்
தேங்கியகருணைச்சிவபிரானடிக்கீழ்ச்சென்றுவாழ்ந்திடுவதுசரதம். (௩௬)

காசிபதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅருசு

## மங்களகூபப்படலம்.

ஏற்றுவார்கொடியெந்தையார்கும்பலிங்கேசர்
சாற்றுமேன்மையிற்றங்கிவாழ்தருதிருத்தளியுட்
கூற்றுமச்சமுற்றிரியவீசானத்திற்குடிகொள்
போற்றுமங்களகூபமான்மியஞ்சிலபுகல்வாம். (க)

அங்கள்வார்தருசருங்குழற்செய்யவாயமைந்த
திங்கள்வாண்முகமங்களைகுடந்தைமாச்சிறப்பை
யெங்கள்கும்பலிங்கேசர்பாலிறைஞ்சினள்கேட்பக்
கங்கைந்துடையனையவரருளுமக்காலை. (௨)

அம்மையொண்மடித்தலமிசையுவந்தினிதமர்ந்து
செம்மைசேர்சிறுதண்டையந்தாளுடைச்செவ்வே
ளெம்மையாள்பவனருள்வதைத்தானுங்கேட்டிருந்தான்
மும்மைநாட்டினுமரியதித்தலமெனமுன்னி. (௩)

அந்தவேலையிற்சூரபன்மன்முதலாய
வெந்தவாள்வலியசுரருமிறுவதுகுறித்து
முந்தவானவரொடுஞ்செல்வான்மொழிந்தவித்தலத்து
நந்தநாதனைப்பூசைசெய்வாமெனநயந்து. (௪)

பெற்றமங்களநாயகிபிறங்கடிபணிந்து
கொற்றமேவுறும்பொருட்டிறைபூசையான்குயிற்ற
வுற்றதீர்த்தமொன்றுக்குதியென்றலுமுவந்து
கற்றமேலவர்புகழுமத்தாயுளங்கனிந்து. (௫)

மன்னுமத்தளிவடகிழக்குத்திசைமருவி
மின்னுகைவிரனகங்கொண்டோர்கூபமாய்மேவப்
பன்னுதீர்த்தமுண்டாக்கினள்பண்ணவர்பலரு
மின்னுமங்களகூபமென்றதன்பெயரிசைப்பார். (௬)

கந்தவேள்தினமுழுகுபுகடேசர்தங்கழற்குக்
கந்தமாமலர்தூய்வரங்கொடுசமர்கடந்து
கந்தவாகையேசூடினுறுதலிற்கற்றோர்
கந்தகூபமென்றத்தகுபுனற்பெயர்கரைவார். (௭)

தாரளாவியதடநெடும்புயத்துமாந்தாதா
வேரளாவியமதலையைப்பெறவுளத்தெண்ணி
நாரளாவியவசிட்டனைநவிலுதல்வினவப்
பாரளாவியபெரும்புகழ்மற்றவன்பன்னும். (௮)

அந்தநாணின்க்ககிலமுற்றருள்வரமளித்த
சந்தநான்மறைப்பரனமர்குடந்தையைச்சார்ந்து
கந்தகூபத்துமுழுகியோர்பரிமகங்கண்டான்
முந்தமாமகப்பெறுகுவையாலெனமொழிந்தான். (௯)

அன்னவாறுவந்தப்புனன்முழுகிமாந்தாதா
சொன்னவாம்பரிமகமுடித்திறைவனைத்தொழுது
பின்னமில்குணச்சுசந்தியென்றொருமகப்பெற்றான்
பொன்னவாமுடிகாலத்தம்மைந்தற்குப்புனைந்து. (௧௦)

கும்பநாயகன்றிருவடிகூடியின்புற்றா
னம்பவாழ்குணச்சுசந்தியுநிலமெலாநயந்து
கம்பமோவுறத்தந்தைபோலாளுதல்கருதி
யும்பரோத்திடும்வசிட்டன்வாய்மொழியுளங்கொண்டு. (௧௧)

குடந்தையுற்றெருகும்பநாயகனெனக்கூறு
மடந்தைபாகனைப்போற்றினனவ்வரம்பெற்றுன்
றடந்தைபூங்குழன்மங்களைசரணமூர்தாழ்ந்து
நடந்தயோத்தியிற்புக்குவாழ்ந்திருந்தனனயந்தே. (௧௨)

பொன்னிமாநதிதன்னிடைநதியெலாம்புகுந்து
மன்னிவண்டலாமதிபடிந்தொழிக்குமாபாவந்
துன்னியற்றரிதாயதின்மூழ்குபுதொலைப்ப
துன்னிமற்றதனுற்பொன்னித்தீர்த்தமென்றுரைப்பார். (௧௩)

தக்கனென்பவனிருபத்தேழ்புதல்வியர்தம்மை
நக்கவான்குணத்துயர்மதிக்கடவுட்குநல்கப்
பக்கபாதத்தனுயுரோகணிநலம்பருகித்
திக்கவாமதியிருந்தனன்மற்றவர்சினந்து. (௧௪)

தந்தைபாற்சொலவவனயந்துரைத்ததுந்தடுத்தா
னந்தைநீகயரோகியாகென்றனனப்போ
தெந்தையார்குடமூக்குளத்தீர்த்தத்தையெய்திச்
சிந்தையார்வத்திற்படிந்தனனனையநோய்தீர்ந்தான். (௧௫)

அன்னகாரணத்தான்மதிதீர்த்தமென்றறைவா
ரின்னுமப்புனல்படிந்துயர்ந்தவர்களெண்ணில்லார்
சொன்னமங்களநாயகிசொல்வதையன்றி
மன்னுமப்புனற்பெருமையார்வகுத்திடவல்லார். (௧௬)

மங்களகூபப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௮௬௭.

## மூர்க்கநாயனார்படலம்.

மறையாலுமயனுமாலாலுமுணர்வரிதாய்
நறையாலுமலர்க்கொன்றைநக்கசடாமுடியதாய்
முறையாலுங்குடந்தையமர்முக்கண்மூர்த்தியைப்பத்தித்
துறையாலும்புகழ்மூர்க்கர்தொழுதடைந்தபேறுரைப்பாம். (௧)

தருநாடுமருவிருக்கைதகநாடுமுடிநந்தி
யுருநாடுவரையகின்றெளிநாடுபுனலெழுந்து
குருநாடுபெரும்பாலிக்குடிஞையாயுயிரோம்புந்
திருநாடுபெருநாடுசெழுந்தொண்டைவளநாடு. (௨)

சேற்காடுசெறிபாலித்திருநதிபாயக்நாட்டு
நூற்காடுமுழுதுமளாய்நோன்றமையுந்தவவேடர்
தாற்காடுமிகப்புகழத்தவாதென்றுமொளிர்வதுநீர்
மாற்காடுகீண்டுகொடிமறுகாடுவேற்காடு. (௩)

அந்தநகர்வேளாளரான்றகுலத்திடையுதித்தார்
பந்தமொழித்தருள்பரமன்பாததாமரைக்கன்பு
நந்தவியல்பேவளர்ப்பார்நன்னீற்றுச்சாதனமே
சந்தமிகுசுதிக்கேதுவென்றுணர்ந்ததன்மையினுர். (௪)

ஒண்ணுதல்வெண்ணகைச்செவ்வாயுமாபாகன்றிருவுருவே
யெண்ணுதன்மற்றவன்புகழேயியம்புதனன்கமைபூசை
பண்ணுதன்மற்றவனடிக்கேயல்லதொருபற்றில்லா
ரண்ணுதல்செய்சூதாடற்றொழிற்றலைமையமைந்துள்ளார். (௫)

உழுதொழிலால்வருவனவுமுறப்பயின்றுசவறாடற்
கெழுதொழிலால்வருவனவுங்கேடறுமெம்பெருமாற்கும்
பழுதிலவனடியார்க்கும்பயனாகும்படிபொருத்தி
யெழுதரியபெரும்புகழாரெஞ்சியதேயுண்டுவப்பார். (௬)

விண்பரவுவேற்காட்டுமேவியமர்பெருமாற்குத்
தண்பரவுநறுவிரைசாறயிலமுதலபிடேக
மெண்பரவுமாறியற்றியினியநிவேதனமாதி
யொண்பரவுமற்றுளவுமுறுமுகமனொடுஞ்சமைப்பார். (௭)

ஏற்றமிகுநீறுபுனைந்தெத்தனைபேர்வந்தாலு
மாற்றருநம்பிறப்பொழிக்கவந்தவரேயிவரென்று
சாற்றரும்பன்முகமனொடுதாழ்ந்தனையர்விருப்பின்வழி
யூற்றமிகுசுவையடிசிலுண்டுவப்பவூட்டிடுவார். (௮)

இன்னபடியிவரொழுகவிவரன்புவெளிப்படுப்பான்
முன்னவனம்பெருங்கருணைமூர்த்தியுழுதொழில்வருவாய்
தன்னமெனக்குறைத்தருளச்சமைந்தபொருள்பலவிற்றும்
பன்னரியகடன்கொண்டும்பழம்பணியிற்றலைநின்றார். (௯)

உள்ளபொருளொழிதரவுமுறப்பயின்றுசைபோய
வள்ளலெனப்படுஞ்சூதின்வருவாய்கொண்டமலனுக்கு
மெள்ளரியவடியார்க்குமுன்னையினுமேற்றமெனத்
தள்ளரியபணிவிடையின்றலைநின்றார்தவாச்சூதர். (௧௦)

எழுவாயிற்றாந்தோற்றேயிரும்பணையமவர்க்குதவி
வழுவார்பின்சயங்கொண்டுவருவாய்கண்மிகப்பெறுவார்
தழுவாமாறுற்றாரைத்தன்சுரிகைகொடுகுத்தி
முழுவானரேத்துமிவர்மூர்க்கரெனும்பெயர்பெற்றார். (௧௧)

எல்லாருமிவரொடுஞ்சூதியைந்தாடற்குளமஞ்சி
வல்லாராயொழிவுற்றார்வருவாயிற்குறைபடவு
மல்லாருங்களப்பெருமானடியருக்கூட்டுதல்குறையார்
சொல்லாரும்பிறநாட்டுத்தரீஇப்பொருணேடுதற்கெழுந்தார். (௧௨)

நடுநாடுமுதலாகநாடுபலபுகுந்துசழி
படுநாடுசூதாடிப்பைம்பொன்வருவாயடைந்து
கடுநாடுகளப்பெருமானடியார்க்குக்கனிந்தூட்டி
வடுநாடுதன்மையிலாவளவனாட்டிற்புகுந்தார். (௧௩)

சூதாடுந்தொழிற்பல்லோர்தொக்கமருமிடந்தேடிக்
காதாடுங்கருங்கண்ணாள்காதலனாகியசிவன்றாட்
போதாடுமன்புடையார்போதுவார்சொலக்கேட்டுக்
கோதாடுந்திறந்தவிருங்கும்பகோணம்புகுந்தார். (௧௪)

மன்னியமாமகதீர்த்தம்வருபொற்றாமரைத்தீர்த்த
மின்னியகாவிரித்தீர்த்தமுதற்பலவும்விழைந்தாடிப்
பன்னியபேரருட்கும்பப்பரசிவனேமுதலாகத்
துன்னியபற்பலர்பதமுந்தொழுதுமகிழ்ந்தனர்மூர்க்கர். (சரு)

மேவியடியவர்க்கூட்டும்வேட்கைமிகப்பெருகுதலாற்
காவிநிகர்களக்கும்பக்கண்ணுதலார்கழறொழுது
தேவியொருபாலுடையாய்சிறியனேன்பணிசிதையி
ளுவிசிதைதருமாலென்றறைந்துவெளிப்புறப்பட்டார். (கசு)

ஆயபெரும்புகழ்க்குடந்தையம்பலத்தினடுப்புகுந்து
பாயகவறுடுதொழிற்பண்புடையாரொடுகூடி
நேயமிகுசூதாடிவென்றுநிதிமிகப்பெற்று
நாயனடியவருவப்பநன்கூட்டிமகிழுவார். (கஎ)

பன்னளிப்படிச்சூதுபயின்றடிப்பொருளீட்டி
மின்னுளோர்பங்குடையவித்தகர்கும்பேசருக்குந்
தென்னண்மற்றவர்க்கன்புசெய்வார்க்கும்பரிந்துதவி
நன்னளெந்நாளுமெனநயந்தமர்வாராயினர். (கஅ)

பத்திநெறிவழுவாமலிவ்வாறுபயின்மூர்க்கர்
சத்தியொருபாலுடையதம்பிரான்கும்பேசன்
சித்தியருண்மிகப்பெற்றுத்திரிமலமுமறப்போக்கி
முத்தியடைந்தின்புற்றார்மூவுலகும்வியந்தேத்த. (கக)

இருவருநாடரும்பெருமானிரவொருதூதுவனுகப்
பொருவருமன்பியற்றியொளிர்புண்ணியநாவலர்கோனு
மருவருமூர்க்கருக்கடியேன்மற்றுநானென்றுரைக்கி
னொருவருமற்றவர்பெருமையுரைப்பவருமுளரோயோ. (உO)

மூர்க்கநாயனார்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஅஅஎ.

## காமதேனு பூசைப் படலம்.

கருகியபாசத்தாருட்கலந்தொளிர்தருகும்பேசர்
திருகியவினைகடீர்த்துத்திகழ்ந்தமர்சினகரம்புக்
குருகியவுளத்ததாகியொருபெருங்காமதேனு
பெருகியவன்பிற்போற்றிப்பெற்றபேறெடுத்துச்சொல்வாம். (க)

ஒளிர்சதகோடிசெங்கையுறப்பொலிதருவானேனுங்
குளிர்மதுப்பிலிற்றுங்கற்பக்கொழுமலர்மாலைவேய்ந்து
மிளிர்மணிமுடிவானேருரும்விதந்துணாயாமற்றோருந்
தளிரியன்மடவாரோடுஞ்சத்தியவுலகஞ்சார்ந்தார். (உ)

தவமிகமுயன்றொய்துஞ்சத்தியவுலகஞ்சார்ந்தார்
குவலயமுதலியாவுங்குறித்தவாறியற்றவல்ல
நவமலர்மிசையோன்பாதநயந்தனர்வணங்கியேத்தி
யவமறவளவளாவியன்பினுங்கமருங்காலை. (ஙு)

அடைபவரொடுமாங்குற்றவரும்புகழ்க்காமதேனு
மிடைதருநெருக்கிற்புக்குவிதிபதந்தொழப்போங்காலைச்
சடைமுடிபுனைந்தசைவத்தவத்துருவாசன்காலிற்
குடைதுயருண்டாமாறுகுரத்தினுன்மிதித்ததன்றே. (௪)

மிதித்தலும்வெகுளிபொங்கிவிழியழற்புலிங்கஞ்சிந்த
மதித்தல்சற்றேனுமின்றிவ்வயங்குநல்லறிவுமின்றிக்
கதித்தமண்மிருகம்போலென்காண்மிசைவருத்தமூன்றப்
பதித்தனைகுரத்தையற்றுற்பண்ணவவுலகத்தானே. (௫)

பாலொடுநெனிநீநல்கும்பயனெலாமொழியத்தீர்ந்து
மாலொடுதிரிகவென்னவகுத்தனன்கொடியசாபம்
வேலொடுபொருதும்வாட்கண்மெல்லியலாரோடும்ப
ரோலொடுகதறியேங்கியுடைகடன்முழக்கஞ்செய்தார். (௬)

அன்னதோர்காலைவெய்யவஞ்ஞரளாங்காமதேனு
வென்னதீவினைவந்துற்றதென்றுளத்தெண்ணங்கொண்டு
பன்னகாபரணனுணைபரித்துலகனைத்துமாக்கு
முன்னவன்பாதந்தாழ்ந்துநடந்ததைமொழிந்ததன்றே. (௭)

குறையெலாங்கேட்டவேதன்குழைதருமனத்தனுகி
மறையெலாம்புகழுங்கும்பகோணமாத்தலத்தைச்சார்ந்து
கறையெலாமறுக்கவல்லகாசிபதீர்த்தந்தோய்ந்து
முறையெலாமிறுக்குங்கும்பமுதல்வனைப்பூசைசெய்தால். (௮)

இனையவெஞ்சாபத்தீமையிரிதருமின்பமெய்தும்
புனையவல்லவனேயாகிப்பொலியுங்காசிபனம்மைந்த
னனையமாதீர்த்தந்தோய்ந்தேயமுதகும்பேசற்போற்றி
மனையவாவாதுமுன்னுள்வைதந்தைமாற்றிவாழ்ந்தான். (௯)

ஆதலினங்ஙனின்னேயடையெனவிடைகொடுத்தான்
காதலினமரநல்லான்கமலமேலவன்றாள்போற்றிச்
சாதலின்ஞரோசெய்யுஞ்சாபத்தையொழிப்பாம்யாமென்
றோதலினுலவாக்கீர்த்திக்குடந்தையையுற்றதன்றே. (௧௦)

குற்றமில்வளஞ்சால்கும்பகோணஞ்சார்காமதேனு
கற்றவர்புகழாநிற்குங்காசிபதீர்த்தமூழ்கிச்
சொற்றவத்தீர்த்தக்கோட்டிற்றுலங்குமோரிடத்தமர்ந்தே
பொற்றநங்கும்பநாதன்பொற்பதமுளங்கொண்டன்றே. (௧௧)

ஒருகரும்பன்றிகாணுத்திருவடியுள்ளத்தூன்ற
வருகருமூறுமேன்மேலடங்குறுதெழுந்தாகத்
திருசருங்காமதேனுவென்னெனச்சிந்தைநொந்து
கருசருமுயற்சிதேய்ந்துகவலையுற்றமரும்போது. (௧௨)

குடநடுவுதித்தபெம்மானருளினுற்கோவேயொற்றைத்
தடமருப்புடையான்பூசைசெய்திலாய்தவாவூறுற்றாய்
மடமறவின்னேபோற்றின்மருவுவையனைத்துமென்று
திடமுறவானநின்றோர்திருமொழியெழுந்ததன்றே. (௧௩)

காயவாக்குணர்ந்துகாமதேனுவுட்கவலைநீங்கித்
தூயகாசிபநீர்மீட்டுந்தோய்ந்துகும்பேசம்புக்கு
நாயனாரிடப்பான்மேயநங்கையார்திருமுற்சார்ந்து
பாயதோர்புனன்மண்மேற்றன்குரத்தினைப்பதித்துண்டாக்க. (கச)

அதுவொருகூபரூபத்தமைந்ததப்புனலின்மூழ்கி
யிதுகுராதீர்த்தமென்றோர்பெயரொன்றும்வழங்கவிட்டுக்
கதுமெனவனையதீர்த்தக்கரையினோர்கணேசன்றன்னை
மதுமலர்தூவியாரும்வழிபடப்பதிட்டைசெய்து. (கரு)

பூசைசெய்திடவுள்ளெண்ணும்பொழுதுகும்பத்துமேய
வீசைபங்குடையபெம்மானிலங்குபேரருளினாலே
யோசைவெஞ்சீற்றச்சாபமொழிந்ததுபான்முன்னாக
வாசைகொள்வளங்களெல்லாமடைந்தவக்கோவிற்கம்மா. (கசு)

வளமுழுவதுமடைந்தவண்ணந்தேர்ந்தளவிலாத
வுளமகிழ்பூத்துக்காமதேனுவாங்கொருங்குபெய்யுங்
களமிலொண்சுவைப்பாலுள்ளநவநீதங்கனிந்தெடுத்துத்
தளமலராகவேகதந்தன்மெய்முழுதுஞ்சாத்தி. (கஎ)

பூசனைபுரிந்தோர்கோட்டுப்புண்ணியதொழிற்பவஞ்ச
வாசனையறுக்குமுக்கண்மன்னவனூறுமாற்றி
யீசனையளித்தநால்வாயிமையவகாயாநேருந்
தேசனைப்பலகாலாண்டதிருவவென்றேத்தல்செய்து. (கஅ)

நவநீதக்களிறென்றோர்பேர்நயந்தெடுத்தோதிநாட்டி
யவநீர்மையறுக்குந்தென்பாலடைந்தொர்பாவனையிலிங்கந்
தவநீரிற்சமைத்துக்கும்பத்தாணுவாத்தியானஞ்செய்து
பவநீர்மைதவிர்ப்பதாந்தன்பால்பொழிந்தாட்டிற்றன்றே. (கசு)

ஏற்றதென்றிசையிற்கும்பத்திறையவற்காட்டுந்தீம்பான்
மாற்றருஞ்சுவைப்பாலாழிமானுமால்வடபாலோர்கோட்
டாற்றலங்களிற்றையப்புநவநீதமனையவாரி
மேற்றவழ்திரையோர்பாங்கற்சாய்ந்ததைவிழையுமாதோ. (உ0)

பன்னியசுரபியிந்தப்படிபூசைபன்னாட்செய்து
மன்னியகருணைச்செல்விமங்களைபதமும்போற்றித்
துன்னியசிறப்புவாய்ந்துதோமருவிடையும்பெற்று
முன்னியதனதுவைப்பைமுற்றிவாழ்ந்திருந்ததன்றே. (உக)

குராநறுந்தீர்த்தமூழ்கிக்கும்பேசற்கின்பாலாட்டி
விரவுதென்முகமாய்மேயகணேசற்குவெண்ணெய்சாத்திப்
பரவுமங்களைபொற்றாளும்பழிச்சுவோரடையும்பேற்றை
யுரனமைசேடனாலுமுரைத்திடன்முற்றாதன்றே. (உஉ)

காமதேனுபூசைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கக0க.

---

# அபிமுகேசர் மகிமைப் படலம்.

:0:

கொண்டல்வந்துலவுமாடக்கும்பகோணத்திலுள்ளா
லண்டரும்விருப்பினாடுமகப்புனலதற்குக்கீழ்பாற்
றொண்டர்தமெய்ப்பில்வைப்பாய்த்துதைந்தமரபிமுகேச
ரொண்டருமகிமையிற்சற்றெடுத்துரைசெய்யலுற்றாம். (௧)

மடமகன்மாயாகும்பவாயிலாங்கலிக்காய்வீழ்ந்த
விடமிலாங்கலியொன்றாகவியைந்ததனடியிற்றோன்றி
நடநவில்பாதத்தெம்மானாரிகேளீசனாகிக்
கடவுளர்முதலோர்போற்றக்கனிந்தருள்கொழிக்குமன்றே. (௨)

பரவுமொன்பதின்மர்க்காண்பான்பச்சிமமுகமாய்மேவி
விரவுநல்லபிமுகேசனெனும்பெயர்விளங்கப்பெற்றே
யுரவுசேரமுதவல்லியொடுமினிதமர்ந்துநாளும்
வரவுபோக்கிறந்தவின்பம்வழுத்துவார்க்கருளுநாளில். (௩)

திருவளர்தருகான்மீரதேயத்துப்பொலிந்துவாழ்வான்
மருவளர்பதுமமென்பூமாலிகைவயங்குந்தோளான்
குருவளர்மறைகளெல்லாங்கோதறத்தெளிந்தவல்லா
னுருவளர்புகழின்மிக்கான்சுதபனென்றுரைக்கும்பேரான். (௪)

அனையவன்மனைவிசீலவதியொடுமமர்ந்துவாழ்நாள்
வனைதருசிறப்புவாய்ந்தமகப்பெறுவிருப்புவாய்ப்பப்
புனைதருதவந்தானங்கள்பொலிதரப்பன்னாட்செய்து
பினையரனருளினாலோர்பெண்மகப்பெற்றானன்றே. (௫)

செழுமதிக்கண்ணியண்ணறிருவருளிதுவோவென்று
முழுதுணர்சுதபனென்பான்முளரியந்திருவின்மேலா
யெழுதரும்வனப்புவாய்ந்தவிளங்கொடிதன்னைப்போற்றி
வழுவறவளர்க்குநாளின்மங்கையும்வளர்ந்தாளன்றே. (௬)

சுமதியென்றுரைக்குநாமத்தோகையொண்கொடியினோங்கி
யமர்மணப்பருவஞ்சேரவாயமுன்வினையினாலே
கமழ்விரலனைத்துநெய்த்தோர்கசிந்துசீயொழுகும்வண்ணந்
தமர்களுமிகழ்தற்காயகுட்டநோய்சார்ந்ததன்றே. (௭)

அன்னதுகண்டதந்தையளப்பருந்துயருண்மூழ்கி
யின்னதற்கென்செய்வாமென்றீசனையகத்துட்கொண்டு
மன்னுமெய்த்தவத்தைமேவமகதியாழ்முனிவனங்குத்
துன்னுதன்னியல்பின்வந்தான்றொழுதனனெழுந்தன்னானே. (௮)

தொழுதடிவணங்கிநின்றசுதபனல்வதனநோக்கிப்
பழுதறுமுணர்ச்சிவல்லோய்தவஞ்செயும்படியென்னென்னச்
செழுமகட்குற்றதீநோய்தீர்தரற்பொருட்டென்றோதி
யழுதனனனையகாலைநாரதனாய்ந்துசொல்வான். (௯)

சுதபநின்றனையையுற்றதுட்டநோயிதனாற்றீரா
ததன்மமெக்காலுமின்றியமைந்தொளிர்கும்பகோண
மதனமைபதியைச்சார்ந்துமாமகதீர்த்தமாடி
யிதமருளபிமுகேசரிருப்பர்கீழ்கரையின்பாங்கர். (௧௦)

அவரையுமவரிடப்பாலமுதையும்வழிபாடாற்றிற்
கவலைசெய்புதல்விக்குற்றகுட்டநோய்கழிந்துமாயு
முவகைமிக்குளதாமாங்கணுய்யெனப்புதல்வியோடுந்
தவறறுமனைவியோடுஞ்சார்தியென்றுரைத்துப்போனான். (௧௧)

மகதியாழ்முனிவன்சொற்றவார்த்தையுட்கொண்டப்போதே
யுகலரும்புதல்விநோய்தீர்ந்துவகையிற்படிந்தான்போன்று
நகன்மிகுமறையுணர்ந்தசுதபனன்மனைவியோடு
மிகலரும்புதல்வியோடுமெழுந்தனன்வழிக்கொண்டானே. (௧௨)

வழியிடைக்கண்டபெம்மான்றலமெலாமருவிப்போற்றி
யழிவில்பேருவகையோடுமடுத்தனன்கும்பகோணங்
கொழிசுவைப்பொன்னிநன்னீர்குடைந்துகும்பேசமாதி
பழிதபுதலங்களெல்லாம்பத்தியிற்பணிந்துபோற்றி. (௧௩)

கதிரவன்கும்பராசிகலந்தமாமதிநாண்முற்று
மதிர்புகழ்க்கன்னிதீர்த்தமணமகளோடுமாடி
முதிரருளபிமுகேசர்முன்சென்றுபணிந்துபோற்றிப்
பிதிர்தலினுரிகேளத்தருவொடும்பெட்பிற்சூழ்ந்தான். (௧௪)

மறுவிலிவ்வழிபாடாற்றுமறையவற்கிரங்கியன்பி
னுறுமபிமுகேசரன்னுன்சனவகத்துவப்பத்தோன்றித்
தெறுவினைகடிந்தாய்நீசெய்செயற்குளமகிழ்ந்தோமிக்க
கிறுவுகொள்வினைநோய்தீர்ந்துன்றனையையுங்காமர்பெற்றாள். (௧௫)

அனையளைநம்முன்னாகவணிகளாற்புதைத்துநல்ல
வினையுடைவரற்குநல்கின்மிக்கவிவ்வறத்தினாலே
தனையன்மற்றொருவன்றீர்க்கதவனெனப்பிறப்பான்பின்பு
கனைபுகழ்நினதுதேயங்கலந்துவாழ்ந்திருந்துயன்னாள். (௧௬)

ஈற்றுநம்முலகமெய்தியின்பமுற்றிருத்தியென்று
சாற்றுபுமறைந்தார்தீர்க்கதவற்பெறுமறையோன்றேர்ந்து
மாற்றருமுவகைபொங்கவெழுந்தனன்மகளைப்பார்த்தா
னூற்றுநெய்த்தோர்சீயாதியொழிந்தினிதிருந்தாளன்றே. (௧௭)

அதிசயமிகவுந்தோன்றவபிமுகநாதர்செய்த
பொதியருளுள்ளங்கொண்டுபொன்னெழும்பொழுதெழுந்து
மதிசெயுமகரிராடிமாதேவன்கோயில்சார்ந்து
பதிதருமன்பிற்போற்றிப்பண்புறப்பொலிநன்னாளில். (௧௮)

மறைபுகழபிமுகேசர்மாப்பெருந்திருமுன்னாக
நிறைபுகழ்க்குடந்தைமேவிநிகழொருபிரமசாரி
தனைமுழுதுரைக்குமேன்மைச்சத்தியவிரதனென்பாற்
கறைவிதிப்படியேதத்தஞ்செய்தனன்மகளையம்மா. (௧௯)

ஆயவச்செயலின்பின்னரபிமுகரருளினாலே
சாய்வறுசிறப்பிற்றீர்க்கதவனெனுமகனைப்பெற்றுப்
பாய்புகழமுதவல்லிபாகனாமூன்றுண்டேத்தி
யேய்விடைபுறத்தேபெற்றானேகினான்சுதபனம்மா. (௨௦)

பூவலஞ்செய்துதன்னூர்போகுவான்போகுங்காலை
மாவலசுதன்மன்வாழுமச்சதேயத்தையுற்றா
னாவலர்புகழத்தேயநரபதியாயவன்றான்
றாவலசுதபன்பொற்றாடுணைந்துவீழ்ந்திதுவினாவும். (௨௧)

எங்குநீசென்றுமீடியியம்புதியென்னவையன்
பொங்குதன்புதல்விக்குற்றகொடும்பிணிபோக்குமாறு
மங்குதலில்லாவாய்மைமகதியாழ்முனிசொற்கேட்டுத்
தெங்குநீடபிமுகேசஞ்சென்றியான்மீள்வலென்றான். (௨௨)

என்றலுமிந்நாடாள்வேனென்பெயர்சுதன்மனென்பார்
மன்றலங்கூந்தற்காந்திமதிமனைக்கிழத்தியாளு
ணன்றமைநெடுநாளீசனற்பதங்குறித்துநோற்றே
பொன்றலிலெழில்சால்பூமிஞ்சயனென்றோர்புதல்வற்பெற்றேன். (௨௩)

மற்றவன்மூகையானான்மாற்றலர்நகையாகின்றா
ரற்றமில்செய்கைபல்லவாற்றியும்பேசானான்
குற்றமென்னுளதோதேரோன்குறித்தவன்பேசுமாறு
சொற்றருளையவென்றுதொழுதனன்மீட்டுமன்னன். (௨௪)

தொழுபுரவலற்கிரங்கிச்சுதபனோதிடுவானின்னே
பழுதகல்கும்பகோணப்பதியபிமுகேசஞ்சார்ந்து
வழுவறுமகநீராடிவழிபடினதுமைந்தன்
றழுவுநாவலவனாவான்சத்தியமென்றுகூறி. (௨௫)

சீர்மலிதருகான்மீரதேயத்துத்தன்னூர்சார்ந்து
பார்மலிசிறப்பின்வாழ்ந்துபற்பனாள்கழிந்தபின்றை
யார்மலிவேணிக்கூத்தரபிமுகநாதர்செம்பொற்
றார்மலிபாதஞ்சார்ந்துதவாதவின்புற்றுவாழ்ந்தான். (௨௬)

மச்சநன்னாட்டுவேந்தன்மறையவன்சொற்றவாறே
கச்சமில்பொருள்களோடுங்கடும்பொடுமூகையோடு
மச்சமில்கும்பகோணமடைந்துகும்பேசமாதி
முச்சகம்புகழாநிற்குமுக்கணார்தலங்கள்போற்றி. (௨௭)

புண்ணியமகநீராடிப்போற்றபிமுகேசம்புக்கு
நண்ணியபெருமான்பொற்றாணயந்துறப்பணிந்துபோற்றி
யண்ணியதிருமுன்வைகியைந்தெழுத்துள்ளத்தெண்ணித்
தண்ணியபுனல்சூழ்மச்சத்தராதிபனமருங்காலை. (௨௮)

அண்ணலாரபிமுகேசராரருள்சுரத்தலாலே
நண்ணலார்வணங்கும்வேற்கைநராதிபன்மைந்தனானே
னெண்ணலார்மூகைதீர்ந்தாங்கிருங்கலைவல்லனாகி
யொண்ணலார்பலருமெச்சப்பேசுதலுற்றான்மன்னோ. (௨௯)

அன்னதுதெரிந்தவேந்தனளப்பருமுவகையெய்தி
மின்னகுபொருள்கள்வீசிமிளிர்தளிப்பணிகளாற்றிப்
பொன்னவிர்பூணுமற்றும்பொதிதரச்சிறப்புச்செய்து
நன்னலவிழாவெடுத்தானம்பிரானுவப்பமாதோ. (௩௦)

பொங்குபேரன்பினிவ்வாறரும்பணிபுரிந்துபோற்றித்
தெங்குநீள்வனத்தினார்பால்விடைபெற்றுச்சேனையோடுங்
கொங்குசார்நறும்பூவாவிகுலவுதன்றேயஞ்சார்ந்து
மங்குதிர்செல்வந்துய்த்துவாழ்ந்தனன்மைந்தனோடும். (௩௧)

ஒப்பிலாவமுதவல்லியுடனமரபிமுகேசர்
வெப்பிலாமலர்த்தாள்போற்றிமேதகவடைந்தாரின்னுஞ்
செப்பிலாரளக்கவல்லார்தெய்வமாமுனிவீர்காளத்
தப்பிலாதவரைப்போற்றார்சன்மமுஞ்சன்மமாமோ. (௩௨).

அபிமுகேசர்மகிமைப்படலம் முற்றிற்று

ஆ திருவிருத்தம் - ௧௯௪௧.

---

## நான்முகன்பூசைப் படலம்.

---

வான்முகம்வருடுஞ்சோலைவளைதிருக்குடந்தைமேவித்
தேன்முகங்கவிழ்க்கும்பற்பல்செழுமலராதிகொண்டு
கூன்முகமதியம்வேய்ந்தகும்பலிங்கேசர்பொற்றா
ளான்முகன்விதியாற்போற்றிப்பெற்றதுநவில்வாமன்றே. (௧)

முன்னமோர்கற்பந்தன்னின்மொய்யொளிமேருவெற்பி
னன்னர்வானாடர்கற்பநறுமலர்மாலைவேந்த
னன்னமேக்குயர்த்ததோன்றலராவணைப்பள்ளியண்ணல்
சொன்னமாமுனிவர்யாருந்துவன்றிவீற்றிருந்தாரன்றே. (௨)

வானவர்முதலோர்யாருமருவியாங்கமரும்போது
தானவர்நடுங்கச்சாய்க்குஞ்சக்கரபாணியோடு
கானவராகப்பூமேற்கடவுண்மாறுற்றுநள்ளா
ரானவர்மதித்தலென்னமதித்தகங்களித்திருந்தான். (௩)

திருகுமிக்கமைந்துகான்மேற்செறியமற்றொருகாலேற்றி
யருகொருகரம்பினூன்றியகனிறகிமிர்த்தல்செய்து
முருகுசெய்மலரின்மேலானிருப்பதுமுன்னிமாயோன்
பெருகுபுன்மையரினென்முனிருந்ததென்பேசுகென்றான். (௪)

என்றலுமலரின்மேலானிருண்மலச்சேற்றுண்மூழ்கி
யொன்றல்செயுணர்வுநீங்கியுரைசெய்வானெடியமாலே
கன்றலில்புவனமெல்லாங்கண்டவைக்கிறைவனானேன்
மன்றவென்சுவேச்சையாறேமருவுவனுணர்தியென்றான். (௫)

மலர்மகனுரைத்தவார்த்தைவன்னிதோயிரும்புபோல
வலர்செவிநுழைதலோடுமராவணைப்பள்ளியானும்
புலர்தவில்செருக்குமேன்மேற்பூண்டனனுரைக்கலுற்றான்
வலர்சொல்யாரொருவனேபல்வைப்பிற்குமிறைவனென்றான். (௬)

பற்பலபுவனமெல்லாம்படைத்தனன்படைத்தயானே
சொற்புனையவைக்குநாதனென்றனன்றுணிந்துவேதன்
முற்பலவுலகுண்டாக்கமுயன்றானைப்படைத்தவாற்றாற்
கற்பலருனக்குநாதன்யானென்றுகனைந்தான்மாயன். (௭)

மாயவனுரைத்தவார்த்தைமலரவன்கேட்டுச்சீறி
யாயமற்றென்னைவஞ்சித்தமையவாய்ப்புகுத்திப்பின்னர்
மேயபேருந்திநின்றும்வெளிவரப்புரிந்துசேயென்
றேயவோர்பெயருமிட்டாயாவருமுணர்வாரோர்கால். (அ)

இனையகாரணத்தினுனீயெனக்கொருதாதையாகாய்
நனைகுலாந்துளவத்தாரோய்ஞாலநன்குணரப்பல்கா
லுனையவாய்ப்படைத்தேனீயேயுணருவையுரைப்பதென்னை
யனையவேதுவினினக்குமப்பன்யானென்றான்வேதன். (கூ)

இரணியகருப்பனிவ்வாறிசைத்தலுமாயோன்சீறி
முரணியதடக்கையோங்கியறைந்தனன்முளரிப்பூவே
யரணியல்கோயிலாக்கொண்டமர்பவன்கபோலத்தன்றான்
றரணியுண்டவன்கபோலத்தினுந்தகத்தாக்கினனே. (க0)

என்னையுமறைந்தாய்கொல்லோவென்றிருஞ்சினமீக்கொண்டு
தன்னையுமறியானாகியெழுந்தனன்சார்ங்கபாணி
பொன்னையொண்ணிறத்துவைத்தாய்போர்குறித்தனைகொலென்று
முன்னைவல்வினையினாலேயெழுந்தனன்முளரிப்பூவோன். (கக)

ஒருவர்தஞ்சிகையைமற்றையொருவரங்கையிற்பற்றி
யிருவருமுடன்றுவென்னிலிடிவிழுந்தென்னமொத்தித்
திருகுறுங்கூன்கைகொண்டுசெழுங்கழுத்துறவளைத்தே
பொருவில்கைமுட்டிசெய்துகபோலத்துப்புடையாநிற்பர். (கஉ)

ஒருவருக்கொருவர்கட்டிக்கொண்டுறப்புரண்டுவீழ்வார்
வெருவரவெழுவர்திண்டோள்கொட்டுவர்வெகுண்டுபாய்வர்
பொருவருங்கோபச்செந்தீப்புலிங்கமொண்விழியிற்சிந்திப்
பருவருமமரர்யாரும்வெருக்கொளும்படியார்ப்பாரால். (கங)

இருவரும்பன்னாளிவ்வாறிடையறுக்கலாம்விளைத்தே
யொருவருமமர்செய்காலையும்பரோட்டெடுத்தாரஞ்சி
வெருவருமினையர்தீமைவிலக்கியாட்கொள்வானெங்கண்
மருவருங்கடுக்கைவேணிவள்ளலாராங்குற்றாரோ. (கச)

மழுப்பொலிகரத்துமுக்கண்வள்ளலைக்காண்டலோடு
மெழுப்பொலிதிணிதோள்மாயனிந்திராநாணம்பூண்டு
வழுப்பொலிவுற்றதோர்ந்துவருவதுகுறித்துளஞ்சிச்
செழுப்பொலியாங்குநின்றுந்திருமுருதோட்டந்தானே. (கரு)

ஓடியநெடுமால்செய்கையுணர்ந்துமுன்னுணர்ச்சியின்றி
நீடியசெருக்கின்மூழ்கிநிலையழிவெய்தும்வேத
னாடியபாதத்தெங்களண்ணறன்னுருவநோக்கிப்
பாடியநம்புருரநடுவந்தபாலனீயே. (கசு)

வருதியாலென்றுகூறவள்ளலும்வடுகற்றோற்றிப்
பொருதியாலென்றுவிட்டான்பொள்ளெனஞாளியூர்தி
குருதியேயொழுகநாப்பட்டலையினையுகிராற்கொய்தான்
வருதிவாகரனேர்தேசுமழுங்கிவையத்துவீழ்ந்தான். (கஎ)

பின்னரும்வடுகப்புத்தேள்பிரான்திருவாணைதாங்கி
யுன்னருமூர்ச்சைதீர்த்தேயுயிருண்டாம்வண்ணஞ்செய்ய
வென்னருந்தொழுங்கோமானையெழுந்தடிபோற்றிநின்றான்
முன்னரு மயருக்கெல்லாமூலமாய்முளைத்தவேதன். (க௮)

அடியனேனறிவிலாமையாற்றுதீங்கெல்லாமேற்றுக்
கொடியனேயொழித்துக்காத்தல்குலவுநின் கருணையென்று
நெடியமாலுந்திவந்தோனேரோவிண்ணப்பஞ்செய்ய
மிடியனேயிதுகேளென்றுவிளம்புதலுற்றான்மன்னோ. (க௯)

செருக்குமிக்குற்றாய்செய் யுஞ்சிருட்டியோர்தலையோடற்று
யிருக்குமுன்வேதமெல்லாமெழுந்தொளிர்கும்பகோணத்
தருக்குலாந்தலத்தைச்சார்ந்துசங்கரப்பதிட்டைசெய்து
பெருக்குகும்பேசற்போற்றிற்பெறுகுவைசிருட்டியென்றான். (உ0)

என்றலும்வடுகப்புத்தேளிணையடியிறைஞ்சியேத்தி
மன்றலங்கமலமேலான்வளக்கும்பகோணஞ்சார்ந்து
கன்றலின்வடபான்மேயகாவிரித்துறைநீராடி
நன்றமைதருகும்பேசநண்ணினன்செங்கைகூப்பி. (உக)

கும்பலிங்கேசர்மேல்பாற்குலவவோரிலிங்கந்தாபித்
தம்பரும்வியப்பப்பன்னாளொண்மலராதிகொண்டு
நம்புநற்பூசையாற்றிநாயகப்பெருமான்றாளும்
வம்பவிழ்கூந்தற்செவ்வாய்மங்களாம்பிகைபொற்றாளும். (உஉ)

பன்மலரிறைத்துப்போற்றிப்பணிந்துசோமேசமாதி
யன்மலர்கண்டத்தண்ணலமர்தலமனைத்தும்போற்றிக்
கொன்மலரறஞ்சால்பஞ்சக்குரோசயாத்திரையுஞ்செய்து
தென்மலர்கும்பநாதன்திருத்தளிமீட்டுஞ்சார்ந்து. (உ௩)

பிறங்குதன்பதிட்டையாயபிரமலிங்கத்தைப்போற்றி
நிறங்குலாங்கும்பநாதன்திருவருணிரம்பப்பெற்றுத்
திறங்குலாஞ்சிருட்டிசெய்யத்தெரிந்தவனாகியென்று
மறங்குலாந்தனதுவைப்பையடைந்துவாழ்ந்திருந்தான்மன்னோ. (உ௪)

மலர்மகன்பதிட்டைசெய்தபிரமலிங்கத்தைவாழ்த்தி
யலர்கொடுபோற்றுவோர்களணிகிளர்கல்விசெல்வ
மூலர்தலிலாயுண்மற்றுமுற்றளப்பரியபோகம்
பலர்நறுமுறப்பத்துய்த்துப்பரகதியடைவார்பின்னர். (உ௫)

நான்முகன்பூசைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கககூகூ.

---

## அகத்தியமாமுனிபூசைப்படலம்.

:0:

ஆடகமாமணிமாடமோங்குமண்ணலங்கும்பகோணத்தையண்மிப்
பாடகமெல்லடிப்பாவைகாணப்பைம்பொன்செயம்பலத்தேறிநின்று
நாடகமாடும்பெருங்கருணைநம்பன்கும்பேசன்றளியிலிங்கங்
கூடகமேவவிருப்பிற்கண்டுகுறுமுனிபூசித்தவண்ணஞ்சொல்வாம். (க)

வானவர்மாதவராதியோர்கள்வந்துபணிந்துபல்லாண்டுகூற
வீனமிலாப்பல்புவனத்துள்ளவெந்தவுயிர்களுமின்பமெய்தக்
கானவராகமருப்பணிந்தகண்ணுதலோன்பணிவெற்படைந்து
தேனமர்கோதைக்கரியகூந்தற்செல்வியைமாமணஞ்செய்யுங்காலை. (௨)

வந்துபலருந்தொகுதலாலேவடதிசைதாழ்ந்துதென்றிக்குயர்ந்து
நந்துபுவிமகளுண்ணடுங்கிநாயகன்சந்நிதிமுன்னணைந்து
முந்திவிருப்பிற்பணிந்தெழுந்துமுன்னவவுத்தரந்தாழ்தலாலே
சிந்துதலுற்றடியேனடைந்தேன்றென்றிசையொப்பவைத்தாடியென்றாள். (௩)

அன்னவள்வார்த்தைதிருச்செவியேற்றங்கணன்செவ்வாய்முறுவல்கோட்டி
மின்னகுநுண்ணிடைப்பார்மடந்தாய்மேதினிகாத்துமஞ்சேலென்றேவி
நன்னரிருந்துகுழாத்தினுள்ளானம்மையொப்பாரெவரொன்றுதேறி
முன்னமர்கும்பமுனியைநோக்கிமுற்றியகாதலினீதுரைப்பான். (௪)

ஓதருமாதவத்தாயுனக்கிங்கோதுவதொன்றுண்டென்னென்றுகேட்டி
பூதலமாதுவடக்குத்தாழ்ந்துபோயதுதெற்குயர்ந்தென்றுரைத்தா
ளாதலினீயங்கடைந்துதெய்வவண்ணற்பொதியினமருவாயேற்
சாதலிலாதுலகுய்யுமொத்துத்தாமதியாதெழுபோதியென்றான். (௫)

என்றலுமையன்பதம்பணிந்தேயிணையடிநீங்கல்குறித்திரங்கி
யொன்றல்செயாணைமறுத்தலஞ்சியுறுவிடைபெற்றுமனைவியோடுந்
தன்றனிமாணவர்கூட்டமல்கத்தானெழுந்தேபஃறலங்கள்போற்றி
யன்றல்விராவுறுவிந்தவெற்பையடக்கிவிருந்துசெய்தாணைமாட்டி. (௬)

தில்லைமுதற்பஃறலம்பணிந்துதெய்வக்குடந்தைநகரடைந்து
தொல்லைவினைகண்முழுதொழிக்குந்தூயநன்மாமகதீர்த்தமாடி
வல்லையருளும்வலத்தபொற்றாமரைப்பெருந்தீர்த்தத்தினும்படிந்தே
யல்லையனுக்குங்கும்பேசர்மேயவாலயம்புக்கினிதாகச்சூழ்ந்து. (௭)

முன்னர்வணங்கியகம்புகுந்துமூவுலகேத்துமுதல்வனாய
பன்னகபூடணன்கும்பலிங்கப்பரமன்பொற்றாள்கள்பணிந்துபோற்றி
யன்னவன்வாமத்தமருமெங்களம்பிகைமங்களைபாதந்தாழ்ந்து
சொன்னபரமன்கும்பேசன்முன்புசொல்லருமன்பெழமீட்டும்வந்து. (௮)

மஞ்சனமாமலர்கந்தமாதிமற்றுமுபகரணங்களெல்லாம்
விஞ்சவமைத்துமாணுக்கரொல்லாமேதகவோடுவிரும்பிநல்க
வஞ்சனவாள்விழிமங்கைபாகத்தண்ணலையெண்ணரும்பூசையாற்றிக்
கஞ்சமலர்க்கைகுவித்துப்போற்றிக்கனிந்துமுன்னின்றுதுதிக்கலுற்றான். (௯)

புண்ணியநீறுபுனைதராராய்ப்போற்றிடுகண்மணிபூண்டிடாராய்
நண்ணியவைந்தெழுத்தெண்ணிடாராய்நாடுநின்கோலந்தரிசியாரா
யண்ணியபாதகர்யாவரேனுமையவெனதுகுலத்துதித்த
லெண்ணியகாலமிரண்டினுந்தீர்த்தின்பசுகந்தந்தருடல்வேண்டும். (௧௰)

ஐயவனையருதிப்பரேனுமப்பொழுதேயுயிர்தீர்ந்துமாயுஞ்
செய்யவரமொன்றருளல்வேண்டுந்தேவர்பராவிடுந்தேவர்தேவே
வெய்யவிறற்கொடுங்கூற்றங்கொன்றாய்வேதியராதியர்போற்றெடுத்தே
யுய்யவொருகும்பகோணமேயவுத்தமநின்னடிபோற்றிபோற்றி. (௧௧)

மங்களநாயகிநேசபோற்றிமன்னுமருட்பிரகாசபோற்றி
யெங்கள்பெரும்பவநாசபோற்றியிகலரண்டீர்தழலாசபோற்றி
திங்கள்விராஞ்சடையீசபோற்றிதிகழ்ந்தியல்பேதவிர்பாசபோற்றி
துங்கவிலங்கதட்சேபோற்றிதூயகுடந்தையுள்வாசபோற்றி. (கஉ)

மின்னும்வரைச்சிலைத்தோளபோற்றிவேதமளப்பருநீளபோற்றி
பன்னுங்களத்தமர்காளபோற்றிபற்றும்விபூதியுத்தூளபோற்றி
முன்னும்பலவடையாளபோற்றிமுன்சமனைத்தெறுதாளபோற்றி
மன்னும்விரலுகிர்வாளபோற்றிமங்களவல்லிமணாளபோற்றி. (கஙு)

வரநதிசேர்சடைமோலிபோற்றிமாருக்கருணைவதனம்போற்றி
பரவுமுத்தேவாநயனம்போற்றிபண்மறைபாடுதிருவாய்போற்றி
விரவுவரைச்சிலைத்திண்டோள்போற்றிவெண்டலைமாலிகைமார்புபோற்றி
குரவமர்கூந்தலோர்பாகம்போற்றிகும்பலிங்கேசநின்பாதம்போற்றி. (கச)

என்றுதுதிபுரிந்தாடிப்பாடியெண்ணின்மாணுக்கர்குழாங்கள்சூழ
வொன்றுபெருந்தணப்பன்னியோநிமுத்தமக்கும்பமுனிமகிழ்ந்து
நன்றுவிடைபெற்றிருக்கையுற்றானொடாறுங்காலங்கடோறுமிவ்வா
றன்றுதலில்லாப்பிரானைப்போற்றியன்பினமர்தருநாளினோர்நாள். (கரு)

செந்தமிழ்வாசங்கமழுஞ்செவ்வாய்த்திருமுனிவன்திருவாலவாயி
னந்தண்முதல்வனைக்கண்டுபோற்றுமாசையுடையவனுயிருந்தான்
முந்தவமிர்தகடத்துதித்தமுன்னவனன்னவன்முன்னந்தோன்றி
நந்தமதுளாயமருங்கோலநாமிங்குக்காட்டுதுங்காண்டியைய. (கசு)

மேதகுநாதங்குறிக்குமேல்பால்வேதனமைத்தகுறிக்குத்தென்பால்
காதல்செய்கூடலினிதுமேயகாமருநங்குறிகாட்டுகின்றோ
மாதரம்பூப்பவடைந்துகண்டேயஞ்சலிசெய்திங்கமர்தியென்றான்
மீதலவாணர்தொழுங்கும்பேசன்வித்தகமாமுனியுண்மகிழ்ந்தான். (கஎ)

அதிசயம்பூப்பவங்கெய்துங்காலையற்புதம்வாய்ந்தொரிலிங்கமேவு
நதியணிசெஞ்சடைக்கும்பநாதனல்லருளுன்னிநன்காடிப்பாடித்
துதிபலசெய்துவியந்துபோற்றிச்சுந்தரனென்றொருநாமஞ்சாத்திப்
பதிதருமன்பின்வழாதுபன்னாட்பாங்கினருச்சனைசெய்திருந்தான். (கஅ)

பற்பலநாளிப்படியமர்ந்துபண்ணவர்போற்றித்தொழுங்கும்பேச
னற்புதநல்லருள்பெற்றுப்போந்தேயன்புருவக்குங்குற்றாலமேவிச்
சொற்புனைகுல்லைமணந்தவிர்த்துத்தூயகடுக்கைமணம்பரப்பிக்
கற்பலரும்பொதியத்துமேவிக்காசினியைச்சமஞ்செய்துவாழ்ந்தான். (ககூ)

சுந்தரலிங்கம்வழிபட்டேத்தந்தூயவரிம்மையிற்போகந்துய்த்தே
யந்தரநாட்டுவண்போகமுற்றுமன்பிற்றிளைத்துக்களித்தபின்ன
ரிந்திரனாதியரோத்தெடுக்குமெங்கள்கும்பேசன்திருவருளாற்
றந்திரமாதிகள்சாற்றொணாததன்மைக்கதியின்பமெய்திவாழ்வார். (உ0)

அகத்தியமாமுனிபூசைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ககஅசு.

# சோழன்றிருப்பணிப் படலம்.

———:0:———

வித்தியாதரர்சாரணருரகர்புள்வேந்தர்வாளசுரேசர்
சித்திசாலிமையவர்முதற்பலர்களுஞ்செறிந்துசூழ்வளமல்கிப்
பத்தியாளருட்பதிதருகுடந்தையிற்பலர்புகழொருசோழன்
முத்திவாஞ்சையிற்புகுந்துநற்றிருப்பணிமுடித்தவாறுரைசெய்வாம். (௧)

முன்னமாமலராளியோர்தினகற்பமுலைத்தொழிதருகாலை
யென்னவாலயங்களுநகரொடுமறைந்திருந்தனவதுதேர்ந்து
பன்னகாபரணன்றிருவருளினாற்பார்மிசைப்பிறப்புற்றா
னன்னமூர்பவன்முதலியர்புகழ்சருமாரருட்பெருஞ்சோழன். (௨)

ஓங்குவெள்ளிமால்வரைப்பெருங்கணத்தினுளொருவனென்றிடவுற்ற
பாங்குசால்கதிர்க்குலத்தவனாகியபண்புடைப்பெருஞ்சோழன்
றேங்குமாமறையாகமபுராணமுற்சிறப்புறுபலநூலுந்
தாங்கும்வாஞ்சையினையமாதிகளறத்தவாதுறப்பயின்றானே. (௩)

என்னநூல்களுமுணர்ந்துதத்துவமுமோர்ந்தியல்பமைபெருஞ்சோழன்
முன்னமாருயிர்முழுவதுமுய்ந்திடமூர்த்திமுன்மூன்றாகி
நன்னர்மேவியபரசிவன்றளிப்பணிநன்குசெய்தெத்தேத்துந்
துன்னவாய்ப்பிரபலஞ்செயத்துணிந்தனன்சோதிதன்னருளாலே. (௪)

எந்தமாத்தலம்விசேடமென்றுணர்ந்துநாமெய்துவோமெழுவாயி
னெந்தமாத்தலத்தாலயப்பணியெலாமியற்றுவோஞ்சிறப்பாக
வெந்தமாத்தலத்தாலயப்பணிசெயினெண்ணியவெலாமெய்து
மெந்தமாத்தலம்விரைந்தருள்செயவலதென்றுளங்குறிக்கொண்டு. (௫)

பரவுசங்கரனேயருள்செயினலாற்பாரிடத்தெவர்தேர்வா
ருரவுமேவவென்றுளங்கொடுதுயின்றனனொருதினமந்நாளிற்
கரவுதீரொருமறையவர்போலவன்கனவகத்துறத்தோன்றி
விரவுவெள்ளியங்கயிலைவாழ்பராபரவிமலனாரருள்செய்வார். (௬)

ஓங்குநம்பெருங்கணத்தருளொருவனென்றுரைசெய்மன்னவரேறே
பாங்குசால்பலநாட்டுளுநின்முனோர்பரம்பரையினிதாண்ட
வீங்குகாவிரிநாட்டகமேவுதிமேயவந்நாட்டுள்ளுந்
தாங்குமாப்புகழ்ப்பெருந்தலமெண்ணிலதங்கிடுமவற்றுள்ளும். (௭)

உத்தமத்துளுமுத்தமமாகியதொருதலமதனுமங்
கொத்தலர்ப்பொழிற்பொழிலமர்பவர்கும்பகோணமென்றுரைசெய்வ
ரத்தலத்தையெத்திசையடைந்தறிவலெனச்சிறகங்கருதலையின்னே
யொத்தநின்னுடைக்கோரமேலிவர்ந்துநீயுவந்துசென்றிடுவாயேல். (௮)

செல்லும்வேலைநீசெலுத்திடுங்கோரத்தின்றிறற்குளம்பதுபட்டுப்
புல்லுமோதைநெய்த்தோர்வெளிப்படுமதுப்புந்தியிற்குறிக்கொண்டு
கல்லுமாசெயினங்குறிவெளிப்படுங்கணந்தத்தலமென்றே
யொல்லுமாபணியியற்றுதிமுன்னர்நீயுஞற்றுகாரணத்தாலும். (௯)

ஆதிகும்பலிங்கேசனென்றொருபெயரடைகுவம்யாமென்றே
யோதிவெள்ளியநீறெடுத்தவனுதலுறப்புனைந்துமையாளோர்
பாதிமேனியர்மறைந்தனர்விழித்தனன்பாரெலாம்புகழ்சோழ
னீதிவேதியருரைத்தமைகுறிக்கொடுனொரோலெனவெழுந்தானே. (௧௦)

எழுந்தகாலையிற்குலமுதற்றேவனுமெழுந்தனன்புனலாடித்
தழுந்தவாதவெண்ணீறணிந்தொள்ளொளிதயங்குகண்மணிபூண்டு
ளழுந்தவைந்தெழுத்திருவினனுண்டுடுத்தலங்குகொய்யுளைக்கோர
முழுந்துதானுருண்முன்னிவர்ந்தனன்மகிழ்வுறச்செலுத்தினன்மாதோ. (௧௧)

கோரமெங்கணுந்தாய்ப்படர்ந்துயர்பெருங்கும்பகோணத்தெல்லை
சாரமிக்கெழுமுழக்கமும்விண்படர்தாம்பரிக்குலஞ்சாடும்
வீரமுங்கொடுசெல்வதையுணர்ந்தனன்வித்தகப்பெருஞ்சோழ
னீரமேயவித்தானமேசிறந்ததென்றெண்ணினனதுகாலை. (௧௨)

விரைசெலற்பரிக்குளம்பொர்தேத்தழுந்திடமிக்கெழுந்ததுசெந்நீர்
தரையின்மொக்குளிட்டெழுதலுமுணர்ந்தனன்றவாவருட்பெருஞ்சோழன்
வரைவிலாருரைத்தருளியபடியெழுவண்ணந்தேர்ந்துடனேவெண்
டிரையுலாம்பரியிழிந்தனனாவயிற்செறிந்துகல்லினன்மாதோ. (௧௩)

கல்லுங்காலையிற்சிவலிங்கம்வெளிப்படக்கண்டனன்மகிழ்பூத்தா
னொல்லுமற்றதன்றிருமுடிநோக்கினனுறுபரிக்குளம்பூன்றச்
சொல்லுமோர்சுவடுற்றதுமதன்வழிச்சோரிபொங்கிடுமாறும்
வெல்லுமாப்புகழான்கண்டுமூர்ச்சித்துமேல்விழுந்தழுவானால். (௧௪)

ஐயனேயடியேன்பிழைத்தேனெனுமருமறைமுடிச்செட்டாச்
செய்யனேயடியேன்பிழைத்தேனெனுந்தீமழுமானேந்துங்
கையனேயடியேன்பிழைத்தேனெனுங்கருதுநருளநீங்கா
மெய்யனேயடியேன்பிழைத்தேனெனும்வெய்துயிர்த்திடுஞ்சோரும். (௧௫)

மறையுணர்ந்தவனொருகழுகுருக்கொடுவருந்திநேடியுங்காணாப்
பிறையணிந்தநின்பெருமுடிசிறியவிப்பேதையேனிவர்ந்துய்க்கு
முறையமைந்தவாம்பரியடிச்சுவடுறமுயங்கியதெளிதேயோ
வறையிணையகோவையகோவென்செய்கேனறிவிலாயானென்னும். (௧௬)

பிறைவிராயநின்பெருமுடியகத்தின்ப்பிறைச்சுவடுற்றென்னக்
குறைவிராயநாயேன்செலுத்தும்பரிக்குளம்புறுசுவடுற்ற
திறைவிராயநின்னளவிலாப்பெருமைக்கீதேற்குமோவெம்மானே
நறைவிராயபூங்கொன்றையாயென்செய்கோநாயனையேனென்னும். (௧௭)

நீரளாவியதிருமுடியிடத்திலந்நீரளாங்குறிபோல
வூரளாவியவென்பரிக்காற்சுவடுறுதல்பூண்டனையைய
நாரளாவியநின்னுடையடியவர்நகைப்பரோயெனையென்னுங்
காரளாவியகண்டத்தாயென்செய்கோகடைப்படும்யானென்னும். (௧௮)

முந்திநின்னடியாரிதுநோக்கியிம்முறைமையென்னெனிற்றீய
னந்திவண்ணனொன்றுரைப்பதற்கேற்புறவமைந்தனரிவனென்கோ
சந்திவந்தனையாளர்செஞ்சாந்தணிதழீஇயினரிவனென்கோ
நந்தியாடராச்செம்மணியருச்சனைநண்ணினரிவனென்கோ. (௧௯)

செவ்வரத்தமென்மலர்களாலருச்சனைசெயப்பட்டாரிவனென்கோ
பௌவவைப்பினர்செய்யபட்டணிந்திடப்பட்டனரிவனென்கோ
வொவ்வமுன்னெனச்செந்தழற்சொருபமாயொளிர்ந்தனரிவனென்கோ [ரும்.
வெவ்வநாயினேனென்சொல்கேனென்சொல்கேனென்சொல்கேனெனச்சோ

சிவபிரானமர்தலமெலாந்திருப்பணிசெய்துபாலனஞ்செய்ய
வவமிலாதவ்தரித்தநான்புரிந்தவாறழகிதேயெனச்சோருந்
தவருறுதுலகுளவரைநிற்குமேதவாதவிப்பழியென்னுங்
கவலையார்கலிமுழுகினேனினிக்கரைகாணுதலிலையென்னும். (உக)

ஐயநின்னுடைப்பரித்தலைநின்னடியமைத்தனையதற்காக
வெய்யநாயினேன்பரியடிநின்றலைமேவுதல்வழக்காமோ
செய்யனேயிதற்கியாதுசெய்வேனெனுந்திருந்துவத்திரங்கொண்டு
பையவொற்றிடுங்குமிழிகொண்டெழுவதுபார்த்திடுமூர்ச்சிக்கும். (உஉ)

அரிமுதற்பெருந்தேவர்களறியொணுவமலநாயகன்சென்னிப்
பரியடிச்சுவடுறச்செலுத்தியகொடும்பாவியேனிருதாளுஞ்
சரியவெட்டிலேன்கைகளைத்தறித்திலேன்றவாதுமிக்கெழுசெந்நீர்
விரிதரக்கண்டுங்கண்கள்சூன்றிடுகிலேன்வினையினேனிருந்தேனே. (உ௩)

என்றுபற்பலபுலம்பிடுமேல்வையினெம்பிரானெதிர்தோன்றி
யொன்றுமஞ்சலைநம்மடிக்கன்புடையுத்தமப்பெருஞ்சோழ
துன்றுமிச்சுவடடைந்ததுஞ்சோரிநீர்சொரிந்ததுமொருநின்மே
னன்றுநாங்கொளுமன்புகாணுதலினமக்கிதோர்விளையாட்டால். (உச)

அன்பர்தம்பொருட்டொவ்வொருகாலத்தியாமடைந்தனபலவுண்டால்
வன்பராந்தகமற்றவையுட்சிலவகுத்தருளுதுங்கேட்டி
யின்பமாரொருதலத்திடைநம்முடியியையவாள்வெட்டுற்றேம்
பொன்பராவொருதலத்திடைநம்முடிப்பூளைகௌவிடப்பட்டோம். (உ௫)

ஒருதலத்திடைவிழிகளிலிரத்தமிக்கொழுகிடுமாறுற்றே
மொருதலத்திடைக்கோதனக்குளம்படியுயர்தலையுறப்பெற்றே
மொருதலத்திடைமுடிபிளந்தெழுவருள்ளூற்றிடும்படியுற்றே
மொருதலத்திடைத்தலைவளைத்தொருமகவுவந்திடவிருந்தோமால். (உ௬)

ஒருதலத்திடைமெய்துளைத்தளவிலருட்புகும்படியுற்றே
மொருதலத்திடைமேனிமேற்கொப்புண்மிக்குற்றெழும்படியுற்றே
மொருதலத்திடைவெந்நிடைப்பிரம்படியுற்றினிதமருற்றே
மொருதலத்திடைவில்லடிமுடிமிசையுறைத்திடும்படியுற்றேம். (உ௭)

ஒருதலத்திடைமுடிமிசைத்தடியடியுறுத்திடும்படியுற்றே
மொருதலத்திடைக்கல்லெறிபற்பலவுவந்துநாடொறுமுற்றே
மொருதலத்திடைமுலைவளைச்சுவடுகளுருநிறந்தோளுற்றே
மொருதலத்திடைவானரவாற்சுவடொள்ளிதிற்படவுற்றேம். (உ௮)

பாணனுள்ளனவிறகெடுத்தோமொருபரவைமாளிகைச்சென்றே
நாணமின்றியோர்தூதனுய்மாயவனவிற்றியபெரும்போரிற்
காணயாவரும்புறங்கொடுத்தோமொருகடையனுயுருக்கொண்டு
வேணவாவொடுவயற்றெழில்புரிந்தனம்விரிக்கினின்னமுமுண்டால். (உ௯)

இனையயாவையுமன்பர்தம்பொருட்டெனவெண்ணுதிபெருஞ்சோழ
நினையுநின்பரியடிச்சுவடுற்றதுநிகழ்த்தியவிவற்றொன்றே
வனையுநம்முடையெளிமையென்றெண்ணலைமருவியவிந்நாடோட்
டனையமாண்பினர்முடித்தழும்பினரொனவறைகுவர்நமக்கோர்பேர். (௩0)

என்றுகூறுபுமறைந்தனனெம்பிரானிகல்வலிப்பெருஞ்சோழ
னன்றுதேறினன்சிவபிரானுடலைநவிற்றுதலரிதென்று
வென்றுமீடருவாம்பரிக்குளம்பினைமென்மலர்க்கரந்தொட்டுக்
கன்றுநெஞ்சமிலாதவனொற்றினன்கண்ணிரண்டினுமாதோ. (௩௧)

ஆன்றபொற்கருக்கிரகமொண்பன்மணியருத்தமண்டபமாதி
சான்றமங்களநாயகியாலயந்தவாதகோபுரநொச்சி
யேன்றபொய்கைசூழ்படித்துறைநந்தனமியைதரமற்றெல்லாந்
தோன்றநன்குசெய்தணிவிழாமுதலியதுலங்கவாக்கினன்மாதோ. (௩௨)

சோமநாயகர்நாகநாயகரருமலங்குவிச்சுவநாதர்
வாமமாதமரபிமுகநாயகர்வளர்கவுதமநாத
ரேமமேயடியார்க்கருள்பாணபுரேசராமெதல்வல்லார்
தாமவார்சடையிவர்க்கெலாமாலயஞ்சமைத்துயர்விழாச்செய்தான். (௩௩)

இந்தவண்ணநீர்நாட்டகமுழுவதுமிளம்பிறைமுடிவேய்ந்த
சந்தநான்மறைத்தலைவருக்காலயந்தகச்செய்துவிழாவாற்றி
யந்தமில்பிறநாடெலாஞ்சென்றுசென்றலயமிகச்செய்தே
யுந்தவோர்பெயர்திருப்பணிச்சோழனென்றுறவரர்சொலப்பெற்றான். (௩௪)

ஆதியாலயந்திருப்பணிச்சோழனாலமைத்தகாரணத்தானு
மாதிகும்பலிங்கேசனென்றொருபெயரடைந்தனனலந்த
வாதிபின்னரருந்திருமுடித்தழும்பனென்றறையவும்பெற்றானவ்
வாதியாணையாற்திருப்பணிச்சோழன்முன்னாட்சிபெற்றனன்வாழ்ந்தான். (௩௫)

சோழன்றிருப்பணிப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உ0உக.

## காரோணப்படலம்.

பண்ணியமெய்த்தவத்தாரேபண்பினமர்தருகுடந்தை
நண்ணியமாமகதீர்த்தவடகரைநற்றளிமேவுங்
கண்ணியவிச்சுவநாதர்காரோணநாதரெனும்
புண்ணியவோர்திருநாமம்பூண்டதிறமெடுத்துரைப்பாம். (௧)

வரையிழியும்பெருஞ்சரயுமருவியகோசலநாட்டுப்
புரையில்வளமிகப்பொலிந்துபொங்குமயோத்திக்கிறைவன்
குரையளிசால்கருங்கூந்தற்கோசலைமுன்மூவரையுந்
தரைபுகழமணஞ்செய்தான்றசரதனென்றிடும்பெயரான். (௨)

மன்னுபெருந்தவவசிட்டமாமுனிவன்சொற்படியே
முன்னுபுகழ்க்கலைச்சிருங்கமுனிவரனைவரவழைத்து
மின்னுமகத்தருமகத்தைவிழைந்தியற்றியாரமுதம்
பன்னுமொருமூவருக்குநாற்கூறுபடுத்தளித்தான். (௩)

இரதமொழிக்கோசலையாளிராமனையுங்கைகையாள்
பரதனையுஞ்சுமித்திரையாள்பரவுமிலக்குமணனையுஞ்
சரதமலிசத்துருக்கன்றன்னையுநன்றுதவுதலும்
விரதவரசுளமகிழ்ந்தான்வேதியராதியருவந்தார். (௪)

மருவுதவப்பெருவசிட்டன்மைந்தரொருநால்வருக்கும்
வெருவுதவிர்கலையனைத்தும்விருத்தியுறப்பொருத்துதலு
மொருவுதலின்றினிதுணர்ந்தாருயர்விசுவாமித்திரன்வந்
திருவுதல்செயிராமனையுமிலக்குமணனையுங்கவர்ந்தான். (௫)

முனிவனுரைப்படியரக்கிமுடியவொருகணையேவிக்
கனிவினவன்புரியுமகங்காத்தொருகல்லினையியக்கி
நனிவளஞ்செய்பொழின்மிதிலைநண்ணியொருசிலைமுறித்துப்
பனிமதியமுகச்சனகன்பாவைதனைமணம்புணர்ந்து. (௬)

தம்பியருமணம்புரிந்துதழுவிவரவரும்வழியின்
வெம்பிவருமழுப்படையோன்வீறடக்கியயோத்திநகர்
நம்பியுவகையிற்புகுந்துநலம்பொலிகேகயத்தொளித
தும்பியபூட்பரதனுந்தம்பியுந்தொடரப்போகியபின். (௭)

சிறியதாயுரைகொண்டுசீதையுந்தம்பியுந்தொடர
நறியதார்ப்புயத்திராகவன்கானநண்ணவெழுந்
தறியநீர்ப்பெருங்கங்கையம்பிவேடனைநட்டுச்
செறியமாதவர்பலருஞ்சித்திரகூடத்தமர்ந்தான். (௮)

அழுதுவருதம்பிதுயரறிந்துபாதுகைகொடுத்துத்
தொழுதுநகரமரும்விதந்துணிந்தேவிப்புறப்பட்டுப்
பழுதுபுரிவிராதனுயிர்பதைபதைக்கும்படிமாட்டி
யெழுதுபுகழ்ச்சரபங்கனிருக்கையினிதமர்ந்தேகி. (௯)

பஞ்சவடியடைந்தெருவைப்பறவைகளிப்புறக்கண்டு
வஞ்சமிகுசூர்ப்பநகைமாமூலைமூக்கரிவித்தே
யஞ்சவருகாரனுதியரக்கருயிர்தபமாட்டித்
தஞ்சமெனவருபொன்மான்றபும்படியோர்கணைபோக்கி. (௧௦)

சானகியைவாளரக்கன்றான்கொண்டுபோகியபி
னீனமிலாப்புள்ளொருவைக்கியலீமக்கடனியற்றி
யூனமுவக்குங்கவந்தனுயிர்மாட்டி
யானசவரியரும்பூசனையுவந்து. (௧௧)

ஏற்றமராமரமேரோழுந்துளைபடுத்தி
யாற்றல்வளிமகனுலந்தகாரஞ்சிதையத்
தோற்றமுறுங்கதிரோன்சேயைத்தொடர்புற்றுக்
கூற்றமுயிர்பருகவாலிக்கோர்கோலேவி. (௧௨)

சீதமழைக்காலந்தீர்ந்துபடைகூட
வோதநிறத்தானுறுதென்றிசைநோக்கிக்
காதலனுமான்கனிந்தேகுமாசெலுத்திச்
சாதமுணர்ந்துடனேதக்கிணநாடுற்றெழுந்தான். (௧௩)

மேவுபுனற்காவிரிநீர்படிந்தெழுந்து
தேவுமலியுந்திருக்குடந்தையுட்புகுந்து
பாவுபுகழ்க்கும்பப்பரனைத்தரிசித்தே
யோவுதலிலெல்லாத்தலமுமுறக்கண்டு. (௧௪)

மாமகநீராடிவடபாற்றளியடைந்து
தூமநறுங்கூந்தற்சுடர்த்தொடியோர்பாகனார்
காமர்கருணைக்கடல்விச்சுவநாதர்
தாமரைப்பொற்பாதந்தலைவணங்கிப்போற்றினான். (௧௫)

ஆங்குமருவியரனையீசானதிக்கிற்
பாங்குமருவப்பதிட்டைசெய்துபூசித்து
நீங்குதலிலாதமருநேயக்குறுமுனிவன்
றீங்குதவிர்க்குந்திருவடிசென்றேத்தினான். (௧௬)

அன்னமுனிவரனுமாசிமிகக்கூறி
மன்னர்மகனேயிங்குவந்ததிறமேதென்ன
நன்னருவந்துநடுங்காவரக்கனுயிர்
பின்னமுறமாட்டும்பெற்றிதுணிந்தேன்றமியேன். (௧௭)

அந்தத்தொழில்புரியவையவுருத்திரன்கூ
றிந்தச்சரீரத்திலையேன்முடியாதா
லெந்தத்திறத்தானுமெய்துவானீங்குற்றேன்
சந்தத்தமிழ்முனிவாதக்கவாகூறென்றான். (௧௮)

என்றபொழுதுநயந்தெங்கள்குறுமுனிவன்
மன்றல்கமழுமலர்மாலைப்புயவேந்தே
யொன்றநினைத்ததுறுதலேவேண்டுமதற்
கன்றலடையாதறைகுவல்யான்கேளென்றான். (௧௯)

எல்லாத்தலங்களினுமேற்றம்விசுவேச
மெல்லாத்தீர்த்தங்களினுமேற்றமகதீர்த்த
மெல்லாமூர்த்திக்குமிகவேற்றமுளதிம்மூர்த்தி
யெல்லாக்கலையுமினிதுணர்ந்தமன்னவனே. (௨0)

(வேறு.)

ஆதலினித்தானத்திவ்வகிலநாயகனைச்சின்னாட்
காதலின்மகநீராடிக்கனிதரப்பூசிப்பாயே
லோதலினளவாவன்மையுருத்திரன்கூறுபெற்று
மோதலின்வலியனாகிமுன்னியதடைவாயென்றான். (௨௧)

என்றலுமகநீராடியெழில்செய்வெண்ணீறுபூசி
யொன்றுகண்மணியும்பூண்டேயுள்ளத்தைந்தெழுத்துமெண்ணி
நன்றமைவிசுவநாதன்பூசனைநயந்துசெய்து
பின்றளராதாங்குற்றுப்பெருந்தவமுயன்றானன்றே. (௨௨)

மன்னுபத்திரதப்பேரான்மைந்தனத்தலத்தேவைகிப்
பன்னுமிப்பூசைநோன்புபண்புறச்செய்யுமாற்ற
லுன்னுமற்புதநங்கோமானுவந்தவன்முன்னர்த்தோன்றித்
துன்னுமெத்தகையதேனுஞ்சொல்லுதியருள்வாமென்றான். (௨௩)

என்றலும்பணிந்துபோற்றியிராகவன்மொழிவானென்றுங்
கன்றல்செயரக்கராவிகாற்றுதற்கமைந்தேனைய
வொன்றல்செயதுவுண்டாகவுருத்திரகூறுவேண்டுந்
தென்றல்செய்தேரினானைச்செற்றவவென்றான்பின்னும். (௨௪)

அடியனேன்காயத்துண்ணியமையவாரோகணஞ்செய்
தொடிவறவுறலாற்காயாரோகணமெனும்பேருற்று
முடிவிலித்தலமுநீயுமுனிவறவிளங்கல்வேண்டுங்
கடியபொற்கடுக்கைமாலைக்கடவுளேயென்றுதாழ்ந்தான். (உரு)

இராகவன்வதனநோக்கியெம்பிரானருளிச்செய்வான்
பராவுநஞ்சத்திநீசாண்பண்புசாநின்காயத்தில்
விராவுதனமக்குமிக்கவுரிமைகாணெனவிளம்பிக்
கராசலங்காத்தவண்ணன்மேனியுட்கலந்திவர்ந்தான். (உசு)

காயத்துவிராவியேறக்கடுஞ்சமர்வீரனாகி
நேயத்துமகிழ்ராமனிகழ்ந்தனனன்னகாலைத்
தோயத்துநடுவிலங்கைசுடுவதற்கெண்ணங்கொண்டு
தேயத்துமன்னர்மன்னன்மகனிதுசெய்தானன்றே. (உஎ)

ஓங்குபல்வளஞ்சால்காயாரோகணத்தமுதைப்போற்றிப்
பாங்குசெய்விடையும்பெற்றுப்படையெலாமுழங்கிச்சூழத்
தேங்குதெண்டிரைநீர்வேலைசெறிந்ததிற்சேதுகட்டி
வாங்குவிற்றடக்கையண்ணன்மாற்றலனிலங்கைபுக்கான். (உஅ)

வாலிதன்மகனுமுள்ளவாறெலாந்தெரிந்துகொண்டு
கோலியதசமுகத்தோன்கும்பகன்னனைமுன்னா
பாலியலரக்கர்யாரும்படக்கொடுங்கணைகளேவி
நூலியன்மருங்குலாளைநுவலருஞ்சிறையின்மீட்டு. (உகூ)

ஒருபடைத்தலைவன்மீளநமனுக்கோரோலையுய்த்துப்
பொருபடையரக்கர்க்கொன்றபாதகம்பொருந்தாவண்ண
மருவருமிலிங்கமொன்றுதன்பெயர்வைத்துத்தாபித்
தருமையிற்போற்றிச்செம்பொனவிர்விமானத்திலேறி. (ஙo)

பின்னருங்குடந்தையெய்திப்பேரொளிவளர்காரோண
முன்னவன்றனைப்போற்றிமுனிவரும்விடையும்பெற்றுப்
பன்னலப்பரத்துவாசன்படைத்தநல்லமுதுந்துய்த்துத்
தன்னமர்விருப்பிற்றம்பிதழலவியாமற்காத்து. (ஙக)

மதில்வளையயோத்திபுக்குமாமணிமகுடஞ்சூடி
யதிர்கழன்மன்னராதியாருக்கும்விடைகொடுத்து
முதிர்சுவைப்புகழிராமன்முத்தவெண்குடைநன்னிழற்
பிதிர்தராதுலகம்வைகப்பேரர்சளித்துவாழ்ந்தான். (ஙஉ)

காயாரோகணமெனும்பேர்காரோணமென்றாயிற்று
காயாரோகணமெனும்பேர்கருதுமத்தலம்பூண்டன்று
காயாரோகணமெனும்பேர்கைக்கொண்டாரகிலநாதர்
காயாரோகணத்துமேயகடமுனியிலிங்கம்போற்றி. (ஙங)

மருவுகாரோணத்தானைவழிபடுந்தகுதியோர்கள்
பொருவுதீர்கல்விசெல்வம்பொற்புறுமடவார்போக
மிருவுமற்றனைத்துந்துய்த்தாங்கெய்தியபோகமுந்துய்த்
தருவுருவினர்காரோணத்தன்னவரடிசார்வாரே. (ஙச)

காரோணப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உoருரு.

## பாணபுரேசப்படலம்.

தொழுதியாவருஞ்சூழ்தருகும்பகோணத்துப்
பழுதுதீர்த்தடியார்கள்பற்பலவையும்பரிக்கும்
விழுதுநேர்சடைப்பாணபுரேசர்தமேன்மை
முழுதமோதமுற்றுமையிற்சிலமொழிந்திடுவாம். (க)

பராசரப்பெயர்முனிவரன்பண்ணியதவத்தாற்
றராதலம்புகழ்ந்தேத்திடத்தோன்றினன்றவலி
லராவணைப்பிரான்கூறெனமேலவரறைய
விராவுபன்மறைமுழுமையுங்கரைகண்டவியாதன். (உ)

மிக்கவிஞ்சைஞானத்தினுற்பொலிந்துயர்வியாதன்
றக்கமாதவர்பற்பலர்தற்புடைசூழத்
துக்கவாழ்வொழித்தருளகிலேசனைத்தொழுது
திக்கவாம்புகழ்க்காசியிற்றிருத்தகவிருந்தான். (ஙு)

இருந்தகாலையினெண்ணிலாமுனிவருமிறைஞ்சித்
திருந்தவீரைந்துபுராணங்கள்சிவபரமாயே
பொருந்தவோதினைகேசவன்பரமென்றுபுகல
வருந்தவாபுராணங்களீரிரண்டனையறைந்தாய். (ச)

மலருளான்பரமாகவோரிரண்டனைவகுத்தாய்
பலர்சொலுங்கதிர்ப்பண்ணவனுரமழற்பரமா
வுலர்வரும்பொருட்புராணமொவ்வொன்றனையுரைத்தாய்
யலர்பெரும்புகழ்ப்பெரியவ்வறைந்தமற்றிவற்றுள். (ரு)

எந்தவத்துவையாங்களாராதனஞ்செய்வோ
மெந்தவத்துவாற்பந்தமுமோக்கமுமெய்து
மெந்தவத்துவையெண்ணினுற்பந்தமுற்றிரியு
மந்தவத்திஃதென்றெமக்கறைகுதியென்றார். (சு)

என்றுகூறலுஞ்சற்றுளத்தெண்ணலுமின்றி
யொன்றுதீவினையுறலின்முன்னுரைக்குமாறுகத்
துன்றுமோகமிக்கமைந்துசொல்வான்முனிவரர்கா
ணன்றுதேருமினாரணனேபரம்பிரமம். (எ)

மறையெனப்படுநூற்குமேனூலிலைவானோர்க்
கிறைவனென்னுநாரணற்குமேற்றெய்வமுமில்லை
குறைவிலாவறிவாளர்தங்கொள்கைமற்றீதே
முறையினேருமின்பிரமம்வேறிலையெனமொழிந்தான். (அ)

மொழிந்தவாசகங்கேட்டலுமுனிவரர்கலங்கி
யழிந்தசிந்தையராய்க்கலிகாலம்வந்தடாமு
னிழிந்ததன்மையர்போலிவன்புகன்றதென்னென்று
கழிந்ததுன்பமிக்குடையராய்ப்பின்னருங்கரைவார். (கூ)

எண்ணுமாதவநீயுரைத்ததுநிசமென்னிற்
கண்ணும்விச்சுவநாதன்முன்மொழியெனக்கரைந்தார்
நண்ணுந்தீவினைக்குழிசியாய்ஞானமுற்றொழித்தோ
னண்ணுமத்திறமனந்துணிந்துரைப்பதற்கமைந்தான். (௧0)

அண்ணல்விச்சுவநாயகன்திருமுனமடைந்தே
யெண்ணமொன்றிலாதிருகையுந்தலைமிசையெடுத்து
நண்ணமுன்னுரைத்திட்டவாநவின்றனன்றோ
திண்ணமாரருள்பெறுர்க்கறுமோமலச்செருக்கு. (௧௧)

உணர்விலாதவனிங்ஙனமுரைத்தலுமும்ப
ரணவுநாயகன்முனிந்திலன்மகிழ்ச்சியுற்றமர்ந்தான்
புணர்வுசார்தரவெந்தநாமம்புகன்றிடினுந்
தணவுறுததானேபொருளாகியதகையால். (௧௨)

அடுத்தநந்தியெம்பிரானிஃதுணர்ந்தனனங்கை
யெடுத்தவண்ணமேயசைவறநிற்றியென்றிசைத்தான்
மடுத்தகால்பெயர்த்திடல்கரமடக்கிடல்வல்லான்
விடுத்தவோங்கையனாய்த்திருமாலையுள்விழைந்தான். (௧௩)

நட்டதூணெனவசைவறநிற்பவனங்கை
பெட்டமார்பனைநினைத்தலும்பெருங்கவலையனாய்
வட்டநேமியானவனெதிர்மருவுபுநின்று
துட்டனீயென்சொற்றனையென்றிதுசொல்லும். (௧௪)

மறையெலாம்பகுத்துணர்ந்தநீயேமதிமயங்கி
யிறைவனாரணனேயெனக்கூறுவையென்னி
னிறைதராக்கல்விவேதியராதியர்நிகழ்த்து
முறையிலாமொழியாதுகொல்லாய்முடிதருமே. (௧௫)

வண்மைசாலதர்வச்சிகையாதியவழங்குந்
திண்மைசால்பொருளிற்றெனநின்னுளந்தேறாய்
பெண்மையாரறியாமையிற்பிதற்றல்போற்பிதற்றி
யெண்மையார்குழாத்தொருவனேயாயினையென்றும். (௧௬)

மேகவாகனவிண்ணவனாதியாவிளங்கு
நாகநாட்டவர்தமக்கெலாமிறையவனானே
யேகனாகியபரசிவனேயெனக்கிறைவன்,
மோகநீத்தவம்முதல்வற்கோரிறையவனிலனே. (௧௭)

மேயவிச்சுவம்யான்மறைமுழுவதும்விளம்பற்
காயவிச்சுவாதிகனொருபிறைமுடியண்ண,
றூயவெச்சம்யானெச்சநாயகனுயிர்த்தொகுதி
ஞேயம்வைத்தபேரருட்டிரியம்பகநிமலன். (௧௮)

பரவுமாயையான்மாயையென்றுரைசெயப்பட்டு
விரவுமற்றெனையாள்பவன்விடைக்கொடியுயர்த்தோன்
குரவுசேர்குழன்மடந்தையான்கோற்றொடியென்னை
யுரவுசேர்தரப்புணர்தருபுருடனவ்வொருத்தன். (௧௯)

தலங்கள்பற்பலவற்றினுஞ்சம்புவைநிறுவி
நலங்கண்மேவரவீசனையருச்சித்தோனுனே
வலங்கொண்மற்றவனொருகணமெனுமெனைமதித்திட்
டலங்கொளெவ்விடத்தாயினுமருச்சித்ததுண்டோ. (உo)

உண்மைதேர்கிலார்மாயனுமென்னையுமொழியாத்
தண்மைசான்மலரானையுஞ்செந்தழலினையும்
வண்மைசேர்கதிரோனையும்பரமெனவகுப்பா
ரொண்மையாகவேதம்மையும்பிரமமென்றிசைப்பார். (உக)

அறிவிலாதவர்கூற்றினுக்காற்றுவதுண்டோ
மறிவிலாதவிம்மயக்கத்தைமாற்றுதியின்னே
செறிவிலாவெனைப்பிரமமென்றுரைப்பதந்தீர்தி
பறிவிலானையேபிரமமென்றெண்ணுதிபால. (உஉ)

வல்லையென்னுரைகொண்டுமாதேவனைமதிப்பி
னல்லையாகிநீபிழைத்தனைநயந்திதுகோட
லில்லையேலின்னேகெட்டனையென்னையுங்கெடுக்க
வொல்லையெண்ணினையொழிதியென்றருளித்தனன்மாயோன். (உந)

மாயனோதியகடுமொழிமனத்தினுட்பதித்தா
னுயவானவத்தொகையெலாந்திரணத்தினமைத்தா
னேயநாயகன்சரணமேகதியெனநினைத்தான்
மேயஞானமுற்றுண்மையிற்பொலிதருவியாதன். (உச)

அந்தவெல்லையின்விசுவநாயகனைதிரணைந்து
முந்தநந்தியைநோக்கிநீமொழிந்தவெஞ்சாபஞ்
சிந்தவோதுதியென்றலுந்தீர்தரவென்றுன்
மந்தமீர்ந்துகைகால்பெயர்த்திடும்படிவாய்ந்தான். (உரு)

நந்தியெம்பிரான்பதம்பணிந்துள்ளுளேநயப்புற்
றந்திவண்ணன்முன்சென்றடிமிசையவன்விழுந்தா
னுந்திபூத்தவனெனுமொருமுனிவரவெழுதி
புந்தியுண்மயக்கறுத்தனையோவென்றுபுகல. (உசு)

எழுந்துநின்றறியாமையினேழையேன்பிழைத்தேன்
கொழுந்துவெண்மதிமிலைச்சியசெஞ்சடைக்கூத்தா
கழுந்துபட்டவென்மதிக்கலக்கந்தவிர்த்தளற்றி
லழுந்துபட்டிடாவண்ணமாட்கோடியென்றறைந்தான். (உஎ)

அன்னகாலையினெம்பிரானருள்சுரந்து
நன்னரொம்முனம்பொய்மொழிநவிற்றியதோடம்
பின்னமுற்றொழிந்தெவ்வகைநலங்களும்பெறுவாய்
முன்னமக்கினிதாகியதலங்குடமூக்கு. (உஅ)

அந்தமாத்தலப்பாணபுரேசத்தையடைந்து
சந்தமார்நமதிலிங்கத்தைப்பூசனைசமைத்தா
லெந்தவல்வினைகளுந்தபுநலமெலாமெய்து
முந்தவேகுதியென்றனன்மறைந்தனன்முதல்வன். (உகூ)

வாதராயணன்குடந்தையைமருவுதல்குறித்தான்
சீதமாதவமுனிவரர்திருமுகநோக்கிப்
போதமேயுருவாயநீர்புந்தியில்லவர்போ
லேதமோவுருவெனையிதுவினவியதென்னே. (௩0)

உமையொர்பாகனேபரமெனற்கையமொன்றுளதோ
சமையவேதிலேனுயினுந்தக்கவாதெருட்டா
தமையவிவ்வணங்கண்டுளீரிதுநுமக்கழகோ
சிமையமால்வரைபோற்குணத்திரொன்றுசெப்பி. (௩க)

அத்தவத்தருளுடன்வருவாரொடுமலங்கு
முத்தவண்டுறைக்காவிரிசூழ்குடமூக்கிற்
சித்தருட்பொலிபாணபுரேசத்தைச்சேர்ந்தான்
சுத்ததத்துவாதீதனைப்பூசிப்பான்றுணிந்து. (௩உ)

வந்தமாமுனிபகவதீர்த்தத்துறைமருவிச்
சந்தநீர்படிந்தொள்ளியநீறுறத்தரித்துப்
பந்தநீக்கிடுங்கண்மணிமாலிகைபரித்து
முந்தவைந்தெழுத்துன்னுபுமுகிழ்த்தகையினனாய். (௩௩)

பாணமாபுரத்தெம்பிரான்றிருமுனர்ப்பணிந்து
வேணவாவொடுபூசனைவிளைத்தனன்பன்னு
ளாணமோடவன்பூசனையாற்றுதற்கிரங்கிக்
காணவந்தனனெம்மையாள்கண்ணுதற்கடவுள். (௩௪)

ஐயன்வந்தனனென்றடிபணிந்தவனிற்ப
வெய்யபொய்யுரைகிளந்ததாலாம்பழிவீழ்த்தாஞ்
செய்யநிற்கினிவேண்டுவதுரையெனச்செப்ப
மையனீங்கியவியாதமாமுனிவரன்வகுப்பான். (௩௫)

பேதைநாயினேனின்னுநின்றிருவடிபிழைத்துத்
தீதைமேவமுன்னுரைத்தவாமறந்துஞ்செப்பாம
லோதையார்பெருங்கருணையினொருவரந்தருதி
யீதையாநினைவேண்டினேனிசைப்பதுண்டின்னும். (௩௬)

இத்தலத்துனைவழிபடுமன்பினரெல்லா
முத்தலத்தினுஞ்சிறப்புளாராகவுமொழிதி
கைத்தலக்கனிபோல்பவவென்றுளங்கனிந்தா
னுத்தமப்பிரானவைமுழுவதுங்கொடுத்தொளித்தான். (௩௭)

பொய்யுரைத்தலின்வருபழியியாதற்குப்போக்கி
மெய்யுரைத்தவனாகியகடவுளைவிழைவோர்
வையமுற்றுமோர்குடைநிழன்மருவுறவாழ்ந்து
செய்யவற்புதச்சிவபிரான்றிருவடிசேர்வார். (௩அ)

ஈரநீர்வயல்வங்கதேயத்தினுக்கிறைவன்
சூரசேனனென்றுரைசெயும்பெயருடைத்தோன்றல்
வாரமாரவன்மனைவிகாந்திமதிமெய்முழுதுஞ்
சோரவெம்புணிரொழுந்தகுட்டநோய்துனைந்தே. (௩௯)

அன்னகுட்டநோயெழுதலுமரசனுளழுங்கி
யென்னசெய்துமென்றிருந்தனன்புரோகிதனெய்தி
நன்னர்மேவியகும்பகோணத்தினைநண்ணி
யன்னமார்துறைப்பகவதீர்த்தத்தினையடைந்து. (சo)

விதியின்மூழ்குபுபாணபுரோசனாமேவி
மதியினேத்திடிற்குட்டநோயறுமெனவகுப்பக்
கதியின்மன்னவன்மனையொடுகுடந்தையுட்கலந்து
துதியமைந்தவண்பகவதீர்த்தத்துறைமுழுகி. (சக)

மேயபாணபுரோசனைப்பூசித்துவிரும்ப
வாயகுட்டநோய்தவிர்ந்தொருபுதல்வனையளித்தாண்
மாயநீங்கியபன்னிமன்னவனுளமகிழ்ந்து
தூயபல்பொருள்வேண்டுவதுதவுபுதொழுது. (சஉ)

பெற்றமூர்கனைப்புரோசர்தம்பேரருள்பெற்றுக்
கற்றநாவலர்புகழ்வங்கதேயத்தைக்கலந்து
செற்றமோவுதன்னிருக்கையுற்றரசுசெய்திருந்தான்
கொற்றமன்னவர்திறைபலகொடுத்துக்கும்பிடவே. (சங)

வீரமார்தருபாணபுரோசர்தமேன்மை
யாரவோதுறிலின்னமுமளப்பிலவாகுந்
தீரவோதிடவல்லவர்திகழ்ந்தவிண்ணிடத்தும்
பாரமண்ணிடத்தும்மிலையெனிற்பகர்பவர்யார். (சச)

பாணபுரோசப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உoகக.

## மாலதிவனப்படலம்.

முன்னுசீர்க்குடமூக்குநற்றல, மென்னும்வண்சிவலோகத்தெல்லையுண்
மன்னுமாலதிவனத்துமேன்மையை, யுன்னுமாசிறிதுரைக்கலுற்றனம். (க)

உதயமால்வரையுறையும்வாழ்க்கையா, னிதயநன்மையானிருந்தசீர்த்திய
முதயனுதியோர்முகந்துதேக்கவன், புதயவாதியிற்பொலியுமேன்மையான்.(உ)

மறைகள்யாவையும்வடித்துணர்ந்தவன்,பிறைகுலாஞ்சடைப்பெரியதேவற்குக்
குறைவிலாவன்புகூடுஞ்சிந்தையா, னறைநிசாகரப்பெயரமைந்தவன். (ங)

ஆற்றுமாதவத்தனையன்புத்திரன், ஞேற்றுமேன்மையான்றூமகேதுப்பே
ரோற்றுவாழ்பவனிருந்தவத்தினு, னீற்றுவாஞ்சையானிகரிலாதவன். (ச)

போற்றுமாமறைப்பொருளெலாமிகத், தேற்றுநீர்மையான்செறிந்தவர்க்கெலா
ஞ், சாற்றுமுத்தியைத்தகத்தருந்தல, மாற்றுமண்மிசையாதென்றுயந்தனன் .()

பொற்றவார்சடைப்புண்ணியப்பிரா, னற்றமேவுருவருளின்வீக்கத்தாற்
கொற்றமார்கும்பகோணமேயெனுக்,கற்றமேன்மையான்கருத்திற்றேர்ந்தனன்

தூயமாணவர்கூட்டஞ்சூழ்வர, மேயமாதவன்விரைந்தெழுந்தனன்
னேயமாநிலமகட்குத்தூமுக, மாயகும்பகோணத்தையண்மினன். (எ)

வேதமாதியவிழைகுடந்தையுட், சீதமாமகதீர்த்தந்தோய்ந்தன
னுதர்கும்பலிங்கேசர்நல்லபொற், பாதமேத்துபுபணிந்துபோற்றியே. (அ)

குவலயம்புகழ்கும்பகோணத்துத், தவலிலாதநற்றலங்கள்யாவுஞ்சென்
றிவருமன்புடனிறைஞ்சியேத்தினன், றுவர்விராஞ்சடைத்தூமகேதுவே. (கூ)

சுருதியேத்துபுதொழுங்கடேசற்கு, நிருதிமூலையினிலவவேகினன்
றிருவுங்கல்வியுஞ்சிறப்பநல்குவான், மருவுமாலதிவனங்கண்டானரோ. (க0)

மன்னுமாலதிவனத்துட்புக்கனன், பன்னுபல்வளமனைத்தும்பார்த்தனன்
கொன்னுநல்லருள்கொழித்துச்சங்கர, னென்னுமோர்குறியிருப்பக்கண்டனன்.

கண்டபோதெழுகளிப்பின்மூழ்கினன், றண்டமென்னநேர்தாழ்ந்துபோற்றின
ன், வண்டவாங்குழன்மங்கைபங்குடை, யண்டர்நாதனிங்கடுத்ததென்னென்பா
[ன்.

பூசைசெய்திடப்புந்திசெய்தவன், றேசைமேவுமோர்தீர்த்தநாடினன்
மாசையோப்புமவ்வனத்திற்கீசனு, ராசைமேவுமோராவிகண்டனன். (கங)

திருந்தவாருணதீர்த்தப்பேர்கொடு, பொருந்துமற்றதைப்புதிதுசெய்தனன்
கருந்துழாய்முகில்காணொணாச்சுவை, மருந்தின்மாமுடியாட்டல்வாஞ்சித்தான்.

முழுகிமஞ்சனமொண்டுகொண்டெழுந், தொழுகுநீர்ச்சடையொருத்தன்மாமு
டி, வழுவிலாகமவழிநன்காட்டினன், பழுதிலாமலர்பறித்துச்சாத்தினன் (கரு)

மாலதிப்பெயர்வனத்துமேவிய, கோலமார்சிவக்கொழுந்தையிங்ஙனங்
காலந்தோறுமுட்கசிந்தவன்பொடுஞ், சீலமாதவன்பூசைசெய்வனால். (கசு)

அண்ணல்பூசையோரயுதமாண்டுக, டிண்ணமாதவன்செய்யுநாளையில்
வண்ணவார்குழன்மங்கைபங்குளான், செண்ணமால்விடைமேற்றிகழ்ந்தனன்.

அம்மையோடுநற்காட்சியாங்கருள், செம்மைமேனியானருளைச்சிந்தியா [ன்.
வெம்மைதீர்முனிவிரைந்தெழுந்தன, னெம்மையாடியென்றிறைஞ்சி வீழ்ந்தன

ஐயனேயருளாளனேமழுக், கையனேநுதற்கண்ணனேதுதி
மெய்யனேபுகல்வேதனேபுவி, வையனேயெனவாழ்த்தியேத்தினன். (ககூ)

இந்தவாறிருந்துதியம்பிடு, மந்தமாதவனன்புநோக்கியே
விந்தமால்விடைமீதுவந்தவன், சந்தமார்தரவீதுசாற்றுவான். (உ0)

மேயவெவ்வரம்வேண்டினாலும்யா, நேயமோடவைநிரப்பநின்றனந்
தூயமாதவச்சுபலனேயற்றாற்; பாயநல்வரம்பரிவிற்கேளென்றான். (உக)

(வேறு)

என்றலும்வணங்கித்தூமகேதுவென்றிசைக்குமேலோ
னன்றலில்கருணைவாழ்வேயடியவர்க்கெய்ப்பில்வைப்பே
பொன்றலிலாவானந்தப்புணரியேநினதுகாட்சி
வென்றயான்பெற்றேனின்னும்வேண்டுவதொன்றுண்டேயோ. (உஉ)

ஆயினுமடியனேனுன்னடிக்கலப்புறுதல்வேண்டுந்
தாயினுமினியையாகிப்பிரபஞ்சந்தழைக்குமாற்று
ளுயினுங்கடையேன்காணநல்லமாலதிவனத்து
மேயினையடிகேளற்றால்விச்சுவநாதனென்று. (உ௩)

ஒருதிருப்பெயர்நீயுற்றேயோங்குறவேண்டுநின்பான்
மருமலர்க்குழலாள்காட்சிமாத்திரத்தானந்தம்மே
பெருமையிற்சுரக்கமேவும்பெற்றியாலெந்தஞான்று
மொருமையிற்பொலியானந்தவல்லியென்றொருபேர்பூண்டு. (உச)

நிலையுறப்பொலிதல்வேண்டுநிலவயான்புதிதுசெய்த
மலைவறப்பொலியாநிற்கும்வாருணநாமதீர்த்த
மலைவறவடியேன்பேர்பூண்டமைதரவிளங்கல்வேண்டுங்
கலைமறையுணராய்நின்னைக்கைதொழுதிறைஞ்சிப்போற்றி. (உ௫)

நித்தியமாதியாவுநிலவுறப்பொலிவிப்போரும்
பத்தியிற்சினகரத்துப்பழுதறப்புதுக்குவோருஞ்
சுத்தியிற்பாத்திராதிமுதலியதொகுப்பிப்போரு
மெத்தியவாகனாதிவிருப்பொடுசேர்ப்பிப்போரும். (உசா)

தெண்டிரையுடுத்தவைப்பிற்செறலருந்திருவமெய்திப்
பெண்டிர்முற்பல்லோராயபெருங்கிளைசூழவாழ்ந்து
வண்டிமிர்கற்பநாட்டுமரீஇப்பலபோகந்துய்த்துத்
தொண்டர்சூழ்சிவலோகத்துத்துன்னிவாழ்ந்திருத்தல்வேண். (உஎ)

இவ்வரம்வேண்டுமென்னவிசைத்தவவ்வரங்களெல்லாஞ்
செவ்விதினருளிச்செய்துதிருவுருக்கரந்தானையன்
வெவ்வினைதவிர்ந்தமேலோன்மீளவும்பன்னாட்போற்றி
நவ்வியங்கரத்தான்பாதநண்ணியின்புற்றானன்றே. (உஅ)

நயமிகுமுனிவன்வேண்டநல்வரமளித்தவாற்றால்
வயமிகுபுகழ்சான்றோங்குமாலதிவனத்துவாழ்வோன்
வியமிகுபுகழான்மிக்கவிச்சுவநாதனென்னும்
பயமிகுமொருபேர்பெற்றான்பாரொலாம்புகழ்ந்துபோற்ற. (உகூ)

மாதுமையவளானந்தவல்லியென்றொருபேர்பூண்டு
தீதுயிர்க்கொழித்துவாழ்வாடிருந்துவாருணநற்றீர்த்தம்
போதுசெய்தாமகேதுதீர்த்தமாய்ப்பொலிந்ததாங்குக்
காதுசெய்வினையராவார்கலந்துதோய்தருதிறத்தோர். (௩0)

மீனமாமதியமெய்தும்பூரணைவிராயநாளி
லீனமில்சிரத்தையோடுமிடபலக்கினத்திலந்நீ
ரானதின்முழுகியெங்களானந்தவல்லியோடு
தீனர்தங்குழாத்தைக்காக்கும்விசுவநாதனைச்சேவிப்போர். (௩க)

எண்ணியபோகமெல்லாமெண்ணியவாறேதுய்ப்பர்
புண்ணியவந்நாளந்தமுனிவரன்பொலியக்காட்சி
நண்ணியபெருமான்முன்னநல்கியநாளென்றோர்மின்
பண்ணியதவத்துமேலாம்பண்புசான்றமராநிற்பீர். (௩உ)

மாலதிவனப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உகநக.

---

# குடவாயிற்படலம்.

—————:o:—————

மடவாரும்வலிசாதிண்டோண்மைந்தருமருவியாடுந்
தடவாவியோடையோடுதண்மலர்ச்சோலைசூழ்ந்து
படவாளராப்பூணையர்பரிந்தமர்தானமாய
குடவாயின்மேன்மைசற்றேகூறுதலுற்றாமன்றே. (க)

அராவணிசடையெம்மண்ணலமுதகும்பஞ்சிதைப்பான்
கிராதவல்வேடங்கொண்டுகெழுசிலைவளையக்கோட்டிப்
பராவுமேத்தொடுத்தவன்றுபற்றின்றிப்பெயர்ந்தமூக்குத்
தராதலம்வியப்பவீழ்ந்ததானமாத்தலமாயிற்றே. (உ)

அந்தரநாடரோத்துமத்தகுதானத்தெங்கள்
சுந்தரநிமலமூர்த்திசுவேச்சையாலிலிங்கமாக
வந்தரகரவென்றெல்லாவன்பரும்வழுத்தியேத்தச்
சிந்தரவுரவமெல்லாந்திருத்தகமுளைத்தானன்றே. (ங)

வீணேசருளஞ்சாராதவித்தகர்வாரிதுஞ்சும்
பாணேசரைப்புற்றோன்மேற்பண்புறயாத்தசர்ப்ப
நாணேசரனந்தமாயநாமேசரெவரும்போற்றக்
கோணேசனெனுமோர்நாமங்கொண்டனர்கொடுமைமாய. (ச)

கடத்துதித்தவர்கும்பேசர்கடத்துமூக்கெழுந்துவீழ்ந்த
விடத்துதித்தவர்கோணேசரிப்பெருந்தொடர்பாலின்பம்
படத்துதித்தவர்பான்மேயபரமர்கும்பேசருக்குந்
தடத்துதித்தவர்சூழ்கோணேசருக்கும்வேற்றுமையொன்றின்றே. (ரு)

கொண்டல்வந்துறங்குமாடக்குலக்குடவாயில்கண்டோர்
மண்டலங்குலையச்சீறுமறலிதன்னகரங்காணார்
விண்டலம்புகழுமந்தமெய்த்தலத்திடைவசித்தோர்
கண்டலம்வெறுத்துச்சோரக்கருத்தலம்வசியாரன்றே. (சா)

அத்தலந்தரிசித்தோரையாவருந்தரிசிப்பார்க
ளத்தலஞ்சூழ்ந்துளோரையாவருஞ்சூழ்தல்செய்வா
ரத்தலந்தாழ்ந்துளோரையாவருந்தாழ்ந்துளோரோ
யத்தலம்வசித்தோர்தம்பாலியாவரும்வசிப்பர்நாளும். (எ)

பரசிவனடியார்தம்மைப்பரசிவனாகக்கொள்ளார்
பரசிவனமருந்தானம்பற்பலசென்றுபோற்றார்
பரசிவன்பூசைசெய்யாராயபாதகரெலாமப்
பரசிவன்கோணநாதன்பதியுறப்பெறாராலென்றும். (அ)

அறைமறைநிந்தைதெய்வவாகமநிந்தையன்பு
நிறைகுருநிந்தைகற்றோர்நிந்தைமாவிரதர்நிந்தை
பறைபசுக்கொலைமுன்னாயபல்கொலைப்பாவமெல்லா
மிறைவர்கோணேசர்காட்சியொன்றனாலிரிந்துமாயும். (கூ)

பற்பலவுரைப்பதென்னோபரவுகும்பேசர்பொற்றா
ளற்புறக்கண்டுபோற்றியருச்சனைசெய்தோரெல்லாம்
பொற்பமர்புகழ்க்கோணேசர்பொற்பதம்போற்றிவாழ்த்திக்
கற்புறவருச்சித்தாரேயாவர்காமருதவத்தீர். (க௦)

கூறுகும்பேசனொன்றுங்கோணேசனொன்றுநாமம்
வேறுகொண்டிடுவாரொல்லாமேதகுகருணைவாய்ந்த
வேறுவண்கொடியுயர்த்தகும்பகோணேசனென்னி
ஞூறுமன்புதிப்பயாரைநவிலுவாரறிகிலேமால். (கக)
திருக்குடவாயின்மேயசிவபிரான்பெயர்சொற்றாலும்
பெருக்கெழுகல்விசெல்வம்பெற்றுவாழ்நாளுநீடித்
தருக்குலந்தழையுநாட்டுத்தவாதபோகமுந்துய்த்திற்றின்
முருக்குவெவ்வினையினீங்கிமுதல்வன்றாணிழல்வாழ்வார். (கஉ)

குடவாயிற்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உகசரு.

---

## திருக்கலயநல்லூர்ப்படலம்.

கருதிருக்கெடுத்துக்கூறுங்காட்சியதாகியார்க்கு
மிருதிருக்களவாநோக்கமியைந்துவெம்பாசமாய
வொருதிருக்கெவர்க்குமாய்த்தேயும்பர்வீடாயவின்பந்
தருதிருக்கலயநல்லூர்ப்புகழ்சிலசாற்றலுற்றாம். (க)

மலர்மகன்பூசையாற்றிவைத்ததோரமுதகும்ப
மலர்தருவெள்ளத்தூடேமிதந்துவந்தலைந்தவாற்றா
லுலர்தலிலாதசூதபத்திரமொழிந்துவீழ்ந்து
பலர்தொழும்வன்னியாகிப்படர்நிழல்செய்ததன்றே. (உ)

அந்தவண்டருவினீழற்றருப்பையுமருளின்வீழ்ந்து
கந்தமென்மலரோனாதியாவருங்கண்டுபோற்றப்
பந்தவெவ்வினையினீங்கிப்பாருயிரனைத்துமுய்யச்
சந்தநன்மறைகள்வாழ்த்தமுளைத்ததோர்சயம்புலிங்கம். (௩)

அழிவருமமுதகும்பமாகியகலயமாங்கு
மொழிதருமலைவிராவமுயங்கியசுழலிற்பட்டே
யுழிதருதலிற்றருப்பையுக்கதேமாதலாலே
பழிதவிர்கலயநல்லூரெனும்பெயர்படைத்ததம்மா. (ச)

வன்னியந்தருவினீழன்மருவியசயம்புலிங்கம்
பன்னியகூர்ச்சலிங்கமெனும்பெயர்படைத்ததந்த
மின்னியவிலிங்கந்தன்னைவிளக்கஞ்சால்சத்தமாதர்
மன்னியவுவந்துகாத்துவாழ்கின்றாராங்குமாதோ. (ரு)
அன்னமாவிலிங்கந்தன்னையார்வத்திற்றரிசிப்போரு
நன்னராதரித்துப்போற்றிநயந்தனர்பணிகின்றாரு
முன்னருமதனைத்தூரத்துற்றிருந்துள்கின்றாரு
மென்னராயினுமாபாவமிரித்துவிடடைவரன்றே. (சா)
தருப்பையேயாவருக்குந்தவாதபாவனத்தைச்செய்யும்
விருப்பமாரதுவேவன்னிவியன்றருவடியின்மேவி
யுருப்பமிலிலிங்கமாகியொளிர்தரவதனுளெம்மா
னிருப்பனேலுரைக்கலாவதின்னுமொன்றுண்டாங்கொல்லோ. (எ)

வன்னியந்தருவின்மேயவளரொளித்தருப்பைநாதர்
சந்நிதியடைந்துதாழ்ந்துதவாப்பணிபலவுஞ்செய்வோர்
முன்னியவனைத்தும்பெற்றுமுத்தரேயாகிவாழ்வார்
பன்னியவ்வவரைக்காக்கும்பண்புடைச்சத்தமாதர். (அ)

தம்மையுமருச்சித்தேத்தித்தவாதபேரன்புசெய்வார்
வெம்மையில்போகமூழ்கிமேலவராகிவாழ்வா
ரெம்மையாளுடையகூர்ச்சவிலிங்கத்தின்பெருமையெல்லா
மும்மைவையகத்துளோர்க்குமொழிதரமுற்றுவன்றே. (௬)

திருக்கலயநல்லூர்ப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - உ௪௫௪.

## ஆராவமுதப்படலம்.

:o:

திரையெறிதடத்துச்செறிதருநீலச்செழுமலரகத்தளிகுடைய
விரைநறுந்துகண்மிக்கெழுந்துமேற்பரந்துவெய்யவன்கிரணத்தைமறைப்ப
வரைமகள்பரன்கண்புதைத்தனளெனமண்மதித்திடும்வளப்பெருங்குடந்தை
யுரைகெழுநெடுமால்கண்வளரிடங்கொண்டுவந்ததையெடுத்துரைசெய்வாம். ()

மதிகதிருடுக்களிராசிகளனைத்தும்வலஞ்செயப்படுவதாயமரர்
பதிதரமருவப்படுமொராலயமாய்ப்பரசிவன்கரதலத்தனுவாய்த்
திதியமையுலகிற்றிசைபகுத்துணரத்திகழ்தரவமையறிகுறியாய்த்
துதிசெறிதருமாற்றுயர்ந்தசெம்பொன்னாய்த்துலங்கிநிற்பதுமகாமேரு. (உ)

அன்னபொன்வரைமேலவிர்தருசிகரமளப்பிலவாலவற்றொன்றி
லின்னமுதனையகுதலையஞ்செவ்வாயேந்தெழிற்றிருமகண்மணாளன்
பொன்னவிர்சிலம்புபூண்டொளிர்மலர்த்தாள்புந்தியிற்கொடுதவம்புரிந்தா
னன்னலம்பயக்கும்பெருங்குணத்துயர்ச்சிநண்ணியவேமமாமுனிவன். (௩)

முனிவரனனையதவம்புரிகாலைமுற்றிழைத்திருமகண்மணாளன்
கனிதருமுவப்பினுயிடைத்தோன்றக்கண்டமாமுனிவரனெழுந்து
பனிமலரிறைத்துப்பாதமேற்பணிந்துபருவரலொழிந்தனனென்று
துனிதவிர்ந்தாடிப்பாடிபுகழ்ந்துதுதிபலசெய்துமுன்னின்றான். (௪)

நின்றவன்வதனநோக்குபுமகிழ்ந்துநினைத்தமையெவனுரையென்றான்
கன்றலிலலைசார்பாற்கடன்மிசையோர்கார்க்கடலெனவிழிவளர்வோ
னன்றவனுவந்துகருணையங்கடலேயடியவர்தம்பெருவாழ்வே
வென்றவண்புகழாயடியனேன்முத்திவேண்டினனல்குதியென்றான். (௫)

மாதவனுரைத்தமொழிசெவியேற்றுவருதிரைப்பாற்கடனடுவட்
காதலிற்கிடக்குமாயிரந்தடப்பைக்கட்செவிப்பாப்பணைமேலா
லோதருஞ்செய்யதாமரைபலபூத்தொருமரகதமலைகிடந்தாங்
காதரம்பயப்பவறிதுயிலமருமண்ணன்மாயவனிஃதுரைப்பான். (௬)

முனிவரகேட்டிமுத்திவேண்டினையேன்முயன்றவித்தேத்துநாநல்சோம்
பனிமலர்தூவிப்பண்ணவர்பரவப்படுவதாயென்றுமுள்ளதுவா
யுனிநதிநதங்களானடுபன்னிரண்டற்கொருதரஞ்சென்றுமூழ்குதற்கா
தனியமர்தீர்த்தம்பொலிவதாய்வயங்குந்தன்மையதொருகும்பகோணம். (எ)

அத்தகுதலத்துட்கும்பலிங்கேசரருட்பெருஞ்சந்நிதிமுன்னு
வுத்தமவமுதவாவியென்றொருபேருற்றொளிர்தருமொருதீர்த்த
முத்தலம்புகழுமனையதீர்த்தத்தின்முகிழ்பலவுளவடகரையிற்
சித்தநன்குவப்பவடைந்துநன்கிருந்துதிருத்தகுமாதவம்புரிதி. (௮)

புரிதருதவத்திற்கிரங்கியாமாங்குப்போந்துநீநினைத்ததுகொடுப்போம்
விரிதருதவத்தாயென்றுரைத்தருளிமெல்லியற்சிற்றிடைப்பணைத்தோட்
சரிதருகூந்தற்றிருமகடிதலைத்தடமுலையுழுதமுதுழக்கப்
பரிதருமகிழ்ச்சிமீக்கொளுந்தடந்தோட்பண்ணவன்மறைந்துபோயினனால். ()

தானவர்மடவார்கண்டநாணிறக்கச்சார்ங்கநாணேற்றிடும்வலியோ
னானவன்மறைந்துபோயபினனையானருட்டிறமிருந்ததையுன்னி
மோனநன்முனிவர்குழாம்புகழேமமுனிவரனாயிடைநீங்கிப்
பானலங்கழனிபுடைவளைத்தோங்கும்பைம்பொழிற்குடந்தைவந்துற்றான். ()

தடமதிற்குடந்தையடைந்தமாமுனிவன்றண்புனற்காவிரிமுழுகி [ந்து
விடலருமழலோன்றிசைப்பெருந்தீர்த்தம்விருப்பொடுஞ்சென்றுதோய்ந்தெழு
படவரவணியுங்கும்பலிங்கேசர்முதலியபலரையும்போற்றிக்
கடவுளர்பலரும்விழைதருமமுதவாவியொண்கரையடைந்தனனே. (௧௧)

மேதகுமமுதவாவியின்வளங்கள்வியப்புறநோக்கியுண்மகிழ்ந்து
காதலினனையநறும்புனல்படிந்துகதித்தெழுமதன்வடகரையி
லோதருந்தவத்திற்குறையுளொன்றமைத்தாங்குற்றிருந்தராவணைக்கிடக்கைச்
சீதரப்பெருமான்றிருவடியிரண்டுஞ்சிந்தையுட்பதித்துநோற்றிடுவான். (௧௨)

தழன்முகந்திறைக்குமிருபெருவேனிறவலறப்பொலிபருவத்தி
லழல்கொடுந்தழல்சூழ்தரநனிவளர்த்தேயத்தகுதழனடுவமர்ந்து
முழல்பனிமுதலாங்கொடுங்குளிர்ப்பருவமுற்றுழியளவில்வெண்டிரைக
ளெழல்பொலியமுதவாவியின்மூழ்கியிருந்துமாதவநனிபுரிந்தான். (௧௩)

இன்னணமரியதவம்புரிந்தேமவிருடிநன்கமர்தருகாலைப்
பன்னகவணைமேற்றிருமகண்மலர்க்கைபதாம்புயம்வருடிடத்துயில்வோ
றன்னமர்சுவேச்சையாற்றுயிலுணர்ந்துதழைதரவுலகெலாமெழுந்தா
னன்னயம்பொலியுமன்னதோர்காலைநகுமலர்மடந்தையாங்கெழுந்து. (௧௪)

உலகொருங்களந்ததிருவடிவணங்கியும்பர்நாயகமதுப்பொழியு
மலர்பசுந்துளபத்தொடைதுயன்மருமத்தண்ணலங்கவுத்துவமிமைக்கப்
பலர்தொழப்பொலியும்பண்ணவகருணைப்பகவபஞ்சாயுததரநன்
கிலகநற்றவஞ்செயேமமாமுனிவற்கிசைத்ததெண்ணுமையென்னென்றாள். ()

திருமகண்மொழிந்தமொழியுளத்துணர்ந்துசெய்யவாய்வெண்ணகைபூத்துக்
குருமணியிமைக்குமறுவொளிர்மார்பக்கொண்டன்மேனியனிஃதுரைப்பான்
மருமலர்க்குழலாய்கும்பகோணத்தைமருவிநீயமுதவாவியினுட் [ர்தி.
பொருவறப்பொலியோர்பொன்செய்தாமரைமேற்பொலிந்தொருகுழவியாயம

அந்தமாமுனிவன்கண்டுனையெடுத்தாதரமுறவளர்த்திடும்வளர்ந்து
சந்தமார்நீயுமென்வரவுள்ளித்தவம்புரிந்திருத்தியேல்யாமு
முந்தவாதரத்திற்புகுந்துனைமணந்துமுனிவற்குமுத்திநல்கிடுவோம்
பந்தமேவாமல்விரைதரவின்னேபடருதியென்றருள்செய்தான். (௧௭)

புவனமுண்டுமிழ்ந்தோனிதுமொழிந்திடலும்பொருக்கெனமனநிலைகலங்கித்
தவனுரைமறுத்தல்சற்புடைமடவார்தன்மையன்றெனப்பினுந்தெளிந்து
குவலயம்புரையுமேனியோயுளத்துக்குறித்தவாறடியனங்கடைவேன்
கவலறும்படிநீவிரைந்துவந்தளித்தல்கடனெனப்புகன்றெழுந்தனளால். (சஅ)

செய்யபேரொளியிற்றிகழ்பதம்பணிந்துதிருத்தகப்புறவிடைபெற்றுப்
பையராவல்குற்பணைபுரைதிரடோட்பங்கயமலர்வருசெல்வி
மெய்யவாம்வளங்கூர்கும்பகோணத்தைவிழைந்துவந்தடுத்தனளடுத்துப்
பொய்யவாவாதபலருறையுளுஞ்சேர்ப்பொலிவளம்பலவுங்கண்டுவந்து. (கக)

அளவருஞ்சிறப்பிற்கும்பலிங்கேசராலயமுதற்பலதளியும்
வளர்பெரும்பொலிவுநோக்கியாமென்றும்வசித்திடத்தக்கதேயிதேயென்
றுளரளிக்கூந்தற்றிருமகளமுதவாவியின்வடகரையுற்றுள்
பளகறத்தவஞ்செய்தேமமாமுனிவன்பண்பின்வீற்றிருப்பதுங்கண்டாள். (உ0)

ஆயதோர்காலையீச்சுரனருளாலமுதநல்வாவியினுப்பண்
பாயபேரொளிசாலிளங்கதிருதயப்பண்பெனப்பங்கயமொன்று
நேயமார்சுவணமயமெனத்தோன்றிநிசழ்தரமலர்ந்திருந்தன்று
தூயமாலுந்தித்தாமரையெனவுஞ்சொல்லலாம்பொலிவுமாத்திரத்தின். (உக)

அன்னதாமரையைநோக்கியவாக்கமகமெனமுகமிகமலர்ந்து
தன்னதாரருளாலெம்பிரானுரைத்ததானமீதாதலிற்பொன்னு
மின்னதாமரைதான்மலர்ந்திருப்பஃதென்றெண்ணிமற்றதனுளேபுகுந்து
நன்னரோர்குழவியாகிவீற்றிருந்தாளுடலாமுய்ந்திடவந்தாள். (உஉ)

விடியலினெழுந்துகடன்கழிபொருட்டுவிரும்பியத்தடத்துறைபுகுந்த
வொடிவறுமுனிவன்செம்பொற்றாமரைமேலொள்ளொளிக்குழவியைநோக்கி
முடிவறுமகிழ்ச்சிதலைக்கொளவியந்துமுதிர்பெருவிருப்பொடுமடைந்து
கடிதலின்மகவைத்தொட்டனனவையான்கைக்கமலத்தமர்ந்ததுவே. (உங)

எண்ணுவாரிதையத்தாமரையிருக்குமேரிளவனமுலைக்கொம்பு
நண்ணுவார்திரைசூழ்வாவியினடுவணயந்தபொற்றாமரைநின்றும்
பண்ணுவார்தவத்துப்பொற்பெயர்முனிவன்பரவுகைத்தாமரையடைந்தாள்
கண்ணுவார்புவனத்தருந்தவம்போலக்காமருபயன்றரலுளதோ. (உச)

கருத்துறப்பொலியுந்தவப்பயன்கைமேற்கண்டெனப்பொலியுமாமகளைத்
திருத்துறநோக்கியுச்சிமோந்தணைத்துச்செறிந்ததன்னுறையுளிற்புகுந்து
பொருத்துறவளர்ப்பான்பேரொழிற்பொலிவின்பொம்மலைநோக்கியுண்மகிழ்வுற்
றிருத்துறவென்றுங்கோமளவல்லியெனுமொருநாமமிட்டழைத்தான். (உரு)

பலகதிர்விரிக்கும்பகன்முனமலரும்பங்கயத்தவிசெனநெடியோ
னலநிறமமர்ந்துகணக்கில்பல்லுயிர்க்குநாடுகாப்பியற்றிடுவாட்கு
நிலமளந்தறியாப்பெருந்தவமுனிவனிறைபெருங்கருணையிற்சேர்த்த
வலனுயர்தெய்வம்பலவுணர்தரக்கூய்வயங்குகாப்பியற்றினன்மாதோ. (உசு)

பதியெனக்காரேன்வயினுற்றுவந்தும்பயந்தவனென்றுளங்கொளாது
மதிவிருப்பமைந்துபுவிமகளேயம்மாயனைமணுளனுக்கொண்டாய்
திதியுனைநோக்கேனெனத்தலையசைக்குஞ்செய்கையிற்கோமளவல்லி
துதிமுகநிமிர்த்துச்சென்னிமற்றசைத்துத்தூயசெங்கீரையாடினளே. (உஎ)

பெற்றதாய்செம்பொற்றுமரையாகப்பிறங்குறவளர்க்குந்தாயெல்லாங்
கற்றமாமுனிகைத்தாமரையாகக்கலந்தருள்கோமளவல்லி
குற்றமோவிதயதாமரைமலர்ந்துகுவலயத்துயிரெலாந்தழையப்
பொற்றதாலோதாலென்றிடவுவந்துபொற்றிருத்தொட்டின்மேவினளே (௨அ)

அறிதுயிலராமேலமருமெம்பெருமானடிமலர்வருடல்செய்யாது
பொறியறப்பிரிந்தசெங்கைகாளும்மைப்புடைத்தன்றிவிடேனெனமுயன்று [ச்
முறிவறப்புடைக்குஞ்செயலெனவகங்கைமுகிழ்த்தொன்றனோடொன்றுதாக்க
செறிகருங்கூந்தற்கோமளவல்லிதிகழ்ந்துசப்பாணிகொட்டினளே. (௨௯)

முடங்கலின்முத்தமதன்றழல்குளிக்குமுகின்முத்தமிடித்தழன்முழுகு
மடங்கலில்யானைக்கோட்டுறுமுத்தமற்றதன்கட்டழலழுந்து
முடங்கிவையன்றுய்வெப்பமுண்மையினுல்வேண்டிலோமுனதுசெம்பவளத்
தடங்கருமுத்தந்தாவெனமுத்தமளித்தனள்கோமளவல்லி. (௩0)

வருகதெள்ளமுதேவருகசெங்கரும்பேவருகசெந்தாமரைமகளே
வருகபொற்கொம்பேசிறுசிலம்பாதிமலரடியிடைக்கலகலென
வருகவற்புதமேயெங்குலக்கொழுந்தேவருகபேரானந்தவாழ்வே
வருகசித்திரமேயென்றுபசரிப்பவருவள்பூங்கோமளவல்லி. (௩க)

முன்னநீயுதித்தவிடத்திவளுதித்தாண்முயற்கறைசிறிதுமில்லாதா
ணன்னர்நீயிந்தத்தலத்தினையடைந்தானைதலற்றுயர்வதுசரத
முன்னரும்விடவாயாயிரமமைந்தவுரகமறறிவண்மொழிகேட்கு
முன்னவம்புலியேவருகெனவழைப்பமகிழ்ந்தனள்கோமளவல்லி. (௩௨)

மலர்செழுங்கரந்தாமரையெனக்கருதிவந்துவீழ்பலகருஞ்சுரும்பர்
புலர்தவிலஃதன்றெனத்தெளிந்தெழுந்துபோதல்போலொன்றன்பினென்று
பலர்புகழ்நீலமணியிழைத்தனவேபற்பலதொடர்ந்தெழுவினமென்
றலர்விழிச்சுரும்புந்தொடரவம்மனைதொட்டாடினள்கோமளவல்லி. (௩௩)

கயல்விழிக்கயலைச்சைவலநதியகருங்குழலாயசைவலத்தை
யயல்வரால்கணைக்காலாகியவராலையங்கொடிமருங்குனுண்கொடியை
யியல்பலகமலமுகமுதலாகவியைபலகமலத்தைநட்க
வுயவுறவந்தகோமளவல்லியுவந்துநீராடினள்பொன்னி. (௩ச)

செய்யதாமரைமேனெடியவனிறமேற்செறிந்தமர்தருதிறம்விளங்க
வையசெம்மணியானீலவொண்மணியாலாய்வெவ்வேறுய்ப்பொலிபலகை
யெய்யநன்கேறியிருளையர்பல்லோரிருபுறம்வடங்கடொட்டாட்டத்
தையலங்கொழுந்துகோமளவல்லிதவாவொளியூசலாடினளே. (௩ரு)

இன்னணமேமமுனிவரன்களிப்பவெழில்பொலிகோமளக்கொழுந்து
பன்னருமாடல்பலவுவந்தியற்றிப்பண்மைமைமங்கையம்பருவ
நன்னர்வந்தமையவரவணைக்கிடக்கைநாயகன்மருவுறுபாக்குத்
தன்னமர்விருப்பிற்றந்தையேபோலத்தானுமாதவம்புரிந்தமர்ந்தாள். (௩சா)

ஒளிவளர்செல்விதவஞ்செயச்சதுரயுகமிருபத்துநான்கொழிந்த
வளிவளரிமையோருலகினைவளையாவசுரர்களடுசமர்புரிந்து
களிவளர்கற்பதருமுதற்பலவுங்கவர்ந்தனர்கடவுளர்கலங்கித்
தெளிவளர்யாரையடைகுதும்யாரோதீர்ப்பரிக்கவலையென்றுழன்றூர். (௩எ)

அத்தருகாலையவிர்சதகோடியங்கையானமரரோடெழுந்து
முத்தமொண்டிறைக்குஞ்செறிபெருந்தரங்கமூசுவண்பாற்கடலடைந்து
பைத்தலையரவப்படுக்கைமேற்சமலம்பற்பலமலர்ந்தொருகொண்மூ
வொத்துறக்கிடந்தாலெனக்கிடந்துறங்குமொருநெடுமாயனைக்கண்டான்.(௩௮)

இருகரந்தலைமேற்குவித்துநின்றவுணரொனுமதகயங்களுக்கேறே
யருமறைவிரித்துச்சொலப்படும்புகழினச்சுதானந்தகோவிந்த
கருமிஞிறிரைப்பமதுமுகத்திறைக்குங்கருந்துழாய்க்கண்ணியம்புயத்த
குருமணிகிடந்துபரிதியினிமைக்குங்குளிர்நிறத்தவநினைத்தொழுதோம். (௩௯)

மழைநெடுமுகிலோமரகதமலையோவயங்குறுமஞ்சனத்திரளோ
விழைகருங்கடலோவுற்பலமலரோவிளங்கொளிக்காசையோவென்று
பிழையறநோக்குங்கண்களுமிருளப்பிறங்கொளிமேனியம்மானே
கழைகுழைத்தெழுமோர்காமனைப்பயந்தகாகுத்தநின்னடிபோற்றி. (௪௦)

இருக்கையுமிழந்தோஞ்செல்வமுமிழந்தோமெண்ணரும்போகமுமிழந்தோந்
திருக்கழிந்தமையாத்தானவக்கொடியோர்செறுதலினின்னைவந்தடைந்தோம்
பொருக்கெனவெழுந்துபுரந்திடாதெவர்பாற்போம்விருந்தோவெனத்துயில்வா
ய்,மருக்குலாந்துளவத்தொடையலாயிதுவோமாண்பெழுந்தருளுதல்வேண்டும்

பராமுகமாதல்பழுதுகாணெழுந்தெம்மையுமையொழித்தியென்றேத்த
வராவணைக்கிடக்கையண்ணலாங்கெழுந்தேயரசனையமரரைநோக்கக்
கராசலத்தியந்துங்கடவுளுமற்றைக்கடவுளர்களும்பணிந்தெழுந்தார்
தராதலச்சுவைப்போனகங்கொளும்பெருமான்சார்ந்தவானவர்முகநோக்கி. ()

உறுதுயர்முகத்துத்தேக்கிவந்தடைந்தீருற்றதையுரைசெய்மினென்றான்
றெறுதொழிலவுணர்கடுஞ்சமரியற்றித்தெவ்விறொங்கள்பல்வளமுங்
கறுவொடுமவரைக்காய்ந்தெமைப்புரக்குங்களைகணுயுள்ளவனீயே
மறுவொளிர்மார்பத்தண்ணலேயென்றார்வனத்துழாயவனுளத்துணர்ந்து(௪௩)

முதிர்சுடர்த்திகிரிமுன்னமோர்ததீசிமுனிவன்மெய்த்தாக்கிவாய்மடிந்த
ததிர்குரற்றகுவர்குலமுழுதழிக்குமாழிவேறடைவதவேண்டும்
பிதிர்தலிலதற்குக்கும்பலிங்கேசப்பிரானமர்குடந்தையுண்மேவி
யுதிர்தலில்கருணைநாகநாயகன்பாலுசாவிநேசித்ததுபெறுவோம். (௪௪)

அதுநமதொருகையடைதரின்வளங்களனைத்துநீரடைவதுசரத
மிதுவலதின்னுமேமமாமுனிவனிருந்தவக்கருளுதற்பொருட்டு [ங்
மதுமலர்க்குழன்மாமணஞ்செயும்பொருட்டும் வயங்குமக்குடந்தையுளொருநா
கதுமெனவடைதல்வேண்டுநீர்முந்திக்கருதுமத்தலம்புகுந்தமர்மின். (௪௫)

விளைதரயாமும்வருகுதுமென்றுவிடையினிதளித்தருளினனாற்
குளைகழல்வானோரனைவருஞ்சென்றுகுடந்தையுற்றமர்ந்தினிதிருந்தார்
வளைகுடையாகக்கொண்டுகோவளித்தமாயவன்கருடனைநினைத்தான்
புளையறுமனையன்வந்தடிபோற்றப்பொருக்கெனவவன்பிடரிவர்ந்தான். (௪௬)

பொன்வரைப்பிடர்மேலிந்திரநீலப்பொருப்பிவர்ந்தெனப்புண்மேலிவர்ந்த
மின்வளர்மார்பன்விடுவச்சேனனைமுன்விறற்பெருவீரர்சூழ்போதத்
தென்வளர்முகிலிற்றூர்துபியார்ப்பச்செறிதருமாகதர்பாட
மன்வளமலிந்தகும்பகோணத்துவானவரோத்தவுற்றனனே . (௪௭)

உற்றவன்கும்பலிங்கநாயகர்தமொளிர்மணியாலயம்புகுந்து
கற்றவர்புகழுந்திருவடிவணங்கிக்கைகுவித்தருள்விடைபெற்று
நற்றவத்தேமமுனிவரனுறையுணண்ணினனவனெழுந்திறைஞ்சி
முற்றவர்க்கருளுமுகுந்தனேயடியேன்மொய்குழற்கொம்பைவேட்டருளி. ()

அடியனேன்கவலைதவிர்த்துயர்முத்தியடையவுமருளுதியென்றன்
கொடியதானவர்தங்குடர்கொழுவீருள்குருதியென்பொடுதடியனைத்துங்
கடியநாய்நரிபுண்முதலியகவரக்கைச்சிலைவளைத்திடும்விறலோன்
படியவாமுனிவன்கருத்தினைமுடிப்பான்பண்புறத்திருவுளங்கொண்டான். (சகூ)

ஆயதோர்காலையிந்திரன்முதலோரவிர்கடிமண்டபமியற்றி
நேயமார்விதானமுதலியவணிகணிரம்புமாறியற்றிடவதனுண்
மேயநான்முகத்தோன்விரைந்தழலோம்பவேதியராதியர்நெருங்கத்
தூயவாழ்த்தெடுத்துமுனிவர்பன்னியர்கடுவன்றினராயிடைமொய்ப்ப. (ருo)

முரசொலிமுகிலின்முழங்குறவழகுமொய்ம்மணத்தவிசின்மேலெவரும்
பரசொளிர்கலம்பூண்டருகுறவடைந்தபங்கயச்செல்வியோடமர்ந்து
விரசுபன்மறையுமிகுமுழக்கெடுப்பவிருப்பொடுவேட்டனனுவந்து
வரசுபகுணத்துமுனிவற்குமுத்திவழங்கினன்வையமுற்றேத்த. (ருக)

மதுமலர்க்கூந்தற்கோமளக்கொழுந்தைமணம்புரிந்தேமமாமுனிவன்
கதுமெனத்தனதுபழம்பதிபுகுதக்கருணைசெய்தளித்தகோபாலன்
சதுமுகத்தவன்முற்பலர்தொழுங்கருணைத்தம்பிரான்மருவுநாகேசப்
புதுமலர்த்தளியுண்மகபதிமுதலாம்புலவர்கடொடர்தரப்புகுந்தான். (ருஉ)

புக்குநாகேசன்றிருவடிவணங்கிப்பூசனைபலபகல்புரிய
நக்குமாதவநீவிழைந்ததென்னென்றனம்பிரானவற்கெதிர்தோன்றி
நெக்குமீட்டிறைஞ்சியசுரராலமரர்நிலைகுலைந்தழிந்தனரவர்க்குத்
திக்குவேறில்லைமற்றவர்ப்புரப்பான்றிருவுளங்கொண்டருளென்றான். (ருங)

என்றுமாலுரைப்பவரவினுக்கருள்கூரிறையவனினிதெடுத்தருள்வா
னன்றுவெவ்வலிகூர்சலந்தரப்பெயரினசுரனென்றொருவன்முன்னிருந்தா
னென்றுபல்லமரர்தமையெலாமமரினுடற்றுபுபுறங்கண்டுநமையும்
வென்றுதீர்பொருட்டுப்படைபலசூழவிழைந்தறைகூவினன்மாதோ. (ருச)

பொரவழைத்தவன்றன்செயன்முழுதுணர்ந்துபொலிதருகால்விரனகத்தாற்
பரவுமண்வளைத்தோர்சக்கரமமைத்தோம்பலபரிதியிற்பொலியதனை
விரவுறவெடுத்தியெடுத்தியேலளவாவீரனீயென்றனமெனலுங்
கரவின்மற்றவனுங்கையுறப்பற்றிக்கடுவலிகாட்டுவானெடுத்தான். (ருரு)

முன்கணைக்கான்மற்றதற்குமேன்முழந்தாண்மொழிதருகவானளையளவு
நன்கெடுத்ததன்மேனிறத்தளவெடுத்துநயப்புறுதோளளவெடுத்தான்
வன்புறுமனையகாலையிற்பரிதிமழுங்கிடப்பொலிசுடர்நேமி
துன்பமுற்றசுரர்நிலைகுலைந்தோடத்துணைந்தவன்றலையறுத்தன்றே. (ருசு)

படுவலியசுரன்றலையொடுமற்றைப்படையுளவனைத்தையுஞ்சாடி
விடுமொருநம்பாலடைந்ததஃததனைவிரிபுனற்காவிரியுய்த்தோம்
வடுவறுவிறலோய்மற்றதுதாங்கிவாள்வலியசுரரைச்சாடி
யிடுகுதலில்லாச்சக்கரபாணியெனும்பெயரினைப்புதுக்குகநீ. (ருஎ)

என்றருள்சுரந்தானன்றெனவிறைஞ்சியிரும்புனற்காவிரியகம்புக்
கொன்றமற்றதனைக்கண்டனனெடுத்தானெய்யெனப்பூசித்துத்தாங்கி
வென்றவண்புகழ்மாலிந்திரன்முதலாம்விண்ணவர்தற்புடைசூழச்
சென்றனனவுணர்தமையறைகூவிச்செருத்தொழினுள்பலசெய்தான். (௫௮)

சிலைவளைத்தடுகோல்பற்பலபூட்டிச்சிலபகலடுசமர்புரிந்து
மலைவறுதண்டாற்சிலபகலுடன்றும்வாள்கொடுசிலபகல்பொருது
மலைவறுபாஞ்சசன்னியமுழக்கியமைசிலநாட்சமர்செய்து
நிலைவலியவுணரொழிந்திலர்மேன்மேனிகழ்தரக்கிளைப்பதுகண்டு. (௫௯)

சுடர்விடுசுதரிசனப்படையெடுத்துச்சுழற்றுவிட்டனனதுவெம்
படர்புரியவுணப்படையெலாஞ்சவட்டிப்பங்கயச்செங்கண்மாயவன்ற
னடொளிக்கரத்தினறல்குளித்தடைந்ததமரர்தம்வளமெலாமவர்க்கே
யிடர்தபக்கொடுத்துமீண்டொருதிருமாலிரும்புகழ்க்குடந்தைவந்துற்றான். ()

குலவுவண்புகழ்சால்குடந்தைக்கீழ்க்கோட்டங்குறுகிநாகேசனையிறைஞ்சிப்
புலவுவாயவுணர்குழாத்தைநீகொடுத்தபொருசுடர்த்திகிரியால்வென்றே
னிலவுவானவர்தந்திருவெலாமவர்பானிலையுறக்கொடுத்தனன்மீண்டே
னுலவுசீராராவமுதமேயடியருறுகணீத்தருளுவோயென்றான். (௬௧)

என்றலுமாராவமுதமென்றெனைநீயிசைத்தலானீயுமப்பெயர்பூண்
டொன்றநமிருக்கையாயசோமேசத்துத்தரமுனக்குரிமையினு
னன்றமைகோயில்கொண்டுகண்வளர்திநலமலிபசுந்துழாய்த்தொடலைக்
கன்றலின்மருமத்தண்ணலேயென்றான்கருமுகில்விடைகொடுமீண்டான். (௬௨)

மீண்டவன்றிகிரிப்படையைமுன்போலவிளங்குகாவிரிப்புனலிருத்தி
நீண்டவைகுண்டத்தொளிர்விமானத்தைநினைந்தனனினைக்குமுன்மாலைக்
காண்டகவிரைந்துவருவதுபோலக்கடுகிவந்தோங்குசோமேசத்
தாண்டவன்றளியுளுத்தரத்திறுத்ததன்னதுகண்டுளமகிழ்ந்து. (௬௩)

உத்தராயணந்தக்கணாயனமென்னவொளிரிருதுவாரங்களோடுஞ்
சித்தரானவர்சூழ்தேருருவமைந்துசெழுங்கதிராயிரங்கோடி [ன்)
யொத்தொர்காலுதித்தாங் கொளிர்தலுமதனுளொளிர் மணிப்படவராவணைமே
மைத்தகார்முகில்போற்கண்வளர்ந்தருள்வான்மாநிலங்காவல்செய்பெருமான்.

மருவெழிலிருமங்கையர்களுமிருபான்மருவுறவானவரோத்தப்
பொருவரும்விடுவச்சேனைமுதலோர்புறங்கடைநின்றனர்காப்ப
நிருமலமானசேவையெப்போதுநித்தியசூரிகள்செய்ய
வருமறைமுழங்கவகிலமும்வாழவராவணைமிசைத்துயில்கின்றான். (௬௫)

சுவைபடுமாராவமுதனென்றெவருந்துதிக்குமோர்திருப்பெயர்பூண்டு
நவையறுசார்ங்கபாணிகண்வளர்வானலங்கொண்மற்றவற்கிடமாய
செவைபடுவிமானத்திருதுவாரத்துஞ்செறிபுதவந்திறப்போசை
குவைபடுபாவர்கேட்பினுமுடனேகுறிக்கொளும்புனிதரோயாவார். (௬௬)

ஒருசயந்தனநேர்விமானத்தின்றென்பாலோங்கொளிக்கோயில்கொண்டமர்வா
பொருவருந்தரளவெண்ணகைச்செவ்வாய்ப்பொங்கெழிற்கோமளவல்லி [ள்
யிருவர்தஞ்சேவைசெய்பவரொவருமிகப்பெருஞ்செல்வத்தமூழ்கி
மருவரும்பரபோகந்துளைந்தீற்றுவைகுண்டமேவிவாழ்ந்திருப்பார். (௬௭)

ஓங்குமத்தலத்திலுத்தராயணத்திலுயிர்விடுபுண்ணியத்திறத்தோர்
பாங்குசெய்வளமைச்சத்தியவுலகம்படர்ந்துவீற்றிருப்பரொஞ்ஞான்று
நீங்குதலில்லாத்தக்கணயனத்திநிகழுயிர்விடுபவரொன்றும்
வாங்குதெண்டிரைசூழுலகமேத்தெடுப்பமதியுலகடைந்துவாழ்ந்திருப்பார். ()

ஒளிவளராராவமுதனென்றெவருமுனாபுருடோத்தமன்றனையு
மிளிவளரின்சொற்கோமளவல்லியெனுந்திருத்தாயையுந்தொழுது
களிவளர்கடலுண்முழுகுறுர்பகுதிகடந்தொருவிரசையுண்முழுகார்
வளிவளருலகின்மற்றவர்பிறப்பால்வருபயன்யாதடைகுவரோ. (௬௯)

எண்ணியகும்பலிங்கநாயகனையிலங்குமாராவமுதனைச்சீர்
நண்ணியசைவர்யாவருங்கண்டுநாடொறுந்தந்தைதாயென்றே
கண்ணியசிறப்பிற்போற்றிடுவாரேற்கருதுபல்போகமுந்துய்த்துப்
புண்ணியமிகுந்தபெருஞ்சிவலோகம்புக்குவாழ்ந்தமர்வதுசரதம். (௭0)

செறிதிரைக்கடல்சூழுலகெலாம்வியப்பச்செம்பொற்றாமரைமுளைத்தமையான்
மறிதிரையமுதவாவியைப்பொற்றாமரைப்பெருந்தீர்த்தமென்றிசைப்பார்
பொறிவழிபுலன்போக்காதயரோமப்பொருண்முனிதவஞ்செய்தகேத்தை
வெறிகமழ்கதம்பாரணியமென்றுரைப்பார்விருப்புறுமேலவர்பலரும். (௭௧)

ஆராவமுதப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௨௨௨.

## சுதரிசனப் படலம்.

:0:

பன்னுந்தடத்துத்தகட்டுகட்டுப்பகட்டுவாளைவெடிபோகி
முன்னுங்கடவுட்சுரபிமடிமுட்டக்குழவென்றதுபொழிபா
லின்னும்பெருகிப்பாற்கடலென்றிசைப்பப்பொலிதண்பணைக்குடந்தை
மன்னுஞ்சுதரிசனப்பெருமான்வளமான்மியஞ்சற்றெடுத்துரைப்பாம். (௧)

செய்யசடையும்வெண்ணீறுந்திருந்துகருங்கண்மணியுமொளி
செய்யவெழுத்தைந்துளத்துன்னுந்திருமாமுனிவர்பல்லோருஞ்
செய்யகுடந்தைநினைத்தவெலாஞ்சித்திபுரிதேமென்றுதவஞ்
செய்யவடைந்துகாசிபமாதீர்த்தம்விதியிற்றோய்ந்தெழுந்தார். (௨)

இரவும்பகலுமறுபொழுதுமெங்கள்கும்பலிங்கேசர்
பரவுமருணதாமனைநேர்பாதம்பழிச்சிக்கும்பிட்டுப்
புரவுமலிமங்களவல்லிபொற்றாமரைப்பாதமும்பழிச்சிக்
கரவுமருவாத்திருமுனிவர்பலருமமர்ந்துகளிப்புறுவார். (௩)

தூயபெருமைச்சோமேசந்துலங்காநிற்குநாகேச
மாயவளங்கூர்காரோணமபிமுகேசமருள்கொழித்து
மேயகவுதமேசநலம்விராயபாணபுரேசமுதற்
பாயபரமரமருமிடம்பலவும்போற்றிக்கும்பிடுவார். (௪)

பத்தியமைந்தமுனிவரெலாம்பண்பார்குடமூக்கினையடுத்துச்
சித்தியடைந்துவசித்திருக்குந்திறந்தேர்ந்தளவாமறையவரு
முத்திவிரும்பியனையகுடமூக்குட்புகுந்துமுனிவரர்போற்
சுத்தியமைந்தநோன்பியற்றித்தோலாவிரதராயமர்ந்தார். (௫)

ஆன்றமறையோர்குடந்தைநகரடுத்துவசிக்குங்காலத்துச்
சான்றவக்கினிட்டோமந்தவாதவாசபேயமரு
டோன்றவுய்க்கும்பவுண்டரிகஞ்சோமகூர்மயாகமுத
லேன்றபலமாமகங்களுநூலிசைத்தவிதியினாற்றிடுவார். (௬)

ஆற்றுமகத்தினவியேற்பானடைந்தகடவுளார்பலரு
மேற்றுவருவோன்றிருக்குடந்தையெல்லாத்தலத்தும்விசேடமெனச்
சாற்றுமதுவும்பல்லோருந்தங்குமதுவுமுளத்துணர்ந்து
போற்றுஞ்சுவர்க்கங்கைவிட்டுப்பொலியுமனையொடுமமர்ந்தார். (௭)

எண்ணுமுனிவர்புகழ்மறையோரிலேகர்பலருமிவ்வாறு
நண்ணுங்குடந்தைநகர்மேவிநன்குபொலியுங்காரணத்தால்
விண்ணுமரியதவந்தானமேன்மேலோங்கப்புண்ணியமே
கண்ணுஞ்சிறப்பிற்பொலிந்ததுகண்டாரவுணக்குலமறவர். (௮)

அறமேபொலிவதென்னையெனவழுக்காறடைந்துகொடுந்தகுவர்
மறமேபொலியவெள்ளியிருமலர்த்தாள்பணிந்துவினவுதலு
நிறமேபொலியுந்திருக்குடந்தைநேயம்பூண்டுமுனிவரருந்
திறமேபொலியும்வேதியருந்திகழ்வானவருமினிதமர்வார். (௯)

அன்னரனையதலத்துறலாலறமேவிருத்தியாகியது
நன்னரவரத்தலநீங்கநாடியூறுநீர்விளைத்தாற்
பின்னர்மறமேவிருத்தியாம்பேசுநுமக்குமின்பமுறு
மென்னவொனினுமதுபுரிமினென்றனதுகேட்டெழுந்தவுணர். (௧௦)

சோதிமருவுதிருக்குடந்தைதுன்னிவசிக்குமவரடையும்
பூதியனைத்துங்கெடுத்துமெனப்பூதபிரேதபைசாச
மாதியுருவம்பலகொண்டேயல்லல்விளைப்பாராயினர்
நீதிமருவாக்கொடுங்குணத்துநிகரிலாதவாளவுணர். (௧௧)

யாகமிழந்தார்சிலர்யாகமெறுழினமைக்கவேற்குமவிப்
பாகமிழந்தார்சிலர்தானம்பண்ணலொழிந்தார்சிலர்விடலில்
யோகமிழந்தார்சிலரறநன்குளுற்றலொழிந்தார்சிலர்பூசை
மோகமிழந்தார்சிலர்முனிவர்முதலோரிவ்வாறாயினரால். (௧௨)

ஊறுதீர்ந்துகருமமெலாமுடங்குமுடியுமித்தலத்துக்
கூறுபலவிக்கினமெழுந்துகுடியைக்கெடுப்பதென்னென்று
தேறுமுனிவராதியோர்தெளிப்பாராகிச்செஞ்சடைமே
னாறுகடுக்கைத்தொடைபுனையுநம்பர்கும்பேசணாயடுத்தார். (௧௩)

அடைந்தமுனிவர்முதலானோரம்பொற்சிகரிமுன்பணிந்து
தடைந்தபிரகாரஞ்சூழ்ந்துதாழ்ந்துதிருமுனெய்தியே
மிடைந்தகடுக்கைத்தொடையாளாவிமலாகும்பலிங்கேசா
வுடைந்தவெங்கட்குறுதுணையாயொருநீபுரத்தல்வேண்டுமால். (௧௪)

ஐயநினதுதிருவருளாலடியேமிந்தப்பெருந்தலத்தில்
வையமுவப்பமகமாதிமறையின்வழியேபலவியற்றி
வெய்யவிடையூறொன்றின்றிவிருப்பின்வாழ்ந்தோமதுநீங்கி
யுய்யமுடியாவூறுபலதோன்றியுடற்றத்தொடங்கினவால். (௧௫)

ஊறுமினையரியற்றுநரொன்றுணரோமொழிக்கும்வகையுணரோ
நாறுகடுக்கைசடைக்கணிந்தநம்பாகும்பலிங்கேசா
வேறுகொடியின்மிசையுயர்த்தாயேழைபங்காவிரங்குதியென்
றூறுதவிர்ந்தமுனிவர்முதலானோர்பலருமிறைஞ்சினர். (கசு)

வந்துமுறையிட்டவர்க்கிரங்கிமாருக்கருணைக்கும்பேசர்
முந்துதமதுகுறிநின்றும்வெளிவந்தவர்க்குமுன்னின்று
நந்துமுனிவர்முதலாயநல்லீரெல்லீர்களுங்கேண்மின்
கந்துமவுணருருமாறிக்கடுவிக்கினங்களுமக்கிழைப்பார். (கஎ)

பொல்லாவவுணரொதுசெய்தபோதுநீவிரஞ்சற்க
வொல்லாவவரையிப்பொழுதேயொழிப்பித்திடுவோநும்மிருக்கை
செல்லாவமர்மினென்றேவிச்செந்தாமரைக்கண்மாயவனை
யல்லாவொளிருங்கண்டத்தாரங்கணுறுமாநினைத்தனரே. (கஅ)

நினைத்தகாலையஃதுணர்ந்துநெடியமாயோன்கடிதடைந்து
கனைத்தசுரும்பரடைகிடைக்குங்கடுக்கைச்சடிலத்தெம்பெருமா
னனைத்தமலர்ப்பொற்பதம்பணிந்துநாடியடியேன்வரநினைத்த
தினைத்தென்றுகருணைசெயல்வேண்டுமெனவவ்விறையுரைப்பான். (கக)

வாராய்நெடியதிருமாலேவந்துநமதுகேத்திரத்தி
லாராய்முனிவர்முதலானோரடைந்துமகமாதிகள்புரிந்து
பாராய்தரநன்கினிதுவந்துபண்பின்வாழ்வாரவர்க்கூறு
போராய்கொடியதொழிலவுணர்புரிவார்மிகவுமுருமாறி. (உ0)

முந்துகொடியசலந்தரனைமுடிக்கும்பொருட்டுநாமமைத்த
நந்துகதிர்சால்சுதரிசனநகுகாவிரியுட்கிடப்பதனைக்
கந்துவகையிலாதெடுத்துக்கரங்கொண்டனையதிகிரியம
ருந்துதுறையின்கரைத்தென்பாலொளிரவதனைத்தாபித்து. (உக)

அந்தத்திகிரிக்கபிமானவமரனெனநீயவட்பொலிந்து
சந்தத்தவத்தர்முதலானோர்தங்கட்கூறுய்வருவவெலா
முந்தத்தகர்த்துமகமாதிமுறையிற்காத்தியென்றருள
நந்தக்கரத்துத்திருநெடுமானன்றென்றிறைஞ்சிப்போயினன். (உஉ)

செம்மலுரைத்தமொழிப்படியேதிருமால்பொன்னித்துறைமுழுகி
விம்மலொழிக்குஞ்சுதரிசனவெய்யபடைகைக்கொண்டெழுந்தான்
பொம்மலமைந்தசுவாலைமிசைப்பொங்கியுண்டமுகடுசுடத்
தும்மலமைந்தபொறிதிசையைச்சுடமிக்கொளிர்ந்ததப்படையே. (உங)

ஆயசுதரிசனப்படையையமலனுரைத்தவவ்விடத்தே
நேயமருவத்தாபித்துநிலவுமோரொண்கரங்களொடும்
பாயகரங்கடொறும்பரித்தபடைகளொடும்பல்லவுணரொலாந்
தேயவதனுக்கபிமானதெய்வமெனத்தானினிதமர்ந்தான். (உச)

முந்தியிந்தவாறமர்ந்துமுனிவர்முதலோர்க்கிடையூறு
புந்தியின்றிப்புரியவுணப்பூதபிரேதபைசாசஞ்
சிந்திநிலைகெட்டுடைந்தோடத்தீய்த்துக்கருக்கிப்போக்கியே
யந்திநிறத்தனருளியவாறுங்குநாளுமினிதமர்வான். (உரு)

மன்னுமுனிவர்முதலானோர்மகமாதிகட்கோரூறின்றி
முன்னும்பழயபடிபுரிந்தேமொய்த்தபெரும்புண்ணியம்வளர்த்து
மின்னுங்களிப்பின்வசித்திருந்தார்வெய்யவவுணப்படைகுடமூக்
கென்னுமொருபேருரைத்தாலுமிரிந்துபோவதாயிற்றே. (உசு)

போற்றுசுதரிசனப்படையின்பொலிவுநோக்கிச்செங்கதிரோ
னாற்றுபெரும்போர்குறித்தெழுந்தேயருகுசார்முனொளிமழுங்கிப்
பாற்றுசெருக்கினப்படையுற்பத்திமூலமுளத்துணர்ந்து
தோற்றுமிகுபேரச்சமொடுதுதித்துப்போற்றிப்போயினான். (உஎ)

அரியமகமொன்றியற்றிவானடைந்தமலர்மேலவன்கண்டு
பிரியமிகவாலயமாதிபெட்பிற்புரிந்துவிழவாதி
தெரியவியற்றிப்பூசித்துத்தெய்வம்பொலிதன்னுலகடைந்தான்
கரியவினையாவும்பூசைகண்டோரின்னுங்கணக்கில்லார். (உஅ)

மேயசுதரிசனப்படையின்விசையமொருமாதுருவாகி
யாயவிசையவல்லியெனுமழகாகியவோர்பேர்பெற்று
நேயமருவவாங்கமருகிலவப்போற்றிப்பூசிப்போர்
பாயவுலகம்பதினாலும்வென்றுபரவவாழ்ந்திடுவார். (உகூ)

மன்னுஞ்சுதரிசனப்படையையவயங்கும்வில்வபத்திரத்தான்
முன்னுநறியகுங்குமத்தான்முதிர்பேரன்பினருச்சிப்போர்
பன்னும்பூதபைசாசமுதலாயவைசெய்படரொழிந்து
பொன்னுமணியுமிகப்பெருகப்பொங்குஞ்செல்வத்தினிதமர்வார். (௩0)

சுதரிசனப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உஉருஉ.

---

## சக்கரதீர்த்தமகிமைப்படலம்.

---

அறந்தவாமலலங்குங்குடந்தையி, லுறந்தபுண்ணியமூட்டுமொண்காவிரிச்
சிறந்தசக்கரதீர்த்தப்பெருமையுண், மறந்தபச்சிறிதோதவலித்தனம். (க)

கரிசிலாதொளிர்காசிபதீர்த்தமும், பரிசின்மிக்கபகவற்றீர்த்தமுந்
தெரியமேற்குங்கிழக்குஞ்சிவணுற, வுரியநாப்பணுறுந்திகிரிப்புனல். (உ)

கொற்றமிக்குக்குலவுந்திகிரியங், குற்றகாரணத்தாலுறுதன்பெலாஞ்
செற்றசக்கரதீர்த்தமெனும்பெயர், கற்றமாந்தர்களாவரதற்கரோ. (௩)

அன்னதீர்த்தமவாவிப்படிபவ, ரென்னராயினுமின்பத்துமூழ்குவார்
சொன்னதானமுமாயிடைத்தூற்றிடிற், பன்னவாங்கொல்பயன்பகவற்குமே ()

ஆயசக்கரதீர்த்தத்தகள்களா, மேயகாரொண்கெடிவிதிபற்றியே
தோயமொண்டிறைப்போர்தொகுதென்புல, நேயர்தம்மைநிலவுவிப்பாரரோ()

இறந்துளார்தமெலும்பதில்வீழ்த்துவோர், பிறந்தவான்பயன்பெற்றுத்திளைத்தி
டச், சிறந்தகாரியஞ்செய்பவராவர்நன், குறந்தமாதவத்துத்தமவந்தணீர். (௬)

பொன்னைவேண்டினும்பொற்புறுசாலிநோர், மின்னைவேண்டினுமேலவர்வாழ்ப
தந், தன்னைவேண்டினுந்தண்மைதவாக்கதி, மன்னைவேண்டினுமற்றதின்மூழ்கு
[வார்.

தரிசித்தாலுமச்சக்கரதீர்த்தத்தைப், பரிசித்தாலும்பரிந்துட்புகும்வகை
யுருசித்தாருமொருதுளிகொள்ளினும், வருசித்தாயிந்தவையத்துவாழ்வரோ(அ)

பன்னுமாமறைப்பண்ணவன்முன்னைநாண், மின்னுமோர்மகம்வேட்கையினூற்றி
யே, துன்னும்யாருந்தொடர்ந்தனர்மூழ்குற, முன்னுமற்றதின்மூழ்கியின்புற்ற
[னன்.

அந்தச்சக்கரதீர்த்தத்தரும்புக, ழிந்தப்பாரிலியம்பிடவல்லர்யார்
கந்தப்பூங்குழற்கன்னிபங்காளனூற், பந்தப்பாரம்பறித்துயரந்தணீர். (௧௦)

சக்கரதீர்த்தமகிமைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௨௬௨.

---

## வராகப்படலம்.

---

வராகராசலமுரித்தவாவென்றுபன்மாத
வராகந்தோய்தரவணங்குகும்பேசர்முன்வண்பா
வராகதாளத்தின்மங்கையர்நடிக்குமாகுடந்தை
வராகமூர்த்திவந்திறுத்தமையறிதரவகுப்பாம். (௧)

ஒளிகுலாவியவைகுண்டநகரிடையொருநாட்
களிகுலாவியதிருநெடுமாயனைக்காண்பான்
வளிகுலாவிய்மாநிலங்கண்டவன்மைந்த
ரளிகுலாவியமுனிவரர்சிற்சிலரடுத்தார். (௨)

அடுத்தகாலையிற்றுவாரத்துநின்றுகாப்பாற்று
மெடுத்ததண்டங்கையுடைச்சயவிசயரென்பவர்கண்
மடுத்தகாதலிற்சேவையேவிழைந்தமற்றவரைத்
தடுத்தல்செய்தனர்சமையமீதன்றெனச்சாற்றி. (௩)

சமையமன்றெனப்பொய்மொழிகிளத்தலுந்தவமே
யமையவாற்றினோரழுங்கியமனத்தராய்நின்றூர்
சிமையமால்வரைகுடையெனக்கொண்டவன்றேர்ந்து
நமையவாவினோர்பாங்கர்நீர்பொய்மொழிநவின்றீர். (௪)

எந்தவேளையின்முனிவரர்வானர்மற்றெவரு
நந்தவாரவொடுகாணவந்தனரெனினமக்கு
மூந்தவோதுமினென்றுமுன்மொழிந்திருந்தனமே
யந்தவார்த்தையுமறந்துபொய்யுரைத்திடற்கமைந்தீர். (௫)

ஆதலானமதாணைமாறுற்றுளீரதனை
யோதலாற்பயனில்லையானீரிருவோருந்
தீதலாற்பிறசெய்கலாவசுரராய்ச்சனித்துப்
போதலாற்கவலோமென்றுவைதுபோக்கினனே. (௬)

குறையிலாதபேரொளிமயமாயவைகுண்டத்
துறையுமிவ்விருவோருமோர்பொய்மொழியுரைத்து
நிறையுந்துன்பத்துளழுந்தினர்நித்தலும்பொய்யே
தறையினோதுவார்சார்தருதுயர்க்களவுண்டோ. (௭)

இந்தவாறவர்தம்மைவைதேகுவித்ததன்பின்
வந்தமாமுனிவரர்மகிழ்காட்சியும்வழங்கிச்
சந்தமாமலர்த்திருமகள்வனமுலைதழுவி
நந்தவாவுகைநாயகனிருந்தனனிப்பால். (௮)

போற்றயாவரும்பொலிபுருடோத்தமன்சாப
மேற்றமற்றவர்பொற்கண்ணனிரணியனாகி
யாற்றமாதவம்புரிந்தனர்வரமெலாமடைந்தார்
தோற்றமேவியவுயிரெலாந்துகள்படத்துணிப்பார். (௯)

இருவர்தம்முளுமிரணியக்கண்ணனென்றிடுவோன்
பொருவருந்திறற்றகுவர்கள்பலரொடும்போந்து
வெருவரும்படிவானவர்பலரையும்வெருட்டித்
திருவரும்பெறல்வளமெலாந்தெவ்வுபுவாழ்ந்தான். (௧௦)

கொடியதானவர்குழாத்தொடும்விராய்நிலைகுலையக்
கடியவாஞ்செயல்புரிந்துழலிரணியக்கண்ணன்
படியவாவுபுகவர்ந்தனன்பாதலத்தொளித்தா
னெடியவானவர்யாவருநிகழ்ந்ததுகண்டார். (௧௧)

மருத்துழாய்முடிமாயவன்றிருவடிவணங்கிக்
கருத்துவேறுறக்கலங்கியகடவுளருரைப்பார்
பொருத்துமாநிலத்துயிரெலாம்புரந்துதெள்ளமுத
மருத்துநீகொடுநெஞ்சமுமருத்துவானானாய். (௧௨)

வாயில்காப்பவர்தம்மைநீவைதகற்றியதான்
ஞாயில்சூழ்பெருநகரங்கள்பலவினுநண்ணித்
தீயில்வெய்யனசெய்துழிதந்தனர்செயிர்த்தார்
மாயினல்லதென்றுலகத்தியாவருமதித்தார். (௧௩)

கலக்கமேபுரிந்துழறருதமனியக்கண்ண
னிலக்கமாநிலமகளெனக்கருதினனெடுத்து
நலக்கவோடுபுபாதலம்புகுந்தனனள்ளார்
மலக்கயாந்துயர்ப்படுவதுநீமதியாதென். (௧௪)

என்றுகூறலுந்திருநெடுமாலுளத்தெண்ணி
யன்றுதானவருயிர்செகுத்தவனியையெடுத்துத்
தொன்றுபோலவேநிறுத்துதுந்துயருறீரொன்று
நன்றுகூறினன்றக்கதோருருக்கொளனயந்தான். (௧௫)

பிருகுமாமுனிமுன்புனைசெய்ததுபிறங்க
வுருகுவானவர்யாவருமுவந்தனரோத்தத்
திருகுசால்கொடுந்தானவக்குலமெலாஞ்சிதைய
வருகுதீர்வலியொருவராகத்துருவமைந்தான். (க௬)

மிசைவிராவியவண்டத்துவெரிநுறவுரிஞப்
பசைவிராவியமருப்புகள்பிறையுருப்பாற்றத்
திசைவிராவியகளிறுகட்டையினுற்சிந்த
விசைவிராவியவான்மயிர்வெற்பெலாம்வீழ்த்த. (கஎ)

மிகவெழுங்குரன்முழக்கினுன்முகிலெலாம்வீய
வகவடிப்பிளப்புட்புகூஉவனையெலாமடங்கத்
தகவின்மெய்மயிர்திசைக்கிரியனைத்தையுஞ்சாட
முகமெழுந்தகாற்றூழிவெங்காற்றினைமுறிக்க. (கஅ)

இந்தவண்ணமேயொருவராகத்துருவெடுத்துச்
சந்தநாகர்வாழ்பாதலதலத்திடைப்புகுந்து
வந்தவாள்வலியிரணியக்கண்ணனைவளைத்து
முந்தவாடமர்புரிந்தனன்பலபகன்முகுந்தன். (க௯)

ஒருமருப்பினுலவனுயிரொழிதரவொழித்துப்
பொருவின்மற்றவன்பெருங்கிளையனைத்தையும்புரட்டி
வெருவின்மற்றொருமருப்பிடைமேதினிவைத்துக்
கருகுமெய்ப்பெருவராகமேலெழுந்ததுகடிப்பில். (உ0)

நிலவமுன்னையிற்புவிநிலைபெறும்படிநிறுத்திக்
குலவவொண்புவிதுளைத்துமீதெழுந்தனன்குனிக்குங்
கலவமாமயிற்சாயலந்திருமகள்கணவ
னிலவவாய்மடந்தையரொடுமிமையவர்துள்ள. (உக)

படிதுளைத்துமேலெழுந்தவனவ்விடம்பார்க்க
முடிவிலாத்திருக்குடந்தையாவிருந்ததுமுன்னி
வடிவமங்கைபாகனுர்திருவருண்மதித்து
நெடியவாவயினிருக்கைகொண்டமர்தரநினைந்தான். (உஉ)

துளைத்தவவ்விடமொருபெருந்தீர்த்தமாய்த்துலங்க
வளைத்தமேல்கரையொருமருப்பண்ணலைவைத்துத்
தளைத்தமாலையாதிகள்கொடுபோற்றுபுதவாது
கிளைத்தசிழ்கரைவெள்ளியபாடலக்கீழால். (உ௩)

ஓங்குகோயில்கொண்டமர்ந்தனனுலகெலாமுண்டோன்
பாங்குசான்றமற்றவனடிபழிச்சுநரெல்லாம்
வாங்குதெண்டிரைவைப்பினிலிணையறவாழ்ந்து
தீங்குதீர்ந்துமேன்மேற்பொலிவைகுண்டஞ்சேர்வார். (உச)

புவியெடுத்துமுன்போனிறுத்தமைபுலப்படுத்தப்
புவிமடக்கொடியினையிடக்கவான்மிசைப்பொருத்திப்
புவிவியப்புறவமருமம்மூர்த்தியைப்போற்றிற்
புவியினுக்கரசாய்ப்பல்போகமுந்துய்ப்பார். (உ௫)

வராகதீர்த்தத்துவாஞ்சையின்விதிப்படிமுழுகி
வராகவொற்றைமாமருப்புடைக்களிற்றினைவணங்கி
வராகமூர்த்தியைவழிபடுந்திறத்தினர்வான
வராகவாழ்ந்துபின்மருவுவர்பிறவியின்மாண்பே. (௨௬)

மாகமாமதிப்பூரணைவருமகநாளின்
மோகமார்தருமிடபலக்கனந்தனின்முயன்று
நாகமேத்துபூவராகமண்டுளைத்தங்குநண்ணிற்
றுகலானந்நாள்வராகநீர்முழுகுதற்கமையும். (௨௭)

வராகப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௨௮௧.

---

## கரும்பாயிரவிநாயகப்படலம்.

:o:

சொற்றபூவராகப்பிரானூறுதீர்துணிபுளங்குறிக்கொண்டு
பெற்றகாதலிற்பதிட்டைசெய்திடப்பொலிபெருவராகத்தும்பி
சற்றமேலவர்புகழ்கரும்பாயிரக்களிறெனுமொருநாம
முற்றகாரணமறிந்தவாசிறிதெடுத்தோதிடல்வலித்தாமால். (௧)

ஒருமருப்பிருமுறச்செவிமுக்கணால்வாயோரைங்கரமாறு
வருமதத்தெழுமெண்குணப்பேரருள்வராககுஞ்சரம்வானத்
திருவமிக்கவர்சித்தர்வித்தியாதரர்திரைக்கடல்வைப்புள்ளோர்
பொருவிலற்புதமுனிவரர்முதலியோர்போற்றிடவமர்நாளில். (௨)

உத்தராயணபுண்ணியகாலமென்றுரைசெயுமதித்தோற்றஞ்
சித்தராதியோர்புகழ்தரும்படியுறத்திருப்பெருங்குடமூக்கு
ளத்தரார்புனைசெஞ்சடைக்கடேசனையன்பிற்கண்டினிதேத்தப்
பத்தரானவர்யாவருமடைந்தனர்பயில்பெருங்கிளையோடும். (௩)

அந்தவேல்லையிற்கரும்புவாணிகத்திறனமைந்தவனொருநாய்க
னெந்தவூரிலுள்ளார்களுங்கமுகுகொலிவையெனவியப்பெய்த
முந்தவாயிரங்கரும்புகள்சகடத்துமுற்படுபசுந்தோகை
பிந்தவொன்றின்மேலொன்றுறவடுக்குபுபெட்பினுய்த்தவணுற்றான். (௪)

உற்றபைங்கழைவாணிகன்வராகமாலொருத்தலாலயப்பாங்க
ரற்றமில்பெருஞ்சகடத்தைநிறுவினனமர்ந்தனனதுகாலைப்
பெற்றமேல்வருதம்பிரான்றிருமகன்பிள்ளைமைத்திறத்தானோ
கற்றமேலவர்புகழ்தனதாடலைக்காட்டிடுதிறத்தானோ. (௫)

மேயயானையாந்தனக்குணவவையெனல்வெளிசெயுந்திறத்தானோ
பாயவேழமென்பெயர்புனைதனக்கெதிர்பகருமப்பெயர்பூண்டே
யாயபைங்கழையடுத்ததாலடர்த்துமென்றாய்ந்துணர்குறிப்பேயோ
நேயமிக்கவன்றனைப்புரந்தருளுமோர்நிலையுளங்குறித்தேயோ. (௬)

இன்னதென்றியாமுணர்ந்திலமறைக்குலத்திளஞ்சிறானுருக்கொண்டு
சொன்னவாணிகன்முன்புபோய்நின்றிதுசொல்லும்வாணிகரேறே
நன்னர்மேகமும்விளர்த்திடக்கொடுத்துயர்நற்கரதலத்தோயே
யன்னமூர்பவனூருவினுதித்துளாயாசியேற்றிடுகென்றான். (௭)

என்றகாலையினவனஃதேற்றிலனிருந்தனனதுகாணூஉ
நன்றவாயகீபராமுகனுயினைநவிலதையெனக்கென்று
ஞென்றமற்றவன்வந்தகாரியமெவனுரைத்தல்செய்சிறுபிள்ளாய்
மன்றவொத்துளதேலறிவாமெனவகுத்தனனதுகேட்டு. (அ)

ஐயமேற்றுணுமறையவன்மைந்தன்யானங்கையிற்பொருளில்லேன்
செய்யவோர்சரும்பளித்தியேலெனக்கதுதிருத்தியாமுனக்கொவ்வா
வெய்யவிக்கினமொழிதருநலமெலாம்விசேடமாவுண்டாகு
மொய்யெனக்கழையொன்றுதந்தெனதுவாயூற்றத்தைத்தவிரொன்றான். (க)

என்றுகூறலும்விலைப்பொருட்டெய்தினேனிங்ககருறுபார்ப்பார்
நன்றுபெற்றுவிட்டிடவுழல்சிறர்சட்குநல்கவுற்றேனல்லே
னன்றுவார்த்தைசொனீயிவணகலுதியகலுதியெனச்சொற்று [யோ
ஞென்றுபொய்ப் பொருள்விருப்பினர் மெய்ப்பொருளுளங்கொள லுண்டே

அந்தவார்த்தைசொற்றலுநின்பாற்கரும்புகொள்ளாதகலேனென்று
னெந்தவாறுகொள்வதுவறம்பேச்சினுலென்பயன்போவென்றான்
பந்தவாணிகன்பந்தத்தைநிவிர்த்திசெய்பண்ணவனென்றேயோ
முந்தவாயிரங்கரும்புங்கொள்வேனெனமொழிந்தனனவன்கேட்டு. (கக)

கொள்ளலாம்பொருட்கொடையினுலென்றனன்கோலநாமம்பூண்டோன்
றள்ளலாமெனநினையலைசேட்டவாதருதியோவொருநானே
விள்ளலாம்படிகொள்ளவோவென்றனன்வெகுண்டுவாணிகன்சீறி
யெள்ளலாருமிவ்வாசைநீத்தகனிற்றியெனிற்புடைப்பேனென்றான். (கஉ)

வருதல்காண்டுமென்றொருகழைதொட்டனன்மருப்பெருஞ்சினங்கொண்டு
பொருதல்வல்லவன்முடுக்கினன்முடுக்கலும்பொள்ளெனப்பயந்தான்போற்
கருதலாதியகடந்தவன்பின்புபோய்க்கடிதொர்தோகையைத்தொட்டான்
றரு தண்மைகொலென்றந்தத்தேத்தினுஞ்சார்ந்துசீறினன்முன்போல். (கரு)

இன்னவாறுபல்காலவனோடமரோற்றொருவிநோதத்தா
லன்னவாக ன முதலியோரறியொணுவமலநாயகன்மைந்த
னன்னராடுமற்றவன்கொடாமையைநகருணர்தரத்தேற்றிப்
பின்னர்மெய்யிளைத்தொழிந்தவன்போற்சென்றுபிறங்குதன்றளிபுக்கான். (கச)

புக்கநாயகனவனையாட்கொள்ளுதற்பொருட்டுயர்கழைமேய
தக்கசாரமாஞ்சாற்றினைக்கவர்ந்தனன்றழைந்தசெங்கரும்பெல்லாம்
பொக்கமேய்பேய்க்கரும்பினுங்கீழ்ப்பட்டுப்போயினவதுகாணூஉ
மிக்கவெம்பயமுட்கொடுநடுங்கினன்வெய்யவாணிகன்மாதோ. (கரு)

ஒருகரும்புதாவென்றுநம்பாலடைந்துற்றிரந்தவனீங்குப்
பெருதுபேரருளாலமர்கயமுகப்பிள்ளையேயறியாமற்
திருகுகொண்டுநாங்கெட்டனமென்னினிச்செய்துமென்றிரங்குற்றுக்
கருகுபுந்தியாலுலயத்தெதிர்சென்றுகைகுவித்தனன்போற்றி. (கசு)

ஐயனேயொருதந்தனேவந்தனையாற்றுநருளநீங்காச்
செய்யனேமதமுகத்தனேயகத்தனேன்றிருகுதீர்த்தாட்கொள்ளு
மெய்யனேயறியாமையாலியன்றதைமேலவருளங்கொள்ளார்
பொய்யனேன்புரிபுன்மையைப்பொறுத்துநீபுரியருளெனவேண்ட. (கள)

மீட்டுமாயிரங்கரும்பிற்குஞ்சாரத்தைவிளைத்தனனெங்கோமா
னாட்டுவாணிகனன்னதுகண்டனனயர்ந்துளம்வியப்புற்றான்
றேட்டுமாமலரிறைத்தனன்பணிந்தனன்றுணிந்தனனிவனேநூல்
காட்டுமாதியங்கடவுளென்றளவிலாக்களிப்பின்மூழ்கினனம்மா. (௧௮)

ஒருகரும்பினுக்காயிரமுங்கொடுத்துதவினேனெனநல்கித்
திருகரும்புருமனத்தவனுகிநற்றிருவளர்பெருநாய்க
னுருகுநெஞ்சினனாய்க்கரும்பாயிரவொருத்தலென்றொருபேரிட்
டருகுநீங்குறாதமர்ந்துபல்பணிகளுமாற்றிமிக்குவப்பிப்பான். (௧௯)

கரும்புவெள்ளரிக்காய்வருக்கைக்கனிகதலிமென்கனிதேமா
வரும்புதீங்கனிமோதகமிலட்டுகமவல்கடலைகணேலை
சுரும்புசேர்நறுநாவலந்தீங்கனிசூழிலாங்கலியின்காய்
விரும்புமற்றுளயாவையுநிவேதித்துமிகமகிழ்பூப்பானல். (உ0)

இந்தவாறுபன்னாளளவன்பொடுமிகப்பரும்பணிசெய்தே
யந்தநாய்கன்மற்றவனடியடைந்தனனவனியோரிவ்வாறே
முந்தவான்கரும்பாயிரக்களிற்றிணைமுகமனோடுறப்போற்றி
லெந்தவான்பதங்களும்பெறீஇத்திளைத்துப்பினெய்துவரவன்றாளே. (உ௧)

சரும்பாயிரவிநாயகப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௱௪0.

---

## வரதராசப்படலம்.

---

சரதநாளுந்தழைத்தெழுதன்மையால், விரதயோகர்விடாதகுடந்தையி
லிரதநீரிருங்காவிரியுத்தரம், வரதர்வந்தமர்வண்ணமுரைசெய்வாம். (௧)

வானமோங்குமயேந்திரவெற்பிடை, யீனமோவுதவஞ்செய்திருப்பவன்
கானமாயகலைபலதேர்ந்தவன், மானமிக்கமதங்கனென்னுமத்தான். (உ)

நல்லவாயவொழுக்கநயந்தவ, னல்லவாய்வனைத்தையுங்காய்ந்தவன்
வெல்லவாயவவித்தையைவீத்தவன்,சொல்லவாயதொகுபுகழ்ப்போர்வையான்

வண்டுகிண்டமதுவம்பொழிதரு, தண்டுழாய்முடிச்சக்கரபாணியைக்
கண்டுதுய்க்குங்கனவிரதத்தினு, னுண்டுகொலிவற்கொப்பெனமேவுவான். (௪)

மன்னுகின்றவளம்பொலிசேதுவின், முன்னுகாலைக்கடனைமுடித்துப்பி
னுன்னுதெய்வக்குடந்தையிடையுறுப், பன்னுமுச்சிக்கடன்பண்பின்முற்றியே.

அந்திவந்தடைவேலையங்காஞ்சியின், முந்தியுற்றுமுகுந்தவரதனை
நந்தியன்புநகத்தொழுதேத்தியே, பிந்தித்தன்னிடம்பெட்பினுற்றுண்பனால்(௬)

இந்தவாறுபன்னாளுமியங்குவான், சந்தமார்பொழில்சாலுங்குடந்தையுண்
முந்தவுற்றுநடுக்கடன்முற்றினன், மந்தமில்லாமதங்கமுனிவனே. (௭)

உச்சியாற்றுங்கடனையொழித்தவன், கச்சிமாநகரொய்தக்கருதமு
னச்சிநாளுங்குடந்தைநகருறற், கிச்சியாவவ்வரதரினுசெய்வார். (௮)

தனிவிசும்பிற்சரிக்குமுகிலெலா, நனிவரும்படிகூய்நனிமேகங்காண்
முனிவனிந்நகர்முன்னியுருவகை, துனியில்வாரிசுவறும்படியுஞ. (௯)

தனிதமுற்றுத்தயங்குமின்வீசிய, வனிமடக்கொடிமாழ்கிக்குழைதரக்
குனிவில்வாங்கிக்கொடுமழைபெய்மினென், றினியசீர்த்திவரதரியம்பினர்.(௧௦)

என்றலோடுமெழுந்துபன்மேகமுங், கன்றலில்லாக்கடல்சுவறக்குடித்
தோன்றவானத்துறந்துபரந்தன, பின்றலில்லாப்பெருமழைபெய்தவே. (௧௧)

இடிமுழக்குமெறிவளியாற்றரு, வொடிமுழக்குமுயர்ந்தகுளக்கரை
முடிமுழக்குமுதியவவலுணீர், படிமுழக்கும்பரந்தனவெங்குமே. (௧௨)

எங்குமின்னலெழுந்துபரம்புவ, வெங்குமோவாவிடிகளுதிர்வன
வெங்கும்வாடையெழுந்துசுழலுவ, வெங்கும்வெள்ளமெழுந்துறப்பாயுமே. ()

விண்மறைத்தனமேகம்விரும்புவா, ரெண்மறைத்தனவெங்கும்பொழிமழை
கண்மறைத்தனகான்மழைத்தாரைகண், மண்மறைத்தனமாற்றரும்வெள்ளமே.

ஊழிகாலம்வந்துற்றதுகொல்லெனப், பாழிமாநிலத்தாருட்பரிந்தனர்
வீழிவாய்மயில்பாகத்துமேலவன், சூழிருஞ்சடைத்தோயங்கொலோவென்பார்.

மழையிவ்வாறுபொழிதலுமாமுனி, விழையுங்காஞ்சியைமேவிவரதரைக்
குழையுமாகும்பிடுதல்குலைந்ததென், றுழைவிராவொர்மரத்தடியொன்றியே ()

ஐயகோவென்விரதமழிந்ததென், றெய்யவோதுமிரங்குமிளைத்திடுஞ்
செய்யமாமகண்மார்பன்றிருவருள், வெய்யதாகிவிராயதென்னென்னுமால். ()

பொழுதுதீர்ந்ததுபோக்கருங்காஞ்சியிற், பழுதுதீரப்படர்வதெப்போதுகை
தொழுதுதாழ்ந்துதுயரறலென்றெனு, வழுதுசோருமவலத்துழும்குமே. (௧அ)

மன்னுபொன்னிவளஞ்செய்வடகரைத், துன்னுசண்பகக்காட்டுத்துணையின்றி
முன்னுநான்முழுத்தன்பத்துமூழ்கினே, னின்னுமென்னுயிர்தீர்ந்திலதாலெனும்.

நோற்றுவாழுநுவலருமாமுனி, போற்றுமாருயிர்போக்கத்துணிபொழு
தாற்றுபேரருளாலவணுரஞர், மாற்றுவானினைத்தான்வரதப்பிரான். (௨௦)

பன்னகப்பகைமேற்கொடுபண்ணவர், நன்னரார்ப்பநலங்கிளர்மாதவ
ரொன்னரும்புகழ்ந்தேத்தவடைந்தனன், றன்னநீத்தவச்சண்பகக்காட்டரோ. ()

காட்சிநல்கிடக்கண்டமுனிமகிழ், மூட்சியெய்திமுழங்கியெழுந்தல
ராட்சியாம்பதத்தன்பிற்பணிந்தனன், மாட்சிமிக்கவரதருணைசெய்வார். (௨௨)

புத்திகூருனையாட்பொருட்டுநாஞ், சித்திசாலிந்தத்தேத்தடைந்தோமிகு
பத்தியாயெவன்வேண்டும்பகரென, முத்திவேண்டியிதுவுமொழிகுவான்.(௨௩)

ஐயவிந்தத்தலத்திலடியனே, னுய்யநல்கினையொப்பருங்காட்சிமண்
ணெய்யவிங்ஙனிருத்தியிவ்வாறென்றுன், வையமுண்டபிரான்சம்மதித்தனன்.

மருவும்பொன்னிவயங்கும்வடதுறைத், திருவுலாயவித்தேத்திற்குத்தென்புறம்
பொருவுதீர்புனற்போந்துமுழுகியா, னிருவுநின்னருளெய்தியமேன்மையால்.

அன்னதீர்த்தமென்பேரினமையவு, மென்னர்மூழ்கினுமின்பத்தமூழ்கவு
முன்னவாவருளென்னமுகுர்ந்தனு, மன்னவவ்வரம்யாவும்வழங்கினான். (உ௬)

மதங்கமாமுனிவற்கருள்வண்ணமே, யிதங்களென்பனயாவருமெய்திடச்
'சுதங்கழன்றவத்தோன்றலமர்ந்தனன், கதங்கழன்றவர்கைகுவித்தேத்தவே. ()

மன்னுகின்றவரதரடித்துணை, பன்னுமன்பின்வழிபடுவோரொலா
முன்னும்யாவையுமுன்னியவாபெற்று, மின்னும்வைகுண்டமேவியமர்வரால். ()

வரதராசப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௯௯அ.

---

## கைலாயநாதப்படலம்.

——————:o:——————

சலதியினளவாச்செங்கேழ்த்தரணிகளுதயஞ்செய்த
நலனெனநிறைநீர்ப்பட்டநக்கசெங்கமலக்குப்பை
யலர்தருகுடந்தைப்பொன்னியாற்றிற்குவடபாலெல்லாம்
வலர்கயிலாயநாதர்வரவினையெடுத்துச்சொல்வாம். (க)

இதமலிபிப்பிலாதனெனும்பெயர்படைத்தமேலோன்
சுதமில்பன்மறைகள்யாவுந்துகளறப்பயின்றவல்லான்
கதமலிபொறிகளைந்துங்கடிந்தனன்பணித்துவாழ்வோன்
வதரிகேதாரம்வைகிமாதவமியற்றினானே. (உ)

மதிமுடிப்பிரானையுன்னிமாதவம்பன்னாளாற்றக்
கதியடுத்தவர்க்கேநல்குங் கருணையப்பெருமான்றோன்றி
யதிவிருப்புடையபிப்பிலாதநீவேட்டதென்னை
பதிதரப்புகறிசொற்றபடிவரந்தருதுமென்றான். (௩)

என்றலும்பணிந்துவீழாவெழுந்துநன்காடிப்பாடிப்
பொன்றலின்மகிழ்ச்சிபூப்பமுனிவரன்புகலலுற்றா
னென்றல்செய்வினதுகாட்சியன்றிவேண்டுவதொன்றுண்டோ
குன்றலில்கருணைவாழ்வேகுறையிலாயிதுவேசாலும். (௪)

ஆயினுமடியேனெண்ணமலங்கொளிக்கயிலாயத்துத்
தாயினுமினியாளோடுசமைந்துநீயமருங்கோல
நாயினுங்கடையேனிந்தமெய்யொடுநயந்துகாணக்
காயினுமருளாய்ச்செய்யுங்கண்ணுதற்பிரானேயுண்டால். (௫)

அதுமுடிதருமாறையவருளுதல்வேண்டுமென்று
பதுமமென்மலர்த்தாண்மீட்டும்பணிந்தனன்பிப்பிலாதன்
சதுமுகன்முதலோர்போற்றுந்தம்பிரான்கருணைபூத்துச்
செதுவமைசென்னியன்னான்றனக்கிதுசெப்பலுற்றான். (௬)

குற்றமில்வளஞ்சால்கும்பகோணமாத்தலத்தையண்மி
யற்றமினமதுதானமாயகும்பேசஞ்சார்ந்து
சொற்றநங்குறியைப்போற்றித்தொழுதுநீவசிப்பையாகிற்
கற்றவர்புகழுமந்தக்காட்சிநல்கிடுவமென்றான். (எ)

ஐயனீதருளிச்செய்யவடிபணிந்திளைத்துப்போய
மெய்யினேனெடுநாளுற்றுவிருத்தனுமானேனெவ்வா
றெய்யெனவாங்குச்செல்வேனும்பர்தம்பிரானேயென்றான்
செய்யதென்றுள்ளத்தோர்ந்துசிவபிரானினுசெய்யும். (அ)

உண்மையேயுரைத்தாய்தூயவழிநடையுறுதன்போலி
யெண்மையேயங்குச்சாரவியற்றுதுமென்றுகூறி
யண்மையோர்பொய்கைகாட்டியதனிடைமுழுகுகென்றான்
வண்மையேபொலியவெம்மைவழிவழியடிமைகொள்வோன். (கூ)

முழுகியபிப்பிலாதன்மொய்யருளரசுபோல
வொழுகியகருணையெல்லாவுலகமுந்தெளியத்தேற்றிச்
செழுவியகும்பகோணத்திருத்தலம்பொலிகாவேரி
வழுவில்காசிபதீர்த்தத்துவந்துமேலெழுந்தானன்றே (க0)

எழுந்தனனெதிராநின்றவிறைவனையங்குக்காணான்
கொழுந்துகொண்டுவகையோங்கக்குறித்தவித்தலப்பேர்யாதென்
றழுந்துருண்முன்னமாங்கணுற்றவர்தம்பாற்கேட்டான்
செழுந்தவரோறேகும்பகோணமித்திருத்தேமென்றார். (கக)

என்றலுங்கும்பகோணமென்பதித்தலங்கொலோவென்
றென்றியவுவப்பனுகியுமையொருபாகன்செய்த
நன்றருளுள்ளத்துள்ளிநயந்துவெண்ணீறுபூசி
வென்றமையுருத்திராக்கமணிபலவிருப்பிற்பூண்டு. (கஉ)

வளர்மறைச்சாரமாயவன்னமோராந்துமுள்ளித்
தளர்வகன்றெழுந்துகும்பத்தம்பிரான்கோயினண்ணி
யுளரளிக்குலங்கண்மொய்ப்பவொண்மலரிறைத்துப்போற்றி
விளர்தபுமறிவின்மேலான்மிகுபெருங்களிப்பினாழ்ந்தான். (கங)

தூயசோமேசம்போற்றித்தலங்குநாகேசந்தாழ்ந்து
பாயசீர்விச்சுவேசம்பராயபிமுகேசமேத்தி
மேயவொண்கவுதமேசம்வேண்டுபுமிளிர்பாணேச
மாயதையடைந்துகும்பிட்டடைந்தான்கும்பேசமீட்டும் (கச)

மங்களவல்லியோடுமருவியகும்பநாதன்
மங்களமலர்த்தாள்போற்றிவழுத்துமெய்யடியாரின்ப
மங்களவாழ்வேநீயோர்வண்கயிலாயமேய
மங்களமாயகாட்சிமதிக்குமாதெரித்தியென்றான். (கரு)

மெய்த்தவனிரந்துசெய்யும்விண்ணப்பஞ்செவியினேற்றுப்
பொய்த்தவன்பினருக்கெட்டாப்புண்ணியக்கடேசமூர்த்தி
யெய்த்தவர்க்கொருவைப்பாகியிலங்குதன்னருளினாலே
யுய்த்தனன்முனிவன்றன்னைக்காவிரியுத்தரப்பால். (கசு)

தரைபுகழ்சிறப்புவாய்ந்தசண்பகாரணியத்தூடு
வரைபலபுகழும்வெள்ளிமால்வரையொன்றுதோற்றிப்
புரையறுமதன்மேலாகப்பொன்செய்கோபுரம்பேரிஞ்சி
யுரைசினகரமுன்னாகவொள்ளியவனைத்துந்தோற்றி. (கஎ)

மணிசெழுபேரத்தாணிமண்டபநாப்பணிட்ட
தணிவில்வெள்வயிரங்கொண்டுசமைத்தசிங்காதனத்துக்
கணிதமிலொளிசால்வெள்ளைக்கதிர்க்குடைநிழற்றுநிற்கப்
பணிபுரையல்குன்மாதர்பற்றுசாமரைகள்வீச. (கஅ)

ஒலியல்வண்சிவிறியாலவட்டங்களொருங்குமொய்ப்ப
மலிதருசெருக்கினின்றுமாகதர்விருதுபாட
வலிகெழுமுகிலுநாணவயங்குதூரியங்களார்ப்ப
மெலிசிறுமருங்குற்பற்பன்மின்னனார்நடனஞ்செய்ய. (கக)

கற்பகமாலைவேய்ந்தகடவுளர்குலிசச்செம்ம
லற்புதமலரின்மேலானரவணைச்செல்வன்மற்றை
விற்பொலிபூணியக்கர்வித்தியாதரர்முன்னாய
பற்பலர்களுமாங்காங்குப்பரிந்துநின்றனர்சேவிப்ப. (உ0)

நந்தியம்பெருமானங்கைநக்கபொற்பிரம்புபற்றிச்
சந்திசெய்நெருக்குட்புக்குச்சந்நிதிவகுத்துலாவ
முந்தியகணங்களெல்லாமுறைமுறைநெருங்கிப்போற்ற
விந்தியமவித்தமேலோரொண்ணிலானந்தமூழ்க. (உக)

மலையரசுயிர்த்தநங்கைவாமபாகத்துமேவக்
கலைவரம்பிகந்தவெங்கள்கண்ணுதலிருந்தானாக
நிலையுணர்பிப்பிலாதநெடுமுனிமகிழ்ந்துநோக்கி
யுலைவறப்பணிந்துவீழ்ந்தானுவகையங்கடலுளாழ்ந்தான். (உஉ)

அடியனேன்பொருட்டுக்காட்சியருளியகருணைவாழ்க
முடிவிலாமுதலேவாழ்கமுந்தியகடத்துத்தோன்றி
நெடியமான்முதலோரோத்தநிறைந்தபேரொளியேவாழ்க
பொடியணிசெய்யமேனிப்புண்ணியப்பொருளேவாழ்க. (உங)

என்றுதோத்திரங்கள்கூறியீறிலானந்தமுற்றுன்
கன்றுமான்றரித்தபெம்மான்கயிலாயநாதனென்னு
நன்றுசாலொருபேர்பூண்டுநலம்பொலியிலிங்கமாகி
யின்றும்வீற்றிருப்பான்முன்னைக்கோலமாங்கிரியச்செய்தே. (உச)

கருதுகும்பேசரொன்னுங்கயிலாயநாதர்நல்கு
பெருகுபேரருளான்முத்தியடைந்தன்பிப்பிலாத
னுருகுநெஞ்சினராயந்தவொருவரைச்சேவிப்போர்க
டிருகுதீர்போகந்துய்த்துமுத்தராய்ச்சிறந்துவாழ்வார். (உரு)

கைலாயநாதப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - உஙகங.

---

## முனிவரர்பூசைப்படலம்.

தனிவரர்கும்பகோணத்தாவரர்மகிமையெல்லாங்
கனிவரராயசூதர்கழறிடவிருப்பிற்கேட்டு
நனிவரராகிநாளுநைமிசவனத்துவாழு
முனிவரர்குடந்தைபுக்குப்பூசித்தமுறைமைசொல்வாம். (௧)

பாயொளிபரப்பியல்லைப்பகல்செய்கோபுரச்சோமேசஞ்
சேயொளிவிமானமோங்கித்திப்பியமிருபாணேச
மீயொளிமிகையேயென்னமிக்கொளிர்தருநாகேசங்
காயொளிமணிகால்யாத்தகடிமதில்விச்சுவேசம். (௨)

அடியவர்தமக்குநாளுமருடருமபிமுகேசம்
பொடியணிபலரும்போற்றிப்புகழ்தருகவுதமேசம்
படிமுழுவதுங்கொண்டாடப்பரவருள்செயுங்கோணேச
நெடியவன்முதலோர்போற்றநிலாயொளிர்தருகூர்ச்சேசம். (௩)

மாலதிவனத்துவைகிவளந்தருவிச்சுவேசஞ்
சாலவுற்றவர்நீங்காதுதழையிடைமருதூர்க்கீழ்பா
லாலமர்கடவுண்மேற்குநோக்கிநன்கமர்பாணேசஞ்
சூலவண்கரத்தாராடல்வல்லவர்துலங்குமன்றம். (௪)

இவ்வைமுதற்றலங்களுக்குமேற்றஞ்சான்மாகதீர்த்த
நவ்வையறுகனகக்கஞ்சநற்றீர்த்தம்பொன்னியாற்றுச்
செவ்வைசெய்காசிபநீர்முன்னுத்திகழ்தருமொருமுத்தீர்த்த
மிவ்வைமுதற்றீர்த்தங்கட்குமூலமாமெழிற்கும்பேசம். (௫)

வெருவருங்கிராதனுஞேன்விரும்பிடைமருதூர்க்கீழ்பான்
மருவுபுநின்றுசாத்தன்வடிக்கணைவாங்கிவிட்ட
பொருவருமிடத்திலிங்கம்பொற்புறவொன்றுதோன்றிற்
றருமைசெயத்தேம்பாணதுறைப்பெயரமைந்ததன்றே. (௬)

மன்னுமத்தானந்தன்னின்மருவிலிங்கப்பிரானைப்
பன்னுநல்விறல்சாலேகபாணசாத்தாவினோடு
முன்னுபேரன்பிற்போற்றுமுதன்மையரிடையூறின்றி
மின்னுபல்போகந்துய்த்துவீட்டின்பமடைவ்துண்மை. (௭)

கலவுப்ல்வளநாகேசக்கங்கைமால்களிறுநாளு
நிலவுகும்பேசரூருநெடும்பொற்றேர்நிலையின்வைகிக்
குலவுபேராரவாரக்குஞ்சரமிவைமுன்னுகப்
பலவுளவவற்றுளொன்றன்பதந்தொழிற்புனிதராவார். (௮)

கேத்திரவிசேடமோர்ந்துகெடலருமுனிவர்வானோர்
சாத்திரவிதியினூறேதாபித்தவிலிங்கம்பல்ல
மாத்திரமுறுவதோர்ந்துவாஞ்சையிற்போற்றுவார்கண்
மூத்திரமலஞ்சார்பண்டமுனிந்துபேரின்பந்துய்ப்பார். (௯)

மாமகதீர்த்தக்கோட்டின்வயங்குசோடசலிங்கர்
தாமகநாசஞ்செய்துசார்ந்தவர்க்கின்பநல்கு
மாமகவிருப்பினந்தவிலிங்கத்தையருச்சிப்போர்க
ளேமகம்பலசெய்பேறுதன்னிவாழ்ந்தின்பந்துய்ப்பார். (௧0)

நீளத்தியுடுத்தவைப்பாநிலம்புகழ்குடந்தைதன்னுட்
காளத்தியீசர்வாழுங்காமருதளிமுன்னாக
வாளத்திமாலைபூண்டார்வைகுபஃறளிகளுள்ள
மூளத்தியானித்தேத்தின்முன்னியவனைத்துங்கூடும் (௧௧)

திரையெறிகடல்சூழ்வைப்போர்சிரமிசைக்கொள்ளாமேற்
கரையறுகருணைபொங்கக்கண்வளர்சார்ங்கபாணி
தரைபுகழ்கூறென்றோதுஞ்சாரநாராயணர்முன்னாக
வுரைசிறந்தவர்வாழ்கோயிலுலப்பிலதொழினின்புண்டாம். (௧௨)

பொருவருமினையகும்பகோணத்துப்பொலிந்துதீயோர்
மருவரும்பெருமைசான்றமங்களவல்லியோடு
முருவருவென்னநாளுமொளிர்கும்பலிங்கப்பெம்மான்
திருவருமலர்ப்பொற்பாதசேவையேபிறவிதீர்க்கும். (௧௩)

பற்பலவுரைப்பதென்னைபரவருட்கும்பலிங்க
ரற்புதலீலையின்னுமளப்பிலவுரைக்கமுற்றா
வெற்பலர்தொடையன்னாரோயிசைப்பினுமுற்றுங்கொல்லோ
கற்பனைகழன்றீர்முற்றாவாதுமோகருதிலேமால். (௧௪)

படிபுகழ்வியாதமேலோன்பண்டைநாளுரைத்தவாறே
முடிவிலிக்காதைநீவிர்முகந்துகொள்விருப்பநோக்கி
யடியனேனுரைத்தேன்சொற்றவளவைகொண்டளவிலாத
கடிமலர்க்கடுக்கையண்ணல்கழலடைந்துவந்துவாழ்மின். (௧௫)

என்றனன்சூதமேலோனிருடியர்பலருமன்னா
னன்றவிர்பாதம்போற்றிநவின்றவிக்காதையாலே
யொன்றியகும்பலிங்கரோங்கருட்குரியரானோம்
வென்றனம்பிறப்பையுற்றோம்வீட்டின்பமெனத்துதித்தார். (௧௬)

தொடங்கியயாகமுற்றிச்சூதமாதவமேலோனுக்
கடங்கருமுவகைமேன்மேலன்புறச்செய்துபோற்றி
மடங்கருமனையானோடுவல்விரைந்தெழுந்தெல்லோரு
மிடங்கெழுகும்பகோணத்தெல்லைவந்துற்றாரன்றே. (௧௭)

மாமகதீர்த்தமுன்னாவகுத்தபஃறீர்த்தத்துள்ளுங்
காமருவிதியினாடிக்கற்பவெண்ணீறுபூசிப்
பாமலியுருத்திராக்கப்பன்மணிமாலைபூண்டு
தோமறவெழுத்தைந்தெண்ணித்தொழுதகையினராய்ப்போந்து. (௧௮)

வடவரையனையசெம்பொற்கோபுரமருங்குதாழ்ந்து
தடநெடுஞ்சிகரக்கோயிறனைவலங்கொண்டுசூழ்ந்து
படவரவணிந்தகும்பப்பண்ணவன்றிருமுன்சார்ந்து
மடமகல்சிறப்பிற்பூசைவயக்கினார்முனிவரெல்லாம். (௧௯)

துதியமையன்புபொங்கத்தொழுதுலகனைத்தும்போற்றக்
கதியருள்கும்பலிங்கக்கடவுளைத்துதித்துப்போந்து
மதியமைகருணைச்செல்விமங்களைபதமும்போற்றிப்
பொதிதவமுனிவரெல்லாம்விடைகொடுபுறத்திற்போந்தார். (௨0)

அண்ணனன்கமர்சோமேசமாதியதலங்களெல்லாங்
கண்ணருமன்பிற்சென்றுசென்றுளங்கனிந்துபோற்றித்
திண்ணவன்பினராய்ப்பஞ்சக்குரோசயாத்திரையுஞ்செய்து
நண்ணருமுவகைபூண்டுமைமிசம்புகுந்துவாழ்ந்தார். (௨௧)

இன்னமாபுராணந்தன்னையெழுதுவோரெழுதுவிப்போர்
பன்னருமன்புபொங்கப்படிப்பவர்படிப்பிப்போர்மற்
றுன்னரும்பொருள்களாய்வோருரைசெய்வோர்பூசைசெய்வோ
ரொன்னருமளவில்செல்வமிம்மையிற்கிடைத்துவாழ்ந்து. (௨௨)

மறுமையிலிந்திராதிவான்பதமெல்லாம்புக்காங்
கறுதியில்போகந்துய்த்தேயளப்பருங்கயிலாயத்து
நிறுவியமேலாமுத்திப்பதமொருமூன்றுநீத்துத்
தெறுவினையாளராகிச்சிவனொடுகலந்துவாழ்வார். (௨௩)

உத்தமக்கும்பகோணப்புராணத்தையுவந்துதீட்டும்
புத்தகம்வதியுமில்வாய்ப்பொலிதருஞ்செல்வமெல்லாம்
பெத்தம்விட்டொழியும்பூதப்பிரேதபைசாசமெல்லாம்
தத்துவமுரைத்தேனென்றுஞ்சந்ததிக்காணியின்றே. (௨௪)

(வேறு)

முன்னுபுகழ்ச்சோனாடுவாழ்கதிருக்குடந்தையெனுமூதூர்வாழ்க
மன்னுபெருஞ்சைவமிகவாழ்கவிடைமருதர்முதல்வானோர்வாழ்க
பன்னுதிருமங்களநாயகிவாழ்ககும்பேசர்பண்புவாழ்க
மின்னுதிருவம்பலத்துளவரொடுத்தகுஞ்சிதத்தாண்மேன்மேல்வாழ்க. (௨௫)

முனிவரர்பூசைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௩அஅ.

---

திருக்குடந்தைப்புராணம்



சிவமயம்.

# பிழைதிருத்தம்.

—:o:—

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨ | ௧௪ | ௨ | றென்றெளிய | றொனறெளிய |
| ௬ | ௧௨ | ௧ | தற்மை | தற்கமை |
| ௨௪ | ௩௩ | ௧ | பதைத்தி | பதைத்தி |
| ௩௧ | ௪௨௬ | ௪ | பகறற் | பகரற் |
| ௩௪ | ௧௩௨ | ௩ | ஊறல | ஊறவ |
| ௩௫ | ௯ | ௩ | பியிலா | பயிலா |
| ௩௬ | ௨0 | ௪ | சொணாதா | கொணாவா |
| ௪0 | ௯ | ௨ | கருசமன்மன் | சருமசன்மன் |
| ௪௮ | ௧௪ | ௩ | முந்நாட் | முன்னாட் |
| ௫௧ | ௨0 | ௪ | மகிழ் | மகிழ்ந்துகூறும் |
| ௫௩ | ௧௩ | ௩ | றீர்த்த | றீர்த்த |
| ௫௮ | ௯ | ௩ | பண்ணவர்ப் | பணவரப் |
| ௬௮ | ௬ | ௪ | செல்வான் | செய்வான் |
| ௬௯ | ௧௫ | ௨ | டெரு | டிரு |
| ௭௭ | ௨௭ | ௩ | சண்டோர் | சண்டோந் |
| ௮௫ | ௧0 | ௧ | பொன்மனை | பொண்மனை |
| ௮௭ | ௯ | ௨ | நடெலாம் | நாடெலாம் |
| ௯௨ | ௪ | ௧ | தான | தரள |
| ௯௨ | ௪ | ௨ | ணினியல்வளம் | ணியலிலவணம் |
| ௯௮ | ௨௩ | ௪ | மையர்து | மையாது |
| ௧0௬ | ௬௪ | ௧ | மேவு | மேவுபு |
| ௧௬௧ | 0 | ௩௬ | பூசிக்தப்படலம் | பூசித்தபடலம் |
| ௧௬௩ | 0 | ௧ | பூசிக்தப்படலம் | பூசித்தபடலம் |
| ௧௬௪ | ௩ | ௩ | தவங்க | தலங்க |
| ௧௭௨ | ௧௨ | ௪ | திஞ்றைசி | திறைஞ்சி |
| ௧௮௩ | ௪ | ௧ | புணர | புணரா |
| ௧௮௭ | ௭ | ௧ | வேள்தின | வேளதின் |
| ௧௯௪ | ௧௯ | ௩ | தளை | தறை |
| ௨௧௪ | ௨௭ | ௪ | வேண் | வேண்டும் |
| ௨௩௨ | ௧௩ | ௪ | றருதவெண்மை | றருதலெண்மை |
| ௨௩௨ | ௧௪ | ௨ | வாகனமு | வாகனன்மு |
| ௨௪0 | 0 | ௨௮ | ௨௩௮௮ | ௨௩௮௪ |

திருச்சிற்றம்பலம்.

